# நவராத்திரி.
# பெண்மையின்
# தங்கமான 9 முகங்கள்.




நவராத்திரி. பெண்மையை ஆராதிக்கும் பண்டிகை. பெண்மையின் பல முகங்களைக் காட்டும் திருநாட்கள். நவராத்திரியில் துர்க்கா, லட்சுமி, சரஸ்வதி ஆகிய தேவியரை வெவ்வேறு ரூபங்களில் நாம் வழிபடுகிறோம். • முதல் நாள்-2 வயது பாலா திரிபுரசுந்தரி. சக்ரா கோல்ட் மங்கை போல குடும்பத்துக்கு செல்வமும் சந்தோஷமும் தருபவள். • 2-ம் நாள்-3 வயது கௌமாரி. நீண்ட ஆயுளைத் தருபவள். குடும்பத்தின் நீண்ட ஆயுளுக்குக் காரணம் பெண்தானே! • 3-ம் நாள்-4 வயது கல்யாணி. புதுமைப் பெண் போல விவேகத்தின் சின்னம், வெற்றியின் அடையாளம். • 4-ம் நாள்-5 வயது ரோகிணி. நோய் வாய்ப்பட்டோரைக் கவனித்துக் கொள்ளும் தங்கமான அன்னையின் வடிவம். • 5-ம் நாள்-6 வயது காளி. மனோ வலிமை என்றும் ஆயுதம் கொண்டு போராடி வெல்லும் பெண்மை. • 6-ம்நாள்-7 வயது சண்டிகா. பாவங்களைக் களைப்பவள். குழந்தைகளை பாவங்கள் செய்யாமல் இருக்க போதிக்கும் தங்கமான தாய். • 7-ம் நாள்-8 வயது சாம்பவி. வறுமையைப் போக்குபவள். குடும்பம் வறுமையில் வாடாமல் இருக்க அன்பான கணவனுடன் சேர்ந்து உழைக்கும்

மடிக்கப்பட்ட பாகத்தை கொலுப்படியில் ஒட்டவும். கத்தரித்த பொம்மைகள் அழகாக நிற்கும். அல்லது



ன்றைய மங்கை. •8-ம் நாள்-9 வயது துர்க்கை. தீமைகளுடன் போராடி வென்று புதுயுகச் முதாயம் உருவாக்க உதவும் பெண்ணும் நவயுக துர்க்கைதானே! •9-ம் நாள்-சுபத்ரா. வண்டியதைத் தரும் இந்த தேவியை குடும்பத்தில் எல்லோருடைய விருப்பத்தையும் பூர்த்தி சய்யும் தங்கமான மங்கை வடிவில் நாம் தினமும் காண்கிறோமே! பெண்மையைப் பாற்றும் நவராத்திரியும் இன்றைய சக்ரா கால்ட் டீ மங்கையும் இணையும் போது ங்கமான குடும்பங்கள் தானே தரணியில் ருவாகும் என்பதில் ஐயமேயில்லை!

டாட்டாவின்

**சக்ரா கோல்ட் டீ**

தங்கமான ருசி




1

McCANN/BLR/TTL/13/98

பண்மையின் உயர்வு பற்றி விளக்கும் இந்த பக்கத்தை அப்படியே பொம்மைக் கொலு அருகில் ஒட்டவும்.

அழகும் பாதுகாப்பும் அளிப்பதுவே
ஒரு உண்மையான பியூட்டி சோப்.
மெடிமிக்ஸ் இரண்டும் தருது.

**இதை மட்டும் மறந்திடாதே!**

## இப்போது புதிய நறுமணத்துடன்




பரிபூரண
ஆயுர்வேத
குளியலுக்கு

குடும்ப
பராமரிப்பு சோப்
**மெடிமிக்ஸ்**

75 கிராம் மற்றும் 125 கிராம் பாக்கிலும் கிடைக்கிறது.

Visit us at http://www.medimixindia.com

# மங்கையர் மலர்

## (நவராத்திரி சிறப்பிதழ்)

மலர்: 18
இதழ் 8

செப்டம்பர் '98

மஞ்சுளா ரமேஷின்...



நவராத்திரிக்கு...



– மற்றும் ஏராளமான கொலு யோசனைகள் ஆங்காங்கே! –

சிந்தனைக்கு...

# கல்கி

13.9.98 இதழ்...




அமரர் கல்கி நூற்றாண்டுச் சிறப்பிதழ்!

அமரர் கல்கியின் பல பரிமாணங்கள் பற்றிய செய்திகள்!

கூடவே இலவச இணைப்பாக ஒரு பொக்கிஷமும் உண்டு!



சுவைக்கு



உடல் நலத்திற்கு



நீங்கள் விரும்பும் தொடர்கள்...



கதைகள்



ஸ்பெஷலாக



அறிவிப்பு

# கைநழுவிப்போன காற்றாடிகள்!

**மஞ்சுளா ரமேஷ்**

ஒரு மாதத்திற்கு முன்பு எல்லா பத்திரிகைகளிலும், எல்லா டீ.வி. சானல்களிலும் பரபரப்பாகப் பேசப்பட்ட இளம் மாணவி சரிகாஷா - இன்றும் பலர் நினைவில் இருக்கிறாள். பிரபலமான எதிராஜ் கல்லூரியின் மாணவியான இவர் தன் தோழிகளோடு சாலையில் நடந்து கொண்டிருந்தபோது 'ஈவ் டீசிங்' நடந்தது என ஆரம்பத்தில் சொன்னார்கள். ஆட்டோவில் வந்த சிலரில் ஒரு பையன் இவள் கையைப் பிடித்து இழுத்ததாகவும், பிறகு திடீரென்று விட்டு விட்டதால் மல்லாக்க விழுந்து தலையில் அடிபட்டு 'கோமா' ஸ்டேஜுக்குப் போனார். தன் இருபதாவது பிறந்த நாளில் பெற்றவர்கள் கதறி அழ அனைவரையும் விட்டுப் போய் விட்டாள்.

எங்கும் இந்த இளம் பெண்ணைப் பற்றிப் பேச்சு. தாய்மார்கள் சந்தித்தால் வயிறு கலங்க பேசிக் கொண்டார்கள். சரிகாஷா உயிரிழக்கக் காரணமாக இருந்த இளைஞர்களுக்குத் தொடர்ந்து ஜாமீன் வழங்க நீதிமன்றம் மறுத்து வருகிறது.

சரிகாஷா புகைப்படத்தில் பார்த்தவரையிலும் அல்லது வந்த செய்திகளின் மூலமும் மிகவும் அமைதியான பெண் என்று தெரிந்து கொள்ள முடிந்தது. ஆனால் தென்னை மரத்தில் தேள் கொட்டினால் பனை மரத்தில் நெறி கட்டியது போன்ற கதையாக நம்முடைய இளைய தலைமுறையினர் சில பகுதியினர் நடந்து கொள்ளும் விதம் அப்பாவி சரிகாஷா போன்றவர்களின் தலையில் விடிகிறதே!



## சில வார்த்தைகள்

படித்துப் படித்துச் சொல்லி புளித்துப் போன சமாசாரம் எனத் தோன்றலாம். ஆனால் என்றாவது பொழுது விடியாதா என மீண்டும் மீண்டும் சொல்ல வேண்டியதாகத்தான் இருக்கிறது. அதிக பட்ச இளைஞர்கள், இளம்பெண்கள் படிப்புக்கு முக்கியத்துவம் கொடுத்து, நம் எதிர்காலத்தை நன்றாக அமைத்துக் கொள்ள வேண்டும் என படாதபாடு படுகிறார்கள். ஆனால் அவர்களுக்குத் தான் எத்தனை திசைதிருப்புதல்கள் இங்கே. அதே போல கடினமான உழைப்புக்கிடையே பொழுது போக்கு வேண்டும் என்பதற்காகத் தோன்றிய ஆடல் பாடல் சமாசாரங்களே வாழ்க்கை என மாறிக் கொண்டு வருகிறதே! சினிமா டீ.வி. பார்ப்பதும், எந்த நடிகைக்கு எங்கே மச்சம் என கார்டு எழுதிப் போட்டு விட்டு பரிசாக குக்கர் பாத்திரம் வருகிறதா என பார்த்துக் கொண்டிருப்பதுமே வாழ்க்கை என்றல்லவா மாறிக் கொண்டு வருகிறது.

நம்முடைய சினிமாக்கள் எல்லாம் சொல்லும் மகத்தான செய்தி என்ன? கலாட்டா செய்யும் கதாநாயகன். முதலில் ஊடல், பிகு செய்யும் அரை நிக்கர் கதாநாயகி பிறகு கலாட்டா செய்தவனை காதலித்து படாதபாடுபட்டு திருமணமும் செய்து கொள்வாள். இதைத்தானே இன மொழி நாடு வேறுபாடில்லாமல் அத்தனை சானல்களும் ஒளிபரப்பிக் கொண்டு இருக்கின்றன. இதையே திரும்பத் திரும்பப் பார்க்கும் இளைஞர்களுக்கு உண்மை இதுதான் போலும் என்று நினைத்து விடுகிறார்கள்.

பெண்களாவது ஓரளவு வீட்டின் கட்டுப்பாட்டில் வளைய வருகிறார்கள். ஆனால் இளைஞர்கள் பெரியவர்கள் ஆளவுடன் முழுக்க முழுக்க வீட்டின் வளையத்தில் இருந்து விலகி நண்பர்கள், கல்லூரி வட்டத்தில்



அல்லவா போய் விடுகிறார்கள். அவர்களுக்குச் சரியாக வழிகாட்ட, கவுன்சிலிங் செய்ய எத்தனை கல்விக்கூடங்கள் இருக்கின்றன. என்ஜீனியரிங், மருத்துவக் கல்லூரிக்குக் கவுன்சிலிங் உண்டு. இன்றைய இளைஞனின் பிரச்னைக்கு, அவனுக்குச் சரியாக வழிகாட்ட கல்விக்கூடங்கள் கவுன்சிலிங் செய்கின்றனவா? நல்ல நண்பர்கள் அமைந்தால் நன்றாக வருகிறார்கள். இல்லையென்றால் கெட்ட பழக்கங்கள் எல்லாவற்றையும் கற்றுக் கொள்கிறார்கள்.

போதாதற்கு நம்முடைய சமூகக் கனவான்களான சினிமாக்காரர்கள் 'அதிகுட்டை'ப் பாவாடை கதாநாயகியை அற்புதமான கோணங்களில் அல்லவா படம்பிடித்துக் காட்டிக் கொண்டு இருக்கிறார்கள்.

இந்த நோய் இளைஞர்களை மட்டுமில்லை, இளம் பெண்களையும் ஆட்டிப்படைத்துக் கொண்டுதான் இருக்கிறது. பிரபலமான கல்லூரியைச் சேர்ந்த இரு இளம்பெண்களிடம் பேசிக் கொண்டிருந்தேன். அவர்களிடம் மெதுவாக அவர்களுடைய சகமாணவிகளின் உடைகள் பற்றிப் விசாரித்தேன்.

"ஐயோ ஆன்ட்டி, எனக்கு அவங்கள அப்படியே அறையலாம் போலத் தோணும். அவ்வளவு மெலிசா டாப்ஸ். அதையும் முடிச்சு போட்டிருப்பா. குட்டையா ஒரு ஸ்கர்ட். இதிலே சில பேர் பரவல, ஆட்டோல கூட வருவாங்க. எப்படித்தான் வர்றாங்களோ?"

இந்த மாதிரி மிக மோசமான உடையணிந்து வரும் சில கல்லூரி மாணவிகளை அந்தக் கல்லூரி முதல்வர்கள் கண்டிக்கிறார்களா என்றால் இல்லை யென்றுதான் சொல்ல வேண்டும். கல்லூரி முதல்வர் இருக்கட்டும். அப்படி உடையணிந்து வரும் சிலரின் தாய்மார்கள் எப்படி இதற்கு அனுமதி தருகிறார்கள் என்பதும் ஆச்சர்யமாகத்தான் இருக்கிறது. படத்தில் கவர்ச்சி உடையணிந்து வரும் நடிகை கூட பொது இடத்திற்குப் புடவையோ, சுடிதாரோ அணிந்து வருகிறார். படத்திற்குப் படம் காதலுக்காக உயிரையும் விடுவேன் என வசனம் பேசி நடிக்கும் விஜய், "அப்பா அம்மா பார்த்து வைக்கும் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதுதான் நல்லது" எனப் பேட்டி கொடுக்கிறார்.

ஆனால் நம்முடைய இளைஞர்களோ பொழுது போக்காக நடத்தப்படும் கூத்துக்களையே உண்மை வாழ்க்கை என நினைத்துச் சீரழிகிறார்கள். அவர்களோடு உடன்படாமல் வாழ்க்கையில் உயர்ந்த லட்சியத்தைக் கொண்டு சீரியஸாகப் படிக்கவும், எதிர்காலத்தை அமைத்துக் கொள்ளவும் விரும்பும் மாணவர்களை அம்மாஞ்சி, மடிசஞ்சி எனக் கேலி செய்கிறார்கள். அப்பாவியாக இருப்பவர்கள் இவர்களுக்கு ஏளனமாக ஆகிறார்கள். அதனால்தானே கள்ளங்கபடமறியாத நாவரசுவை கண்டதுண்டமாக வெட்ட முடிந்தது. அமைதியே உருவான

சரிகாஷாவை கையைப் பிடித்து இழுக்கத் தோன்றியது.

அப்புறமாக ஐயோ என் பையனா இப்படியா எனக் கதறுவதால் என்ன பயன்? தும்பை விட்டு வாலைப் பிடித்த கைதான். நம் குழந்தைகள் படிக்க வேண்டும் எனச் சித்ரவதை, அப்புறம் அவர்களும் நவீன நாகரீகத்தோடு ஒத்துப் போக வேண்டும் என அலங்கரிப்பு, அன்பைக் காட்டி நம்மோடு அணைத்துக் கொள்ளாமல் நம் ஆசைகளை பேராத் திரங்களை அவர்கள் மேல் திணிப்பு... டீன் ஏஜ் வரும் போது நம்மை விட்டு விலகியே போய் விடுகிறார்கள். கையை விட்டு நழுவி விடும் அந்தக் காற்றாடி எங்கே பறக்கிறது என்பதே தெரிவ இல்லை. அதன் கயிறு நம் கையில் இருந்தால் அல்லவா? அதுவாக பறந்து அலைந்து திரிந்து கீழே இறங்குகிறது. பிறகு ஒட்டை விழுந்தும், கிழிந்தும் போனது பற்றி அங்கலாய்த்து என்ன பயன்?

சரிகாஷா மரணத்தையும், நாவரசனின் கொலையையும் வெறும் அந்தந்த சம்பவங்களாக, அப்போதைய பரபரப்பான நிகழ்ச்சியாகவே பார்த்துவிட்டு மறந்து விடுகிறார்களே. வேடிக்கை காட்டும் அரசியல், கவர்ச்சி காட்டும் டீவி, பரபரப் பூட்டும் பத்திரிகைகள் அத்தனையையும் சும்மா பார்த்து விட்டு நகர்ந்து விடும் போக்கு நமக்கு இருக்கும் வரை இந்தக் கொடுமைகள் எப்படி தீரும்?

அரசியல் விளையாட்டுக்கள் போன்றவை நம் கைமீறிய விஷயமாக இருக்கலாம். ஆனால் சரிகாஷா, நாவரசு எனும் இந்த இளம் குருத்துக்களுக்கு ஏற்பட்ட அவலங்களில் இருந்து நாம் பாடம் கற்றுக் கொள்ளலாமே? நம் குழந்தைகள் இன்னொரு சரிகாஷாவிற்கோ, நாவரசுவிற்கோ அப்படி ஒரு துன்பம் செய்கிறவர்களாக இருந்து விடப் போகிறார்களே எனக் கவலைப்படலாம்.

இளையதலைமுறையை அன்பால் கட்டலாமே! சிறு குழந்தையாக இருக்கும்போதே மனிதத் தன்மையோடு வளருகிறானா எனப் பாருங்கள். அவன் முதல் ரேங்க் வாங்கவில்லை என மண்டையில் குட்டாமல், மனிதாபிமானத்தோடு மற்றவர்களிடம் பழகச் சொல்லிக் கொடுங்கள். டீன் ஏஜிலும் உங்களின் அன்பு தொடரட்டும். இந்த டீவியும், அரசியலும் எப்படியேனும் போகட்டும். நம் குழந்தைகளை மனிதர்களாக வளர்க்கலாம். குடும்பம் குடும்பமாக எந்த நடிகை பிடிக்கும் என பேட்டி கொடுப்பதற்கு ஆலாய்ப் பறக்காமல் குடும்பத்தோடு அன்பாக வாழ்வது எப்படி எனக் கற்றுக் கொள்ளலாம்.

அப்போதுதான் நாம் நல்ல தலைமுறையை அடுத்த சந்ததியினருக்குக் கொடுத்து விட்டுப் போனோம் என்ற நிம்மதியிருக்கும். அன்போடு வளர்க்கப்படும் குழந்தைகளே வயதான தாய் தந்தையரை 'ஏன்' என்று கேட்கிறார்கள். பேராசையும், பேராத்திரமும், ஃபர்ஸ்ட் ரேங்க்கும் உங்களின் வயதான காலத்தில் உங்களை வந்து பரிவோடு விசாரிக்காது.

# எம். எஸ்.

பத்திரிகைத் துறையில் ஈடுபட்ட பிறகு எத்தனையோ பேரை பேட்டி எடுத்திருக்கிறேன்; எவ்வளவோ விஷயங்களை எழுதியிருக்கிறேன். ஆனால் மனத்தில் அடிநாதமாக இனிப்பாக 'ஒருவரை'ப் பற்றி மட்டும் எண்ணங்கள் இருந்து கொண்டேயிருக்கும். இந்த 'இனிய பெண் மணி'யிடம் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்க வேண்டும் என்று தோன்றும்.

பாரம்பரியமிக்க கல்கி நிறுவனர் என



அமரர் சதாசிவமே கூறிய திருமதி எம். எஸ். சுப்புலட்சுமியை கல்கி பத்திரிகை சம்பந்தப் பட்ட நிகழ்ச்சிகளிலும், குடும்ப நிகழ்ச்சிகளிலும் காணும்போதெல்லாம் அந்த எண்ணம் வளர ஆரம்பித்தது.

இப்படிக் கூட ஒரு பெண்ணால் சர்வ சாதாரணமாக, அமைதியாக இருக்க முடியுமா என வியக்காமல் அதிசயிக்காமல் இருக்கவே முடியவில்லை. ஒருவர் உலகப் புகழ் பெற்றவராக, பட்டங்களும் பதவிகளும் இவருக்குக் கொடுத்தால் அதனால் பட்டங்களுக்கும் பதவிகளுக்கும் பெருமை என வழங்கப்பட்டவர். இந்த அற்புதமான முகத்தை இந்தியாவின் சிறு குழந்தை கூட அறியும். இவரின் குரலைக் கேட்காதவர் உண்டா? ஐக்கிய நாடுகளின் சபையினை தன் கானத்தால் கட்டி விட்டு வந்தவர்.

"நான் யார் சாதாரண பிரதமர்; இந்தப் பெண்மணியோ இசை உலகின் பேரரசி. பேரரசியின் முன் ஒரு பிரதமர் எம்மாத்திரம்" என இந்தியாவை நிர்மாணித்த சிற்பி நேருவால் கூறப்பட்டவர்.

மகாத்மா காந்தியால் இவர் 'ஹரி, தும ஹரோ, ஜனகீபீர்' பாடலைப் பாடி தன் பிறந்த நாளில் கேட்க வேண்டும் என்று சொல்லி, இவரால் அப்பாடல் பாடப்பட்டு பெரிய தொழில்நுட்பங்கள் இல்லாத அந்தக் காலத்தில் பதிவுசெய்யப்பட்டு விமானத்தில் டில்லிக்குப் பாடல் பறக்கப் பெற்றவர்.

இப்படிச் சொல்லிக் கொண்டே போகலாம். கொஞ்சம் கூடவா அந்தப் பெருமை போன்ற மற்ற குணங்கள் இருக்காது? ம்ஹூம்... எப்போதும் இன்முகம். இனிமையான பேச்சு. எதிரில் அமர்ந்து பேசுபவரிடம் உள்ளத்திலிருந்து பிறக்கும் அன்போடு உரையாடல்.



• மீராவில்...



அடுத்தவரிடம் ஆத்மார்த்தமான அக்கறை. வாழ்வில் இவரை ஒருமுறை கண்டவர்களுக்கு மறக்கவே மறக்காது..

இப்படி ஒருவரா இப்படி ஒருவரா என மனம் ஆசையெனும் தீயில் மலர்ந்தது. எத்தனையோ பேர் இவரைப் பற்றி எவ்வளவோ எழுதியிருக்கிறார்கள். ஆனால் எம். எஸ். சுப்பு லட்சுமி எனும் இந்த மாபெரும் இசை

# அம்மா!

யரசியிடம் பொங்கிப் பரிமளிக்கும் அன்பான பெண்மணியிடம் பேச வேண்டும், அந்த அனுபவங்களை எழுத வேண்டும் எனும் என் ஆசை சமீபத்தில் நிறைவேறியது. அவரோடு மகிழ்ச்சியோடு மணிக்கணக்கில் உரையாடினேன். சில நாட்கள் கழித்து மீண்டும் அவரிடம் பேசினேன். அப்போது அவருடைய நீண்ட நாள் சிநேகிதி நாராயணி அம்மாள் (சின்னாணி மாமி என்பார்கள்) உடன் இருந்தார். அந்தத் தோழிகள் தங்களுடைய பால்ய நினைவுகளை என்னோடு பகிர்ந்து கொண்டார்கள்.

எம்.எஸ். எனும் இந்த அற்புதம் பிறந்த மாதமான செப்டெம்பர் (16.9.1916) இதழில் இந்த உரையாடல் கட்டுரை வருவதும் தெய்வசித்தம் என்றுதான் சொல்ல வேண்டும்...

''என்னோட பிறந்த ஊரான

**மஞ்சுளா ரமேஷ்**

மதுரையில் அம்மா, கூடப் பிறந்தவங்களோட சந்தோஷமா இருந்தேன். ஸ்கூல்ல படிக்கிறப்ப பாண்டி விளையாடுவேன். பூக் கட்டுவேன். இதெல்லாம் ரொம்பப் பிடிக்கும். எல்லோருக்குமே இசை மேல ரொம்ப ஆர்வம் இருந்ததால அவங்களோட சேர்ந்து நானும் பாடுவேன். ரொம்ப சந்தோஷமா இருக்கும்.

ஆனா அதிகமா வசதியில்லை. பக்கத்து வீட்ல பருப்பு சாதம் நெய் போட்டு கலந்து குழந்தைகளுக்கு ஊட்டும் போது நானும் அந்த மாதிரி சாப்பிட மாட்டேனான்னு தோணும். (இப்படி அவர் சொன்ன போது என் கண்களில் நீர் நிறைந்தது. இந்த மகா புண்ணிய அரசி தன் கணவரோடு சேர்ந்து எத்தனை ஆயிரம் பேருக்கு வயிறார சாப்பாடு போட்டிருக்கிறார். கல்கி கார்டன்ஸில் எப்போது போனாலும் வயிற்றுக்கு சுவை யான உணவு காத்திருக்கும், அன்போடு பரிமாறுவார்கள் என பேர்பெற்ற இடத்தின் நாயகியாக இருந்தவர். அப்பேர்பட்டவருக்குச் சின்ன வயதில் வசதியின்மை. அதனால் தானோ பசியென்று வாடி வந்தவர்களுக்குப் பிற்காலத்தில் வாரி வாரி வழங்கினார்?)

ஒரு தடவை ஸ்கூல்ல விளையாடிக்கிட்டு இருந்தேன். அம்மா ஷண்முகவடிவு அந்தக் காலத்திலே மிகப் பிரபலமான வீணை வித்வான். அவரோடு வீணைக் கச்சேரி சேதுபதி ஹைஸ்கூல்ல நடந்துண்டு இருந்தது. ஒருத்தர் வந்து உன்னை உங்கம்மா கூப்பிட றாங்கன்னு சொன்னாங்க. கையில இருந்த மண்ணைத் தட்டிட்டுப் போய் மேடையில அம்மா பக்கத்திலே நின்னேன். உக்காரச் சொன்ன அம்மா...

• திருமதி. எம். எஸ்., திரு. சதாசிவம் (தங்களுடைய இரண்டு பெண்களுடன்)



• திருமதி. ராதா • திருமதி. விஜயா

• மௌண்ட்பேட்டன் தம்பதிகளுடன்...



போது மதுரையில் ஒரு பெண் மிகப் பிரபலமாக பாடுகிறார். அவரை அழைப்போம் என அழைத்தார்கள். சென்னை வந்த இளம்பெண் எம். எஸ். இங்கேயும் வெற்றிக்கொடி நாட்டினார்.

திரைத் துறையும் இவரை நாடி வந்தது. இவர் நடித்தது நான்கு படங்களே ஆனாலும் அத்தனையும் சரித்திரம் படைத்தவை. பம்பாய்க்கு ஒரு கச்சேரிக்கு வழித் துணையாக வந்த சதாசிவம் பின்னர் வாழ்க்கைத் துணையும் ஆனார்.

"சினிமா ஷூட்டிங்லேதான் நான் இவங்களை முதல் முதல்ல சந்திச்சேன்..." என்கிறார் அப்போது இவருக்கு அறிமுகமாகி வாழ்க்கை முழுக்க

நான் அடிக்கடி பாடும் பாட்டை பாடச் சொன்னாங்க. அந்தப் பாட்டை நான் வீட்ல பாடிக்கிட்டே இருப்பேன். இப்படித்தான் என்னோட கச்சேரி அரங்கேற்றம் ஆனது..." என மென்மையாகச் சிரிக்கிறார்.

அம்மா என்று சொல்லும்போதே அவர் மனம் உருகுவதை உணர முடிகிறது. "எங்கம்மா தெய்வம்னு தான் சொல்லணும். வெளியுலகம் ஒண்ணுமே தெரியாத அப்பாவி. வீணை ஒண்ணு மட்டுமே தன்னோட உலகம்னு இருந்துட்டாங்க. எங்களையெல்லாம் ஒரு சொல் சொல்ல மாட்டாங்க..." என்று கண்களில் லேசான நீரோடு மனம் நெகிழக் கூறுகிறார்.

"ஸ்கூலுக்கு ஜாஸ்தி போகல்லே. அம்மா கிராமபோன் ரெகார்டு கொடுப்பாங்க. ஒரு தடவை அம்மாவோட போனப்ப என் பாட்டையும் ரெகார்டு பண்ணச் சொன்னாங்க. அவங்க முகத்துக்காக தயங்கிக்கிட்டே கம்பெனிக்காரங்க பண்ணாங்க. 'மரகத வடிவும் செங்கதிர் வேலும்' எனும் முருகன் மேல நான் பாடின பாட்டு ரெகார்டு நல்லா வித்தது..." என அடக்கமாக இவர் சொன்னாலும், கிராமபோன் ரெகார்டு விற்பனையில் அது ஒரு மைல் கல். அந்தக் காலத்தில் மாபெரும் 'ஹிட்'டானது. தொடர்ந்து இவருடைய பாடல்களைப் பதிவுசெய்து ஏராளமாக விற்பனையானது. எம்.எஸ். பிரபலமாக ஆரம்பித்தார். பல கச்சேரிகள் இவருக்கென ரசிகர்கள் கூட்டம் பெருக ஆரம்பித்தது.

சென்னையில் வித்வத் சபையில் சங்கீத ரத்னாகர அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார் பாட வேண்டிய கச்சேரி கேன்சல் ஆன

• மகாத்மாவின் பிரார்த்தனைக் கூட்டத்தில்



நெருங்கிய சிநேகிதியாகி விட்ட சின்னாணி மாமி, "இவருக்கு ஏதாவது உதவி தேவைப்படுமோ, ரொம்பப் பிரபலமான இவர் எப்படி நம்மகிட்ட நடந்துப்பாரோ" எனல்லாம் ரொம்பத் தயக்கமாத்தான் போனேன். அதுவரைக்கும் ஷூட்டிங்னா என்னன்னே தெரியாது. போனப்புறம்தான் தெரிஞ்சது, 'அடடா நடிக்கிறதுக்கு மகா பொறுமை வேணும். நாம சினிமாலே சாதாரணமா பாக்கறோம். ஆனா அத எடுக்கறதுக்குத்தான் எத்தனை பாடு. ரொம்பப் பொறுமை வேணும்பா..."

தோழியின் உதவியை மிகவும் சிலாகிக்கிறார் எம். எஸ். "மாமி எனக்கு அப்ப ரொம்ப பக்கபலமா இருந்தார்னுதான் சொல்லணும். ராதாவை (மூத்த பெண்) தூங்க வச்சுட்டு ஷூட்டிங்குக்குக் கிளம்பிடுவேன். அவ எழுந்த பிறகு குளிப்பாட்டி சாதம் வச்சு தன்



• ராணி எலிசபெத்துடன்...

பசங்களோட விளையாட வச்சு எல்லாம் பண்ணுவாங்க. ஆனா ஒரு நாள் மட்டும் ராதா நான் அம்மாவ பாத்தே ஆகணும்னு அழ ஆரம்பிச்சுட்டா. வேற வழியில்லாம மாமி ராதாவை கூட்டிட்டு வந்துட்டா. நான் ஷூட்டிங்ல இருக்கேன். காமிரா படம் புடிச்சுண்டு இருக்கு. உள்ள வந்த இவ என்னைப் பாத்து, 'அம்மா'ன்னு கத்திட்டா. இவருக்கானா ஒரே கோபம். காமிரா 'கட்'னு சொல்ல நின்னுது. எனக்கும் ஒரே பயம், குழந்தையை கோவிச்சுண்டுடப் போறாளேன்னு. ஒருவழியா சமாளிச்சோம்...'' தாய்மையின் பூரிப்போடு சொல்கிறார்.

''அதே மாதிரிதான் சினிமா பார்த்த கதையும். சேவாசதன் படம் முடிஞ்சு போச்சு. நாங்க எல்லோரும் தியேட்டருக்குப் போய்ப் பார்த்தோம். அந்தக் கதைப்படி எஸ்.டி. நடேச அய்யருக்கு இளையாளா வாழ்க்கப்பட்ட எம். எஸ். அம்மாவ அவர் ரொம்பக் கொடுமைப்படுத்துவாரு... இத பாத்து ராதால்லாம் அழுது எல்லாம் முடிஞ்சு நாங்க திரும்ப வந்தாச்சு. அப்புறமா ஒரு வாரம் கழிச்சு நடேச அய்யர் எங்க வீட்டுக்கு ஒருநாள் வந்தார். அவரைப் பார்த்தவுடனே ஓடி வந்து ராதா அவரப் பிடிச்சுக்கிட்டா. ''நீதானே எங்கம்மாவ அடிச்சே. ஏன் எதுக்கு அடிச்சே, எதுக்கு திட்டினே'' அவர் மடி மேலே ஏறி குத்தவே ஆரம்பிச்சுட்டா. அவளை விலக்கறதுக் குள்ள போதும் போதும்னு ஆயி டிச்சு...''

தோழிகள் இருவரும் விழுந்து விழுந்து சிரிக்கிறார்கள். அம்மா தன் மீரா பட அனுபவங்களையும் சொல்கிறார்.



"நாம என்ன பண்றோமோ அதுவாவே ஆயிடணும், அப்பத் தான் அந்தக் காரியத்தை நல்லா பண்ண முடியும்னு அடிக்கடி சொல்வார் இவர். அதை நான் வாழ்க்கை பூரா கடைபிடிச்சுக் கிட்டு வர்றேன்..."

(அவர் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார் என்றாலும் இந்த இடத்தில் ஒரு விஷயத்தைச் சொல் லாமல் இருக்க முடியவில்லை. எம். எஸ். அம்மா மணிக்கணக்கில் பேசினாலும் ஐந்து நிமிடத்திற்கு ஒருமுறை தன் கணவரைப் பற்றிய பேச்சு, நினைவு வந்து விடும். அவர் சொன்னது, அவர் செய்தது, அவர் கருத்து என அந்த ஞாபகத்தில் ஒன்றி விடுவார்.

"அவர் இல்லாமல் நான் ஒண்ணுமே இல்லே. அவர் சொன்னபடியே வாழ்ந்து வந் துட்டேன். எதுவானாலும் அவர் பேச்சைத் தட்ட மாட்டேன்..." என்று சொல்லிக் கொண்டே இருந்தார்.

பேட்டியின் இடையில் ஒரு தடவை கேட்கவே கேட்டேன். "மாமா மேல உங் களுக்கு எப்பவாவது வருத்தம் வந்தது உண்டா. கண்டிப்பா வந்திருக்கணுமே, கொஞ்சமாவது. எத்தனையோ கச்சேரிகள் வருமானம் கோடிக்கணக்கில் தர்ம காரியங் களுக்கு அள்ளிக் கொடுத்திருக்கிறார். உங்கள் நகைகளை தேசிய நிவாரண நிதிக்குக் கொடுத்தீங்க. ஒரு கணமாவது அடடான்னு தோணித்தா..."

"இல்லையே..." என் வெள்ளையாகச் சிரித் தார். "அவர் சொல்றது சரியா இருக்கும், அவர் செய்யறதுதான் நியாயம், அதுக்கு மீறி



• மறைந்த பிரதமர் இந்திராகாந்தியுடன்

ஒண்ணுமில்லைன்னு நினைப்பு தவிர எனக்கு வேற மாதிரி நினைப்பே வந்ததில்லை. எனக்கு அவர்தான் எல்லாம்னு இருந்துட்டேன். தனியா நினைப்புன்னு ஒண்ணு இருந்ததே இல்லை..." கண்களில் நீர் கோர்த்துக் கொண்டது.

அவருடைய தோழி சொன்னார், "பதி பக்தின்னா அப்படி ஒரு பதிபக்திம்மா. இப்படி உலகத்துலே யாராச்சும் ஒரு பொண் இருப்பா ளான்னு சந்தேகம்தான். அவர்ட்ட மறு வார்த்த பேச மாட்டா. கச்சேரிக்கு எப்போ போனும், என்ன பாட்டு பாடணும் எல்லாம் அவர்தான். கச்சேரிக்கு ஒரு மணி நேரத்துக்கு முன்னாடியே போய் மேடை பக்கத்து ரூம்ல ரெடியா இருக்கணும்பார். சில சமயங்கள்ல எனக்கே கூட கோபம் வரும். என்ன இந்த மனுஷர்னு. ஆனா அவ ஒரு வார்த்தை பேச மாட்டாளே. அவர் சொன்னா அதுதான் அவளுக்கு வேதவாக்கு.

ஆனா மாமா எப்பேர்ப்பட்ட மனுஷர். அப்படி ஒவ்வொண்ணையும் திட்டம் போட்டு செஞ்சு அப்படி படிப்படியா அம்மாவைத் தூக்கி உச்சாணிக் கொம்பிலே வச்சார். யாருக்கும் கிடைக்காத பாராட்டுக்கள், பெருமைகள், பட்டங்கள், பதவிகள் அத்தனையும் அம்மாவுக்குக் கிடைக்கும்படி செஞ்சார். அம்மா மேலே ஒரு தூசு விழாம பார்த்துண்டார்..."

என்ற போது மனம் கலங்கி அழுதார் இசையரசி. இப்படி ஐந்து நிமிடங்களுக்கு ஒருமுறை தன் பர்த்தா ஞாபகத்துலேயே பேசிக் கொண்டிருந்ததை இங்கே சொல்லாமல் இருக்க முடியவில்லை..)

"...மீராவிலே கடைசி சீன். கிருஷ்ணரோட மீரா பாடிண்டே போய் ஐக்கியமாயிடறா மாதிரி சீன். காமிரா ஓட ஆரம்பிச்சது. நான் அப்படியே என்னை மறந்து பாடிக்கிட்டே நடந்து போனேன். நானே மீராவா ஆயிட்ட மாதிரி. இது கூட இப்பத்தான் சொல்றேன். அப்ப வேற நினைப்பே இல்லே. அப்படியே போய் மயங்கி விழுந்துட்டேன். ரொம்ப நேரம் ஆச்சு நினைவு வர்றதுக்கு. கூட இருந்தவங்கள்லாம் ரொம்பப் பயந்து போய்ட்டாங்க..." என்கிறார்.

இந்தப் பெண்மணி பாடும் போது தன்னை மறந்து இப்படி 'இன்வால்வ்' ஆகி விடுவதால் தான் இவரால் இசையின் சிகரத்தை அடைய முடிந்தது. பக்தியில் தன்னை மறந்து, தன்னைக் கரைத்துக் கொண்டதால்தானே அவர் இசைப் பேரரசியாக தன்னிகரற்று விளங்குகிறார் என்று நினைத்துக் கொண்டேன்.

மலரும் நினைவுகளில் மூழ்கியிருந்த அவரிடம், "கச்சேரிகளுக்குப் போகும் போது நிறைய சம்பவம் நடந்திருக்குமே" என்றேன்.

"ஒண்ணா, இரண்டா நிறைய சொல்லலாம். ஒரு தடவை நாங்க வட இந்தியாவில் ஒரு கச்சேரிக்குப் போய் இறங்கறோம். கார்லேர்ந்து சாமான் இறங்கிட்டிருந்தது. எங்களோட வந்த பக்கவாத்தியக்காரா சாமானோட அடுத்த கார் கிளம்பறதை பார்த்தவுடனே மாமா கேட்டார், "அவாள எங்க அனுப்புறேள்"னு. "நீங்க இங்க தங்குங்கோ. அவங்களுக்கு வேறு இடம் ஏற்பாடு ஆகியிருக்கு"ன்னா. அவ்ளோதான் அவர், "நாம போகலாம் வா. கச்சேரி கேன்சல்"னுட்டார். அழைக்க வந்தவா வெலவெலத்துப் போயிட்டா. என்ன மனுஷாளுக்குள்ள தராதரம்? எல்லோருக்கும் ஒரே மாதிரி தங்கற வசதி மற்ற வசதிகள் இருக்கணும்கறது மாமாவோட கொள்கை. அப்புறம் அதே மாதிரி செஞ்சு கொடுத்த பிறகுதான்





நாங்க உள்ளே போக முடிஞ்சுது" என்கிறார்.

அந்தத் தயாள சிந்தனை பெரியவருக்கு இருந்ததால் தான் அம்மாவின் கச்சேரிகளால் வந்த இலட்சக்கணக்கான பணத்தை அள்ளிக் கொடுக்க முடிந்தது. எத்தனை பெரிய கோயில் திருப்பணிகள், மருத்துவமனைகள், சமூக அமைப்புகள், சங்கீத சபாக்கள் எல்லாம் இந்தத் தம்பதியர் அள்ளிக் கொடுத்த வரலாற்றைச் சொல்லிக் கொண்டிருக்கும்.

அத்தனையையும் செய்து விட்டு அன்பின் உருவமாக புன்னகை மாறாமல் அமர்ந்து கொண்டிருக்கிறார் எம். எஸ். அம்மா.

"அதென்னம்மா எம். எஸ். ப்ளூ! உங்க பேராலேயே ஒரு கலரே அறிமுகமாகி இருக்கே?"

"அந்தக் காலத்துல நீலத்துல ஒரு வகைய புதுசா அறிமுகப்படுத்தினா. அதைக் கட்டிண்டு நான் கச்சேரிகள் பண்ணேன். அதை அடையாளப்படுத்த எம்.எஸ். ப்ளூன்னுட்டா. நிறைய கச்சேரிகளுக்குக் கட்டிண்டு இருக்கேன்..."

அதே போலத்தான் இவருடைய டாலடிக்கும் வைரத் தோடும். "ஆமாம். மாமா வைரங்களை பாத்துப் பாத்து செலக்ட் பண்ணி கட்டச் சொல்லி பண்ணின தோடு..."

ஆனால் கதை பேசும் அந்த வைரங்கள் இப்போது இல்லை. மாமா மறைவிற்குப் பின் எளிய முத்துத் தோடு அணிந்து கொண்டு இருக்கிறார். கண்களில் கண்ணீர் அந்த மாதரசிக்கு. எதைப் பேசினாலும் மாமாவின் நினைவில் வந்து முடிந்து விடுகிறது. அவரைத் தவிர்த்த விஷயமே எதுவுமே இல்லையே! பேச்சை மாற்றுகிறேன்.

"பாபாவையும், பெரியவாளையும் நீங்க கண்கண்ட தெய்வமா பூஜிக்கிறீங்க இல்லையா?"

"ஆமாம்மா. அதிலே சந்தேகமே இல்லை. பாபா எங்க வாழ்க்கையிலே தானே வந்து ஆட்கொண்டார்னுதான் சொல்லணும். மாமாவுக்குப் பரமாச்சார்யாளிடம் அத்தனை பக்தி. அவரைத் தவிர மற்றவாளை மகான்னு ஏத்துக்கவே மாட்டார். எங்காத்துலே இந்த மாமியோட சின்ன மகன் படிக்க வந்து தங்கியிருந்தான். அப்போ அவன் தன்னோட ஒரு பாபா படத்தை வச்சுண்டிருந்தான். படிச்சு முடிச்சுட்டு போறப்ப எங்கிட்ட கொடுத்துட்டுப் போயிட்டான். மாமா பார்த்தா திட்டப் போறாரேன்னு அதை பூஜை ரூம்ல மறைவா வச்சிருந்தேன். அப்படியும் பாத்துட்டார். கேட்டார் சொன்னேன். "ஓஹோ" அப்படின்னுட்டு போயிட்டார்.

அப்புறமா பாபாவை தரிசனம் பண்ற மகாபாக்கியம் கிடைச்சது. அவரோட தரிசனத்துலே பாபா பகவான்தான்கிறதை நாங்க ரெண்டு பேருமே உணர்ந்துண்டோம். அவா முன்னால பாடும் பாக்கியமும் கிடைச்சது. பல தடவை பாபா எங்களுக்கு வழிகாட்டி இருக்கிறார்.

மகா பெரியவாளும் அதே மாதிரிதான். அமெரிக்காவில ஒரு தடவை கச்சேரிக்குப் போயிட்டு திடீர்னு தொண்டை... பாடவே முடியாம போயிடுத்து. என்ன காரணம், என்ன பண்றது ஒண்ணும் புரியலை. ஒரு நிமிஷம் மகாபெரியவாளை தியானம் பண்ணேன். எப்படி அந்த மாயம் நடந்ததுன்னே தெரியலை. சரியாப் போய் அடுத்த சில மணிகள்ல கச்சேரிக்கு ரெடியாயிட்டோம். ரொம்ப உடம்புக்கு வந்து படுத்தப்போ, "பகவானே, என் கடமைகளை முடிக்காம போயிடுவேனோ"ன்னு பிரார்த்தனை பண்ணிண்டேன். அப்போ குழந்தைகளுக்கு கல்யாணம் ஆகலை. எப்படியோ பொழைச்சு எழுந்துட்டேன். இப்படி நிறைய தடவை இவா இரண்டு பேரும் எங்களுக்குத் தெய்வமா இருந்து வழிகாட்டியிருக்கா.

மாமா போனப்றம் சமீபத்தில் பாபாவ பார்க்கப் போயிருந்தோம். எப்பவும் என்னோட பேசறவர் அன்னிக்கு ஒண்ணுமே பேசலை. அப்படியே நடந்து போய் மேடையில உக்காந்துண்டுட்டார். என் முகத்த அடிக்கடி பாத்துண்டே இருந்தார். அப்படியே அந்தக் கண்ணு. "கவலைப்படாதே, நான்

மல்லிகைப் பூ, முல்லைப் பூ போன்ற கட்டிய பூக்களை ஃபிரிட்ஜில் மூடி போட்ட பாத்திரத்தினுள் போட்டு வைத்தால், பாத்திரத்தினுள் நீர் கோர்த்துக் கொண்டு, சில சமயம் பூ அழுகினது போல், ஃப்ரெஷ்ஷாக இருக்காது. அப்படியில்லாமல் இருக்க, பூவை ஒரு பேப்பரில் சுற்றி, ஒரு துணிப் பைக்குள் வைத்து ஃபிரிட்ஜினுள் வைக்கவும். நாம் எப்படி வைத்தோமோ, அப்படியே 2 அல்லது மூன்று நாட்கள் கழித்து எடுத்தாலும் நன்றாக இருக்கும். பூவின் வாடை மற்ற பொருட்களுக்கும் பரவாது.

– பிருந்தா இரமணி.



இருக்கேன்"னு சொல்றா மாதிரியே இருந்தது. என் முகத்த பாக்க முடியாம குனிஞ்சு வேற பக்கம் பாத்துண்டிருந்தார்.'' சந்தனக்கீற்று தவழும் அந்த நெற்றியை மகானாக இருந்தாலும் எப்படிப் பாக்க முடியும்? அப்போது பகவான் காப்பு ரட்சை போல இவருக்கு ஒரு செயினை அளித்து அணிந்து கொள்ளச் சொல்லியிருக்கிறார். ஒரு குழந்தையின் உற்சாகத்தோடு அதை எடுத்துக் காட்டினார்.

ரபீந்திரராய் பெண்ணிடம் கல்கத்தாவில் இந்தி கற்றுக் கொண்டது, முசிறி சுப்ரமண்ய அய்யரிடம் தமிழ் கீர்த்தனங்கள் தெரிந்து கொண்டது, பாபநாசம் சிவன், துறையூர் ராஜ கோபாலசர்மா, செம்மங்குடி மாமா என நிறைய பெயர்களை நினைவுகூர்ந்தார்.

"என்னமோ தெரியலை மாமா போனப்புறம் 'சட்'டுனு மறதி வந்துடறது. பேசிண்டே இருப்பேன், திடீர்னு ஒண்ணுமே இல்லாம மறந்து போயிடறது..." என வருத்தப்படுகிறார். கே.சி. டே சைகல், இந்துபாலா, கேசர் பாய் என தான் அந்தக் காலத்தில் இசைத் துறையில் பழகியவர்களைப் பற்றி சொல்லிக் கொண்டிருந்தார்.

பேச்சினூடே ஒரு குழந்தையைக் கவனிப்பது போல அவரைக் கவனித்துக் கொண்டார் விசாலம். "இவளுக்குத்தான் கோவில் கட்டணும். விசாலம் இல்லேன்னா இவா ரொம்பத் தவிச்சுப் போயிட்டிருப்பா..."

"ரொம்ப வாஸ்தவம். எனக்கு டவல், புடவைன்னு என்ன வேணும்னு அத்தனையும் தெரியும் அவளுக்கு. அவ இல்லேன்னா ஒரு நிமிஷம் இருக்க முடியாது என்னாலே. அவளுக்கும் கல்யாணம் ஆகி குழந்தைகள் அவாளுக்குக் கல்யாணம் எல்லாம் ஆயாச்சு. ஆனாலும் என்னோடதான் அவ இருக்கிறது" இசைப் பேரரசிக்குப் பணிவிடை செய்யும் பாக்கியம் கிடைத்த அந்தப் பெண்மணி, தனக்குக் கிடைத்தது பாக்கியம் என்கிறார் எம்.எஸ்.

"அம்மா ஒரு குழந்தை மாதிரி. சாப்பாடெல்லாம் சரியாவே சாப்பிட மாட்டாங்க. ரொம்பக் கொஞ்சம்தான். அதுவும் இப்போ சர்க்கரை உடம்பு வந்துட்டதுக்கப்புறமா ரொம்பக் கொறைஞ்சு போச்சு. பெரியவர் போனதுப்புறம் சொல்லிச் சொல்லி சாப்பிட வைக்க வேண்டியதா இருக்கு. அம்மாவுக்கு வத்தக் குழம்புன்னா ரொம்பப் பிடிக்கும்..." என்கிறார் இவர்.

உலக மக்கள் அனைவரையும் தன் இன்குரலால் கவர்ந்தவர். தெரிந்தவர்கள் அனைவரையும் தன் இனிமையான பண்பால் மனம் நெகிழச் செய்பவர். இன்று அமைதியாகத் தன் இல்லத்தில் வாசம் செய்து கொண்டு இருக்கிறார். எளிமையே உருவான இந்தப் பெண்மணி யாரிடமும் கலந்து பழகி விடுவார். 'அம்மாவுக்கு இப்படியா, ஐயா போய்ட்டாரா' என வருத்தப்பட்டு உள்ளே வந்து பேசும் அதிகம் பழக்கம் இல்லாத மனிதரிடம் கூட பேசிக் கொண்டு இருப்பார்.

இவர் இசைப் பேரரசி என்பது எப்படி மறுக்க முடியாத உண்மையோ அதே போல பெண்களுள் ஒரு வைரம் என்பதையும் மறுக்க முடியாதுதான். இந்தியப் பெண்மையின் அத்தனை தத்துவங்களையும் தன் வாழ்க்கையில் வாழ்ந்து காட்டிக் கொண்டு இருக்கிறார். ஒரு பெண்ணால் உலகின் புகழின் சிகரங்களையும் தொட முடியும், அதே சமயம் எந்த வித அகங்காரமுமின்றி நேசத்தோடு மிக எளிமையாக வாழவும் பிறத்தியாரிடம் பழகவும் முடியும் என்பதை நிரூபித்துக் கொண்டிருக்கிறார். இப்படித்தான் தோன்றுகிறது –

சூரியன் எதனோடும் ஒப்பிட முடியாதது. அதன் பெருமை சொல்லி முடியாது. அது ஒப்புயர்வற்ற இடத்தில் இருந்தாலும், ஒரு எளிய பூ மலர்வதற்குத் தன் கரத்தை வாஞ்சையோடு நீட்டுகிறது. எம். எஸ். அம்மா அந்தச் சூரியனாகத் தன்னிகரற்று ஜொலிக்கிறார்.

அட்டை வண்ணப்படம் : ஹரலிங்கம்





# ஒரு டஜன் கார்கள்

3200
பேருக்கு வெற்றிவாய்ப்பு
ரூ. 1 கோடி
பரிசு




ஒரு கிலோ தங்கம்
சிங்கப்பூர் - பாங்காக் டூர்
எல்லாம் நிறைந்த இல்லம்
20 கிலோ வெள்ளி
10 மோட்டார் பைக்
18 மொபட்




**இன்னும் எக்கச்சக்க பரிசுகள்**

விலை
ரூ. 65

# தினமலர்

- 3 புத்தகம்
- 8 சுவாமி படம்
- தரமான இலவச பொருட்கள்

# தீபாவளி மலர் '98

தினமலர் ஏஜண்ட் அல்லது புத்தக கடையில்
இன்றே உங்கள் பிரதிக்கு முன்பதிவு செய்து கூப்பனை பத்திரப்படுத்துங்கள்.
கூப்பன் அதிவேகமாக தீர்ந்து கொண்டிருக்கிறது.

# ஞானதரணி ஸரஸ்வதி



"ஆத்ம வித்யா, மஹாவித்யா, ஸ்ரீவித்யா காமலேலிதா, ஸ்ரீ ஷோடசாக்ஷரி வித்யா, த்ரிகூடா காமகோடிகா, நசமுத்ரா ஸமா ராத்யா த்ரிபுரா ஸ்ரீவசங்கரி, ஜ்ஞானமுத்ரா, ஜ்ஞானகம்யா ஜ்ஞானஜ்ஞேய ஸ்வரூபிணி"

இப்படி ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமத்தில் தேவி ஞானரூபிணியாக, சரஸ்வதியாகத் துதிக்கப் படுகிறாள். ஆனால் கல்விக் கடவுள், கலாவாணி, கலைமகள் சரஸ்வதிக்குத் தனியான கோயில் இந்தியாவிலேயே இரண்டு இடங்களில்தான் உள்ளது. (நாட்டில் கல்வி கற்கும் கூடங்கள் யாவுமே சரஸ்வதி கோயில்தானே? என்பதாலா?

தமிழ்நாட்டில் 'திருவாரூர் - மயிலாடுதுறை' பேருந்து தடத்தில் உள்ள 'பூந்தோட்டம்' அருகே மேற்கே அரசலாற்றங் கரையில் உள்ள கூத்தனூர் என்ற இடத்திலும் –

ஆந்திர பிரதேசத்தில், ஹைதராபாத்திலிருந்து 130 மைல் வடக்கே 'அதிலாபாத்' ஜில்லாவில் 'முதோல்' தாலுக்காவில் கோதாவரி நதி தீரத்தில் உள்ள ஒரு சிறு கிராமம் 'பாஸர்' என்ற இடத்திலும்–

நாமகள் கலாவாணிக்கு என்று தனியாகக் கோயில் உள்ளது. கடந்த வருடம் ஆந்திரப் பிரதேசத்தில் அமைந்துள்ள 'பாஸர்' - வியாஸபுரி சரஸ்வதி க்ஷேத்திரத்திற்கு போகும் வாய்ப்பு கிடைத்தது. அம்மனை தரிசிக்கும் பேறு பெற்றேன்.

கோதாவரி நதி தீரத்தில், அமைதியான 'பாஸர்' என்னும் கிராமத்தில் எழுந்தருளியுள்ளாள் இந் நாமகள்.

இங்கு உத்சவ மான கலைமகளை 'வாஸரா' என்றும் 'க்ஷேமாரசல் வாஸினி' என்றும் அழைக்கிறார்கள் – முனிச்ரேஷ்டர், வேதவியாசர் தீர்த்த யாத்திரை செய்கையில், தன் சிஷ்யர்களுடன் இங்கு தங்கி தவம் செய்ததாகவும், தினமும் தன் கையினால் ஒரு பிடி மணலைப் பிடித்து வைத்து அம்மனின் உருவச் சிலையை ஸ்தாபிதம் செய்ததாகவும் புராண வரலாற்றில் கூறப்பட்டுள்ளது. வித்யா தாரிணியின் அருள் பெற்று வேதங்களை விளக்கினதாகவும் கூறப்படுகிறது. வியாச மாமுனியால் பிரதிஷ்டை செய்யப்பட்ட 'வாஸாரா பீட நிலைய ஸ்வரூபிணி' எழுந்தருளிய இடம்தான் இவ் 'வியாஸபுரி' - நாளடைவில் 'பாஸர்' என்று மாறியுள்ளது.

'வீணாப்புஸ்தக தாரிணி'யாக, பத்மாஸனத்தில் ஞானதபஸ் நிலையில், பரப்பிரும்ம ஸ்வரூபிணியாக வாஸாரா பீட நிலையா



வாஸினி சரஸ்வதி கர்ப்பகிரஹத்தில் அமர்ந்துள்ளாள் - கலைவாணியின் உருவசிலை பெரிய அளவில் உள்ளது.

பிரதி தினமும் அபிஷேக ஆராதனைகள் விஸ்தாரமாக நடைபெறுகிறது. விடிகாலை பிரும்ம முஹூர்த்தத்தில் 'ருத்ராபிஷேகத்தில்' ஆரம்பித்து - கோதாவரி தீர்த்தத்தில் அம்மனுக்கு அபிஷேகம் செய்வித்து, பின் பால் தயிர், நெய், தேன், சந்தனம் என்று விரிவாக அபிஷேகம் செய்விக்கிறார்கள். இங்கு வித்யா தாரிணிக்கு அலங்காரம் மஞ்சளைக் கொண்டு செய்கிறார்கள். ஸ்ரீசூக்தம், பஞ்சசூக்தம் சொல்லப்பட்டு அர்ச்சனை, ஹாரத்தி நடக்கிறது. அதன் பின் காலை 7.30 மணியிலிருந்து 12.30 மணி வரையில் மாலை 2 மணியிலிருந்து 6.30 மணி வரை அர்ச்சனை ஆராதனை நடைபெறுகிறது. தினமும் "அக்ஷர அப்ட்யாசம்" நடக்கிறது. பிரதி வெள்ளிக்கிழமை அம்மனை மயில் வாகன பல்லக்கில் வைத்து கோயிலின் உள்ளே பிரதக்ஷணம் செய்கின்றனர்.



முதற் கடவுளான வேழ முகத்தோனுக்கு பூஜை செய்கிறார்கள். கர்ப்ப கிரஹத்தின் வாயிலில் ஒரு மரத் தடியில் வீற்றிருக்கும் படைக்கும் கடவுளும், அம்மனின் கணவருமான 'பிரும்மா'வுக்குப் பூஜை செய்கிறார் கள். சரஸ்வதியின் வலது பக்கத்தில் மஹாலக்ஷ்மியை பிரதிஷ்டை செய்துள்ளனர். மண்டபத்தின் வெளியே மஹாகாளியையும் பிரதிஷ்டை செய்துள்ளனர்.

சரஸ்வதியின் சிலை பெரிய அளவில் உள்ளதால், 9 கஜம் புடவையை அணிவிக்கிறார்கள். பிரதி தினமும் புதிய புடவையைக் கட்டுகிறார்கள். முக்கிய பிரசாதம் அம்மனுக்கு அலங்கரித்த மஞ்சள் ஆகும். மஹிமை வாய்ந்த இந்த மஞ்சளை படிப்பிலும், பாட்டிலும் தேர்ச்சி பெற - நாவன்மைகூட நாக்கில் தடவுகிறார்கள் - வாயில் இட்டு உட் கொள்கிறார்கள்.

நவராத்திரி சமயம் ஒன்பது நாட்களும் பூஜை வெகு விமர்சையாக நடத்துகிறார்கள். சமீப காலமாகத்தான் சரஸ்வதி கோயில் பிரசித்தம் பெற்றுள்ளது. மஹாளய அமாவாசைக்குப் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடுகிறார்கள். தசரா பத்து நாட்களும், "பாஸர்" திருவிழா கோலம் பூண்டு, கோலகலமாகக் காட்சியளிக்கிறது.

நவமி அன்று 'சண்டி' ஹோமம், 'த்ரிகால பூஜை' ஒன்பது நாட்களிலும் பெரிய அளவில் விஸ்தாரமாக செய்கிறார்கள். குழந்தைகளுக்கு அக்ஷராப்பியாஸம், சாதாரண தினங்களை விட, அதிகமாக இச்சமயம் நடைபெறுகிறது. கையில் சிலேட், பென்சில் சகிதம் பெற்றோர்களுடன் குழந்தைகள் ஆவலுடனும், உற்சாகத்துடனும் கலைவாணியின் அருளுக்குக் காத்திருக்கின்றனர். அவரவர் சக்திக்கு ஏற்றவாறு காணிக்கை செலுத்தியும் செலுத்தாமலும் அம்மனின் அருளுக்குப் பாத்திரமாகுகிறார்கள். சரஸ்வதியின் கடாக்ஷம் எல்லோருக்குமே நிச்சயம் கிட்டும். (எதிர்காலத்திலும் பெற்றோர்களுக்கு "டொநேஷன்" என்ற வார்த்தை, காதில் விழாமல் கேட்காமல், தங்கள் குழந்தைகளுக்கு படிப்பு அறிவு போதிக்கும் பள்ளிகளில் 'அட்மிஷன்' கிடைக்க வரம் அருள வேண்டும்) முன்பு தட்டில் அரிசியை பரப்பி, அதில் எழுதுவர். இப்பொழுது எல்லோர் கையிலும் ஸ்லேட், பென்ஸில் சாக் இத்யாதி.

கலைஞர்கள் பலரும் குழுமி, தங்கள் மேதா விலாஸத்தை அரங்கேற்றுகின்றனர். தசரா சமயம் அம்மனை அலங்கரித்து, பல்லக்கில் இருத்தி, "பாஸர்" கிராமம் முழுவதும் ஊர்வலமாக வருகிறார்கள். இச் சமயம் கோயிலின் உள்ளேயே, அம்மனுக்கு சார்த்திய புடவைகளை ஏலம் விடுகின்றனர்.

தசராவைப் போலவே, சிவராத்திரியும், அம்மனின் பிறந்த தினமான 'பஸந்த் பஞ்சமி'யும் விமரிசையாகக் கொண்டாடப் படுகிறது. சிவராத்திரி சமயம் ஐந்து நாட்கள் திருவிழாவினைக் கொண்டாடுகின்றனர்.

யாத்ரிகர்கள் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் வருகிறார்கள். மத்ய பிரதேஷ்,

# டபுள் ஸ்ட்ராங் ஆக்ஷன் ஸ்டார்...

தமிழ்நாடு முழுவதிலும் சமீப காலமாக டபுள் ஆக்ஷன் ஃபார்முலா சக்கைப்போடு போட்டு வருகிறது. அதிரடி ஆக்ஷன் பற்றியும், இரண்டு வழிகளில் செயல்படும் புதிய ஃபார்முலா பற்றியும் பெண்கள் அனைவரும் எங்கு பார்த்தாலும் ஆச்சரியத்துடனும், ஆர்வத்துடனும் பேசிக் கொள்கிறார்கள்.

அழுத்தமான கறையையும் நீக்கக் கூடிய அதிசக்தி வாய்ந்த விசேஷ மினரல் ஒன்று அறிமுகமாகி, இரண்டு மடங்கு சக்தியுடன் சக்கைப் போடு போடுகிறது.

அது மட்டுமல்ல. துர்நாற்றத்தை போக்கும் சக்தியும் இதற்கு உண்டு.

கறையை நீக்கும் சக்தி, நாற்றத்தை போக்கும் சக்தி, பளபளப்பு உண்டாக்கும் சக்தி எல்லாவற்றையும் உள்ளடக்கிய விசேஷ மினரல் எனப்படும் சகலகலா வல்லவனின் ஆற்றல் இரண்டு மடங்கு பயன்தரும்படியாக புதிய ஆக்ஷன் ஃபார்முலாவுடன் பாத்திரம் துலக்கும் கிளீனிங் பவுடர் ஒன்று வந்துள்ளது.

மைக்ரோஃபைன் முறைப்படி தயாரிக்கப்பட்டு, இரண்டு மடங்கு சக்தியுடன் செயலாற்றி, பாத்திரங்களில் எண்ணெய்ப் பிசுபிசுப்பு, அழுக்கு ஆகியவற்றை சுத்தமாக அகற்றி, சின்னஞ்சிறு கீறல்கூட விழாமல் புத்தம் புதிய பாத்திரம் போல் ஜொலிக்க வைக்கும் அந்த கிளீனிங் பவுடரின் பெயர் சூப்பர் ஏ-ஒன் கிளீனிங் பவுடர். இந்த டபுள் ஸ்ட்ராங் ஆக்ஷன் ஸ்டாரின் ஆற்றல் தமிழகப் பெண்கள் மத்தியில் மிகவும் பரபரப்பான வரவேற்பைப் பெற்றுள்ளது.



கோலம் போட்டதும் இடும் செம்மண் நன்றாக பற்ற வில்லையே என கவலை வேண்டாம். ஹார்டுவேர் கடையில் விற்கும் ரெட் ஆக்ஸைடு கலர்ப் பொடியை வாங்கி இட்டால் பளிச் சென்று இருக்கும். அதுவும் மொசைக் தரையிலும் மிக நன்றாகத் தெரியும்.

- ஆர். ராஜலட்சுமி

மஹாராஷ்டிரா, கர்நாடகா, ஆந்திரா - இங்குள்ளவர்கள் தெலுங்கு பாஷையில் பேசுகிறார்கள். நிஜாமாபாத்தின் அருகில் உள்ளது. ஹிந்தியிலும் பேசுகிறார்கள்.

பாஸரில் பல நாட்கள் தங்கி இருந்து, பிரார்த்தனை செலுத்துபவர்கள் அனேகம். யாத்ரிகர்கள் தங்குவதற்கு சத்திரங்களைக் கட்டியுள்ளனர். கோயிலின் உள்ளேயும் பலரும் குடும்பத்துடன் வந்து தங்குகிறார்கள். சமைத்து சாப்பிட சகல வசதிகளோடும் வந்து இருக்கிறார்கள். வெளியே கடை கண்ணிகள் உண்டு.

கோயிலின் வருமானத்தைப் பாதுகாக்க, யாத்ரிகர்களுக்கு சௌகரியத்திற்காகவும், "ஸ்டேட் பாங்க் ஆஃப் ஹைதராபாத்" இங்கு ஒரு கிளையை நிறுவியுள்ளனர்.

ஹைதராபாத்திலிருந்து பாஸருக்கு ரயில் வசதியுள்ளது. பஸ் வசதியும் உள்ளது. போகும் வழியில், பசியாறவோ, தாகம் தணிக்கவோ வசதிகள் ஒன்றும் இதுவரையில் ஏற்படவில்லை- சாலையின் இரு பக்கங்களும் பொட்டல் காடாகவே உள்ளது. பயணிகள் தங்களுக்கு வேண்டிய அத்தியாவசிய பொருட்களை வைத்துக் கொள்ளவும்.

இதுவரையில் "வாஸரா பீட நிலைய வாஸினி"யை தரிசிக்காதவர்கள் "தசரா" பண்டிகை சமயம் "பாஸர்" சென்று தேவியின் அருளுக்கு பாத்திரமாகலாமே!

— விசாலம் நாராயணஸ்வாமி

**இந்த வருடம் இப்படிப் புதுமையாய்**
**நவராத்திரி அழைப்பிதழ்**
**செய்யுங்களேன்!**
**(பொம்மைகளே கூப்பிடுவது போல...)**

எங்களைத் தெரியுமா எம தன்பு
மங்கையரே,
எண்ணற்ற உருக் கொண்ட
எங்களின் விழா இது!
வண்ணங்கள் பலவிதம் வடிவங்கள்
சிலவிதம்
வரிசையாய் அமர்வோம் வருக என
அழைப்போம்!
நம்மைப் படைத்திட்ட நாயகி
முத்தேவியரை
நம் நலம் வேண்டி நாவாரத் துதிப்பீர்!
கலைகளின் திறமையைக் காணும் ஓர்
வாய்ப்பிது
காலம் கடத்தாது களிப்புடன் வருவீர்
விண்ணவர் மண்ணவர் வித்யாசம்
இல்லாது
வினோதமாய் கலந்துள்ள
விந்தையைப் பாரீர்
மலைகளும் அணைகளும் மயக்கும்
பூங்காக்களும்
கலையுறுக் கொண்டுள்ள காட்சியில்
மகிழ்வீர்!
கிராமத்தின் பழமையும் கணிணியின்
புதுமையும்
கருத்துக்கு விருந்தான காட்சியை
காண்பீர்!
பாட்டொன்று பாடுவீர்! பரிசு சுண்டல்
பெறுவீர்,
பாட்டை ரசிப்போருக்கும் பரிசுண்டு
வருவீர்!
மங்களகரமான மஞ்சள் குங்கும் பெற
மறுபடி அழைக்கின்றோம் மறவாது
வருவீர்
உவந்தெங்களை அமைத்த
''உஷாவும் மைதிலியும்''
உங்களை வரவேற்க எங்களுடன்
காத்திருக்கார்...

இங்ஙனம் அன்புடன்

— ஜெயா ராஜாமணி

# பண்டிகை காலம் வந்தாச்சு..!

நவராத்திரி என்றாலே ஓர் அருமையான விழாக் காலம். வீடுகள் மாவிலைத் தோரணம், மாக்கோலம் என்று கலைக் கூடமாய் மாற, பூஜை அறையில் அம்மன் அலங்கார ரூபினியாய் ஜொலிக்க, அவளது நாமங்கள் வேதங்களாய் எங்கும் ஒலிக்க, நாடே பக்தியில் திளைத்து, பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி தேவியரின் கடாக்ஷத்தோடு நிறைந்து நிற்கும் மங்கலத் திருநாளல்லவா நவராத்திரி? மழலைப் பட்டாளங்கள் நாளைக்கோர் அலங்காரம் செய்து கொண்டு புத்தாடை உடுத்தி மகிழ்ந்து அக்கம் பக்கத்து வீட்டு பொம்மைகளை தொட்டு பார்த்து, பிரமாதமாய் மழலைக் குரலில் கச்சேரி நடத்தி... அடேயப்பா சிறுவர் முதல் பெரியவர் வரை கலை ஆர்வமும் பக்தியும் நிறைய அன்பு பாராட்டி மகிழும் நாளும் இதுவே.

இதே சமயத்தில்தான் 'பண்டிகை நாட்கள் வந்தாச்சு!' என அனைத்துத்துறை வியாபாரமும் களைகட்ட ஆரம்பித்து விடுகிறது. 'இந்த வருடம் உங்களுக்கு எப்படி இருக்கிறது?' என அவர்களில் சிலரை அணுகிக் கேட்டபோது...

ஆன்மீகப் புத்தகங்கள், பூஜை சாமான்கள், ஆன்மீக கேசட்டுகள் போன்றவற்றை மயிலை கற்பகாம்பாள் கோவில் அருகே வைத்து பவன்ஸ் புஸ்தக் பாரதியை நடத்தி வரும் சிவகுரு அதனை வியாபார ஸ்தலமாக அல்லாமல் தெய்வீக மணம் கமழும் இடமாக வைத்திருக்கிறார்.

"நவராத்திரிங்கறது கிட்டத்தட்ட எங்களுக்கு தீபாவளிக்கு துணிக்கடை எப்படியோ அதே போலத்தான். ஆடி மாசத்திலிருந்தே பண்டிகை சீசன் தொடங்கி விட்டாலும் நவராத்திரிக்குத்தான் சிறப்பிடம். வியாபாரிகள், கல்வியாளர்கள், மருத்துவர்கள் என்று எல்லோருமே இந்த நாட்களில் மிகுந்த பய பக்தியோடு வீட்டில் பூஜை செய்வது கோவிலுக்குப் போவதுன்னு செய்வாங்க. மூன்று தேவியருக்கும் ஒன்றாக ஒன்பது நாட்கள் நடக்கும் பூஜை நாள்தானே இந்த தசரா? அந்த முப்பெரும் தேவியரின் அருள் இல்லைன்னா எதுவுமே இல்லைன்னுதான் சொல்லணும்.

நிற்கக் கூட நேரமில்லைன்னு பறப்பவர்கள் கூட இந்த நவராத்திரி நாட்களில் பூஜை புனஸ்காரங்கள் செய்ய விரும்புவதால் பூஜை முறை புத்தகங்கள், அம்மன் பாடல்கள், தேவி மஹாத்மியம், ஸௌந்தர்ய லஹரி போன்ற ஸ்தோத்திர புத்தகங்கள் அதிக அளவில் விற்பனையாகும்.



சிவகுரு மற்றும் ஊழியர்கள் இராம. கோபாலனுடன்

எதைச் செய்தாலும் அதைச் சரியாகச் செய்ய வேண்டும் அதிலும் கடவுளுக்கு அர்ப்பணமாக்கும் எந்த ஒரு பொருளும் தூய்மையும் தரமும் உள்ளதாகவும் இருக்க வேண்டுமல்லவா? எனவே பூஜைக்குத் தேவையான சாமான்கள் விளக்குத் திரியிலிருந்து திருமஞ்சனப் பொடி, மஞ்சள் குங்குமம் என ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்துத்தான் மக்கள் வாங்குவார்கள். இந்த சீசனில் பூஜை சாமான்களுக்கு நல்ல மார்க்கெட்...

பலருக்கும் நேரமின்மை காரணமாக ஸ்லோகம் பாடல்கள் பாட முடியாது. பலருக்கு மற்றவர் பாட அதைக் கேட்பது இன்பமளிக்கும். இப்படி பலவித காரணங்களால் ஆன்மிகக் கேசட்டுகளும் விற்பனையில் முன்னிலை வகிக்கும். பிரபல கர்நாடக இசைக் கலைஞர்களின் அம்மன் பாடல்கள் அடங்கிய கேசட்டுகளும் நன்றாக விற்பனையாகும். ஸ்வாமி ஸ்டிக்கர் குட்டி குட்டி பொம்மைகள், மொத்தத்தில் சின்னச் சின்ன

பொருட்கள் கூட குறிப்பிட்டுச் சொல்லும் படியான விற்பனை யாகும் ஒரு விழாக்காலம் என்றால் அது நவராத்திரிதான்.

இது பாரதீய வித்யா பவனின் ஓர் அங்கம் என்பதால் பல புகழ்பெற்ற தலைவர்கள் இயற்றிய ஆன்மிகப் புத்தகங்கள் தரமான ஆங்கில மற்றும் சமஸ்கிருத மொழிகளில் கிடைக்கும்.

இந்த முறை வித்தியாசமான பொம்மையில் கவனம் செலுத்தலாமா என்ற ஐடியா உள்ளது.

வியாபார இலாபம்ங்கற சந்தோஷம் இருந்தாலும் அதையும் விட பல வீடுகளின் பூஜையில் நமது கடை பொருட்கள் அம்பாளுக்குச் சமர்ப்பணம் ஆகிறது என்பதை நினைக்கிறபோது ஏற் படுகிற சந்தோஷம்ங்கறது மிகப் பெரிய பாக் கியம். அதைச் சொல்ல வார்த்தைகள் இல்லை. நவராத்திரியில் இப்படி கிடைக்கிற பாக்கியத்தை விட வேறு என்ன வேண்டும்" என்று பக்தியில் மூழ்கிச் சொல்கிறார் சிவகுரு.


• ஐம்பகம்


• நகை வியாபாரம் ஆரம்பிக்கும்

**மக்கள் மத்தியில் பிரபலமான, செஞ்சுரி அடிக்கபோகும் பாரம்பரியம் மிக்க நகைக்கடை உம்மிடி பங்காரு செட்டியார் ஜுவல்லர்ஸ். இதன் கிளை தி.நகர் ஜி.என். செட்டி ரோட்டில் துவங்கப்பட்டுள்ளது. அதன் உரிமையாளர் திரு சுதாகர். திருமதி லலிதா சுதாகர், அவரது மகன்கள் பாலாஜி, ராஜேஷ் என எல்லோரும் பண்டிகை பரபரப்பில் விற்பனை வேகத்தில் மூழ்கி இருக்கிறார்கள்.**

"பொதுவாக நவராத்திரின்னு எடுத்துக் கொண்டாலே கொலு பூஜை அப்புறம் அலங்காரம் இவையெல்லாம்தான் ஞாபகத்துக்கு வரும். பக்தியும் கலையும் இணைந்து வரும் பண்டிகை தசரா.

ஆடி முடிஞ்சு ஆவனி முதல் வாரத்தில வரும் பண்டிகை. ஆடி மாதம் நகை பிசினஸ் டல்தான். நவராத்திரில தான் மறுபடி பிசினஸ் சூடு பிடிக்கும்.

குறிப்பாக நவராத்திரியில் குறைந்தபட்சம் ஒரு தங்கக் காசாவது வாங்க வேண்டும் என்று நினைப்பவர்கள் பலர் நவராத்திரி பூஜையில் ஒன்பது நாட்களும் வைத்திருந்து பின்னர் அதை பூஜையறையில் எப்போதும் வைத்திருந்தால் அம்பிகை மூவரின் கடாக்ஷமும் கிடைக்கும் என்று நம்புகிறார்கள்.

தவிர வெள்ளிப் பாத்திரங்கள் பூஜைக்குத் தேவையான ஜோதி, மண்டபங்கள், பஞ்சபாத்திர உத்ரணி போன்ற பூஜை சாமான்கள் நன்றாக விற்பனையாகும்.

குறிப்பாக வெள்ளியில் குங்குமச் சிமிழின் விற்பனையளவு அதிகரிக்கும். தவிர கோவில்களில் சுவாமிக்கு வைக்கப்படும் கிரீடம் போன்ற பலவிதமான நகைகள் நாங்கள் செய்வதால் அதற்கும் கூட இந்த சமயத்தில் நல்ல டிமான்ட் இருக்கும்.


• குமாரவேலு



**கொலுவிற்கு வரும் பெண்களுக்கு சபையில் ஒரே போல் தாம்பூலம் கொடுங்கள். பெண்கள் அனைவருமே சக்தியின் அவதாரங்கள்தான். பண்டிகைகள் உறவையும், நட்பையும் வளர்ப்படுத்தும் பாலமாக இருக்க வேண்டுமே தவிர, மன விரிசல்கள் ஏற்பட காரணமாக இருக்கக் கூடாது.**
**— சியாமளா ராஜகோபால்**

இங்கிலாந்து அரசி, எலிசபெத் 1960ல் வந்த போது ரிப்பன் பில்டிங் நினைவுப் பரிசு வழங்கப்பட்டது. அதை வடிவமைத்ததும் நாங்கள்தான். தற்போது அவர்கள் இந்தியா வந்தபோது கலாக்ஷேத்ரா நினைவுப் பரிசு தரப்பட்டது. அதையும் நாங்கள்தான் செய்து கொடுத்தோம்.

தவிர தி. நகர் திருப்பதி தேவஸ்தான கோவிலில் பெருமாளுக்குக் கிரீடம் கூட நாங்கள் வடிவமைத்து செய்ததுதான். இப்படித் தெய்வப் பணிகளைச் செய்ய எங்களுக்குக் கொடுத்து வைத்திருக்கிறது. பாக்கியம் என்றுதான் சொல்ல வேண்டும்.

இந்த அளவுக்கு எங்க பிசினஸ் வளர்ந்திருக்கறதுக்கும் மக்கள் மத்தியில் பிரபலமடைவதற்கும் காரணம் மக்களை கவர வேண்டும் என்று எப்படியும் செய்யலாம் என்று இல்லாமல் இருப்பதுதான். மக்கள் கொடுக்கும் பணத்திற்கு அதன் மதிப்பிற்கேற்ற நல்ல பொருளையே தர வேண்டும் என்பதில் உறுதியாக இருக்கிறோம். அவர்களின் அன்பிற்கு 24 காரட் சொக்கத் தங்கத்தையே தரலாமே!

உதாரணமாக இப்போது கூட கி.பி. இரண்டாயிரம் ஆண்டையும், எங்கள் நிறுவனத்தின் நூற்றாண்டு விழாவையும் இணைத்து 'தங்கப்புதையல் 2000' என்ற திட்டத்தை அறிமுகப்படுத்தியுள்ளோம். மாதம் முன்னூறு ரூபாய் வீதம் பதினெட்டு மாதம் கட்டினால் ஆறாயிரம் மதிப்புள்ள தங்க நகைகள் வாங்கிக் கொள்ளலாம். இதிலே இரண்டு மாதத்திற்கொரு முறை நடைபெறும் குலுக்கலிலும் 24 காரட் தங்க நாணயம் ஒருவருக்குக் கிடைக்கும். 2000 ஆம் ஆண்டில் மொத்தம் எழுபத்தாறு பவுன் தங்கம் பரிசாகத் தருகிறோம். இந்தத் திட்டமும் நவராத்திரியில் ஆரம்பித்து இரண்டாயிரம் ஆண்டில் முடிவது போல வடிவமைத்துள்ளோம்.

'ஆன்டிக்ஸ்' அதாவது பழைய பாரம்பரிய மிக்க நகைகளை மீண்டும் செய்து மார்கெட்டுக்குக் கொண்டு வந்துள்ளோம். அட்டிகை, ஒட்டியாணம், வங்கி, நெற்றி சுட்டி போன்றவை ஜிமிக்கிக் கூட பழைய மாடல். இது தற்போது நல்ல விற்பனையாகிறது. அதுவும் நவராத்திரி விற்பனையில் அதிகமாகலாம்.

நவராத்திரி சீசன் எங்க பிஸினஸுக்கு ஸ்டார்ட்டிங் பாயிண்ட் என்றுதான் சொல்ல வேண்டும். கல்யாண தேதிகள் அதிகமுள்ள தைமாதம் தவிர இந்த மாதத்தில்தான் நல்ல வியாபாரம். பல பண்டிகைகள் வருவதாலே மக்கள் இந்தச் சமயத்தில் நகைகள் வாங்குவதை விரும்புகிறார்கள்.

கடவுளுக்கு உபயோகப்படுத்தும் பொருட்களும் அதிக அளவில் விற்பனையாவதால் இது தெய்வீகம் கலந்த விற்பனை சீசன்."

**அடுத்தது புடைவைதானே! தனிப் பெண்ணாக நின்று தன் இல்லத்திலேயே செண்பகம் சில்க்ஸ் ஆரம்பித்து உயர்ந்து இன்று மயிலாப்பூர் லஸ் சர்ச் ரோடில் பெரிதாக தன் நிறுவனத்தை விஸ்தரித்திருக்கும் திருமதி ஜெம்பகம் ராமசாமியை சந்தித்த போது-**

"நம் மனதிலிருந்து பக்தி, கலை உணர்வு போன்றவைகளை வெளிப்படுத்தி கலாசாரத்தை பிரதிபலிக்கும் காலம் நவராத்திரி என்று சொல்லலாம்.

நேற்றுவரை சூரிதார், ஜீன்ஸும் மட்டுமே அணிந்தவள் நவராத்திரியில் தன்னை சற்று அலங்காரப்படுத்திக் கொண்டு ஆசை ஆசையாய் புடைவையைக் கட்டிக் கொண்டு கண்ணாடி முன் நின்று அழகு பார்ப்பது இன்றைக்கும் நடக்கும் சுவாரஸ்யமான விஷயம். ஒன்பது நாட்கள் இல்லாவிட்டாலும் வெள்ளிக்கிழமை, சரஸ்வதி பூஜையன்றாவது கட்டாயம் நடக்கிற கதை இது.

நமது கலாசாரங்களில் உடைகள் விஷயத்தில் புடைவைதான் முதலில் இல்லையா? தீபாவளி போன்றே துணிக்கடைகளுக்கு மக்கள் கூட்டம் அலை மோதுவது நவராத்திரியில்தான். இன்றைக்கு பாஷன் காட்டன் புடைவைதான். எத்தனை டிசைன் எத்தனை ரகம். எல்லாரும் மொத்தமாக காட்டனுக்கே ஓட்டளிப்பதால் நாங்கள் கவனம் அதிகமாக செலுத்துவதும் காட்டனில்தான்.

நவராத்திரி சமயத்தில் இன்னும் பலவித டிசைன்களில் பாலிகாட், காட்டன் புடைவைகளைத்தான் மக்களுக்குக் கொடுக்க எண்ணியுள்ளோம். சொந்தத் தறி உள்ளதால் நாங்கள் கஸ்டமர்களின் கனவுகளை டிசைனாக்கி புடைவைகள் உருவாக்குகிறோம்.

முக்கியமாக கலர் காம்பினேஷனில் மிகுந்த கவனம் செலுத்தி புடைவைகளைத் தருவதால் மக்களிடையே புடைவை நல்ல வரவேற்பை பெற்றுள்ளது.

வழக்கமாக புடைவை உடுத்தாதவர்கள் கூட இந்த காட்டன் புடைவைக்காக புடைவை உடுத்துகிறார்கள். இந்த நவராத்திரி சமயத்தில் பட்டுப் புடைவைக்கு எப்போதும் டிமாண்ட்

தான். இப்போது பிரின்டட் சில்கும் நன்கு விற்பனையாகிறது. சென்ற தடவை நவராத்திரி சமயத்தில் பொம்மை கொலு போலவே புடைவைக் கொலு நடத்தினோம். சிறந்த பெண் மணிகள் என்ற வகையில் ஒவ்வொரு துறையிலும் முன்னிலை வகிக்கும் பெண்மணிகளை விருந்தினர்களாக அழைத்து கவுரவப் படுத்தினோம்.

இந்த முறையும் புதுமையாக இது போல் ஏதாவது செய்ய எண்ணியுள்ளோம்.

பாலிகாட்டில் பட்டுப்புடைவை போன்று கிராண்ட் டிசைன் போட்டு மார்க்கெட்டுக்குக் கொண்டு வரும் எண்ணமுள்ளது. இது நவராத்திரி ஸ்பெஷலாகக் கொண்டு வர ஐடியா உள்ளது.

மேலும் சுரிதார், மாட்சிங் பிளவுஸைவிட பிரபலமாகி இருக்கும் ரெடிமேட் பிளவுஸ் அதிலும் பிட்டிங் பிளவுஸை கொண்டு வர எண்ணமுள்ளது. பெண்களை கொண்டே அளவு எடுத்து எங்கள் கடையில் வாங்கும் புடைவைகளுக்கு பிளவுஸ் சீக்கிரம் தைத்துத் தர வேண்டும் என்ற பிளான் உள்ளது. நவராத்திரிக்கோ அல்லது தீபாவளிக்குள்ளாகவோ இதைச் செய்ய வேண்டும் என்று ஆசைப்படுகிறேன்.

தீபாவளிக்கு முன்பு ஒரு வெள்ளோட்டம் - டிரையல் - போல விற்பனையாளர்களுக்கு வருவது நவராத்திரிதான். மக்கள் எல்லோரும் மகிழ்வுடன் தெய்வீக உணர்வில் மூழ்கியிருப்பது போல எங்களையும் வியாபார உணர்வோடு, ஆன்மீக உணர்விலும் திளைக்கச் செய்கிறது இந்த நவராத்திரிதான். அதனால் தீபாவளியை விட ஒரு படி மேலாகவே நவராத்திரியை நினைக்கத் தோன்றுகிறது எனக்கு. இந்தப் பண்டிகை நாட்களில் மக்கள் அனைவரும் பொங்கும் மங்கலத்தோடு மகிழ்வாக வாழ அந்தத் தேவியை பிரார்த்திக்கிறேன்."

**அடுத்த விஷயம் பெண்கள் இந்த நவராத்திரி சமயத்தில் அழகான அலங்காரத்தோடு பொலிவோடு அங்கும் இங்கும் நடமாடிக் கொண்டிருப்பார்கள். எங்கே திரும்பினாலும் 'அழகு அடேயப்பா எத்தனை விசேஷம் நவராத்திரியில்' என்று வியந்து கொண்டிருப்போம். அழகைப்பற்றி அதுவும் பாரம்பரிய அழகைப் பற்றி இவரிடம் கேட்கலாமே என நினைத்தது எப்போதும் மூலிகைகளை வைத்தே தன் பொருட்களைத் தயாரிக்கும் குமாரவேலு பற்றித்தான். நமது காதுகளில் போனஸாக ஒரு செய்தி விழுந்தது. ராகா ஹெர்பல் பவுடர் மற்றும் கூந்தல் தைலம், ஷாம்பு என தயாரித்தது மட்டுமல்லாமல் தற்போது ஆரோக்யத்துடன் கூடிய அழகு என ஸ்லோகத்துடன் ராகா ஹெர்பல் சோப்பையும் அறிமுகப்படுத்தியிருக்கும் அவரிடம் பேசினோம்.**

"அப்படி என்ன தீராத காதல் உங்களுக்கு மூலிகைகளிடம்?" என்றபோது சிரித்தார் இந்த இளைஞர்.

"என் தந்தையும் தாயும் பாரம்பரியம் கால சாரம் எனும் பழைய நம்பிக்கையில் மூழ்கியவர்கள் என்பதால் இருக்கலாம். குறிப்பாக என்னுடைய தாய் கைவேலை, பொம்மை தயாரித்தல், கொலுவைத்தல் என மிகவும் ஈடுபாடு காட்டுவார். அவர் நிறைய பெண்களைக் கொண்டு அழகிய பொம்மைகளை தயாரிப்பார். நிறைய பூஜைகள் உண்டு. அதனால் இயற்கையாக நம் பாரம்பரிய வழக்கங்களில் எனக்கும் ஈடுபாடு உண்டு.

வியாபாரம் என வந்தபோது நம் மூலிகைகளின் அடிப்படையிலேயே அனைத்துப் பொருட்களும் தயாரிக்க வேண்டும் என்பதைக் கொள்கையாகவே வைத்துக் கொண்டேன். ராகா ஹெர்பல் பவுடர், ஷாம்பூ, க்ரீம் என்பதைத் தொடர்ந்து இந்தப் பண்டிகை நாளில் 'ராகா ஹெர்பல் சோப்'பை வெளியிட உள்ளோம்.

பண்டிகை, குறிப்பாக நவராத்திரி எல்லோரையும் போல எங்களுக்கும் வியாபாரம் சூடு பிடிக்கும் நேரம். அழகாகப் பெண்கள் தங்களை அலங்கரித்துக் கொண்டு உறவினர்கள் வீடு என்றெல்லாம் கிளம்புவார்கள். அதற்கு அடிப்படையான அழகு சாதனப் பொருட்கள் மூலிகை கலந்த நிலையில் இருப்பது நல்லதுதானே..." என்கிறார் இவர்.

"பல இயற்கையான மூலிகை இலைகளின் சாறுகளை எடுத்து சரியான காம்பினேஷனோடு கெடுதலான கெமிக்கல் எதனையும் சேர்க்காது புதிய நவீன விஞ்ஞான முறைப்படி இந்த சோப்பைத் தயாரித்துள்ளோம்" எனும் இவர்,

"எந்த ஒரு செயலையும் நல்ல நாட்களில் தொடங்க வேண்டும் என்று சொல்வார்களில்லையா? அதனால்தான் நவராத்திரி காலங்களைத் தேர்ந்தெடுத்தோம்" என்கிறார்.

பேட்டி : **சுஜாதா**



**தெர்மோகோல் கையாலையோ அல்லது மெல்லிய ஆணியைக் கொண்டோ சுரண்டினால் லேசான சின்ன சின்ன உருண்டை தூள்களாக விழும். அதை பச்சை கலரில் நனைத்துக் காய வைத்துப் பார்க்கில் தூவினால் புல் முளைத்தாற்போல் அழகாக இருக்கும்.**

**— துர்கா பாலகிருஷ்ணன்**

கோயிலுக்குப் போகிறோம். அருளே வடிவான தெய்வ மூர்த்தங்களை வணங்குகிறோம். இந்தக் கோயிலின் மகிமை இது, தல வரலாறு இது, கலையழகு இது எனச் சொல்வார்கள். ஆனால் எடுக்க எடுக்கக் குறையாத காமதேனு போல அள்ள அள்ளக் குறையாத திருநிதிச் செல்வமாக "இது விசேஷம், இப்படி மகிமை, இவ்வளவு புராணங்கள்..." எனச் சொல்லிக் கொண்டே போவார்களா?

...போகிறார்கள் திருவானைக்கா சம்புகேஸ்வரர், அகிலாண்டேஸ்வரி கோயில். திருச்சிக்கு அருகிலுள்ள திருவானைக்கா கோயில் எத்தனை பெரிசோ அத்தனைக்கும் பெரிசு அதன் மகிமையும், சிறப்புக்களும். அன்னை அகிலாண்டேஸ்வரியைப் பற்றிச் சொல்லி வைத்தாற்போல எத்தனையோ வழிகளில் செய்திகள் வந்தன. என்ன செய்ய...?



அவள் எழுதப் பணித்து விட்டாள். அப்புறம் நான் என்ன குறுக்கே...?

முதலில் ஐயன். ஐந்து சிவஸ்தலங்களில் அப்புதலமாக – ஜலகண்டேஸ்வரராக – இங்கு எம்மான் எழுந்தருளி இருக்கிறார். இங்கு நேரடியாக சிவனை தரிசிப்பதை விட முன்னால் அமைக்கப்பட்டு இருக்கும் ஒன்பது துவாரங்கள் கொண்ட பலகணி வழியே தரிசிப்பதுதான் விசேஷம்.

"அதற்கப்புறம் ஸ்வாமி கருவறை வரை முன்காலத்தில் எல்லாம் யாரும் வர மாட்டார்கள். இப்போதுதான் காலம் மாறி விட்டது. உள்ளே வந்து தரிசிக்கிறார்கள்" என்கிறார் அர்ச்சகரான கண்ணன் ஸ்வாமிகள்.



சிவபிரான் சாதாரண லிங்க வடிவிலா இருக்கிறார்! அன்னை அகிலாண்டேஸ்வரி 'கங்கையிலும் புனிதமாய் காவேரியை'யே லிங்கமாகப் பிடித்து பூஜித்த ஸ்தலமல்லவா இது? மனமுகந்த பத்தினிக்கு இசைந்த பர்த்தா இவர். "ஸ்வாதீன வல்லபா" என்று அதனால் தானே லலிதையை குறிப்பிடுகிறார்கள். சங்கரனிடம் ஸ்வாதீனம் கொண்ட வல்லபை அல்லவோ அவள்.

சிவபெருமான் கயிலையில் தியானத்தில் ஆழ்ந்திருக்க பெருமாட்டி தன் தவம் வேண்டி திருவானைக்கா வருகிறாள். நீரால் லிங்கம் அமைத்துப் பூஜித்து வழிபட கயிலைநாதன் அவளுக்குக் காட்சி தருகிறான். உலகம் உய்ய வேண்டி பார்வதி அவனிடம் சைவ சித்தாந்த தத்துவ விளக்கங்களைக் கேட்கிறாள். ஐயன் குருவாக இருந்து அன்னைக்கு உபதேசிக் கிறான். உடனிருந்த நந்தி ஜம்பு மாதவ முனிவர்களின் பாக்கியமே பாக்கியம்! மாணவியாக

# 'ஏழவரும் ஒருரு'வான

மஞ்சுளா ரமேஷ்

இருந்து வேத தத்துவ சைவ சித்தாந்த விளக்கங்களைக் கேட்ட சிவபத்தினி இங்கு அகிலாண்டேஸ்வரியாகக் குடி கொண்டதால் கல்யாண உற்சவம் இங்கு நடப்பது இல்லை. கன்னிகையாக அருள் பாலிக்கிறாள் அன்னை.

கன்னிகை என்றால் சாதாரணமாகவா? அடேயப்பா, இவளின் புகழ் எடுத்துச் சொல்ல ஆயிரம் நாவுகள் வேண்டும். அகிலாண்டேஸ்வரி அகிலத்தை ஆளும் ராஜ ராஜேஸ்வரி. இவளை விடுத்து வேறு சக்திகள் உண்டோ? இல்லையென்பதால்தான் இவளே அனைத்து வடிவமாகவும் காட்சி தருகிறாள்.

காலையில் அன்னை பார்வதியாக, துர்க்கையாகக் காட்சி தருகிறாள். மதிய வேளையில் இவள் ஸ்ரீ தரும் லட்சுமியாகிறாள். மாலையிலே வெள்ளைக் கலையுடுத்தும் சரஸ்வதியாகிறாள். மூன்று தேவியரின் சக்தியும் ஒருருவாக ஆன நாயகியாக இங்கு அகிலாண்டேஸ்வரியாக குடிகொண்டிருக்கிறாள். நவராத்திரி நாயகி என இவளைச் சொல்லாமல் வேறு யாரைச் சொல்ல முடியும்?

இன்றைக்கு அருள் மழை பொழியும் அகிலாண்டேஸ்வரியின் கருணையை அங்கு வரும் பெண்களைக் கேட்டால் தெரியும். ஆடி வெள்ளிக் கிழமைகளில் அத்தனை கூட்டம். தன் மனதுக்கு உகந்த இனிய சிநேகிதியைப் பார்க்க வருவது போலத் திரண்டு வருகிறார்கள் பெண்கள். இவளால் திருமண பாக்கியம் பெற்றவர்கள், குழந்தை வரம் பெற்றவர்கள் ஏராளம். கண் கண்ட தெய்வமாக அழகு வெள்ளம் பெருக ஸௌந்தர்ய லஹரியாகக்



குடிகொண்டு இருக்கிறாள் இந்த ராஜ்ய வல்லபி.

ஆனால் இவள் உக்கிரம் காட்டிய நாட்களும் உண்டு. தீயோர் தீமை செய்தால் ஒரு கணமும் பொறுக்காத ரௌத்ரையாகத் தான் காட்சியளித்தாளாம் இந்தப் பராபரி. அர்ச்சகர்களே உள்ளே வந்து பூஜிக்க நடுங்குவார்கள். இவளைச் சுற்றி அறியாமல் சிறு தவறு செய்து விட்டாலும் கூட கடுமையான தண்டனை கை மேல்.

கால் வைத்த இடமெல்லாம் வேதம் மணக்க காலடியிலிருந்து புறப்பட்ட ஞானக் குழந்தை ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் இங்கு



வந்தபோது ஊரார் கூடி முறையிட்டு இருக்கிறார்கள். மக்கள் பால் கருணை கொண்ட ஆதிசங்கரர் "அம்மா உனக்கு ஏனடி இத்தனை கோபம்?" என அவள் சக்தியை எல்லாம் இரண்டு தாடகங்களாக ஆக்கி சிவ சக்தித் தாடங்கங்களாக அம்பிகையின் காதிலே அணிவித்து விட்டார். போதாதற்கு அம்பிகையின் முன்னால் அவளுடைய செல்லப் பிள்ளையான பிரசன்ன விநாயகர். அந்த விநாயகரின் முகத்தைப் பார்க்க வேண்டுமே! குழந்தைக் களை கொஞ்சி விளையாடுகிறது. அம்பாளின் தேர்ப் பின்புறம் முருகப் பெருமானையும் பிரதிஷ்டை செய்து விட்டார். ஞானவானாகப் பிள்ளைகள் எதிரில் இருந்தால் எந்தத் தாய்க்குக் கோபம் வரும்? இப்படித்தான் அவளின் உக்கிரத்தைத் தணித்து

# நாயகி!

சாந்ததேவியாக, வருவோர்க்கு அருள்புரியும் அகிலாண்டேஸ்வரியாக ஆதிசங்கரர் மாற்றினார்.

"இரவில் தாடங்கங்களைக் கழற்றி விடுவார்கள். அப்போது பாருங்களேன் அம்பிகையின் முகத்தை" என்றார்கள். அந்தப் பாக்கியமும் கிடைத்தது. ம்... ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஆனாலும் அந்த முகத்தில் பழைய சினம் இருக்கத்தான் இருக்கிறது. அவளையே மறுநாள் சிவசக்தி தாடங்கத்தோடு பார்த்தபோது கருணாமூர்த்தியாகக் காட்சி அளித்தாள். என்ன விந்தை இது!

வாராஹி பற்றி வேறு ஏதோ காரணமாக ஆராய்ந்து கொண்டிருந்த போது, "திருவானைக்கா அகிலாண்டேஸ்வரி ஆதியில் வாராஹிதான் தெரியுமோ" என ஒருவர் கூறியபோது தூக்கிவாரிப் போட்டது. அன்றைக்கு அவளை இரவில் தரிசித்தபோது



முகத்தின் களை அப்படியும் இருக்குமோ எனச் சிந்திக்கத் தோன்றியது. அம்பாளுக்குத் தாழம்பூ பாவாடை அத்தனை விசேஷம். நேர்ந்து கொண்டு சாத்துகிறார்கள். வாராஹிக்குத் தாழம்பூ மகா பிரியமாம். வாஸனை மிகுந்த அந்தப் பூவினை விரும்பி அணிபவள் வாராஹியாம். லலிதா ஸஹஸ்ரநாமத்திலும், இன்றும் வடநாட்டின் பல கோவில்களிலும் தொழப்படும் வாராஹி மகா தேஜஸ்வி. அலங்காரப்ரியை. மாசக்தி கொண்டவள். வேண்டியதை அருளும் மாதங்கி.

இவள் வாராஹியாக இருந்ததால்தான் ஆதிகாலத்தில் மஹாஉக்ரமாக இருந்தாள் போலும். இவள் உக்ரமாக இருப்பது இயற்கை. லலிதையின் படைத் தலைவி அல்லவோ இவள். அதனால்தான் சிறு தீங்கு செய்தாலும் பொறுக்க முடியாதவள் ஆனாள் போலும். பின்னர் இவளைச் சாந்தசொரூபியாக ஆக்கினார் நம் சிவனருட் செல்வர் ஆதிசங்கரர் என்பது செவிவழிச் செய்தி. இதைப் பற்றி மேலும் ஆராய விரும்பும் தெய்வப் பணி அன்பர்களுக்கு அந்த இறைவியே வழிகாட்டுவாள்.

இப்படி அப்பனும், அன்னையும் மாதவச் செல்வர்களாகக் குடிகொண்டிருக்கும் திருவானைக்கா கோவில் மிகப் பெரியது. ஒன்பது தீர்த்தச் சிறப்புக்கள் கொண்டது. அந்த ஒன்பது தீர்த்தங்களையே ஒன்பது வாயில்கள் கொண்ட சன்னலாக அமைத்து இறைவனின் முன் அமைத்திருக்கிறார்கள். அந்தச் சாளரத்தின் வழியாக இறைவனை தரிசித்தால் ஒன்பது தீர்த்தங்களில் நீராடி சிவனை வழிபட்ட புண்ணியம் கிடைக்கும் என்கிறார்கள்.

இக் கோயில் மகிமைகளை விரித்துக் கொண்டே செல்லலாம். வெண் நாவல் பழம் பழுக்கும் மிக அரிய நாவல் மரம் - ஜம்பு விருட்சம் - ஸ்தல விருட்சமாகக் கொண்ட புனிதக் கோயில் இது. சம்பு மாதவ முனிவர் தனக்குக் கிடைத்த வெகு அரிய வெண் நாவல் பழத்தை இறைவனுக்குப் படைக்க, சிவனார் அதை உண்டு கொட்டையை உமிழ்ந்தாராம். கிடைத்தற்கரிய பிரசாதமாகக் கொட்டையை முனிவர் உண்ண அவர் தலை வழியே நாவல் மரம் பெருகியது. அதன் நிழலிலே இறைவனே தங்கி விட்டான்.

மரத்தின் இலைகள் இறைவன் மேல் விழுவது கண்டு பொறுக்காத சிலந்தி ஒன்று விதானத்தில் கூடு கட்டித் தடுத்தது. இந்த லிங்கத்தைத் தவறாது பூஜித்து வந்த யானையொன்று 'இதென்ன சிலந்திக் கூடு' எனத் தினமும் அதனை அழித்து விட்டு இலை பூக்களை வைத்துப் பூஜித்து விட்டுப் போகுமாம். இப்படி இரண்டும் ஒன்றையொன்று சிவபூஜைக்கு இடையூறாகக் கருதிக் கொண்டன. கடைசியில் கோபம் கொண்ட சிலந்தி யானையின் துதிக்கையினுள் புகுந்து கடித்து அதனை அழித்துத் தானும் மாண்டது. இருவரும் சிவனருள் பெற்றனர். யானை பூஜித்த தலம் திருவானைக்கா ஆயிற்று.

அப்படி வலை பின்னிப் பூஜித்த சிலந்தியே கோச் செங்கணான் எனும் சோழ

அன்பாலும், பண்பாலும்

உறவுகளை வசப்படுத்தும்

ஒரு முதல் தரமான இரண்டாம் தாரம்.

மூவ்–ன்

## 'உயிர் உன்னோடு...'

மனைவியாய், மருமகளாய், தாயாய், சேயாய்...

நெஞ்சில் நிழலாடும் ஒரு பெண்ணின் வாழ்க்கைப் போராட்டம்.

காணத் தவறாதீர்

ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும்

இரவு 8.30 மணிக்கு.

'உயிர் உன்னோடு...'

ஃபரேம் பை ஃபிரேம்

வாழ்வின் எதார்த்தம்.

வழங்குபவர்கள்

**moov**

JOINT PAIN RELIEVER



**மலைகள் அமைத்தபின் அவற்றின் மேல் பஞ்சை நீளநீளமாக மேலிருந்து கீழே ஒட்டி வைத்தால் தள்ளியிருந்து பார்க்கும்போது குற்றால அருவியைப் போல (மலையிலிருந்து தண்ணீர் கொட்டுவது போல) பார்க்க ரம்மியமாக இருக்கும்.**

**- உமா நாராயணசுவாமி.**



அரசனாகப் பிறந்து மாபெரும் கலைக் கோயிலாகக் கட்டினான் என்கிறார்கள். மாடக் கோயில் வகையில் அவன் கட்டிய கோயில்களில் முதலாவது கோயில் இது. அதிலும் பழைய ஜன்மவாசனை போகாமல் 'யானை புகமுடியாதபடி' கருவறையை அமைத்துக் கட்டியிருக்கிறான். இந்தச் சிவ நெறிச் செல்வன் ஏராளமான கோயில்களைக் கட்டி சைவம் தழைக்கப் பாடுபட்ட பேரரசன் ஆவான்.

இக் கோயிலின் ஐந்தாவது பிரகாரம் இறைவனே கட்டியது. சித்தனாக வித்தகன் வந்து பிரகாரத்தைக் கட்டச் சொல்லி, கூலியாக விபூதியைக் கொடுத்து அனுப்புவானாம். அவரவர் செய்த வேலைக்கு ஏற்ப விபூதி காசுகளாக மாறிய விந்தை நடை பெற்றதாம். மானிட உடலில் அன்னமய கோசம் எனும் ஐந்தாவது படிமத்தைக் குறிக்கும் இந்த மதில் திருநீற்றுமதில் என்றே பெயர் பெற்றது.

ஸ்ரீராமன் கும்பகர்ணனைக் கொன்ற தோஷம் நீங்க, அங்கதனால் கொண்டு வரப் பட்ட மிக அரிய சாளக்கிராமத்தை லிங்கமாக வைத்து இங்கு பூஜித்து இருக்கிறான். இறைவன் ஸ்ரீராமன் பெயரையும் இணைத்து 'கரிய மாலீஸ்வரன்' ஆனான். இராமதீர்த்தம் ஸ்ரீராமன் பெயரால் இலங்குகிறது. தை மாசம் புனர்பூசத்தில் ஜம்புகேஸ்வரர் இங்கு எழுந்தருளி தெப்பத் திருவிழா கொண்டருளுகிறான். அன்னை சிவனை பூஜித்த ஸ்தலமாதலால் இன்றும் ஒவ்வொரு நாளும் உச்சிகால வேளையில் அர்ச்சகர் பெண்ணாக உடை கொண்டு கோ பூஜை செய்து, சிவபூஜை செய்கிறார்.

பிரகாரங்கள் புகழ்பெற்ற இராமேஸ்வகவரம் கோயில் பிரகாரங்களைப் போல உள்ளது. ஒவ்வொரு இடத்திலும் எத்தனையோ தெய்வ இரகசியங்களை தம்முள் அடக்கியுள்ள மூர்த்தங்கள். சிருஷ்டி செய்யும் கோலத்தில் முருகன். சிவன் பிரம்மா விஷ்ணு என மூன்று நிலையிலும் லிங்கங்கள். வல்லபையுடன் கூடிய மஹாகணபதி. இவரே சர்வவல்லமை படைத்தவர். உற்சவ சமயங்களில் முதலில் செல்லுவது வல்லப கணபதி. பத்துக் கரங்களில் படைக்கலங்களைத் தாங்கி சக்திக்கு வித்தாக அமர்ந்து இருக்கிறார்.

இன்னும் நிறைய சொல்லிக் கொண்டே போகலாம். பஞ்சபூதஸ்தலங்களில் ஒன்றாக விளங்கும் ஜம்புலிங்கேஸ்வரரின் மகத்துவங்கள் நிறைய... நிறைய....

கோவிலுக்குப் போகும் போது அக் கோயிலின் மகிமைகளைக் கேட்க வேண்டும். நேரே ஸ்வாமி சன்னதிக்குப் போய் விட்டு, அடேடே இன்னும் 'ட்வென்ட்டி மினிட்' லிலே திருச்சியிலே ஒரு அப்பாயின்ட் மெண்ட் இருக்கே. எப்போ தீபாராதனை காட்டுவார்கள் என நினைக்க வேண்டாமே? மானிடர்கள் வி.ஐ.பி.க்களாக இருந்தால் அவர் களைப் பார்க்கக் காத்திருக்கத் தயங்கு வதில்லை. இவர்களோ பராசக்தி, பரமேஸ் வரன்! அகில புவன லோக நாயகர்கள். நம் முன்னோர்கள் ஏராளமான தெய்வ ஆற்றல்களை ஒவ்வொரு கோயிலிலும் புதைத்து மெழுகி ஆன்ம ஆலயமாக்கி இருக்கிறார்கள். அவர்களைத் தொழ நேரப் பரபரப்பு ஏன்?

அதிலும் அகிலாண்டேஸ்வரி மூவரும் ஒருரு கொண்ட நவராத்திரி நாயகி. சகல சக்திகளையும் தன்னுள் வைத்திருப்பவள். உலகின் எந்த மூலையில் இருந்தாலும் அவளை மனத்தில் இருத்தித் தொழுவோம். மங்கலநாயகி மனமிரங்கி அருளுவாள்.

# மங்கையர் மலர்

அக்டோபர் இதழ்

## தீபாவளி

## சிறப்பிதழ்

அதிக
சுவை...,
(பட்சண
வகை
களுடன்
தான்!)

அதிக
வண்ணங்கள்...,
(பட்டாசு
செய்திகளுடன்
தான்!)

அதிக
பக்கங்கள்...,
(இரட்டைச்
சிறப்பிதழாக!)





# இரண்டாவது

"மைதிலி லன்ச் பெல் அடிக்கப் போகிறான் பார்" என்று மாடி வராந்தாவிலிருந்து அத்தை குரல் கொடுத்தார். "குட்டி பாக்ஸில் ராஜிக்கு இரண்டு மைசூர்பாகு துண்டுகள் வைத்திருக்கிறேன் பார்" என்றும் ஞாபகப்படுத்தினார். மறக்காமல் எடுத்துக் கொண்டு புறப்பட்டேன்.

மிகப் பெரிய பள்ளிக்கூடம் ஒன்றின் எதிர் வீடு எங்களுடையது. குழந்தைகள் அங்குதான் படிக்கிறார்கள். முன்பெல்லாம் சாப்பிட வீட்டிற்குக் கூட்டிக் கொண்டு வந்து விடுவேன். வந்தால் ஊட்டி தாங்க முடியவில்லை. திரும்பவும் பள்ளிக்கூடத்திற்குக் கிளம்புவதற்குள் உன்பாடு என்பாடு ஆகி விடுகின்றது. அதனால் இப்பொழுதெல்லாம் நானே சாப்பாடு கொண்டு போய் ஊட்டி விட்டு வந்து விடுகின்றேன்.

வயதான என் மாமியாருக்கு நல்ல பொழுதுபோக்கு. மாடி வராந் தாவில் உட்கார்ந்தபடியே குழந்தைகள் விளையாடுவதையும், உடற் பயிற்சி செய்வதையும், ப்ரேயர் மீட்டிங்குகளையும் பார்த்துக் கொண்டிருப்பார்.

சாப்பாடு கொண்டு போய்க் கொடுக்க ஆரம்பித்த சில நாட்களில் அந்தப் பெண்ணைக் கவனித்தேன். அவளுடைய இரண்டு குழந்தைகளுக்கும் சாப்பாட்டை ஊட்டி விட்ட பிறகு தானும் சாப்பிடுவாள். பெல் அடித்த பின்பு குழந்தைகள் பறக்கும். பிறகு மரத்தடியில் உட்கார்ந்து புத்தகங்கள் படித்துக் கொண்டிருப்பாள். ஜாடையாக ஒருநாள் பார்த்தேன். அஞ்சல் வழிக் கல்வி புத்தகங்கள். மேல் படிப்புப் படிக்கிறாள் போலும்.

அத்தையும் அவளைக் கவனித்திருக்கிறார். "காலையில் வந்தால், சாயங் காலம்தான் குழந் தைகளைக் கூட்டிக் கொண்டு போகிறாள் பாவம். மழை வந்தால் பள்ளிக்கூட வராந்தாவில் போய் உட்கார்ந்து கொள் கிறாள். அவசர சமயமானால் நம் வீட்டில் வந்து உட்கார்ந்து கொள்ளச் சொல்லேன்."

கொஞ்சம் கொஞ்சமாக இருவரும் நட்பாகி



# கோடு

விட்டோம். எப்பொழுதாவது ஃபோன் செய்துகொள்ள வருவான். அத்தையைப் பார்த்தால் அவனுக்கு மிகவும் பிடிக்கும்.

"சொந்த அத்தையே மாமியாராகி விட்டார். இவ்வளவு அன்பான மாமியாரைப் பார்க்கவே சந்தோஷமாக இருக்கிறது." என்று பெருமூச்சு விட்டான்.

"பாபம். வீட்டில் ஏதோ பிரச்னை இருக்கும்போலிருக்கிறது" என்று அங்கலாய்த்தார் அத்தை.

"எதற்காக நீ காலையிலிருந்து மாலை வரை இங்கே தவம் கிடக்கிறாய்?" என்றேன்.

"சின்ன வயதில் வலிப்பு வந்த பையன். அதனால் பயமாக இருக்கிறது. மேலும் வீட்டில் இருந்தால் வசவுகளைத்தான் கேட்க வேண்டியுள்ளது. இங்கே வந்தாலாவது நிம்மதி," என்றாள்.



அகிலா கிருஷ்ணன்

காலையில் சமைத்து வைத்து விட்டு வர வேண்டுமாம். மாலையில் போய் மற்ற வேலைகள் எல்லாவற்றையும் கவனிக்க வேண்டுமாம்.

ஒருநாள் தயங்கித் தயங்கி ஒரு உதவி கேட்டாள்.

''என் அம்மா திருவல்லிக்கேணியில் இருக்கிறாள். அவளைப் பார்த்து விட்டு வர வேண்டும் போலிருக்கிறது. வீட்டில் தெரிந்தால் விட மாட்டார்கள். அம்மா அதிகம் வந்தாலும் பிடிக்காது. நான் போய்ப் பார்த்து விட்டு வருகிறேன். மதியம் குழந்தைகளுக்குக் கொஞ்சம் உணவு கொடுத்து விட முடியுமா?'' என்றாள்.

''கண்டிப்பாகச் செய்கிறேன்'' என்றேன்.

''குழந்தைகளிடம், அம்மாவிற்குத் தலை வலி. என் வீட்டில் இருக்கிறாள் என்று சொல்லுங்கள். இல்லாவிட்டால் வீட்டில் போய் வத்தி வைத்து விடுவார்கள்,'' என்றாள் பயத்துடன்.

''இந்தக் காலத்தில் கூட இப்படி ராக்ஷஸ மனிதர்கள் இருக்கிறார்களா என்ன?!'' என்று அதிசயித்தார் அத்தை.

அதன் பிறகு, சில சமயம் சகோதரிகளுடன் ஷாப்பிங் போய் வருவாள். சில சமயம் அவள் அம்மாவை மதிய ஷோ சினிமா கூட்டிப் போய் விட்டு விட்டு வருவாள். நானும் அத்தையும் குழந்தைகளைப் பார்த்துக் கொள்வோம்.

என் கணவர் கேலி செய்ய ஆரம்பித்து விட்டார்.

''நீங்கள் இரண்டு பேருமே இளகிய மனசுக்காரர்கள். நன்றாகக் கண்டுகொண்டாள். ஏதாவது கதை சொல்லி உங்கள் இரக்கத்தைச் சம்பாதித்துக் கொண்டு நன்றாகச் சுற்றுகிறாள்,'' என்று.

''உனக்கு எப்பொழுதுமே சந்தேகபுத்தி'' என்று அத்தை கடிந்து கொண்டார்.

எனக்குக் கூட அவ்வப்போது ஏதாவது சந்தேகம் தோன்றாமல் இருந்ததில்லை. ஏனென்றால் ராஜி தன் வீட்டு விலாசத்தையோ, தொலைபேசி எண்ணையோ கொடுத்ததேயில்லை. கேட்டால் மழுப்பி விடுவாள்.

ஒருநாள் குழந்தைகளுக்கு லீவு. இவரைக் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு நானும் அத்தையும் 'ஷாப்பிங்' கிளம்பினோம். பாதி வழியில் டயர் பஞ்சர். வெய்யிலான வெய்யில். எரிச்சலாக வந்தது.

''ஹாய் ஆன்ட்டி. பாட்டி எங்க வீட்டுக்கு வாங்க'' என்ற உற்சாகமான குரல் கேட்டு எட்டிப் பார்த்தேன். ஸ்ரீவத்ஸ், ஸ்ரீகலா. ராஜியின் குழந்தைகள்!

''அட ராஜி வீடு. நல்லவேளை வெய்யிலுக்குத் தப்பினோம்'' என்றபடியே அத்தையும் இறங்கி வந்தார். இரண்டு பேரும் குழந்தைகளுடன் உள்ளே நுழைந்தோம். வெளியே வந்த ராஜி எங்களைக் கண்டதும் ஸ்தம்பித்துப் போனாள். அவள் முகம் இருண்டது. சமாளித்துக் கொண்டு வரவேற்றாள்.

''யாரு ராஜீ வந்திருக்கா?'' என்றபடி வெளியே வந்த அவள் மாமியாரைப் பார்த்துப் பேரதிர்ச்சி! பத்மாவதி மாமி! என் அத்தையின் பால்ய தோழி!

இரண்டு பேரும் ஒருவரையொருவர் அணைத்துக் கொண்டு மகிழ்ந்து போனார்கள். குசலம் விசாரித்து ஓய்ந்தபின் பத்மாவதி மாமி, ''ராஜி. சமையல் மாமியிடம் பஜ்ஜி போடச் சொல். என் தோழிக்கு பஜ்ஜி என்றால் உயிர்'' என்று கூறினாள்.

சமையல் மாமியா? ராஜி வேலைகள் முழுவதும் தானே செய்வதாகக் கூறினாளே? குழம்பினேன்.

''பத்மாவதி மாதிரி பத்தரை மாற்றுத் தங்கத்தை எங்குமே பார்க்க முடியாது'' என்ற அத்தை யோசனையில் ஆழ்ந்தார். பத்மாவதி மாமியா ராஜி விவரித்த அந்தக் கொடுமைக்கார மாமியார் என்ற கேள்வி அவர் மனதி

நவராத்திரியில் அலங்கார மண்டபம்/ஸ்டூல் இவற்றின் வெளிப்புறத்தில் (முன்பக்கமாக இருக்கும் 2 கால்களில்) சிறிய இடைவெளியில் 2 வெள்ளை (நீல) சம்பங்கி, 5 (அ) 6 சேர்ந்த கனகாம்பரம் சிறிய தவனம்/மருக்கொழுந்து இவற்றை செல்லோ டேப் கொண்டு ஒட்டி விடுங்கள். அதிகச் செலவில்லாமல் (பூ விற்கும் யானை/குதிரை விலையில்) அழகான பூ மண்டபம் அம்மனுக்கு ரெடி. மஞ்சள் குங்கும பொட்டு வைப்பவர்கள் சரியான அளவு இடைவெளியில் பூ அலங்காரம் செய்யவும்.

– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.



லும் எழுந்திருக்க வேண்டும்.

ராஜி சுரத்தாகவே இல்லை என்பதை கவனித்தோம்.

"நீ. உன் அண்ணா மகளின் குணத்துக்காகவே அவளை வலியப் போய் உன் மகனுக்குப் பேசி முடித்துக் கொண்டாய் இல்லையோ? அப்போ ராஜி வேறு யாரைப் பற்றியோ சொல்லி இருப்பாளோ என்னமோ?" என்றாள் பத்மாவதி மாமி.

"என்ன சொன்னாள்?" என்றார் அத்தை நிதானமாக.

"பள்ளிக்கு எதிரில் வீடாம். மருமகள் ராட்சஸி. மாமியாரைப் பாடாய்ப்படுத்துகிறாள். அந்த மாமி என்னைக் கூப்பிட்டுப் பேசி அங்கலாய்த்துக் கொள்கிறாள் என்று சொன்னாள்" என்றார் பத்மாவதி மாமி அப்பாவியாக.

ராஜி உள்ளே போய் விட்டதைக் கவனித்தேன்.

"நீ கொஞ்சம் வடகம் எடுத்துப் போயேன். உனக்கு மிகவும் பிடிக்குமே" என்றார் பத்மாவதி மாமி அத்தையிடம்.

"அதெல்லாம் எதுக்கு பத்மா..." என்று மறுத்தார் அத்தை.

"இல்லையடி. நான் எது செய்தாலுமே நிறையச் செய்து விடுவேன். ராஜியின் அம்மா பாபம். தன்னந்தனியாகத் திருவல்லிக்கேணியில் இருக்கிறாள். எத்தனை கூப்பிட்டாலும் இங்கே வர மாட்டேன் என்கிறாள். அதனால் எது செய்தாலும் அவருக்கும் சேர்த்துச் செய்து விடுவேன். ஞாயிற்றுக் கிழமையானால் டிரைவர் சமையல் மாமியையும் அழைத்துக் கொண்டு திருவல்லிக்கேணி போய் ராஜியின் அம்மாவுடன் தங்கி விடுவேன். நாங்கள் ஆசை தீரப் பேசி விட்டு கோவில் குளம் கதா காலட்சேபம் என்று போய் விட்டு இரவுதான் திரும்புவோம்," என்றார் பத்மாவதி மாமி வெகுளியாக.

ராஜியின் முகத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை.

"ஹையா. நான்தான் ஜெயிச்சேன். நான்தான் ஜெயிச்சேன்," என்று ஸ்ரீவத்ஸ் கத்தியபடியே உள்ளே ஓடி வந்தது.

"எதிலே"

"பாட்டி. நான் பதினைந்து ரன். ரகு பத்தே பத்து ரன்தான்."

அத்தை ஆழ்ந்த யோசனையில் இருந்தவர் அவனை தீர்க்கமாகப் பார்த்தார். "ஸ்ரீவத்ஸ் இங்கே வா. உனக்கு நான் ஒன்று சொல்ல வேண்டும்" என்றார்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. என் அத்தை மகா விவேகி. யோசித்துத்தான் பேசுவார். சமய சந்தர்ப்பம் அறிந்து பேசுவார். குழந்தைகளிடமெல்லாம் தத்துவம் பேசுமனவுக்கு அசடு அல்ல அவர். என்ன சொல்லப் போகிறார்?! ஆவலுடன் கவனித்தேன். பத்மாவதி மாமியும் ராஜியும் கூட வியப்புடன் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

"ஸ்ரீவத்ஸ். ஒரு கோடு இருக்கு. அதைத் தொடக் கூடாது. ஆனால் அதைப் பெரிசாக்கணும். நீ என்ன செய்வே?"

ஸ்ரீவத்ஸ் சற்று நேரம் யோசித்து விட்டு, "ஹையா. அதற்குக் கீழே ஒரு சின்னக் கோடு போடணும். அப்ப மேலே இருக்கிற கோடு பெரிசாகத் தெரியும்" என்று சொல்லி சந்தோஷத்துடன் கைதட்டி ஆரவாரித்தது.

"ஆமாம். கணக்கிலே இது சரி. ஆனால் நடைமுறையில் வாழ்க்கையில் இது பெரிய தப்பு. உன்னை பெரிசாகக் காட்ட ரகு குறைச்சல் ரன் எடுத்திருக்கான்னு சொல்லி விட்டாய். இப்படிச் செய்து கொண்டேயிருந்தால் நீ மேலே உயரவே முடியாது. உன்னுடைய படிப்பையோ, விளையாட்டையோ குணத்தையோ உயர்த்திக் கொள்ள முயற்சி செய்யணுமே தவிர மற்றவர்களை மட்டம் தட்டி உன்னைப் பெரியவனாகக் காண்பிக்கக் கூடாது தெரியுமோ" என்றாள் நிதானமாக.

ஸ்ரீவத்ஸுக்கு ஒன்றுமே புரியவில்லை. "சரி பாட்டி சரி, பாட்டி" என்று விட்டால் போதும் என்று ஓடியே போய் விட்டான்.

பத்மாவதி மாமி வெகுளி. வெற்றிலை பாக்குத் தாம்பூலம் எடுத்து வரச் சொன்னார். ராஜியின் கண்கள் கலங்கியிருந்தன.

"என்ன ராஜி, நான் சொல்லுவது சரிதானே" என்று கம்பீரமாகக் கேட்டார் அத்தை.

"நீங்கள் சொன்னது சரிதான் மாமி. புரிஞ்சுண்டேன்" என்று தழுதழுத்த குரலில் சொன்னாள் ராஜி.



**தயிர் வடைக்கு அரைக்கும் போது சிறிது தயிரை விட்டு அரைத்தால் தயிர் வடை மிக மிருதுவாக இருக்கும். இது என் சொந்த அனுபவம்!**

**— மரகதம்**

திருச்சியில்...

திருச்சி சீதாலட்சுமி ராமசாமி மகளிர்க் கல்லூரியில் கல்லூரி மாணவியருக்கான அகமும் புறமும் நிகழ்ச்சி நடை பெறுகிறது.

திருச்சி மற்றும் சுற்றுப்புற ஊர்களிலுள்ள கல்லூரி களுக்கும் சுற்றறிக்கை அனுப்பப்பட்டுள்ளது. சுற்றறிக்கை கிடைக்கப் பெறாத கல்லூரிகள் மங்கையர்மலர் அலுவலகத்தையோ அல்லது சீதாலட்சுமி ராமசாமி மகளிர்க் கல்லூரி முதல்வரையோ தொடர்பு கொண்டு தங்களின் வருகையை பதிவு செய்து கொள் ளலாம்.

# மங்கையர்மலர் & சக்தி சோயாபைட்

இணைந்து வழங்கும்

# அகமும் புறமும்

அதேபோல திருச்சியில் கூடுதல் சிறப்பாக இல்லத்தரசிகளுக்கான சமையல் போட்டியையும் வைத்துள்ளோம். திருச்சி மற்றும் சுற்றுப்புறத்தைச் சார்ந்த இல்லத்தரசிகள் இப்போட்டியில் கலந்து கொள்ளலாம்.

ஒரே நிபந்தனை - அவர்கள் சோயாபைட்டை அடிப்படையாகக் கொண்ட உணவினைத் தயாரிக்க வேண்டும். அவரவர் வீடுகளிலேயே இவற்றைத் தயாரித்துக் கொண்டு வரலாம்.

போட்டி நடைபெறும் இடம்

**சீதாலட்சுமி ராமசாமி மகளிர்க் கல்லூரி**

**நாள், நேரம்: 4.9.'98**

**மதியம் 2 மணி**

1.30 மணியளவில் வந்து முன் பதிவு செய்து கொள்ள வேண்டும். 2 மணிக்கு நடுவர்கள் உணவுத் தயாரிப்பு களைப் பார்வையிட ஆரம்பித்து விடு வார்கள்.

# கல்லூரி மாணவியருக்கான 'அகமும் புறமும்'

இடம்:
சீதாலட்சுமி ராமசாமி
மகளிர்க் கல்லூரி,
திருச்சி
நாள். 5.9.98
நேரம்: காலை பத்து மணி முதல்

* கல்லூரி மாணவியருக்கான இந்நிகழ்ச்சியில் திருச்சி மற்றும் சுற்றுப்புற ஊர்களில் கல்லூரி மாணவியர் கலந்து கொள்ளலாம்.

* கல்லூரிகளுக்குத் தனி சுற்றறிக்கை மங்கையர் மலர் அலுவலகத்திலிருந்து அனுப்பப்படும். தங்கள் கல்லூரியிலிருந்து எத்தனை மாணவியர் கலந்து கொள்கின்றனர் என்பதை மங்கையர் மலருக்குப் பெயர்களுடன் பட்டியல் அனுப்பும்படி கோரப்படுகிறது.

* கல்லூரி மாணவியரின் அகத்தின் மேன்மை, புறத்தின் சிறப்பு பற்றி முக்கியப் பிரமுகர்களின் கருத்துரை, கலை நிகழ்ச்சிகள் இடம் பெறும்.

* இந் நிகழ்ச்சியில் நடத்தப்படும் வினாடி. வினா நிகழ்ச்சியில் மிக அதிக மதிப்பெண் பெறும் கல்லூரி மாணவிக்கு ஒரு ஸ்கூட்டி பரிசாகத் தரப்படும்.

* மற்றும் ஐம்பது மாணவியருக்கு ஆறுதல் பரிசுகள் உண்டு.

* விழா மற்றும் போட்டி சம்பந்தமான விஷயங்களில் ஆசிரியர் முடிவே இறுதியானது.



# தூசுகளுக்கிடையே தும்மும் தெய்வங்கள்

"அறைகளை அலங்காரம் செய்வது எப்படி? வீட்டைச் சுத்தமாகப் பேணி கவர்ச்சியாகக் காட்டுவது எப்படி?' என்பதற்குப் பலவிதமான தகவல்கள், குறிப்புகள் பத்திரிகைகளில் படித்து, அவைகளை இயன்றவரைச் செயல் படுத்தி வரும் சகோதரிகள் ஏராளம்.

ஆன்மீகத் துறையில் சகோதரிகள் விரும்பி ஈடுபட, பல தோத்திரங்கள், மந்திரங்கள், பயனுள்ள விளக்கங்கள் இவைகள் பற்றி வெவ்வேறு சஞ்சிகைகளில் இப்போது போட்டி போட்டுக் கொண்டு தரப்படுகின்றன. பல ஆயிரமாயிரம் மக்கள் படித்துப் பயனடைந்தும் வருகின்றனர்.

இதே சமயத்தில் முக்கியமான ஒரு இடத்தைப் பற்றி ஏனோ தெரியவில்லை, பலர் கவனத்தை இது வரைக் கவரவுமில்லை!

ஈடுபாட்டின் ஆழத்தை ஒட்டி, வீடு என்றிருந்தால் அவரவர் இட வசதிக்கேற்ப பூஜைக்குரிய கடவுளர்க்கென்று ஒரு தனி இடம் இருக்கும்.

உத்தமமான பக்தி உணர்வுக்கு, வீட்டில் அமைந்துள்ள இடத்தின் அளவு முக்கிய மல்ல.

ஊக்கத்துடன் அன்றாடம் குறைந்தது ஐந்து நிமிடமானாலும், குடும்பத்திலுள்ள அனைவரும் அவரவர் சௌகரியப்படித் தனித்தனியாகவோ அல்லது ஒன்றாகக் கூடியோ மனம் ஒன்றிப் பிரார்த்தனை செய்யவே இந்தப் பூஜை இடம் ஏற்பட்டது.

எத்தனை பரப்பில் பூஜை இடம் என்ற கேள்விக்கு இடமின்றி, அளவுகளைக் கணக்குப் போடாமல், ஒரு சின்ன ஷெல்ப்- அதிலே ஓரிரு படங்கள், ஒரு அகல் விளக்கு என்பது முதல் - தனிப்பட்ட பல தட்டுக் கள் கொண்ட கவர் அலமாரி அல்லது மண்டபம் மற்றும் தனியாக சுவாமி அறை, விக்ரகங்கள், படங்கள் என்று தங்கள் விருப்பத்திற்கு ஏற்பவும் வீட்டில் உள்ள முக்கியமான நபர்களின் நம்பிக்கைக்கு ஒப்பவும் இடம் ஒதுக் கப்பட்டிருக்கும்.



படம்: திருமதி. மரகதம் (சென்னை-5) வீட்டுப் பூஜையறை

ஏற்றமான அன்றாட பூஜைகள் விமரிசையாக நடந்து வரும் வீடுகளில், கூடியவரை இந்தப் பூஜை இடம் சுத்தமாகவே இருக்கும்.

ஐந்து நாட்கள் சிறிது கவனம் சிதறினாலும் ஒட்டடைகளும் தூசுகளும் சேர்ந்து விடும். வயதில் பெரியவர்கள் மேற்பார்வையில் உள்ள வீடுகளில் இவை அடிக்கடி தட்டி சுத்தம் செய்யப்படும்.

ஒரு சில வீடுகளில், தலைமுறை இடைவெளியில் வாழ்ந்த பெரியவர்களின் காலத்தில் வழி வழியாக வந்த வழக்கப்படி தினந்தோறும் அல்லது குறிப்பிட்ட பண்டிகை நாட்களில் கொண்





உடைந்த கேசட் பாக்ஸின் உறைகளை தூர வீசி எறிந்து விடாதீர்கள். மலை, பார்க் அமைக்கும்போது உதவும். இந்த உறையை 'ட' வடிவமாக தலைகீழாக அமையும்படி மண்ணில் புதைத்து விடவும். மெல்லிய பாகம் கீழாகவும், 'டாப்' போன்ற பாகம் மேலாகவும் இருக்கும்படியாக, தாங்குவதற்கு இரண்டு குச்சிகளைக் கொண்டு நிற்க வைத்தால் பயணிகள் நிற்கும் இடம் தயார். இந்த கேசட்டின் பக்கவாட்டில் ஒரு பேப்பரில் பேருந்து வழி தடத்தின் நம்பர்களை எழுதி ஒட்டி விடுங்கள். அதற்கு அடியில் பொம்மை பஸ்ஸை வைத்து விடுங்கள். பார்ப்பதற்கு மினி பஸ் ஸ்டாண்ட் போலவே அழகாக இருக்கும்.

—ஆர். சாந்தா

டாடி வந்த விக்ரகங்கள், பழைய சுவாமிப் படங்கள், இவைகளை வைத்திருப்பார்கள்.

ஓயாமல் வருவோர் போவோரிடம் விலாவாரியாக, ''எங்கள் தாயார் அல்லது தகப்பனார், மாமியார் அல்லது மாமனார் இப்படி பூஜை செய்வார்கள், அப்படிப் பண்டிகை நாட்களைத் திறம்பட நிர்வாகம் செய்வார்கள் - எங்களால்தான் முடியவில்லை. இப்போதெல்லாம் அதற்கெங்கே நேரம்'' என்று கதை கதையாகச் சில சகோதரிகள் சொல்வார்கள்.

உபசாரமாகவேனும் வீட்டிற்கு வரும் புதியவர்களிடம் ஒரு ம்யூஸியமாகப் பூஜை அறையைக் காட்டுவார்கள்.

களிம்பு ஏறி, காலத்தால் கருத்துப் போன சிறிதும் பெரிதுமான பல அருமையான விக்ரகங்கள் ஒட்டடை ஆடையணிந்து, அவற்றின் மூல உலோகப் பொருள் என்னவென்றே தெரியாமல் காட்சி தந்து கொண்டிருக்கும்.

காணக் கிடைக்காத பல அபூர்வப் படங்களில் பிரம்மாண்டமான பிரேம்களின் உள்ளே பல தெய்வங்கள் தூசுகளிடையே மௌனமாகத் தூம்மிக் கொண்டிருப்பார்கள்.

கிஞ்சித்தும் வருத்தமின்றி, ''எங்களால்

அந்தக் காலத்தைப் போல விமரிசையாகப் பூஜை செய்ய முடியுமா? விளக்கேற்றவே சில நாட்களில் நேரம் கிடைப்பதில்லை. நாம் இப்போது வாழ்வது ஒரு அவசர யுகத்தில், இல்லையா?" என்று வந்தவரையே கேள்வியும் கேட்பார்கள்.

கீழே தரையில் என்றோ போட்ட கோலம், அலங்கோலமாகச் சிதறிக் கிடக்கும்.

குடும்பம் என்று வந்தால் வேலைகள் இருக்கத்தான் செய்யும்; அதற்காக அங்கலாய்த்து நின்று பேசும் நேரத்திலேயே பல காரியங்களை முடித்து விடலாம்.

கூட்டிப் பெருக்கி மற்ற இடங்களைச் சுத்தம் செய்வதில்லையா என்ன?

கெட்ட நேரம் என்று நமது மனத்துக்குப் பட்டவுடன் மட்டும் பூஜை புனஸ்காரங்களில் ஈடுபட்டால் போதுமா?

கேள்விப்பட்ட அத்தனை கோயில்களுக்கும், க்ஷேத்திரங்களுக்கும், சோதிடர்கள், மகான்கள் - என்று ஓடி ஓடிப் பரிகாரம் தேட வேண்டுமா?

கைப் புண்ணுக்குப் கண்ணாடி தேடும் கதை இங்கே பொருந்தி வரும்.

கொப்பளிக்கும் மனத்தைச் சற்றே அமைதிப்படுத்த பரிசீலனை செய்தால், நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளும் அவலம் புரியும்.

கோயில்களில் நடக்கும் பூஜைகளில் எப்போதாவது ஒரு அவசரத்தில் காட்டும் அக்கறையில் கொஞ்சமாவது வீட்டில் உள்ள பூஜைகளில், வழிபாடுகளில் ஒரு ஒழுங்கோடு மனத்தைச் செலுத்தினால், நிம்மதி நிச்சயமாகக் கிடைக்கும்.

கௌரவப் பிரச்சனையாகக் கருதாமல் வீட்டில் உள்ள ஆண்களும் சகோதரிகளுடன் இணைந்து கீழ்வரும் யோசனைகளைப் பின்பற்றலாம்.

1) வருடத்தில் சில நாள் மட்டும் வீட்டுப் பூஜை இடம் கவனிக்கப் பட்டால் போதும் என்ற மனப்பான்மை மாற வேண்டும். எட்டுக்கால் பூச்சிகளின் பண்ணைக்காக நம் வீடுகளில் இடம் ஒதுக்க வேண்டியதில்லை. பிராணி வதைக்காக மேனகா காந்தி நிச்சயமாக நம் மீது வழக்குத் தொடர மாட்டார்.

2) முறையாகப் பூஜை செய்யா விட்டாலும், வீட்டின் முக்கிய அங்கமான வழிபாட்டுத் தெய்வங்கள், இடம் முதலானவை தூசு தும்பு இல்லாமல் அவ்வப்போது சுத்தம் செய்தல் மிக அவசியம். பெரியவர்களுக்குக் காட்டும் மரியாதையாகவேனும் இந்தக் காரியத்தைச் செய்யலாம், அன்றாடம் செய்வது உத்தமம்.





3) கடற் காற்று வீசுமிடங்களிலும், ஈரப் பதமான சூழ்நிலையில் உள்ள ஊர்களிலும் வெள்ளியிலான விக்கிரகங்கள், விளக்குகள் ஒரே வாரத்திற்குள் கருமை வண்ணம் பூசிக் கொள்ளத் துவங்கும். வாரம் ஒருமுறை யாவது சிறிது விபூதி எடுத்து விரலால் தேய்த்தால் கறைகள் நீங்கி விடும். மெல்லிய துணியால் லேசான அழுத்தத்துடன் துடைக்க, புது மெருகுடன் மினிரும்.

4) செம்பு, பித்தளை மற்றும் ஐம்பொன் விக்கிரகங்களை மாதம் ஒருமுறையாவது எலுமிச்சை சாற்றுடன் கூடவே விபூதி யையும் சேர்த்துத் தேய்க்க வேண்டும். பிறகு சுத்தமான தண்ணீரில் கழுவி, பிரத்யேகமாக இதற்கென்றே தீர்மானித்த சுத்தமான துணியால் துடைத்து விட வேண்டும். உலர்ந்த பின் கொஞ்சம் விபூதியை வைத்து விரலால் தேய்க்க, விக்கிரகங்கள் பள பளவென மின்னும். தயவு செய்து, யாரோ சொன்னார்கள் காசு செலவு குறைவு என்று சோப்பு, உப்பு, புளி அல்லது ஏதாவது ரசாயனக் கலவைகளை உபயோகித்து, பாத்திரம் விளக்குவது போல சுவாமி விக்கிரகங்களைத் தேய்க்க வேண்டாம். நம் வீட்டுப் பச்சைக் குழந்தைகளைக் குளிப் பாட்டும் மென்மையான அழுத்தம்தான் இந்தச் செயலிலும் இருக்க வேண்டும்.

நாம் அன்றாடம் குளித்துவிட்டு சுத்த




குழந்தைகள் காலண்டரில் தேதித் தாளை கிழிக்கும்போது பிசிறு வைப்பார்கள். எளிதாக எடுத்துக் கொள்ளாமல் கூப்பிட்டுப் பேசுங் கள். எதிலுமே ஒரு ஒழுங்கு, நேர்த்தி, அது எவ்வளவுதான் சாதாரண செய்கையாயிருந் தாலும் இருக்க வேண்டும். அந்த அடிப்படை இங்குதான் பயிற்றுவிக்கப் பட வேண்டும்.

– எஸ். மாலதி

மான ஆடை அணிந்து வரும் தூய்மை இதற்குப் போதுமானது. குடும்பத்தில் ஒரு அங்கமாகவே விளங்கி வரும் முறையாகப் பூஜையில் இருந்த விக்கிரகம் அழுக்குக் கறையுடன் காட்சியில் வைக்க எந்த சாஸ்திரமும் சொல்லவில்லை. இதே போல சுவரில் மாட்டியுள்ள படங்களையும் ஒட்டடை அழுக்குச் சேராமல் துடைப்பது அவசியம்.

5) இப்படித் தூய்மைப் பணியில் இருக்கும்போது, தெரிந்த சுலோகங்கள், அந்தந்த தெய்வங்களின் பஜனைப் பாடல்கள் பாடலாம்.

6) சுத்தம் செய்த விக்கிரகங்களை அவைகளின் இருப்பிடத்தில் வைத்து, பின்னர் அன்றாடம் ஒரு விளக்கையும் நல்ல நறுமணம் கமழும் ஊதுபத்தியும் ஏற்றி வைத்து நமஸ்காரம் செய்யுங்கள். வீடே ரம்யமாக, ஒரு களையோடு இருக்கும். விக்கிரகங்களுக்குச் சந்தனம், குங்குமம் அளவோடு இட்டால் சோபை கூடும்.

7) பெரிய படங்களின் சந்தனத்தைக் கத்தையாக அப்பாமல், நெற்றியின் அளவிற் கேற்பப் பொட்டு சிறிதாக வையுங்கள். அழகு கூடும்.

வேலைக்குச் செல்லும் பெண்கள், லீவு நாட்களில் அல்லது ஞாயிற்றுக் கிழமைகளில் நிதானமாக முறை வைத்துக் கொண்டு சுத்தப் படுத்தும் பணியைச் செய்யலாம்.

ஆண்டவன் அருளோடு, பெரியவர்கள் ஆன்மாக்களும் உங்களுக்கு ஆசி கூறும்.

கெட்ட நேரம் என்பதே தென்படாது ஒழியும்.

வீட்டின் பூஜை இடம் ஒட்டடை மியூஸியமா? அல்லது 'பளிச்'சென்ற கோயிலா?

விடை உங்கள் கையில்.

8) நாம் அவ்வப்போது கொடுக்கும் நன்கொடைகளை அனுசரித்து, தபால் வழியாகவோ அல்லது நேரிலோ பூஜைப் பிரசாதங்களுடன் யந்திரம், டாலர், சுவாமிப் படங்கள் வருவதுண்டு. மற்றபடி, நாம் மேற்கொள்ளும் யாத்திரைகளின் போது, ஒரு உணர்ச்சி உந்தலில் வாங்கும் படங்கள், டாலர்கள், பிளாஸ்டிக் தெய்வ உருவங்கள் - இவைகளையும் பூஜை செய்யும் இடத்தில் மேலும் கீழுமாக கொலுவில் வைப்பதுபோல் பரத்தி வைப்பது பல வீடுகளில் ஒரு வழக்கமாகி விட்டது. இந்த நித்திய கண்காட்சியில் ஐட்டங்கள் கூடக் கூட தூசி அடைவதும் அதனால் ஆகும் பராமரிப்பு நேரமும் கூடிக் கொண்டே வரும்.



கல் உப்பில், டேபிள் சால்டில் இருக்கும் சில ரசாயனப் பொருட்கள் கிடையாது. (எனவேதான ஊறுகாய்களுக்கு டேபிள் சால்ட் உபயோகித்தால் சீக்கிரம் கெட்டு விடுகிறது) அதற்குப் பதிலாக,

இப்போது பாக்கெட்களில் கிடைக்கும் கல் உப்பு சுத்தமாக இருக்கிறது. இதையே நன்றாக வெய்யிலில் காய வைத்தோ அல்லது சற்று சூடு படுத்தியோ மிக்ஸியில் அரைத்தால் டேபிள் சால்ட்டைவிட மென்மையாக பவுடர் போல உப்புத்தூள் கிடைக்கும். இது லாபமும் கூட, ரசாயனப் பொருட்களும் இருப்பதில்லை.

எல்லாவற்றிற்கும் மேலாக அவ்வப்போது உங்கள் மிக்ஸியின் பிளேடுகள் (மழுங்கி யிருந்தால் கூட) கூர்மை அடையும்!

— எஸ். பட்டம்மா

தினப்படி பூஜை செய்ய இயலாதவர்கள் மேற்கூறிய யந்திரங்கள், டாலர்களை மொத்தமாக ஒரே மரப்பெட்டியில் இட்டு மூடி வைப்பது நல்லது. சீக்கிரம் கருத்துப் போகாது.

சின்னப் படங்களையும் இதே போல ஒரு பெட்டியிலோ, இல்லை பிளாஸ்டிக் கவரிலோ மொத்தமாகச் சேர்த்து வைக்கலாம். இதற்கான மணி மணியான சின்ன மரப்பெட்டிகள் காதி ஷோருமில் கிடைக்கும். பிளாஸ்டிக் தெய்வ உருவங்களை கொலுவிலோ அல்லது ஷோ கேஸிலோ வைத்து விடலாம். சீக்கிரம் பழுதுபடும் பொருள்களை, குறிப்பாக பிளாஸ்டிக் விக்ரக வகையறாக்களை அன்றாடப் புழக்கத்தில் வைத்தால் தூசு சேர்வதுடன் கை தவறி விழுந்து உடைந்து போகும் வாய்ப்பும் அதிகம்.

9) 'உங்கள் பூஜை அறைக்கான படம்' என்று பல ஆன்மீகப் புத்தகங்கள் மாதாமாதம் இலவசமாக வழங்கி வரும் கடவுளர் படங்கள் எல்லாவற்றையும் பிரேம் போட்டு மாட்டி வைக்க முடியாது. அவசியமும் இல்லை. படங்களை முறை யாகச் சேர்த்து வைத்து, ஒவ்வொன்றின் இடையேயும் அதே அளவில் கத்தரித்த பட்டர் பேப்பர் வைத்து அடுக்கி சேகரிக் கலாம். பின்னர் வசதிக்கேற்ப பைண்ட் செய்து கொள்ளலாம். நேரம் கிடைக் கும்போது ஆற அமர உட்கார்ந்து, புத் தகத்தை பக்தியோடு புரட்டிப் பார்த்து, வணங்கி வைத்து விடலாம். ஒரு பிளாஸ்டிக் 'கேரி பேக்'இல் வைத்து பராமரிக்கலாம். பூச்சிகள் அடையாது.

10. நாம் விலை கொடுத்து வாங்கும் புத்தகங்களில் இணைக்கப்பட்ட பல்வேறு கோயில் பிரசாதங்கள், தபால் மூலம் அல் லது அவ்வப்போது வீட்டில் உள்ள அங்கத் தினர்கள் கோயிலிலிருந்து கொண்டு வரும் விபூதி, குங்குமப் பிரசாதங்களை அனை வரும் தரித்துக் கொண்ட பின் நம்பிக்கை உள்ள அண்டை அயலாருக்கும் தரித்துக் கொள்ள கொடுக்கலாம்.

இப்படி மிகுந்த விபூதி, குங்குமம் இரண் டையும் தனித் தனியாக இரு எவர்ஸில்வர் அல்லது பிளாஸ்டிக் டப்பாக்களில் கொட்டி வைத்து பத்திரப்படுத்தலாம். இந்த இரு டப் பாக்களையும் சுவாமி அலமாரியில் வைத்தால் அவ்வப்போது உபயோகிக்க ஏதுவாக இருக் கும். அனைத் துத் தல பிரசாதங்களும் ஒருங் கிணைந்து நமக்கு நன்மை நல்கும். மரியாதைக் குரிய பொருள்களைக் கவனமாகப் பேணவே இந்தக் குறிப்பு. தனித் தனியாக சிறு பொட் டலங்கள் குப்பையாகக் காட்சி தரக் கூடாது.

இதற்கு ஒரே விலக்கு –

தனிப்பட்ட நபர்களுக்கென உடல் நலம் கருதியோ, வேறு ஏதாவது காரணத்தை முன்னிட்டோ மந்திரித்து தரப்பட்ட விபூதி, குங்குமத்தை பிரத்யேகமாகப் பத்திரப் படுத்தி வைக்க வேண்டும். நம்பிக்கையின் அஸ்திவாரத்தில் எழுந்த சில பழக்கங்கள், முறையாகப் பின்பற்றினால் பலன் அளிக்கும் என்பதாலேயே இந்த விலக்கு கூறப்பட்டது.

கடைசியாக –

சௌகரியத்திற்கு ஏற்ப – வாரம் ஒருமுறையோ, மாதம் ஒருமுறையோ படங்களுக்குப் பூமாலை வாங்கி அணி விப்பது, சில வீடுகளில் வழக்கமாகக் கொண்டுள்ளனர். ஆனால், ஒருமுறை சூடின மாலை வாடி வதங்கி அடுத்த முறைக்காக ஏங்கி, சருகாகப் பல நாட்கள் காட்சி அருளிக் கொண்டிருக்கும்.

தெருக்களில், நாற் சந்திகளில் நிற்கும் நாட்டுத் தலைவர்கள் சிலைகளுக்குக் கொடுக்கப்படும் இந்த 'மரியாதை' வீட்டில் இருக்கும் தெய்வங்களுக்கு வேண்டாமே!

வாடிக் கிடக்கும் மாலையை அணிவித்த மறுநாளே எடுத்து விடுங்கள்.

**— மீனா கோபால்**

# புக் ஷெல்ஃப்



- 600 017.)

## சேற்றிலே முளைத்த செந்தாமரை

சிறுவர்களுக்கான கதைகள். ஆசிரியர் ருக்மணி சேஷசாயி.

பக். 72, விலை ரூ. 16.00.

## நன்றியுள்ள பறவைகள்

ஹெலன் ஞானப்பிரகாசம் எழுதியுள்ள சிறுவர்களுக்கான சிறுகதைகள்.

பக். 56, விலை ரூ. 12.00

(செந்தூரான் பதிப்பகம், 6, ஜெய்சங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.)

## ஏட்டிக்குப் போட்டி

பேராசிரியர் கல்கியின் சுவையான கட்டுரைத் தொகுப்பு. நகைச்சுவை ததும்ப பதினேழு கட்டுரைகள்.

பக். 200 விலை ரூ. 30.00

## அமர வாழ்வு

பேராசிரியர் கல்கியின் ஐந்து சிறுகதைத் தொகுப்பு.

பக். 128, விலை ரூ. 20.00

(இரண்டும் - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

## சின்னச் சின்ன சுலோகங்கள்

சுகப்ரசவம், மனச்சங்கடம் நீங்க என பல்வேறு பிரச்னைகளுக்குச் சொல்ல வேண்டிய ஸ்லோகங்கள். வழங்குபவர்கள் கே. என். சரஸ்வதி, பி. அர்த்தனாரீஸ்வரர்.

பக். 96, விலை ரூ. 20.00

## சந்திர பகவான்

நவகிரகங்களில் ஒன்றான சந்திரபகவானைப் பற்றிய கதைகள் ஸ்தோத்திரம் முதலியவை.

பக். 16, விலை ரூ. 5.00

(இரண்டும் - கடலங்குடி பப்ளிகேஷன்ஸ், 38, நடேச அய்யர் தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

## விரல் நுனியில் வெளிச்சம்

இளைஞர்கள் தன்னம்பிக்கையோடு முன்னேறுவதற்கு அனுபவ ரீதியாக வழிகளைக் கூறுபவர் அரிமதி இளம்பரிதி.

பக். 164, விலை ரூ. 30.00

(இலக்குமி நிலையம், 53, கௌடியா மடம் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 14.)

## ஸ்ரீராகவேந்திர மகிமை

வாழும் மகான் பூஜ்ய ஸ்ரீ ராகவேந்திரர் தன் பக்தர்கள்பால் காட்டிய கருணையை, அற்புத நிகழ்ச்சிகளை அம்மன் சத்தியநாதன் உணர்ச்சி பொங்கும் நடையில் விவரிக்கும் மாபெரும் நூல்.

பக். 480, விலை ரூ. 108.00

(அருள்மிகு அம்மன் பதிப்பகம், 8, கங்கையம்மன் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை - 600 014.)

## சர்வார்த்த சிந்தாமணி

ஜோதிட சாஸ்திரம் கூறும் நூல். ஜோதிடத்தில் ஆர்வமுள்ளவர்களுக்குப் பல அபூர்வ செய்திகளைக் கூறுகிறது. ஆசிரியர் - சிந்தாமணி.

பக். 216 விலை ரூ. 32.00

(கிரி டிரேடிங் ஏஜென்ஸி, 58/2, டி.எஸ்.வி. கோயில் தெரு, மயிலாப்பூர், சென்னை - 600 004.)

## கூவ மறந்த சின்னக் குயில்

சிறுவர்களுக்கு நேரும் கொடுமைகள் பற்றிக் கதையாக எழுதியிருப்பவர் சாரதா விஸ்வநாதன்.

பக். 204, விலை ரூ. 40.00

(இந்திரா பதிப்பகம், 60, முதல் தெரு, தீனதயாளு நகர், திருவெறும்பூர், திருச்சி - 13.)

## சுவையான சூப் வகைகளும் ரச வகைகளும்

ஆசிரியர் - ராஜேஸ்வரி சண்முகம். பரங்கிக்காய், வாதுமை சூப், பீட்ரூட், முருங்கைக்காய் ரசம் என பல வித்தியாசமான வகைகளும் உள்ளன.

பக். 64, விலை ரூ. 12.00

(ஸ்ரீ செண்பா பதிப்பகம், 7, போயஸ் கார்டன், எம். எம். கார்டன், தேனாம்

பேட்டை, சென்னை - 600 018.)

## நீங்களும் ஜோதிடராகலாம்

எளிமையாகச் சொல்லித் தருபவர் ஸ்வாமி சத்தியநாராயணா.

பக். 224, விலை ரூ. 40.00

## உங்கள் அதிர்ஷ்ட கற்களும், நிறங்களும்

நட்சத்திரங்களுக்குரிய கற்கள், அணிவதனால் பயன்கள் எனச் சொல்பவர் ஸ்வாமி முருகானந்தா.

பக். 128, விலை ரூ. 22.00

(இரண்டும் - மயிலவன் பதிப்பகம், 18, தெற்கு பெருமாள் கோயில் முதல் தெரு, வடபழனி, சென்னை - 600 026.)

## ஒரு கை சோழி

ஜி. நாராயணனின் சிறுகதைத் தொகுப்பு. அனைத்தும் உண்மை நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டவை என்கிறார் ஆசிரியர்.

பக். 144, விலை ரூ. 27.00

## நிலவே சாட்சி

விறுவிறுப்பான மர்ம நாவல். ஆசிரியர் எஸ். வி. ரவிச்சந்திரன்.

பக். 248, விலை ரூ. 47.00

(இரண்டும் - மணிமேகலைப் பிரசுரம், த.பெ. எண். 7447, 4, தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 600 017.)

## வாஸ்து சாஸ்திர யோகம் எனும் அதிர்ஷ்ட வீட்டு அமைப்புகள்

படக்குறிப்புகளுடன் விளக்குபவர் எஸ். பி. சுப்பிரமணியன்.

பக். 232, விலை ரூ. 50.00

## சிரிக்கலாம் கொஞ்சம் ரசிக்கலாம்

நகைச்சுவை துணுக்குகள். ஆசிரியர் - கமலா கந்தசாமி.

பக். 96, விலை ரூ. 20.00

(இரண்டும் - நர்மதா பதிப்பகம், 16/7, ராஜாபாதர் தெரு, பாண்டிபஜார், தி. நகர், சென்னை - 600 017.)

## காற்று புதியது

கவிதைத் தொகுப்பு. ஆசிரியர் - க. குணசேகரன். இயற்கை, உழைப்பு என கவிஞனின் பார்வையில் சமுதாயச் சூழல் விரிகிறது.

பக். 128, விலை ரூ. 30.00

(இரமாதேவி பதிப்பகம், 8, 26-ஆம் தெரு, நங்கநல்லூர், சென்னை - 600 061.)

## மந்திரசித்தி பெற மகத்தான வழிகள்

தீமைகள் வெல்ல, நினைத்தது நிறைவேற, நோய் நீங்க, என பல்வேறு ஸ்தோத்திரங்கள். தொகுப்பு - ஆபஸ்தம்பன்

பக்.128, விலை ரூ. 20.00

## வியாபாரம் தொழில் பெருக மந்திரங்கள்

வியாபாரத்தில் வாக்கு பலிதம், லட்சுமி கடாட்சம் என நிறைய ஸ்தோத்திரங்கள். தொகுப்பு ஆபஸ்தம்பன்.

பக். 120, விலை ரூ. 22.00

(இரண்டும் - யமுனா பிரசுரம், 18/1, ராஜா பாதர் தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

## அறிவிப்பு

இதயம் நல்லெண்ணெய் பரிசுப் போட்டியில் கலந்து கொண்டு பரிசு பெற்ற அதிர்ஷ்டசாலிகளுக்கு நாங்கள் மாதந்தோறும் 'மங்கையர் மலர்' இதழ்களை அனுப்பி வந்தோம். இந்த செப்டெம்பர் '98 இதழிலிருந்து பரிசு பெற்ற அதிர்ஷ்டசாலிகளுக்கு மங்கையர் மலர் பிரதிகளை கிடைக்கச் செய்கின்ற பொறுப்பை இதயம் நல்லெண்ணெய் விளம்பர நிறுவனத்தினரான 'லேகா புரொடக்ஷன்ஸ் (பி) லிட்' நிறுவனத்தினரே ஏற்றுக் கொண்டு விட்டனர் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். அவர்களுடைய விலாசம் வருமாறு :

**LEKHA PRODUCTIONS PVT. LTD.,**
**57-1, Thirumalai Pillai Road, Flat No. 9, Aswini Swathi Apartments,**
**T. Nagar, Chennai - 600 017. Phone : 8283988, 8225184.**

## வாசகர்கள் கருத்து :



அன்புச் சகோதரி, உங்களது இனி வீடுகள் தோறும் 'சித்ரவதைக் கூடங்கள்' என்னும் கட்டுரையைப் படித்தேன்.

அன்பு, கருணை, இரக்கம் இவைகளின் பிறப்பிடம் தாய் மனம். தன்னுடைய ஊனும் உயிருமாய் தோன்றியிருக்கும் குழந்தையைப் பாசத்தையெல்லாம் கொட்டி வளர்க்கிறாள். தன் குழந்தைக்கு ஈ, எறும்பு கூடத் தீங்கு செய்யாதபடி அரணாய் கவசமாய் பாதுகாத்து வளர்க்கிறாள்.



அப்படிப்பட்ட தாய்தான், தன்னுடைய அன்பாலும் செயலாலும் போற்றிப் பாதுகாத்து வளர்க்கின்ற குழந்தையை, அதன் வயதையோ, உடல் வலுவையோ கூட சிந்தித்துப் பார்க்காமல் ஆட்டையும் மாட்டையும் அடித்து வதைப்பது போல, பச்சிளம் தளிர்களை கம்பாலும் - ரூல் தடி கரண்டிக் காம்பாலும் அடித்து நொறுக்குகிறார்கள்.

"அடிக்காதேம்மா ப்ளீஸ்... வலி தாங்க முடியலே"

# அம்மா ராட்சசி!

என்று கதறித் துடிக்கும் போது கூட துளிக் கூட இரக்கம் பிறக்காது தன் விரல்களின் முட்டியை மடக்கிக் கொண்டு மண்டையில் ஓங்கி ஓங்கிக் குட்டுகிறார்கள்.

தாயாரின் அடியும் உதையும் தாங்கமாட்டாது மயங்கிச் சாய்ந்தால் கூட விடாது உச்சந்தலையைப் பிடித்து இழுத்துப் போய் ஒரு டம்ளர் தண்ணியைக் குடிக்க வைத்து அதுவும் அடியும் உதையுடனும்தான் மீண்டும் இழுத்து வந்து பாடம் சொல்லிக் கொடுக்க ஆரம்பிக்கிறார்கள். இது அதீத கற்பனை அல்ல - நடைமுறையில் கண்ட உண்மைகள்.



'வீட்டிலுள்ள மற்றவர்கள் பரிந்து பேச வந்தால் அந்தக் குழந்தைக்கு இன்னும் அதிக சித்ரவதை கிடைக்கும். அதனால் மற்றவர்கள் வாயையும் மனத்தையும் கட்டுப்படுத்திக் கொண்டு இருக்க முடிந்தால் இருக்கலாம். இருக்க முடியாதவர்கள் சில மணி நேரங்கள் வெளிநடப்பு செய்து கொள்ள வேண்டும்.

"என் பிள்ளையின் மீது எனக்குப் பாசம் இருக்காதா? என் பிள்ளையின் மனத்தில் என்னைப் பற்றி தவறான எண்ணங்களைப் புகுத்தி என்னையும் என் பிள்ளையையும் விரோதியாக்குகிறீர்களே இது அடுக்குமா" என்று பாய்வார்கள். அதோடு நிறுத்தி விடமாட்டார்கள்.

மறுநாள் பாடம் சொல்லித் தர தனி அறைக்குள் அழைத்துப் போய் இதே சித்ர

# ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவி உற்சவர் நித்ய அபிஷேக ஆராதனை ராகு கேது சுக்கிரன் தோஷ நிவாரண பூஜை

**21.8.98 முதல் 5.10.98 வரை நிறைவேறி வருகிறது. நேரம்: காலை 9 முதல் 11 வரை. இடம்: ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா மஹாபீடம் டிரஸ்ட் அலுவலகம், 2/34, கண்ணபிரான் கோவில் குறுக்குத்தெரு, கிழக்கு கடற்கரைசாலை, உத்தண்டி, சென்னை – 600 119.**

அன்றாட வாழ்வில் கடன், வெறுப்பு, துக்கம், பயம், வறுமை, தாரித்திரியம், தற்கொலை உணர்வு, ஜாதக ரீதியாக மரண பயம், அகால விபத்து பயம், உயிருக்கு ஆபத்தான கண்டம், சிறைவாசம் அனுபவிக்கும் நிலை, அசுரகுணம் நிறைந்தவர்களால் ஏவப்பெற்ற ஏவல், பில்லி சூன்யம் வைப்பு, அபிசார கர்மா, துஷ்ட தேவதை, ஜின், குறளி மற்றும் துர் தேவதை தொல்லைகள், மந்திர வாதியின் துணையுடன் அகார–உகார–எகார–மகார–சிகார மந்திரத்தினால் குல தேவதையை கட்டுக் கட்டி வைத்திருத்தல் ஆகிய தோஷங்களை அனுபவித்துக் கொண்டிருக்கும் அன்பர்கள் ஸ்ரீ ப்ரத்யங்கிரா தேவிக்கு நித்ய அபிஷேக கட்டளை உபயம் நிறைவேற்றி அநேக நன்மைகள் பெறலாம்.

## ராகு கேது சுக்கிரன் தோஷ நிவாரண பூஜை

46 நாட்களிலும் ராகு, கேது, சுக்கிரன் தோஷ நிவாரண பூஜை ஸ்ரீப்ரத்யங்கிரா சந்நதியில் நிறைவேறும்.

பெண்களுக்கு இரண்டாம் இடம் என்னும் குடும்ப ஸ்தானம், நான்காமிடம் என்னும் சுகஸ்தானம், ஏழாமிடம் என்னும் மாங்கல்ய ஸ்தானம் இவைகளில் ராகு இருந்தால் திருமண தோஷம் உண்டு.

ஆண்களுக்கு இரண்டு, நான்கு, ஏழு, எட்டு, பத்தாம் இடங்களில் ராகு இருந்தால் தோஷம் உண்டு.

எல்லா ஆண் பெண் ஜாதகர்களுக்கும் சுக்கிரன் நீச்சம் பெற்றால் களத்திர தோஷம் உண்டு. சுக்கிரனுக்கு பரிகாரம் செய்தால் திருமண வாழ்க்கை சுகமாகும்.

பரிகார தோஷம் செய்ய விரும்புவோர் தமது ஜாதக நகலுடன் ரூ. 500/-ம் ஸ்ரீப்ரத்யங்கிரா நித்ய அபிஷேகம் செய்ய விரும்புவோர் ரூ. 1000/-ம் **ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா மஹாபீடம் டிரஸ்ட்** என்ற பெயருக்கு DRAFT எடுத்து, எந்த நாள் பூஜை செய்ய வேண்டும் என்று குறிப்பிட்டு, அவரவர் பெயர், நட்சத்திரம், கோத்திரம், குலதெய்வத்தின் பெயர், பரிகாரம் காண வேண்டிய குறைகள், தபால் முகவரி ஆகியவற்றை தெளிவாக எழுதி, டிரஸ்ட் முகவரிக்கு அனுப்பி, நேரில் கலந்து கொள்ளலாம். நேரில் வர இயலாதவர்களுக்காக சங்கல்பம் செய்து பூஜை நிறைவேற்றி ஹோம பிரசாதம் அனுப்பப் பெறும்.

Benedictor - Emeritus:
**Dr. B.D JATTI,** Former Vice President of India

Founder - President
**Sath Guru Prathyangira Swami**

**COMMITTEE FOR THE TEMPLE PROJECT**

**Sri. V. BHASKARAN,** Regional office, South Indian Bank Ltd., Chennai - 600 034. **Sri. P.G.P. RAMAKRISHNAN,** Industrialist, Singapore. **Sri. DHARAM CHAND JAIN,** Astrologer, Chennai - 7. **Srimathi. R. CHITRALEKHA Dr. RANGABHASYAM,** Chennai - 600 017.

# ஸ்ரீ மஹா ப்ரத்யங்கிரா தேவீ



காட்டின் நடுவிலோ, காட்டுத் தீயின் இடையிலோ, திருடர்களிடம் அகப்பட்டு கொண்டபோதோ, சத்ருக்களிடம் மாட்டிக் கொண்டபோதோ, பெருங்கடலின் நடுவில் காற்றலைகளில் அலைக்கப்பட்ட படகில் இருக்கும்போதோ, கொடிய யுத்தத்தில் ஆயுதங்கள் மேல் விழும் போதோ, எல்லா சங்கடங்களிலும் – ஜெய் பிரத்தியங்கிரா – என்று என்னை நினைப்பாயாக. என் மகிமையால் உன்னைக் காப்பாற்றுவேன்.

விரைவில் ஸ்ரீசக்ர ராஜரதத்தில் ஸ்ரீ ப்ரத்யங்கிரா தேவி கரிக்கோல ஊர்வலம் வருகிறாள்.

வதைகள் தொடரும்.

"ஐயோ ஐயோ" என்று பிஞ்சுக் குழந்தையின் அலறல் மற்றவர்களின் நெஞ்சைப் பிளக்கும். குழந்தை உள்ளே துடிக்கும். பெரியவர்கள் இதயத்தைப் பிடித்துக் கொண்டு வெளியே துடிப்பார்கள்.

இதுதான் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் முறையா? சில குழந்தைகளுக்குப் பொறுமையாகச் சொல்லிக் கொடுத்துப் புரிய வைக்க வேண்டும். இந்தப் பக்குவம் இல்லாத தாய்மார்கள்தான் வெறி பிடித்தவர்கள் போல் அந்தத் தளிர்களை அடித்துத் துவைக்கிறார்கள். அடிபட்ட பயத்திலே சாதாரணமாகப் படிக்கக்கூடியதை – எளிமையாய் பதில் சொல்லக்கூடியதைக் கூட சொல்ல முடியாமல் அரண்டு போகிறார்கள் குழந்தைகள்.

தன் நிலை மறந்து வெறிபிடித்து அடிக்கும் தாய்மார்கள் சற்றே சிந்தித்துப் பார்க்க வேண்டும். தன் பிள்ளை அக்கறையுடன் படித்து, அவனுடைய முயற்சியில் படிக்க வைத்து முதல் மாணாக்கனாகத் தேறி புகழ்பெற வேண்டும் என்னும் ஆர்வத்தால் – பேராசையால் அந்தக் குழந்தைகளை வதைக்கிறார்களே – முட்டியை மடக்கிக் கொண்டு பிஞ்சு மண்டையில் ஓங்கி ஓங்கிக் குட்டுகிறார்களே, **மூளையே கலங்கி விட்டால் காலமெல்லாம் இவர்கள் அனுபவிக்கப் போவதென்ன?**

மாறி மாறி கன்னத்தில் அறைந்து இவர்கள் விரல்களைப் பதியமிடுகிறார்களே – **அந்த அதிர்ச்சி தாங்காமல் காதுகள் செவிடாகிப் போனால் அதை இவர்களால் சீர்செய்ய இயலுமா?**

**அடிக்கிற அடி தாங்காமல் மூச்சே நின்று விடலாம். அந்த அதிர்ச்சியை இவர்களால் ஏற்றுக் கொள்ள முடியுமா?** தன் பிள்ளை நன்கு படிக்க வேண்டும். எதிர்காலம் அவனது கல்வியால் சிறப்படைய வேண்டும் என்று பெற்றவர்கள் எண்ணுவது நியாயம். அதற்காக அவர்கள் கையாளும் முறை கொடுமையானது; வருந்தத்தக்கது.

குழந்தைகளுக்குப் படிக்கும் ஆர்வத்தை விளையாட்டுப் போல் அன்பாக பதவிசாக அவர்களுக்குப் புரியும்படியாக எடுத்துச் சொல்லிக் கொடுக்கத் தாய்மார்களுக்கே வகுப்பு நடத்தலாம்.

தன் குழந்தையின் திறமை – சக்தி என்ன என்பதைப் புரிந்து கொள்ளவும் மாட்டார்கள். யாராவது எடுத்துச் சொன்னாலும் ஏற்றுக் கொள்ளவும் மாட்டார்கள்.

"அவனுக்குத் திறமை இல்லை என்பதில்லை; அவனது பரம்பரை சோம்பேறித்தனமும் பிடிவாதமும் உடம்பு முழுக்க ஏறிப் போயிருக்கிறது" என்று பரம்பரையையே

இழுப்பார்கள்.

இப்படிப்பட்ட தாய்மார்களைத் தட்டிக் கேட்கும் துணிவு இன்றைய ஆண் மகனுக்கும் இல்லையென்பதையும் ஒப்புக் கொண்டுதான் ஆக வேண்டும்.

அவளைத் தட்டிக் கேட்கும் துணிவு இல்லாவிட்டாலும் குழந்தை வதைபடுவதைப் பொறுக்க முடியாத கணவன், அவனே சொல்லிக் கொடுக்க முன் வந்தாலும் அவள் ஒப்புக் கொள்ள மாட்டாள். "உங்களுக்கு ஒன்றும் தெரியாது. நீங்கள் செல்லம் கொடுத்து இன்னும் குட்டிச்சுவராக்கி விடுவீர்கள்" என்று சொல்லி விட்டு குழந்தையை அடுத்த அறைக்குள் இழுத்துப் போய் கதவைத் தாளிட்டுக் கொள்ளுவாள்.

தன் பிள்ளையை உருவாக்கும் பொறுப்பும் கடமையும் திறமையும் தனக்கு மட்டுமே இருக்கிறதென எண்ணும் தாய்மார்களிடமிருந்து அவர்களுடைய சித்ரவதைகளிலிருந்து குழந்தைகள் விடுபடுவது எக் காலம்?

குழந்தை வதைபடுகிற கவலை ஒருபுறம்; மனைவிக்கு ஹிஸ்டீரியா அதிகமாகி விடப் போகிறதே என்ற பயம். இந்தப் பிரச்னையைத் தீர்க்க மனைவியைச் சமாதானம் செய்து டியூஷனுக்கு ஏற்பாடு செய்தால் அங்கே அதைவிடக் கொடுமை –

வீட்டிலேயாவது வாய்விட்டு அழலாம் – அங்கே அதுவும் முடியாத கப்சிப் நிலை. எல்லா இடங்களிலும் அப்படி என்றும் நிலை இல்லை. ஒருசில இடங்களில் மட்டும் இது மாதிரியான கொடுமைகள் இன்னமும் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன.

இப்படிப்பட்ட மனப்பான்மை கொண்ட தாய்மார்கள் உங்கள் கட்டுரையைப் படித்த பிறகாவது தங்களது செயல்முறை தவறானது என்பதை உணர்ந்து திருந்துவார்களா?

படிக்கச் சொல்லிக் கொடுக்கும் நேரத்தில் தன் நிலை மறந்து குழந்தைகளை அடித்தும், காலால் எட்டி உதைத்தும் கன்னத்தில் ஓங்கி அறைந்தும், தலையில் மடேர் மடேர் என குட்டு வைத்தும், ரத்தம் சிவக்க கன்னங்களிலும், தொடையின் சதையைப் பிய்த்து எடுப்பது போல திருகிக் கிள்ளுவதும், காதுகள் கையோடு வந்து விடுமளவுக்குக் காதைப் பிடித்துத் திருகுவதும், கொடுமையிலும் கொடுமை...

வன்முறைகள் எங்கெங்கோ நிகழ்வதாக அறிந்து வேதனைப்படுகிறோம் – நெஞ்சு துடிக்கிறோம்...

அன்பும் பாசமும் நிறைந்த அன்னை படிப்பின் பெயரால் பிஞ்சுக் குழந்தைகளை வதைக்கும் வன்முறையைத் தடுப்பதற்குத் தங்களைப் போன்றவர்களது சிந்தையில் பிறந்த எழுத்துக்கள் பயன்தரும் என்பதை நம்புகிறோம்.

**– கோமதி சுப்ரமணியம், சென்னை – 26.**

எனக்குத் தெரிந்த பெண்மணி ஒருவர் தன் குழந்தைகள் சரியாக படிக்கவில்லை என்பதற்காக கண்மண் தெரியாமல் அடிக்கும் வழக்கமுடையவர். நான் ஒருமுறை அவர் வீடு சென்ற போது குழந்தைகள் முகம் வீங்கிப் பார்க்க சகிக்கவில்லை. மற்ற குழந்தைகளுடன் ஒப்பிட்டு அவர் தன் குழந்தைகளைப் பேசும் வார்த்தைகள் காதால் கேட்க முடியாது. 'இப்படி படிக்காத குழந்தைகள் இருந்தாலென்ன, போனாலென்ன?' என்று வாய் கூசாமல் பேசுவார். அதற்கேற்றாற்போல், அவரது மகன் அகால மரணமடைந்த போது, அவர் கதறிய கதறல். அவன் உயிரோடிருந்த போது ஒரு நாளாவது அந்தக் குழந்தையை அன்பாக, ஆதரவாக பேசியிருப்பாரா என்று எனக்குத் தோன்றியது.

மற்றொரு சிநேகிதி ஒருத்தி தன் மகனை மிக கண்டிப்போடு வளர்ப்பவள். +2 படிக்கும் வரை கூட தான் அருகில் அமர்ந்து படிப்பு, படிப்பு என்று அவன் உயிரை எடுப்பார். சரியாக பாடத்தை மனப்பாடம் செய்து அவனிடம் ஒப்பிக்காவிட்டால், அடி, உதை, குட்டுதான். யார் எதிரில் இருந்தாலும் கவலையே பட மாட்டார். அந்தப் பையனோ கண்ணீரை மறைக்க முடியாமல் கூனிக்குறுகிப் போவான். அவன் நண்பர்களுடன் பேசும் போது கூட எதிரிலேயே நின்று, 'போதும்

**நாம் வெற்றிலை பாக்கில் வைத்துக் கொடுக்கும் 'ஜாக்கெட்' துண்டை அதிகமாக யாரும் பயன்படுத்துவதில்லை. ஜாக்கெட்டிற்குப் பதில் சிறிய 'டர்கி டவல்' கொடுத்தால், நாம் கொடுத்தவர் கட்டாயம் பயன்படுத்துவார் இல்லையா?**

**- போரூர். ஆர். சீதா**



பேச்சு. படிக்கலாம்' என்று அதட்டுவார். அந்தப் பையன் இன்னமும் அம்மா சொல்வதைத்தான், அம்மா சொன்னால்தான் எதையும் செய்வான். சுயபுத்தியே இல்லாமல்தான் இருக்கிறான். 'ஐயோ பாவம், அடிக்காதே. கொஞ்சம் ரிலேக்ஸ் ஆக விடு' என்றால், 'பேசாமல் போ. அவன் என் பிள்ளை. இதில் தலையிடாதே' என்பாள். ஏன், அவனுக்குப் பரிந்து பேசும் அவள் கணவரைக் கூட எல்லார் எதிரிலும் எடுத்தெறிந்து பேசி விடுவாள். இந்த மகன் இன்று இவள் ஆணைக்குக் கட்டுப்பட்டு நடப்பதாக மகிழ்ச்சியுடன் இருக்கிறாள். நாளை திருமணமானதும் மனைவியின் ஆணைக்குக் கட்டுப்பட்டு அம்மாவை நிமிடத்தில் தூக்கி எறிய மாட்டான் என்பது என்ன நிச்சயம்?

என் அடுத்த வீட்டுப் பெண்மணி ஒருவர் தன் மகனை ஹோம்-ஒர்க் செய்யவில்லை என்று இருட்டு அறையில் கதறக் கதற அடைத்து விடுவார். அதைப் பார்க்கும்போது என் மனமே கதறும். ஆனால் அவளிடம் யார் சொல்வது? பெற்றவளாயிற்றே? அந்தக் குழந்தையும் என்ன கேட்டாலும் அம்மா முகத்தைப் பார்த்துத்தான் பதிலே சொல்லும். இதில் அவளுக்கு ஒரு அற்ப சந்தோஷம். தற்காலத்தில் பெரியோர் கண்டிப்பிற்கு பயந்து தானே பல +2, பத்தாம் வகுப்பு குழந்தைகள் கூட தேர்வில் தவறி விட்டால், உடனே யோசிக்காமல் தற்கொலை செய்து கொண்டு விடும் செயல் இன்று மிக அதிகமாக இருக்கிறது. இதற்கு முதல் காரணம் கண்டிப்பாக பெற்றோர்களின் அடக்குமுறையும், அளவுக்கு மீறிய கண்டிப்பும்தான்.

சரி, குழந்தைகளை அடிக்காமல் வளர்க்க முடியுமா? கண்டிப்பாக முடியும். என் நான்கு குழந்தைகளையும் நான் அப்படித்தான் வளர்த்தேன். என் குழந்தைகளை நானோ, என் கணவரோ இன்று வரை அடித்ததில்லை. சிறு வயதில் படிக்கவும், எழுதவும் அவர்களும் அடம் செய்ததுண்டு. 'சரி, கொஞ்ச நேரம் விளையாடி விட்டு வந்து படி.' என்று விட்டுப் பிடித்தால் எந்தக் குழந்தைதான் புரிந்து கொள்ளாது? சிறு வயது முதலே நல்ல பழக்கங்களை ஏற்படுத்தித் தருவது நம் கடமை தானே? நாம் வாழும் முறைதான் அவர்களுக்குப் பாடமாகிறது. என் குழந்தைகளை அவர்கள் விருப்பத்தோடு என் விருப்பத்தையும் சேர்த்து உருவாக்கினேன் என்றுதான் சொல்வேன்.

அவர்கள் விரும்பிய எதையும் கூடியவரை வாங்கித் தர நாங்கள் மறுத்ததில்லை. நான்கு வயது முதலே திருப்பாவை, ஸஹஸ்ரநாமம், ஆத்திச்சூடி என்று மனனம் செய்து போட்டிகளில் பங்குபெறப் பழக்கினேன். பள்ளி, கல்லூரிகளில் எந்தப் போட்டியானாலும் இவர்கள் பங்குபெறத் தவறியதில்லை. பெரும்பாலும் பரிசும் பெறுவார்கள். எட்டாம் வகுப்பிலேயே ஹிந்தி பிரவீண் முடித்து விட்டார்கள். வகுப்பில் முதலிடம்தான் பெற வேண்டும் என்று நாங்கள் வற்புறுத்தியதில்லை; ஆனால் முதலிடம் பெற்றால்தான் சிறந்த மேற்படிப்பு, வேலை வாய்ப்பு கிடைக்குமென்பதை அவ்வப்போது வலியுறுத்தியதன் பலன் என் முதல் மகன் தமிழகத்தில் ஐந்தாமிடமும், இரண்டாம் மகன் மாநில முதலிடமும் பெற்று என்னை ஈன்ற பொழுதின் பெரிதுவக்கச் செய்தனர். என் மகன் +2வில் சிறந்த மதிப்பெண் பெற்று மருத்துவம் பயிலவிருக்கிறான். ஆனால், என்னுடைய ஒரே குறை, இந்தக் குழந்தைகள் யாருக்கும் விளையாட்டில் ஆர்வமில்லாததுதான்.

எல்லா விரலும் ஒன்று போலிருக்குமா? என் கடைசி மகன் பத்தாம் வகுப்பு. அவனுக்கோ விளையாட்டிலிருக்கும் ஆர்வம் படிப்பிலில்லை. ஆரம்பம் முதலே ஆவரேஜ் தான். சின்ன வயதில், 'என்ன இருபதாம் ரேங்க் வாங்கியிருக்கிறாயே' என்றால், 'என்னம்மா, ஒன்றை விட 20 தானே பெரிசு? நான்தான் பெரிய ரேங்க்' என்று அழகு மழலையில் அவன் சொல்லும் போது

அடிக்கவா தோன்றும்? அவனுக்குப் படித்து மனனம் செய்து பரீட்சை எழுதுவது பிடிக்காத விஷயம். கம்ப்யூட்டர் அவனுக்கு அல்வா என்றால், சரித்திரமும், பூகோளமும் எட்டிக்காய். 'ஆனால் பத்தாம் வகுப்பு வரை இதெல்லாம் கண்டிப்பாக படித்துத்தான் ஆக வேண்டும். அப்பொழுதுதான் அதிக மதிப்பெண் பெற்று என்ஜினீயர் ஆகலாம். இந்த வருடம் மட்டும்தானே, கொஞ்சம் கஷ்டப்பட்டு படி' என்று அன்பாக, கோபிக்காமல், புரியும்படி எடுத்துச் சொன்னதன் பலன், இன்று 75% மதிப்பெண் பெறுமளவு தேறியிருக்கிறான். நாம் நம்பிக்கையுடன் பேசினால்தான் குழந்தைகளுக்கும் சந்தோஷமாக இருக்கும். நாமே நம் குழந்தைகளை 'நீ எதற்கும் லாயக்கில்லை. மாடு மேய்க்கத்தான் லாயக்கு' என்று சொன்னால், அந்தக் குழந்தை மனம் குன்றிப் போகுமே? இப்பொழுது பல பள்ளிகளிலும் தாழ்வுமனப்பான்மைக்கு இடமில்லாத 'கிரேட்' முறை கடைபிடிக்கப்படுவது நல்ல முறை.

– ராதா பாலு, கோலாபூர்.

குழந்தைகள் பூப்போன்றவர்கள் என்பதில் ஐயமில்லை. அவர்களை அடிப்பதா? நினைத்தாலே நெஞ்சு பதறுகின்றதே! அன்பிலும், அரவணைப்பிலுமே சரியான முறையில் வளர்க்கலாம். இப்போதெல்லாம் குழந்தைகள் பிறக்கும் போதே மிகவும் அறிவாற்றலுடன் பிறக்கிறார்கள். அதனால் அதிகம் அதட்டி, மிரட்ட வேண்டிய அவசியமின்றி, சொன்னாலே போதும், 'கப்' என்று கற்பூரம் மாதிரி பற்றிக் கொள்வார்கள். விரட்டி, விரட்டி வளர்க்கும் பிள்ளைகள் பிற்காலத்தில் தனது வேதனைக்கு வடிகாலாக, யாரையாவது பழிவாங்கும் எண்ணத்துடன் 'தீவிரவாதி' ஆக மாறி விடுவர்.

என் தோழி மாலா தன் பிள்ளைகளுக்கு முழு சுதந்திரம் தருவாள். அதே சமயம் கண்டிப்பும் இருக்கும். ஆனால் அடிப்பது கிடையாது. மாலையில் மனம் போல் விளையாடலாம் என்பதும், ஆறு மணிக்கு புத்தகத்தைக் கையில் எடுக்கணும் என்பதும் எழுதப்படாத விதி. ஐந்து நிமிடம் 'லேட்' ஆனாலும், பிள்ளைகள் பதறிக் கொண்டு வருவார்கள். அவள் எதுவும் கேட்க மாட்டாள். கடிகாரத்தை மட்டும் ஏறெடுத்துப் பார்ப்பாள். குழந்தைகள் 'ஸாரிம்மா' என்றவாறு படிக்கத் துவங்கி விடுவார்கள். அவளும் உடனிருந்து, எழுதித் தரவோ, சொல்லித் தரவோ செய்வாள். இன்று அந்தப் பையன்களில் ஒருவன் டாக்டர், ஒருவன் வங்கி அதிகாரி. மாநிலத்தில் 'ரேங்க்' வாங்கி, ஒரு சிபாரிசோ, அன்பளிப்போ இன்றி மருத்துவக் கல்லூரியில் இடம்கிடைத்தது என்றால் விந்தையாக இல்லையா?

குழந்தைகளுக்கு மென்மை, இனிமைதான் பிடித்தமானது. 'முருங்கையை ஒடிச்சு வளரு, பிள்ளையை அடிச்சு வளரு' என்பது அந்தக் காலத்துக்குப் பொருந்துமோ என்னவோ, இப்போது சரிப்படாது. இன்றையக் குழந்தைகள் நம்மிடம் எதிர்பார்ப்பது அன்பும், பரிவும் தான்! ஒரு மடங்கு நாம் அதைக் கொடுத்தால், பல மடங்கு திருப்பித் தருவார்கள். அந்த ஒப்பந்தத்தின் அடிப்படையில் நாம் என்ன சொன்னாலும் கட்டுப்படுவார்கள். அந்த நிலைக்கு அவர்களைக் கொண்டு வருவது எளிது.

முரண்டு பிடிக்கும் குழந்தைகட்கு, 'டைவர்ஷன்' தர வேண்டும். ஒரு செயலைச் 'செய்யாதே' என்று கூறுவதை விட வேறு ஒரு நல்ல செயலைக் கூறி, 'அதைச் செய்' என்றால் சுலபமாக பிரச்னை தீர்ந்து விடும் என்பது நிஜம்!

– திருமதி. ராதா, சென்னை.

வரும் மாதங்கள் பண்டிகை மாதங்கள். பல பண்டிகைகளுக்கு நிறைய பூக்கள் விதவிதமாக வாங்கி பூஜை செய்வீர்கள். காய்ந்த பூக்களை நன்கு வெய்யிலில் காயவைத்துப் பொடித்து சிறிய சிறிய துணிப் பைகளில் நிரப்பி தைத்து புடவை வைக்கும் அலமாரியில் போட்டு வையுங்கள். மணம் ரம்மியமாக இருக்கும். பூச்சிகளும் துணிகளை அண்டாது.

– லக்ஷ்மி துரைஸ்வாமி.





# அதிர்ஷ்டம் அழைக்கிறது

## அதிர்ஷ்டக் கற்கள் மூலம் பரிகாரம்.

வாழ்க்கையில் எந்தவிதமான பிரச்சனை இருந்தாலும் அதற்கு **பத்மஸ்ரீ**யில் தீர்வு உண்டு.

- திருமண தாமதமா?
- புத்திரபாக்கியம் குறைவா?
- குடும்ப வாழ்க்கையில் பிரச்சனையா?
- உத்தியோகத்தில் உயர்வு இல்லையா?
- படிப்புக்கு தகுந்த உத்தியோகம் கிடைக்கவில்லையா?
- வியாபாரத்தில் நஷ்டமா?
- கல்வியில் தேக்க நிலையா?
- வழக்குகளில் பிரச்சனையா?
- உடல் ஆரோக்கியம் குறைவா?
- பணமுடக்கமா?
- மன அமைதி இல்லையா?

இதுமட்டுமல்லாமல் வாஸ்து பரிகாரம் (வீடு, அலுவலகம், கடை, சிறிய மாற்றத்துடன்) ஜாதக பொருத்தம், ஜாதக பலன்கள், ஜாதகத்தை ஆராய்ந்து முக்கிய முடிவுகள் நிகழ் காலத்தையும், எதிர்காலத்தைப் பற்றியும் சொல்லப்படும்) (5 கேள்விகள்)

**மெகா பம்பர்**
**பரிசு காத்திருக்கிறது!**

ஜெம்-தெரபி மூலமும் சக்தி வாய்ந்த எந்திரங்கள் மூலமும் எப்பேர்ப்பட்ட பிரச்சனைகளையும் தீர்ப்பதில் நாங்கள் தேர்ந்தவர்கள் என்பதனை நிரூபித்துக் காட்டியிருக்கிறோம்.

அதிர்ஷ்டக் கற்கள் அணிந்த பிறகு (எங்கு வாங்கியிருந்தாலும்) உங்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றங்களைப் பற்றியும் அனுபவங்களையும் கருத்துக்களையும் எழுதி **பத்மஸ்ரீ பேர்ல்ஸ்க்கு** அனுப்புங்கள். அதிர்ஷ்டம் அழைக்கிறது என்ற தலைப்பை ஒட்டி அனுப்பவும். குலுக்கல் முறையில் மூன்று பேருக்கு தலா 1 கிராம் தங்கக் காசு வழங்கப்படும்.

**ஜாதகத்துடன் நேரில் வருபவர்களுக்கு எந்த கற்கள் அணிய வேண்டும் என்று கூறுவதற்கு ரூ.151/- மட்டுமே. (ஐந்து கேள்விகளுக்கும் பதில் அளிக்கப்படும்) வெளியூர் நபர்கள் ரூ.225/-துடன் ஜாதகத்தின் நகலையோ(அ)பிறந்த தேதி, நேரம், இடம் போன்ற விவரங்களை உங்கள் பிரச்னையுடன் D.D/M.O.வை PADMASHRI PEARLS என்ற பெயரில் எடுத்து அனுப்பவும்.**

வெளிநாட்டில் வசிப்பவர்கள் US$ 10 பத்மஸ்ரீ பேர்ல்ஸ்க்கு அனுப்பினால் ஜாதகத்திற்குண்டான பலன்கள், கற்களுக்கான பலன்கள், ஆலோசனை மற்றும் கேள்விகளுக்கு பதில் பெற்றுக் கொள்ளலாம்.

**Visit us at http://epages.webindia.com/india/padmashri**

பாரம்பரியமிக்க ரத்தினக் கற்கள் வழங்கும் கைராசியான நிறுவனம்




# PADMASHRI PEARLS & GEMS

## Gem Merchants & Jewellers

139 Arihant Complex, (Ground Floor, Right side.) North Usman Rd,
(பனகல் பார்க் சாரதா வித்யாலயா பள்ளி அருகில்)
T. Nagar, Chennai - 17.
Ph: 8226128, 8234060, pager: 9632-756314,
வேலை நேரம் : காலை 10.30 முதல் மாலை 8.30 வரை




**We Serve**
1917-1997
80 Years

No Lunch Break ஞாயிறு : 11AM TO 2 PM. முன் பதிவு செய்து கொள்ளுங்கள்

**All master, Visa, Citi Bank and Diners Cards Accepted**

HYDERABAD SHOW ROOM: 2-4-47, M.G.ROAD, SECUNDERABAD - 3. PH: 841936.

# உழைப்பை நிறுத்தாதீர்கள்

ஐம்பத்தைந்து வயது மதிக்கத்தக்க ஒரு பெண்மணி 'கம்ப்யூட்டர்' கற்றுக் கொள்ள ஆசைப்பட்டார். வகுப்பிலும் சேர்ந்தார். தினமும் இந்தப் பெண்மணி வெளியே செல்வதைப் பார்த்த அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள், எங்கே செல்கிறீர்கள் என்று கேட்க, 'கம்ப்யூட்டர்' வகுப்புக்கு என்று சொன்னார் அப்பெண்மணி. இந்த வயதில் 'கம்ப்யூட்டர்' கற்றுக் கொண்டு என்ன செய்யப் போகிறார் இவர்! என்று பின்னால் பலர் பேசுவது அப்பெண்மணியின் காதில் விழாமல் இல்லை!

நான் ஒரு குடும்ப நண்பரின் 80-ஆவது பிறந்த தினத்திற்குச் சென்றிருந்தேன். அவர் தனது பிறந்த நாளுக்காக அன்று அலுவலகத்திலிருந்து விடுப்பு எடுத்திருந்ததாகக் கூறினார். இந்த வயதில் அலுவலகத்திற்குச் செல்கிறீர்களா? உங்களால் முடிகிறதா? என்று வினவியபோது, அவர் எனக்கு ஒரு சம்பவம் ஒன்றைக் கூறினார்.

ராக்பெல்லர் என்ற அமெரிக்கக் கோடீஸ்வரர் ஒருமுறை விமானத்தில் பயணம் செய்து கொண்டிருந்தாராம். அவர் வயதானவர். அவருக்கு அருகில் ஒரு இளைஞர் அமர்ந்திருந்தான். அவன் அவருடன் உரையாடிக் கொண்டே வந்தான். அவன் அவரிடம், "ஐயா, தாங்கள் போதுமான அளவு செல்வம் சேர்த்து விட்டீர்கள். உங்களுக்கு எந்தவிதக் கவலையோ, தொல்லையோ இருக்க முடியாது. இவ்வளவு வயதான பிறகும் சுறுசுறுப்பாக உழைத்துக் கொண்டிருக்கிறீர்களே? இது தேவைதானா? ஓய்வு எடுத்துக் கொண்டு ஓரிடத்திலிருந்து அமைதியாக காலத்தை ஓட்டலாமல்லவா?" என்று வினவினான்.

அவர் சிரித்துக் கொண்டே அவனுக்கு பதில் கூறினார். "தம்பி, இப்பொழுது நாம் பயணம் செய்து கொண்டிருக்கிறோமே, இந்த விமானத்தைத்தான் வான உச்சிக்கு கொண்டு வந்து விட்டார்களே! இனி இதன் இயந்திரங்களை நிறுத்தி விட்டால் என்ன?" என்றார்.

அதற்கு அந்த இளைஞன், "அது எப்படி முடியும்? இயந்திரங்களை நிறுத்தி விட்டால் நமது விமானம் விபத்துக்குள்ளாகி விடுமே! அது ஆபத்தில் அல்லவா முடியும்?" என்று பதில் கூறினான் இளைஞன்!

ராக்பெல்லர் சிரித்துக்



கொண்டே, "தம்பி விபத்து என்ற சொல் காதில் விழுந்த உடனே நீ என்ன பயம் பயப்படுகிறாய்? நமது வாழ்க்கையும் ஒரு விமானப் பயணம் போன்றதுதான்! பணம், வருவாய் இவற்றையெல்லாம் மறந்து விடு! நாம் என்று உழைப்பை நிறுத்தி விடுகிறோமோ, அன்றே நமது உடலும், மனமும் சீர்கெட்டு விடுகிறது. நமது மனதை விட்டு மகிழ்ச்சி பறந்து விடும். நமது உடலை விட்டு ஆரோக்கியம் ஓடிப் போய்விடும்" என்று சொன்னார் ராக்பெல்லர்

இந்தச் சம்பவத்தைக் கூறிவிட்டுத் தொடர்ந்தார், அந்த 80 வயது இளைஞர்! இருபது, இருபத்தைந்து வயதின் போது உழைத்தது போல் நம்மால் ஐம்பது வயதில் உழைக்க முடியாமல் இருக்கலாம். ஆனால் அந்த வயதில் நம்மால் எந்த அளவு உழைக்க முடியுமோ, அந்த அளவு உழைக்கப் பின்வாங்கக் கூடாது. வயது ஆக ஆக பண லாபத்தை விட மனமகிழ்ச்சியும், உடல்நலமும் மிக முக்கியம் என்று கூறினார்.

இது எவ்வளவு உண்மை! வயதானவர்களுக்கு மட்டுமல்ல, அனைவருக்கும் இது பொருந்தும். ஏன் வீட்டிலிருக்கும் பெண்மணிகளையே எடுத்துக் கொள்ளுங்கள், குழந்தைகள் சிறியவர்களாக இருக்கும்பொழுது, நமக்கு எதற்குமே நேரம் இருப்பதில்லை. வேலை அதிகமாக இருக்கும். எதையும் சிந்திக்க நேரம் இருக்காது. நமது உடல் உபாதைகளைக் கூட மறக்கிறோம். அக்கம், பக்கத்தில் என்ன நடக்கிறது என்று கேட்கக் கூட நேரம் இருப்பதில்லை. வேலைகள் முடிந்த பிறகு ஓய்வு தேவைப்படுகிறது.

குழந்தைகள் பெரியவர்களாகி மேல் படிப்புக்கு வெளியூர் செல்லும்போதோ, அல்லது திருமணமாகி புகுந்த வீட்டுக்குச் சென்ற பிறகோ, வேலைகள் அதிகம் இருப்பதில்லை. அந்த மாதிரி சமயங்களில் தனக்குப் பிடித்த கை வேலைகள் செய்வது, அல்லது முதலில் குறிப்பிட்ட பெண்மணி போல கம்ப்யூட்டர் போன்ற வகுப்புகளில் சேர்வது என்று நம்மை நாமே எப்பொழுதும் ஏதாவது ஒன்றில் ஈடுபடுத்திக் கொண்டோமானால், மனதில் தெம்பு பிறக்கும். குழந்தைகள் வெளியூர் செல்வதால், கணவன், மனைவிக்கு தனிமை தெரியாது. எப்பொழுதும் ஆரோக்கியமும், மகிழ்ச்சியும்தான்!

நமக்கு வயதாகி விட்டது என்று எண்ணாமல் ஏதோ ஒரு வேலையில் நம்மை ஈடுபடுத்திக் கொண்டால் என்றும் நமக்கு இளமைதான்!

— ஜெயந்தி ஜி. சுந்தர்

# விளைவுகளை எண்ணிப் பாராத வேர்கள்!



மதியம் சாப்பாடு முடிந்து பத்திரிகையோடு சோபாவில் உட்கார்ந்தேன். பர்வதம் அலையக் குலைய வந்தாள். கையில் கிருஷ்ணஜயந்தி பட்சணம்.

"என்ன! கிருஷ்ணர் வந்து விட்டுப் போனாரா?" என்றபடி பட்சணத்தை வாங்கிக் கொண்டேன். பர்வதம் பதிலே பேசவில்லை.

அருகில் அமர்ந்து, ''என்ன ப்ராப்ளம்?'' என்றேன் இதமாக. குனிந்தபடி கண்ணீர் சொரிந்தாள்.

''சே! இத்தனை வயசாகி அழலாமா... மனசு விட்டுச் சொல்லு... என்ன நடந்தது?'' என்றேன்.

விம்மலினூடே பேசினாள்.

''பொன்னா! ஏன் உயிரோட இருக்கேன்னு தோணறது!'' அவளே பேசட்டும் என்று பேசாமல் இருந்தேன்.

"நேற்றைக்கு கிருஷ்ண ஜயந்தியா... ஆபீஸிலேயிருந்து வருகிறபோதே மணி ஆறே கால். பட்சணமெல்லாம் நானே ஒத்தையா பண்ணிட்டேன். 'லீவு போடு'ன்னா - இதெல்லாம் வேஸ்ட். எல்லாப் பழங்களும் வாங்கித் தரேன். நைவேத்தியம் பண்ணு' என்பான் மணி. அதனாலே மூச்சே விடலே. நான்தான் இவ்வளவு பண்ணி இருக்கேனே! எப்படிப் பண்ணினேன்னு ஒரு வார்த்தை... மகா அழுத்தம்!

ஒரு பெரிய கேக் வாங்கிண்டு வந்து நடு ஹாலிலே எச்சில் டைனிங் டேபிள்லே வைச்சு, எதிரிலே கிருஷ்ணர் பொம்மையை நிற்க வைச்சு, 'ஹாப்பி பர்த்டே டூ யூ'ன்னு பாடறா! அதுக்கு எனக்குத் தாலி கட்டிய புண்ணியவானும், அவளுக்குத் தாலி கட்டின மகானுபாவனுமாச் சேர்ந்து கைதட்டி அமர்க்களம் பண்றா. இது என்னை அவமானப்படுத்தற மாதிரி இல்லே?''

"இதுக்குப் பதில் சொல்றேன். நீ சாப்பிட்டாயா?'' என்றேன்.

''எல்லாம் ஆச்சு.''

''சரி, அப்புறம் பூஜை பண்ணினியா? உன்னோட முறுக்கு வெல்லச் சீடை, திரட்டுப்பாலை அவா சாப்

ஆர். பொன்னம்மாள்

பிட்டாளா? கற்பூரம் ஒத்திண்டு நமஸ்காரம் பண்ணினாளா?''

''அவ ஏதோ கூத்தடிக்கறாங்கறதுக்காக நாளும் கிழமையுமா பூஜையை விட முடியுமா? அவா கற்பூரம் ஒத்திண்டு நமஸ்காரம் பண்ணினா அவங்களுக்குப் புண்ணியம்! பட்சணத்தை இவா சாப்பிடலைன்னா ஊசிப் போயிடுமா? ஏன் சிரிக்கிறே?'' என்றான் பார்வதம்.

''தரையிலே இலையைப் போட்டு பந்தி படைக்கிறோம். சாஷ்டாங்கமா யார் யாரோ சாப்பிடறா... மறுபடி அந்த இடத்திலே திதி கூட நடத்தறோம். அப்போ அந்த இடம் எச்சில் இல்லையா? கொத்திட்டு சிமெண்ட் பூசி விட்டா நடக்கிறோம்? டைனிங் டேபிள் ஸ்ரீஜயந்திதான்னு சொல்லி இருப்பியா?'' ஆத்திரத்தோடு கேட்டாள் பார்வதம்.

''அப்படிச் சொல்லி இருக்க மாட்டேன். கிருஷ்ணன் பிறந்த நேரம் ராத்திரி 12 மணி. அவசரமென்ன என்று கேக் வெட்டி முடிந்ததும், என்னதான் பிறந்த நாள் கேக் வெட்டினாலும் கோவிலுக்குப் போகிறதை வழக்கமா வைச்சிண்டிருக்கோமே! அதன்படி கொஞ்ச நேரம் பூஜை, நைவேத்தியம், கற்பூரம் எல்லாம் காட்டி வீட்டைக் கோவிலாக்கலாம் என்று அவர்களை அழைத்திருப்பேன்.''

''நாம ஒன்பது கஜம் மடிசார் கட்டிக்கறோம். ஆனாலும் அவா மாக்ஸி போட்டுக்கறதை ஒத்துக்கறோம். அது மாதிரிதான் இதுவும். தாலி கட்டுகிறதுக்கு முன்னாடி 'மை



மரத்தால் ஆனது. அதை சுத்தம் செய்தபின் எச்சில் எப்படி ஒட்டிக் கொண்டிருக்கும்? உன் பிள்ளை, பெண்ணோட பிறந்த நாளுக்குக் கேக் வெட்டிக் கொண்டாடலாமின்னா, ஏன் கிருஷ்ணருக்குக் கேக் வெட்டக் கூடாது? இதிலே என்ன தப்பிருக்கு? பிறந்த வீட்டு மனிதர்களை விட்டு விட்டு வாழ வந்தவளின் செயலை அவள் கணவரும், மாமனாரும் கை தட்டி வரவேற்றதும் பாராட்டப்பட வேண்டியதுதான்!''

''நீயாயிருந்தா என்ன பண்ணியிருப்பே? இனிமே கண்ணபிரான் நம்மிலே ஒருத்தர்! தெரியாம பட்சணம் பண்ணிட்டேன். இனிமேல் நம்ம வீட்டிலே கேக் வெட்டுகிற ஹஸ்பெண்ட்' என்று அறிமுகப்படுத்தற முந்தின நாள் ரிஸப்ஷனுக்குப் போய் டின்னரை அனுபவித்துச் சாப்பிடுகிறது பாஷனாயிடுத்து. காலம் மாறுகிற போது நாமும் மாறிக்கணும். இல்லேன்னா நாம பின் தங்கிடுவோம். நம்மை விட்டுட்டு எல்லாரும் ஓடிடுவா. செத்துப் போனா கூட, "ஐயோ! அவ போயிட்டாளே" என்று நிஜமான மனசுகள் மறுகணும்.

''அப்பாடி! நிம்மதி''ன்னு பெரும்பான்மையானவா நினைச்சா அது நாம வாழ்க்கையில் பெயிலாயிட்டதா அர்த்தம்.

உன் மாட்டுப் பெண் பட்டுப் புடவை சரசரக்க மாக்கோலம் போடணும்னு ஆசைப் பட்டிருந்தா அதுக்கேத்த பெண்ணைத்

தேர்ந்தெடுத்திருக்கணும்.

பணக்கார இடம். ஒரே பெண். சொத்துக்கு ஏக வாரிசு என்றதும் வாயைப் பிளந்தாயே! அவ உன் கூடக் குடித்தனம் பண்ணுகிறதே பெரிசு. பெரிய கம்பனியிலே பெரிய ஸ்தானத்திலே இருக்கிறவ ஐந்தரை மணிக்கெல்லாம் வீட்டுக்குள்ளே காலடி வைக்கணும் என்றால் முடியுமா? நீயும் சிலதுகளை விட்டுக் கொடுக்கத்தான் வேணும். உன் கணவர் புத்திசாலி. 'ஹோமில் போய் எவர் கையையோ எதிர்பார்ப்பதை விட இது தேவலை' என்று தீர்மானித்துக் கொண்டு விட்டார்.

ஆத்திரப்படாமல் நான் சொன்னதை அசைபோட்டுப்பார். ரொம்பச் சிடுசிடுத்தால் தனிக்குடித்தனம் போவார்கள். அல்லது போக வைப்பார்கள்.

நீ என்று சொல்வதனால் நாக்கு வெந்து போகாது. உனக்குப் பின் உன் கணவரைத் தனிமை சுடாதா? அல்லது நீ உடன்கட்டை ஏற முடியுமா? உடம்புக்கு முடியாமல் போகாதா? அப்போது மகன் பேசாதிருந்தாலும் மருமகள் சொல்லிக் காட்டினால் என்ன செய்வாய்? உன் கணவரை அந்த நிலைக்கு ஆளாக்க உனக்கு உன் மாமியார், மாமனார் உரிமை அளித்திருகிறார்களா?




புத்திர வாஞ்சையைப் பிரிப்பது பாவமில்லையா?"

"ஆக, மாட்டுப் பெண் எது செய்தாலும் வாயில் பிளாஸ்திரி போட்டுக் கொள்! காதிலே ஈயத்தைக் காய்ச்சி ஊற்றிக் கொள்! கண்களை காந்தாரி மாதிரி கட்டிக் கொள் என்பது உன் உபதேசம்'' எரிச்சலோடு கேட்டாள் பார்வதம்.

''நீ ரொம்பக் கோபமாயிருக்கிறாய்! 'லவங்கி' கேசட் கிடைத்தது. போடுகிறேன் பார்'' என்று அப்போதைக்கு அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தேன். 'டெக்'கில் படம் ஓடியது. தின்பதற்கு பழங்களும், சீடை, தேன்குழலும் கொண்டு வந்தேன். தின்று கொண்டே படம் பார்த்தோம்.

கதாநாயகன் கதாநாயகியிடம் 'சகியே' என்று தொடங்கினான்.

" 'சகி' என்றால் என்ன அர்த்தம்?'' என்று கேட்டேன் என் சகியிடம்.

"தோழி என்று அர்த்தம். இது கூடத் தெரியாத மடச்சி என்று எண்ணி விட்டாய்'' என்றாள் பார்வதம்.

"இங்கே கணவன் மனைவியைச் சகி என்கிறான். இதை நாமும் ரசித்துப் பார்த்திருக்கிறோம். சகி என்றால் தோழி என்றும் புரிந்து வைத்திருக்கிறோம். அக்னியை சாட்சி வைத்து ஏழடி நடந்த இந்தத் தோழிக்கு அவன் கடைசி வரை உண்மையானவாக இருக்க வேண்டாமா? காதலி ஒருத்தியைக் கைபிடித்து அவள் காரியம் யாவினும் கைகொடுப்பது பெண்ணுக்கு மட்டுமல்ல; ஆணுக்கும் கடமைதானே! கட்டிலுக்கும், தொட்டிலுக்கும் மட்டுமா பெண் என்று பேசப்படுகிற இந்நாளில் கஷ்டத்துக்கு மட்டும் அவள் 'சகி' அல்ல! அவளது மகிழ்ச்சிக்கும், உணர்வுகளுக்கும் கூட கணவன் பொறுப்பாகிறான். அக்கினி முன் செய்த சத்திய உடன்பாட்டை உண்மையான தம்பதிகள் மீறக் கூடாது."

''டெக்கை நிறுத்து. வயதானவர்கள் குழந்தைகள் போல் அல்லவா? நம்மை இப்போதுள்ள இளையதலைமுறை அப்படியா நடத்துகிறது?'' குமுறினாள் பார்வதம்.

"ஒட்டுமொத்தமாகக் குற்றம் சொல்லாதே! தப்பு முதிய தலைமுறையினரிடமும் இருக்கிறது. வயதாக ஆக குழந்தையாகிறோம் என்பது நிஜம். எதில்? முரண்டு பிடிப்பதில்! குழந்தை போட்டதை சாப்பிடுகிறது. நாம் ஆயிரம் குற்றம் சொல்கிறோம். மூன்று வயதுக் குழந்தை துணி என்ன விலை என்று கேட்பதில்லை! அப்படியே கேட்டாலும் துப்பறிந்து உண்மையைக் கண்டுபிடித்து பெற்றோரை



வாஷிங் மெஷின் வைத்திருப்பவர்கள் சில விஷயங்களை முக்கியமாக கவனிக்க வேண்டும்.

இரவில் படுக்கு மூன் 'வாஷிங் மெஷினை' நன்றாக மூடி வைக்க வேண்டும். அப்படி மூடும் மூன் இரண்டு பக்க டப்களி லும் உள்ளே ஏதாவது பொருள் இருக்கிறதா என கவனிக்க வேண்டும்.

சாதாரணமாக வாஷிங் மெஷின் உபயோகிப்பவர்கள் வீட்டில் தாங்கள் உபயோகித்த, துவைக்க வேண்டிய துணி களை எலி, பல்லி இவைகள் அதிகம் உள்ள வீட்டில், இரவில் இவைகள் வாஷிங் மெஷினில் சென்று தஞ்சமடையும் (துணிகள் இடையே).

என் நண்பர் ஒருவர் வீட்டில் இந்த மாதிரி அஜாக்கிரதை யினால் துணிகளை துவைத்த பிறகு வெளியே எடுத்த போது ஒரு இறந்த எலி காணப்பட்டது. ஆகையால், துணிகள் துவைக்கு முன்பு, 'டப்'களை காலி செய்து விட்டு, துணிகளை குப்பையாக உள்ளே போடாமல் ஒவ்வொன்றாக மிஷினில் போட்டால் இது மாதிரி சம்பவங்கள் நடப்பதைத் தவிர்க்கலாம்.

– ஆமதாபாத் ரமா பாண்டுரங்கன்.

மடக்குவதில்லை! அடித்தாலும் அவர் களிடமே சரணடைகிறது! நாம் கோபமாகப் பேசினாலே முறுக்கிக் கொண்டு அவர்கள் வந்து மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறோமே! உடம்பு சரியில்லை என்றால் பெற்றோர் கொடுக்கும் உணவை குழந்தை சாப்பிடுகிறது. நாம் அதைக் கொடுமையான தண்டனை என்று குமுறுகிறோம். குழந்தை நடந்ததை வெகு சீக்கிரம் மறந்து போகிறது. நாம் காண்பவரிட மெல்லாம் சொல்லிப் புலம்புகிறோமே!''

''அப்போது துஷ்டையான மருமகளே இல்லை என்கிறாயா?''

''பொறுப்பற்ற பெற்றோர் மாதிரி!''

''சப்பைக்கட்டுக் கட்டாதே! இரண்டு கை தட்டினால்தானே ஓசை வரும்?'' என்றாள் என் தோழி கோபமாக.

''அவன் தட்டட்டும். நீ கையை மடக்கிக் கொள்ளலாமே! சப்தமெழுப்ப உன் கை துணை போக வேண்டாமே! கரைக்கு வரும் அலைகள்தான் ஓசை எழுப்புகின்றன. நடுக் கடல் அமைதியாக இருக்கும். கிளைகளும், இலைகளுமே சலசலக்கின்றன. அடி மரம் ஆடுவதில்லை!''

''என்னதான் சொல்லு. என் மாட்டுப் பெண் அதிர்ஷ்டக்காரி. அவன் 'பருத்தி' என்பதற்குள் மணி துணியாகவே நெய்து கொடுக்கிறான். ஒரு சோப்பு வாங்கித் தர இவர் என்ன பயம் பயந்திருக்கிறார், தெரி யுமா?'' மனத்தாங்கலோடு சொன்னாள் பார்வதம்.

''பழையது சாப்பிட நமக்குப் பிடிப்ப தில்லை. நொச நொசத்துப் போச்சு என்று ஒதுக்குகிறோம். கிழிந்த சாயம் போன புடவை களைக் கட்ட மறுக்கிறது மனசு. நம்முடைய டீ.வி. வாங்கி மூன்று ஆண்டுகளே ஆகியிருந்த போதிலும் புதிய டீ.வி.யைக் கண்டதும் மனசு மலர்கிறது. அப்படி இருக்க இருபது வருஷத்துக்கு முன் நடந்தவைகளை ஏன் அசைபோடுகிறாய்? நல்ல பிள்ளை கிடைத் திருக்கிறானே என்று சந்தோஷப்படு. பதி னைந்து ரூபாய் சின்னாளம் பட்டுக் கட்டின நமக்கு ஆயிரத்தை நூறு ரூபாய்க்குப் பட்டுப் புடவை எடுத்துக் கொடுத்திருக்கிறானே மகன் என்று பெருமைப்படு. புதிய பொருட்களால் வீட்டை அழகுபடுத்துவது போல புதிய சிந்தனைகளால் மனதை அலங்கரித்துக் கொள். ஒட்டடைகளையும், தூசிகளையும் தட்டி விடு. மனதிலிருக்கும் அழுக்குக் குப்பை களை புதிய எண்ணங்களெனும் துடைப்பம் கொண்டு தூய்மையாக்கு.

சரி, ஏராளமாய் நேரம் இருக்கிறது. நம்மோடு படித்தாளே, கௌரி... பக்கத்துத் தெருவுக்கு வந்திருக்கிறாள். ரொம்ப நாளாய் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறாள். வா, போய்ப் பார்ப்போம்'' என்று பர்வதத்தையும் அழைத் துக் கொண்டு கௌரி வீட்டிற்குப் போனேன்.

கதவு திறந்தே இருந்தது. அழுதழுது வீங்கி இருந்த கண்களோடு கௌரி எங்களை வரவேற்றாள்.

''அட, இவள் பார்வதம் இல்லையா? பார்த்து எத்தனை நாளாச்சு? பார்வதம் உன்

னைப் பற்றி அடிக்கடி பொன்னா சொல்வான். எப்படி இருக்கிறாய்? அதிர்ஷ்டம் செய்தவர்களுக்குத்தான் பிள்ளை - மருமகளோடு குடித்தனம் செய்யும் பாக்கியம் கிடைக்கும். கண் போடுகிறேன் என்று நினைக்காதே!" என்றான்.

வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டேன் நான்.

"அது சரி! உன் மாட்டுப் பெண் எங்கே?" என்றேன். ஒரு காகிதத்தை எடுத்து நீட்டினான். விவாகரத்து நோட்டீஸ்!

"ஏன் இப்படி?" திகைத்தேன்.

மறுபடி அழுதான். நானும், பார்வதமும் சமாதானப்படுத்தினோம்.

"அவளுக்கு என் பிள்ளையைப் பிடிக்கவில்லையாம்! இல்லாத, பொல்லாத பழியெல்லாம் சுமத்தி இருக்கிறாள். வேறே கலியாணம் பண்ணிக் கொள்ளப் போகிறாளாம்! மூணு மாசக் கருவைக் கலைச்சுட்டு வந்து நிற்கிறா. கலியாணத்துக்கு முன்னாலேயே யாரையோ..."

''சரி, விடு... அழகு, அழகு என்று அலைந்தாயே! பிறக்கப் போகும் வாரிசு தங்க விக்ரகமாட்டம் இருக்கணும் என்று எத்தனை பெண்களைக் கழித்திருப்பீர்கள்! இப்போ வாரிசே வேண்டாம் என்று அலம்பிக் கொண்டு வந்து விட்டாள். அழகு குணத்தில், பழகும் முறையில் இருக்கிறது. நல்ல பாம்பு படமெடுத்தால் அழகு. ரத்தினத்துக்காக அதன் வாயில கை விட்டால் உயிரை இழக்க வேண்டி வரும். சிங்கமும், புலியும் கூட டீ.வி.யில் பார்க்கும் போது அழகாகத்தான் இருக்கிறது. அதற்காக மடியில் வைத்துக் கொஞ்ச முடியுமா?''

"வாஸ்தவமான பேச்சு! முட்டிக் கொண்ட பிறகு குனிகிற ஜென்மம்! என் நாத்தனாரின் சம்பந்தி வந்து கேட்கிறாள். 'உன் பிள்ளை மலடாமே' என்று! நாலு பேர் கூடினால் இவன் பேச்சுத்தான்! வதந்'தி' என்று தெரியாமலா சொன்னார்கள்! அவனா நேரத்துக்குச் சாப்பிடுவதில்லை! தூங்குவதில்லை! ஆபீஸிலே சுசமுசா தாங்காமல் வேலையையும் ராஜினாமா பண்ணிட்டான்.

''நீ எவளையோ கட்டிக் கொண்டு நாசமாப் போ... விவாகரத்தோ, ஒரு மண்ணோ வேண்டாம்'' என்றால் அவர்கள் கேட்க மாட்டேனென்கிறார்கள். கோர்ட்டிலே நிறுத்தி இன்னும் என்னென்ன கேட்பார்களோ என்று இவன் கூசுகிறான். உங்களிடம் சொல்வதற்கென்ன! தற்கொலை செய்து கொண்டு விடுவானோ என்று பயமாக இருக்கிறது. சின்னக்குழந்தை மாதிரி பக்கத்தில் படுத்துக் கொள்கிறேன். முந்தானையால் அவனை முடிச்சுப் போட்டுக் கொள்கிறேன். இதையும் தப்பாகப் பேசுகிறாள் அந்தச் சிறுக்கி! நிம்மதியாய் தூங்கி ரொம்ப நாளாச்சு. கெட்ட கனவு வந்து 'பக் பக்'னு முழிச்சுக்கறேன்'' அழுதுகொண்டே சொன்னவன் கேவல் அதிகமாகவே நிறுத்தினான்.

''பழையபடி அவன் முகத்தில் சிரிப்பைப் பார்ப்பேனா? வம்சம் விளங்க இன்னொரு பெண்ணைக் கலியாணம் பண்ணிக்க சம்மதிப் பானா? மனசு சமாதானம் ஆக எத்தனை நாளாகுமோ? பொண்ணைக் கொடுக்கறவா முந்தின கல்யாணத்தைப் பத்தி ஆயிரம் கேள்வி கேட்பானே! அதுக்கும் விவாகரத்து ஆனாத்தான் கொடுப்பானாமே? ஈச்வரா! என்னெல்லாம் படப் போகிறேனோ'' என்று புலம்பிக் கொண்டிருந்தான் கௌரி.

"அடடா! மணி நாலாயிடுத்தா... கட்லெட் சாப்பிடணும் என்று பிள்ளைத்தாய்ச்சிப் பெண் சொல்லிக் கொண்டிருந்தா. நான் கிளம்பறேன். நீ வேணா கொஞ்ச நேரம் இருந்துட்டு வா'' என்று பார்வதம் எழுந்திருக்க நானும் எழுந்து கௌரிக்கு ஆறுதல் சொல்லி விட்டுக் கிளம்பினோம்.

# உங்கள் பிள்ளைகள் கல்லூரியில் அடியெடுத்து வைக்கிறார்களா?

ஒரு செடியை எடுத்து வேறிடத்தில் நடுவது போல, பதினான்கு வருடங்கள், பிறந்த வீடு போல் நினைத்துச் சுற்றிச் சுற்றி வந்த பள்ளியை விட்டு வெளியே வரும் மாணவர் கூட்டம் முற்றிலும் புதிதானதொரு சூழ்நிலையில் பொருந்திக் கொண்டு இருக்கும் நேரம் இது. கண்ணாடி போல் கையாளப்பட வேண்டிய டீன் ஏஜ். அறியாத முகங்கள். ராகிங் பயங்கள். பெற்றோரின் எதிர்பார்ப்பைப் பூர்த்தி செய்து சாதனை படைக்க வேண்டுமென்ற ஆதங்கம். இவ்வாறு பற்பல சிந்தனைகளுடன், புகுந்த வீடு செல்லும் புதுமணப் பெண்ணின் மனநிலையில்தான் அனைத்து மாணவ மாணவிகளும் உள்ளார்கள்.

அவர்கள் கல்லூரியில் இருக்கும் காலத்தில் ஏற்படும் அனுபவங்கள், அவர்களின் பிற்கால வாழ்விற்கு ஒரு அஸ்திவாரம் போல் அமைகிறதெனில் அது மிகையில்லை. ஏனென்றால், அதுவரை பெற்றோரால் வழி நடத்தப்பட்டு செயல்கள் புரிந்து வந்தவர்கள் சுயமாக நிறைய சிந்திக்க ஆரம்பிக்கிறார்கள். ஆழமான நட்பு வளர்த்துக் கொள்கிறார்கள். இன்னும் எத்தனையோ சொல்லலாம். இக் காலகட்டத்தில் பெற்றோரின் பங்கு மிகவும் அவசியம்.

சிறு வயதில் நம் குழந்தைகளின் வாழ்வின் மிக முக்கிய அங்கமாக விளங்கும் நாம், டீன் ஏஜிற்குக் குழந்தைகள் வரும் போது, கொஞ்சம் கொஞ்சமாய் விலகத் தொடங்கி விடுகிறோம் என்பதே உண்மை. ஆனால் அவர்கள் விலகிப் போவதாய் நினைத்துக் குற்றம்சாட்டுகிறோம். அவர்கள் விவரம் அறியாத வயதில் உள்ள போது, பெற்றோராய் மட்டுமின்றி, சிறந்த ஆசானாய், வழிகாட்டியாய் விளங்குபவர்கள், அவர்கள் பருவமடையும் போது, நல்ல தோழர்களாகவும் மாற வேண்டும். இந்த மாற்றங்கள் எப்போது ஏற்பட வேண்டும் என்பது நமக்கே புரியும். வயதிற்கு வருவது முதல் - இன்னும் வருடங்கள் முன்பாகவே பெண்கள் உடல் ரீதியாகவும், உணர்வுபூர்வமாகவும் வளரத் தொடங்கி விடுகிறார்கள். ஆண் குழந்தைகளும் தக்க பருவம் அடைந்து விட்டதைப் பறைசாற்ற, இதுபோல் ஒரு நிகழ்வு ஏற்படுவதில்லையே தவிர, அவர்களும் குறிப்பிட்ட வயதில், இத்தகைய உடல், மன மாறுதல்களுக்கு உட்படுகிறார்கள். சில குழந்தைகளிடம் உடலில் ஏற்படும் மாற்றங்கள் ஒருவித பயத்தை உண்டுபண்ணலாம். அவற்றை எல்லாம் நீக்குவது உங்கள் கடமை.



1. சிறு வயது முதலே

குழந்தையிடம் நிறையப் பேசுங்கள். அதன் லெவலில் இருந்து கொண்டு பேச வேண்டும்.

2. அவனுடைய நண்பர்கள் யார், அவனுக்கு எவை பிடிக்கும், பிடிக்காது என்று அறிந்து வைத்திருங்கள்.

3. பருவ வயதை நெருங்கும் குழந்தைகளிடம், அவர்கள் உடலில் ஏற்படக்கூடிய மாற்றங்கள் பற்றி அவர்களைக் கலவரப்படுத்தாது எடுத்துக் கூறுங்கள்.

4. "பெற்றோருடன் பேசப்படக் கூடாத விஷயம் இது" - என்று எதைப் பற்றியும் ஒரு நினைவு அவர்களுக்கு இருந்தால் முற்றும் அகற்றுங்கள்.

5. தினமும் குடும்ப அங்கத்தினர்கள் ஒரு அரைமணி நேரமாவது சேர்ந்து செலவிடுங்கள்.

6. தினம், "How was your day?" என்று குடும்பத்தினர் ஒருவரை ஒருவர் கேட்பதை வழக்கமாக்கிக் கொண்டால், அவரவர் அன்று தனக்கேற்பட்ட அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ள ஏதுவாகும். அனைத்து அங்கத்தினர்களும், இக்கேள்விக்குப் பதிலாக ஒரு சிறு செய்தியையாவது கூறுவது என வைத்துக் கொள்ள வேண்டும.

7. குழந்தைகள் ஒரு பிரச்னை என்று வரும் போது அது நமக்கு மிகவும் அற்பமானதாய்த் தோன்றினாலும், அலட்சியமாக நடந்து கொள்ளாதீர்கள்.

இப்படி வளரும் குழந்தைகள், பெரியவர்கள் ஆன பின்பும், தங்களுக்கு ஏற்படும் அனைத்துப் பிரச்னைகளை, தாமாகவே வந்து பெற்றோரிடம் விவாதிக்கிறார்கள். "என் அம்மாவிடம் இதையெல்லாம் பேசவே முடியாது" என்று சக தோழியரிடம் முணுமுணுப்பதில்லை. பள்ளியில் இருந்து கல்லூரிக்குள் நுழைவது அவர்களைத் திடீரென வளர்ந்தவர்களாக்குவதில்லை.

இது இரண்டும் கெட்டான் வயது. அவர்களால் குழந்தை போல் நடத்தப்படுவதை ரசிக்கவும் முடியாது. முதிர்ந்தவர் போல் வாழ்க்கையை அணுகவும் தெரியாது. இக் குழப்பங்கள் குழந்தைகளைப் பாதிக்காமல் இருக்க வேண்டுமாயின், அமைதியான வீடு அவசியம். வீடு அமைதிப் பூங்காவாக இருந்தால், கவனம் முழுதும் பாடத்தில் இருக்கும். மனத்தில் பெற்றோர் பற்றின எண்ணம் உயர்கிறது. வாழ்ந்தால் நம் பெற்றோர் போல் வாழ வேண்டும் என்ற உறுதி எழுகிறது. ஒரு நல்ல வாழ்க்கைக்குப் பாதை அமைத்த திருப்தி நமக்கும் ஏற்படுகிறது. தொட்டில் பழக்கம் - மணமான பின்னும் பிள்ளை, "அப்பா How was your day?" என்கிறான் ஆபீஸில் இருந்து வந்ததும் வராததுமாய். "தாத்தா, இன்று என்ன நியூஸ்?" பேரன் கேட்கிறான். 'எப்பவும் ஆபீஸ் நினைவுதான். பையன் என்னிடம் பேசுவதே இல்லை' என்று முதுமையில் நாமும் அங்கலாய்க்க வேண்டியதில்லை.

சரி, எல்லா வசதிகளும் சொந்த ஊரிலேயே இருந்து, வீட்டில் இருந்து கல்லூரி செல்லும் மாணவர்களுக்கு இவை அனைத்தும் கிடைக்கிறது. விடுதிகளில் தங்கிப் படிக்க வேண்டிய குழந்தைகள் நிலை? இந்த நிலையில் உள்ள பெற்றோர்தான் மேலும் கவனமுடன் இருக்க வேண்டும். பெரியவர்களின் (வீட்டுப் பெரியவர்கள்) நேரடிப் பார்வையில் மகனோ, மகளோ இல்லாத போது என்ன நடக்கும்? எதுவும் நடக்க வேண்டிய அவசியம் இல்லை, வளர்ப்பு சரியானதாய் இருந்தால்.

விடுதி வாழ்வு மாணவர்களுக்குப் பல



உங்கள் வீட்டு மழலை சொன்ன அம்மன் சுலோகங்களை டேப்பில் மாலையில் போட்டு விட்டால், விருந்தினர் கேட்க சந்தோஷமாக ஒன்பது நாளும் இருக்கும்.
— ஆர். சீதா

சுதந்திரங்களையும் அளித்து அதே நேரம் பல கட்டுப்பாடுகளையும் விதிக்கிறது. பெற்றோரிடம் மிகவும் பாசம் வைத்து, வீட்டுப் பறவைகளாய் வாழ்ந்த குழந்தைகள் விடுதியை நரகமாய் நினைக்கிறார்கள். (They feel hom-sick) இத் தற்காலிகப் பிரிவு அவர்களால் ஜீரணிக்கப்படக்கூடியதாய் இல்லை. அதனால், உணவு சரியில்லை, அது தவறு, இது தவறு என்று ஏதோ காரணம் கூறி, திரும்பி விட முயற்சி செய்கின்றனர். எந்த உணர்ச்சியையும் அளவாகப் பிரயோகம் செய்யக் கற்றுத் தாருங்கள். ஒரு நல்ல காரணத்திற்காக, விடுதியில் இருக்கிறோம். நம் இடத்தில் இந்த வசதி இல்லாததால், நம் எதிர்கால வாழ்வு வெளிச்சமாய் இருக்க வேண்டி இதைச் செய்கிறோம் என்று மனத்தில் மறுபடி மறுபடி சொல்லச் சொல்லுங்கள். சிறு தியானம், ஒழுங்கான வாழ்க்கை முறைகள், நல்ல தோழர்கள் அருகாமை இவற்றால் பெற்றோரைப் பிரிந்து வந்த வருத்தம் மறைந்து போகும். சீரான வாழ்விற்கு விடுதியில் இருப்பது உதவிதான் செய்யும். அநேகமாக ஆண்கள் இந்த உணர்வுத் தடுமாற்றங்களுக்கு (emotional disturbances) ஆளாவதில்லை. பெண்கள் இப்போதே இதைச் சரிசெய்து கொள்வது, வரப் போகும் மணவாழ்விற்கும் ஒரு முன்னோடி போல் அமைகிறது. பெண்களும் ஒரு நேரம் மணமாகி, கணவனுடன் செல்ல வேண்டியவர்கள் அல்லவா?

இதற்கு நேர்மாறாக, மிகவும் கட்டுப்பாடுகள் நிறைந்த குடும்பச் சூழலில் இருந்து விடுதிக்கு வருவோர், விடுதி தரும் சுதந்திரங்களை முழுதும் பயன்படுத்திக் கொள்கிறார்கள். ஒத்த எண்ணம் கொண்ட சக மாணவர்களுடன் ஒரு குழு அமைத்துக் கொள்கிறார்கள். இத் தோழர் குழாம் சரியாக அமையவில்லை எனில், சிகரெட், போதைப் பழக்கங்களுக்கு அடிமையாகும் அபாயம் நிறைய உண்டு. ஆண்களுக்குப் பெண்களை விட பய உணர்ச்சியும் குறைவு என்பதால், அதிகமாகப் பாதிக்கப்படுவதும் அவர்களே. இவை அனைத்திற்கும் மேலாக ஒரே அறையில் தங்கிப் பயிலும் மாணவர்கள், தன் வீட்டில் கிடைக்காத அன்பு, தோழமையை சக மாணவனிடம் காணும் போது, சில சமயங்களில் உடலாலும் இணைகிறார்கள். இவர்களை homo sexuals என்போம். எய்ட்ஸ் பற்றித் தீவிர பிரசாரம் நடைபெற்று வரும் நேரத்தில், இதன் ஆபத்துகள் பற்றிய விளக்கத்திற்கு அவசியமே இல்லை.

உங்கள் கல்லூரி செல்லும் மகன்/மகளின் தோழர்களை அறிமுகம் செய்து கொள்வது மிகவும் நல்லது. என்றேனும் ஒரு நாள் அவர்களை உங்கள் வீட்டில் கூடச் செய்து ஒரு சிறு விருந்து தரலாம். அவர்களுடன் ஒரு நண்பர் போலப் பழகுங்கள். இது உங்கள் மகனை மிகவும் மகிழ்ச்சிப்படுத்தும். மேலும், நமக்குள்ள அனுபவத்தால் நாம் நல்ல நண்பர்களை இனம் பிரித்தறிவோம் என்பது அவனுக்குத் தெரியுமாதலால், தன் நண்பர்களைத் தேர்ந்தெடுப்பதில் கவனமாக இருப்பான்.

இவை அனைத்தையும் மனத்தில் இருத்தி, குழந்தைகளைக் கல்லூரி வாழ்க்கைக்குத் தயார்ப்படுத்துங்கள். பெற்றோர் தராத ஒன்றை வேறு யாரோ குழந்தைக்குத் தருவது எங்ஙனம் சாத்தியம்? குழந்தைகள் சரியான பாதையில் செல்ல உதவ வேண்டியது நம் கடமை.

— ரஞ்ஜனி த்யாகு

## துயர்தீர்க்கும் யோகநரசிம்மர்

வருபவர் துயர்தீர்க்கும் யோகநரசிம்மர் - ஆஞ்சநேயர் - (சோளிங்கபுரம்) என்ற கட்டுரை மங்கையர் மலரில் பிரசுரமாகி இருந்தது.

தமது குறைகள், இன்னல்கள், கஷ்டங்கள் அனைத்தையும் நீக்கி, நலம் அனைத்தும் இறைவனே அருள வேண்டும் என பிரார்த்தித்து சோளிங்கபுரம் அருள்திரு யோகநரசிம்மர் இறைவனிடம் தஞ்சம் புகும் பக்தர்கள், படித்ததுமே மனநிறைவு பெறும் சுலோகம், கோயிலின் திருசுற்று (பிரகாரம்) ஒன்றில் எழுதப்பட்டிருக்கிறது.

*"ஸிம்ஹமுகே ரௌத்ர ரூபிண்யாம்*
*அபய ஹஸ்தாங்கித கருணாமூர்த்தே*
*ஸர்வ வியாபிதம் லோகரக்ஷகாம்*
*பாபவிமோசன துரித நிவாரணம்*
*லக்ஷ்மி கடாக்ஷ ஸர்வாபீஷ்டம்*
*அநேகம் தேஹி லக்ஷ்மி ந்ருஸிம்மா"*

# காசிக்கு 'வீசம்' கூட!

(ஐயனே! லக்ஷ்மி நரசிம்மப் பிரபோ! மிக பயங்கரமான உருவமும், சிங்கமுகமும் உடையவரே! கருணை நிரம்பியவரே! அபயம் அளிக்கும் கரத்தினை உடையவரே! உலகைக் காக்கும் பொருட்டு எங்கும் நிறைந்த பெருமானே! எங்களது பாவங்களை உடனடியாகக் களைந்து நலம் தருபவரே! எங்களது அனைத்து விருப்பங்களையும் நிறைவேற்ற அன்னை லக்ஷ்மியின் அருளை எங்களுக்குக் குறைவற அளித்தருளுங்கள்.)

இந்த சுலோகத்தைத் தினமும் பல தடவைகள் பாராயணம் செய்வதால் ஏற்படும் மன அமைதியும், இன்பமும் அனுபவத்தாலும், மனதாலும்தான் உணர முடியுமே தவிர, அவற்றை எழுத்தில் வடிக்க முடியாது.

**- ஆர். ஸ்வாமிநாதன்.**

மாசாணி அம்மனின் ஆலயச் சிறப்புக்களை படித்துப் பரவசமடைந்தேன். இந்த அம்மனைப் போலவே மதுரை மாவட்டம், திருமங்கலம் தாலுகா கள்ளிக்குடியில் இருந்து டி. கல்லுப்பட்டி செல்லும் சாலையில் காணாக்கேணி என்ற கிராமத்திலும் ஓர் சக்தி மிக்க பெண் தேவதை ஆலயம் உள்ளது. அநேகம் பேருக்குத் தெரியாது. ஆகாயம் நோக்கி மல்லாந்து படுத்தபடி மிகப் பிரம்மாண்டமான உருவில் இத் தெய்வத்தின் சிலை அமைந்துள்ளது.

**- ஆர். லீலா இராமச்சந்திரன்.**

சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூர் அருகில் பட்டமங்கலம் என்ற சிற்றூர், குருபகவானுக்கு விசேடமான ஸ்தலம். இந்த ஊரில் குரு பகவான் கிழக்கு முகமாக அமர்ந்து கார்த்திகை பெண்களுக்கு உபதேசம் செய்த திருத்தலம். குரு நிவர்த்திக்கு சிறப்பான ஸ்தலம்.


• சாந்த துர்க்கா

திருவிளையாடல் புராணத்தில் 33-வது அதிகாரத்தில் இவ் வரலாறு இடம்பெற்றுள்ளது. இங்குள்ள மிகப் பெரிய ஆலமரம் மிகவும் விசேஷமானது. வியாழக் கிழமையன்று ஆயிரக்கணக்கில் இத் திருத்தலத்திற்கு பக்தர்கள் வருகிறார்கள். இங்குள்ள அழகு சௌந்தரி என்ற திருப் பெயருடைய அம்மன் மிகவும் சக்திவாய்ந்தது.

**- ஒரு வாசகி.**



இந்த ஆலயத்தில் வழங்கப்படுகின்ற தீர்த்தமும், விபூதியும் அவ்வளவு மகிமை வாய்ந்தவை. தீராத நோயாளிகள், அம்மை நோய்க்கு ஆளானவர்கள், குழந்தைப்பேறு இல்லாதவர்கள், பில்லி சூனியத்தால் பாதிக்கப்பட்டோர், வஞ்சத்தால் வாழ்விழந்தோர் இப்படிப் பலர் இக் கோயிலில் வந்து நலம் பெறுகிறார்கள்.

நாங்கள் அங்கு போயிருந்த போது பிறந்த நாள் முதல் விழி திறக்காமல் இருக்கும் ஒரு சின்னஞ்சிறு குழந்தையை எடுத்து வந்திருந்தனர். அம்மனின் அருள், தீர்த்தம், விபூதியினால் கட்டாயம் கண் திறந்து விடும் என்பதைக் கேட்டு எங்கள் உடல் புல்லரித்தது.

தேர்த் திருவிழா இங்கு விமரிசையாக வாண வேடிக்கையுடன் கொண்டாடப்படுகிறது. கொடியேற்றியவுடன் பதிமூன்று நாட்கள் பூவோடு, அலங்காரப் பூஜைகள் நடக்கின்றன. பதினைந்தாவது நாள் பூர்ணத் திருத்தேர் விழா ஆரம்பம். திருக்கல்யாண நிகழ்ச்சியிலிருந்து தேர் மூன்று நாள் வலம் வந்து முடியும் வரை இசைக் கச்சேரிகள் நடைபெறும்.

– வி. மீனாட்சி

## அருளாட்சி புரியும் சூலக்கல் மாரியம்மன்

கோயம்புத்தூரிலிருந்து பொள்ளாச்சிக்கு செல்லும் பாதையில் 25 கிலோ மீட்டரில் வலதுகைப் பக்கம் சூலக்கல்லுக்கு செல்லும் பாதை பிரிகிறது. இந்த ஊர் வடக்கிபாளையம் புரவிபாளையம் என்ற ஊர்களுக்கு அருகே உள்ளது. சென்று வர பஸ் வசதி உண்டு. இங்கு உள்ள மாரியம்மன் கோவிலும் அதன் தேர்த் திருவிழாவும் மிகவும் பிரசித்தம்.

கமலின் "தேவர் மகன்" சினிமாவில் வரும் கோயில்தான் சூலக்கல் மாரியம்மன் கோயில்.



## மாங்கல்யம் தரும் மாப்பிள்ளை சுவாமி

இறைவன் திருவிளையாடல் புரிந்த பல திருத்தலங்களுள் ஒன்று திருவீழிமலை.

இத்தலம் மயிலாடுதுறையிலிருந்து திருவாரூருக்குச் செல்லும் இருப்புப் பாதையில் உள்ள பூந்தோட்டம் புகை வண்டி நிலையத்திலிருந்து மேற்கே 10 கி.மீ. தொலைவில் உள்ளது. திருவாரூர் கும்பகோணம் ஆகிய நகரங்களிலிருந்து பேருந்தில் செல்லலாம். திருக்கோயில் கிழக்கு நோக்கியது. இராஜகோபுர நுழைவாயிலைக் கடந்தவுடன் கோவிலுக்குப் பெருமை சேர்க்கும் வெளவால் நத்தி மண்டபம் எனப்படும் திருக் கல்யாண மண்டபம் உள்ளது.

இத்தலத்தில் சிவபிரான் திருநாமம் வீழியழகர், அம்பிகையின் திருநாமம் சுந்தர குஜாம்பிகை. திருவுலா மூர்த்தியாகிய "கல்யாண சுந்தரனார்" மகா மண்டபத்தின் தனி மண்டபத்தில் "மாப்பிள்ளை சுவாமியாக



* யம வாகனத்தில் ஈஸ்வரன்

உமையவளுடன் கல்யாண கோலத்தில் காட்சியளித்து அருள்பாலிக்கிறார்.

இத்தலம் காத்தியாயன முனிவர் பூஜித்த திருத்தலம். அம்பிகையே முனிவருக்குக் குழந்தையாகப் பிறந்து பரமனை மணந்த திருத்தலம். பின்பு திருமால், பிரமன், காத்தியாயன முனிவர் முதலியவர்கள் திருக்கோலத்தோடு என்றும் எழுந்தருள வேண்டும் என பிரார்த்தித்தனர். அதன்படி மணவாள கோலத்தோடு இன்றும் என்றும் யாவரும் காண வீற்றிருந்தருளுவாராயினர்.

இறைவன் உமையம்மையை மணம் புரிந்து கொண்ட தலம் என்பதற்கு ஏற்பக் கர்ப்ப கிருகத்தின் வாயிலில் அரசாணிக்கால் எனப் படும் தூணும் வெளியில் மகா மண்டபத்தில் பந்தற்கால் எனப்படும் தூணும் இன்றும் உள்ளது.

உமையம்மை இறைவனைத் திருமணம் புரிந்து கொள்ளத் தவம் இருந்து எண்ணம் ஈடேறப் பெற்ற தலம். ஆதலால் திருமணம் ஆகாத பெண்கள் இத்தலத்திற்கு வந்து கல்யாண சுந்தரேசுவரருக்கு மாலை அணிவித்து சுவாமி அம்பாளுக்கு அர்ச்சனை செய்து வழிபட்டால் மனசுக்கேற்ற சம்பந்தம் கூடி வரும் என்பது ஐதீகம்.

இத்தலம் பூ கைலாசம், கல்யாணபுரம், பஞ்சாக்ரபுரம், தெக்ஷிணகாசி, ஷண்மங்கள ஸ்தலம், சுவேத கானனம், ஆகாச நகரம், பனசாரண்யம், நேர்த்தரார்ப் பணபுரம், தேஜநீவனம் என பத்து திருநாமங்களை உடையது.

இத்தலத்தின் இறைவன் ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் முதலிய நாயன்மார்கள் மூவராலும் பாடப் பெற்ற இருபத்து மூன்று திருப்பதிகங்களை உடையது.

இத்தலத்தில் ஆண்டுதோறும் பிரம்மோற்சவம் சித்திரை மாதத்தில் மிருகசிரிஷ நக்ஷத்திரத்தில் துவஜா ரோகணமும், மக நக்ஷத்திரத்தில் திருக்கல்யாணமும் சித்திரை நக்ஷத்திரத்தில் தீர்த்தமும் நடைபெறுகின்றன. இதைத் தவிர சஷ்டி உற்சவம் 10 தினங்கள் திருவாதிரை உற்சவமும் நவராத்திரி உற்சவமும் நடைபெறுகின்றன.

திருமணத் தடை உடைய மணமாகாதவர்கள் இவ்வூர் கல்யாண சுந்தரரை வழிபட்டு மணவாழ்க்கை அடையலாமே!

– ஜெயா கணேசன்

## ஸ்ரீசாந்த துர்க்கா கோயில்

இந்த வருடம் கோடை விடுமுறையில் குடும்பத்துடன் கோவா மாநிலம் சென்று, அங்கு உறவினர் வீட்டில் தங்கி, பல கோயில்களுக்குச் சென்று தரிசனம் செய்து வந்தோம். கோவா மாநிலத்தில் இந்துக்களுக்கு மிகவும் பிரசித்தி பெற்றது "ஸ்ரீ சாந்த துர்க்கா கோயில்."

கோவா மாநிலத்தின் தலைநகரான பனாஜியிலிருந்து சுமார் பதினைந்து கிலோ மீட்டர் தொலைவில் தென்னந்தோப்புகளும்,

கலை உணர்வை வெளிப்படுத்த நவராத்திரி பண்டிகை சிறந்தது. உங்களிடம் உள்ள கிரியேட்டிவ் ஆர்ட்டை விதம் விதமாகக் கொலுவை அலங்கரிப்பதில் காண்பிக்கலாம். தினம் ஒரு புது டிசைன் 'ரங்கோலி' போட்டு பழகிக் கொள்ளலாம். நம் வீட்டிற்கு வருபவர்களுக்கு நாம் தரும் கண்ணாடி, சீப்பு, குங்குமச் சிமிழ் மற்றும் ரவிக்கைத் துணி முதலானவற்றை அழகாக பேக் செய்து கலைஉணர்வுடன் அளிக்கலாம். பொருட்களும் வாழைப்பழம், சுண்டல் முதலானவற்றுடன் படாமல் பாதுகாப்பாக இருக்கும். இசைக் கல்வியும், நவராத்திரி சமயம் நன்கு பயன்படும். ஒவ்வொருவர் வீட்டு பொம்மை ஒவ்வொரு பிரதேசத்தில் இருந்து வாங்கி இருப்பதால் கைவினைப் பொருட்கள் பற்றிய பொது அறிவும் வளரும். சமூக மேம்பாட்டிற்கும், கலாசாரம் சிறப்பதற்கும் நவராத்திரி உதவுகிறது.

– ஜெயஸ்ரீ



கமுகு மரங்களும் சூழ்ந்து எழில் கொழிக்கும் 'ஹால்லம்' ஊர் உள்ளது. இத்தலத்தில் "ஸ்ரீ சாந்ததுர்க்கா" கோயில் ஒன்று உள்ளது. புராணச் சிறப்புகள் உடையது. சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன்னர் இக் கோயில் கட்டப்பட்டதாம். தினமும் பூஜைகள் நடைபெற்று வருகின்றன.

சாந்தரூபியாக திருக் காட்சி தருவதால் துர்க்கா தேவிக்கு, "ஸ்ரீசாந்த துர்க்கா" என திருநாமம் அமைந்ததாம். கருவறையில் முகத்தில் சாந்தம் தவழ, புன்சிரிப்புடன் திருக்காட்சி தருகிறாள். அருள் ததும்பும் திருமுகம் கண்கொள்ளாக் காட்சி பக்தர்க்கு.

கோவா மாநில இந்துக்களுக்குக் கண் கண்ட தெய்வமாக, "ஸ்ரீசாந்ததுர்க்கா" விளங்கு கிறாள். பக்தர்கள் இங்கு வந்து துர்க்காவை வழிபட்டு அருள்பெறுகின்றனர். வேண்டுதல் களை அருள்கூர்ந்து நிறைவேற்றி வைக்கும் சக்திவாய்ந்த, "ஸ்ரீசாந்த துர்க்கா" எனப் போற் றிப் புகழ்கிறார்கள். கோவா மாநிலத்திற்கு வரும் சுற்றுலாப் பயணிகள், இந்த ஸ்ரீசாந்த துர்க்கா கோயிலுக்குத் தவறாது வந்து வழி பட்டு துர்க்கா தேவியின் அருள்பெறுகிறார்கள்.

– *ரமா ராமநாதன்.*

## காசிக்கு வீசம் கூட!

ஒவ்வொருவரும் தமது வாழ்நாளில் ஒருமுறையாவது காசி க்ஷேத்திரத்திற்குச் சென்று, கங்கையில் நீராடி, அங்கு கோயில் கொண்டுள்ள காசி விசுவநாதர், விசாலாட்சி, பைரவர் இவர்களைத் தரிசித்தால் அவரவர் செய்த பாவங்கள் நீங்கி, நற்கதி அடைவர் என்று புராணங்கள் கூறுகின்றன.

*காசி நகர் ஆறு க்ஷேத்ரங்கள் –*
*ச்வேதாரண்யம் பஞ்சநதம் கௌரீ*
*மாயூரம் அர்ஜுனம்சாயா வனஞ்ச*
*ஸ்ரீ வாஞ்சியம் காசீ க்ஷேத்ர ஸமானி ஷட்.*

தமிழாக்கம்

*திருவெண்காடும் திருவையாறும்*
*திருமயிலாடுதுறையோடும்*
*திருவிடைமருதும் திருச்சாயக்காடும்*
*திருவாஞ்சியமும் இவையாறும்*
*காசி நகர் ஆகுமென*
*பேசுமே பலபுராணம்*
*ஈசனார் வாஞ்சேசர் இதனினுள்*
*நேசமாய் உறைந்தது மேலவாம்.*

"காசிக்கு வீசம் கூட" என்ற பழமொழி யுடன் உள்ள தலம் தமிழ்நாட்டிலேயே உள்ளது. காவிரிக் கரையிலுள்ள ஆறு தலங்கள் காசிக்கு ஒப்பானவை; அவைகளுள் காசிக்கு மேற்பட்டது ஸ்ரீ வாஞ்சியம் என்னும் தலம் என்பதாக பரமேஸ்வரனே பார்வதிக்குக் கூறியதாக பிரம்மாண்ட புராணம் தெரிவிக் கிறது.

காவிரியின் வடகரையில் 63-ம் தென்கரை யில் 127-ம் ஆக, 190 சிவாலயங்களைக் கொண்டது. தென்கரையில் 70-வது தலமாக அமைந்திருப்பது தஞ்சாவூர் மாவட்டத்தி லுள்ள "ஸ்ரீ வாஞ்சியம்."

இத்தலத்திற்கு மற்றொரு சிறப்பும் உண்டு. தமிழ்நாட்டில் எல்லாத் தேவதைகளுக்கும் கோயில்கள் இருக்கிறது. ஆனால் காலதேவ னாகிய எமதர்ம ராஜனுக்கும் ஒரு கோயில் இருக்கும் ஒரே தலம்தான் "ஸ்ரீ வாஞ்சியம்."

இது, நன்னிலம் – குடவாசல் பஸ் ரூட்டில் நான்கு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. நன்னிலம் – கும்பகோணம் பஸ் ரூட்டில் மூன்று கிலோ மீட்டர் தொலைவிலுள்ள அச்சுதமங்கலம் கிராமத்தில் இறங்கி, தெற்கே ஒரு கிலோ மீட்டர் நடந்தால் ஸ்ரீவாஞ்சியம் அடையலாம்.

ஸ்ரீதேவியான லட்சுமி, ஸ்ரீமந்நாராயண னைப் பிரிந்து, வருந்தி வடமேற்கு மூலையில் தவம் செய்வதாயும், அதுபோன்றே நாராயணனும், மேற்கிலுள்ள நாராயணாஸ் ரமம் (நாரணமங்கலம்) என்ற தலத்தில் தவமிருப்பதாயும், இத்தலங்களுக்கு இரங்கி, பரமேஸ்வரன் அருள்செய்து இருவரையும் சேர்த்து வைத்ததால் (ஸ்ரீதேவியிடம் கொண்ட கருணையினால் (வாஞ்சையினால்) ஸ்ரீமந்நாரா யணனுடன் சேர்த்து வைத்ததால்) ஈஸ்வர னுக்கு, 'ஸ்ரீவாஞ்சிநாதர்' என்ற பெயர் ஏற்பட் டது.

நான்முகன், திருமால் - இருவரும் முறையே படைத்தல், காத்தல் ஆகிய தொழில் களைப் புரியும் திறமையை இங்கு பெற்றனர்.

கௌதமர், ஜமதக்னி, காசியபர், அத்ரி, விசுவாமித்திரர், பரத்வாஜர், வசிஷ்டர், பராசரர், வால்மீகி, மகுடவர்த்தன அரசன், வீரதனுஸ் என்கிற சோழ தேசத்து அரசன், கிருஷ்ணன், லக்ஷ்மி, இந்திரன், விருக்ஷி, அவன் மனைவி சாருமதி முதலியோர் இத்தலத் திலுள்ள வாஞ்சேசரை வழிபட்டு தாங்கள் விரும்பியவற்றை அடையப் பெற்று மகிழ்ந்தனர்.

இந்த க்ஷேத்திரம் மகிமை பற்றி, ஸ்காந்த புராணம், பிரம்மாண்ட புராணம், ஸாங்போப புராணம், ஆக்னேய புராணம் முதலியவை களில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

மூவர் தேவாரமும் பெற்றது. மாணிக்கவாச கரால் நாவாரப் பாடப் பெற்றது. அருணகிரி நாதரது இசைப் புகழும் இயைந்தது. வடலூர் ராமலிங்க அடிகளாலும் பாடப் பெற்ற தலம்.

தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள பெரிய கோயில்களுள் இது ஒன்று. 558 அடி நீளம், 320 அடி அகலம் கொண்ட இக்கோயில் மூன்று கோபுரங்கள், மூன்று விமானங்கள், மூன்று பிரகாரங்களுடன் வானளாவி நிற்கிறது.

ஐந்து நிலை ராஜகோபுரத்தைத் தாண்டி யதும் நாம் முதலில் காணுவது யமதர்ம ராஜர் தான். இடதுபுறம் தனிச் சந்நிதியில் தெற்கு நோக்கி தனது எருமை வாகனம் இன்றி, உட்கார்ந்த கோலத்தில், பக்கத்தில் தனது கணக்கர் சித்ரகுப்தரோடு காட்சியளிக்கிறார். முதலில் இவரை வணங்கிய பிறகே, மற்றவர் களை தரிசிக்க வேண்டும் என்பது இங்குள்ள நியதி. சித்ரகுப்தருக்கு காஞ்சிபுரத்தில் தனிக் கோயில் உள்ளது. ஆனால் யமதர்மராஜா வுக்கு தனிச் சந்நிதி அமைந்திருக்கும் தலம் தமிழ்நாட்டில் இது ஒன்றுதான்.

பிற உயிர்களைக் கவர்வதால் தனக்கு உண்டாகும் பாவங்களைப் போக்கிக் கொள்ள விரும்பிய யமதர்மராஜன், பல க்ஷேத்திரங் களுக்குச் சென்று, தனக்கு ஒரு இடம் கேட்க, யாரும் அவனுக்கு இடம்கொடுக்க முன்வர வில்லை. கடைசியில் திருவாரூரில் கோயில் கொண்டிருக்கும் தியாகேசனைக் கேட்டான். அவர், அவனுக்குத் தகுதியான இடம் ஸ்ரீவாஞ்சியம் க்ஷேத்திரம்தான் என்றும், அங்கு சென்று தங்கியிருக்கச் சொல்லவே, யமதர்ம ராஜன் ஸ்ரீவாஞ்சியம் க்ஷேத்திரத்தை அடைந்து அங்கு தங்கி சிவபிரானை பூஜித்து வரலானான்.

உயிர்கள் யாவற்றுக்கும் உடலை விட்டுப் பிரியும் போது யமவாதனை, பைரவர் வாதனை ஆகிய இரண்டும் இருக்கக் கூடாது என்ற நிபந்தனையுடன், யமதர்மராஜனை இத்தலத்தில் இருக்க ஸ்ரீவாஞ்சிநாதர் ஒப்புக் கொண்டு, யமதர்மராஜனை இங்கு தனது வாகனமாகவும் ஏற்றுக் கொண்டார். இதனால், இத்தலம் காசியிலும் மேலான தாகும். கடைசி காலத்தைக் கழித்து இறப்பதற் காகவே, பல வயோதிகர்கள் இங்கு வந்து தங்கி வாஞ்சிநாதரை வழிபடுவதும் வழக்க மாய் இருந்து வருகிறது.

யமனுக்குத் தமிழ்நாட்டில் யாரும் தனியாக

வழிபாடு செய்வதாகத் தெரியவில்லை. ஆனால் வடநாட்டினர் கொண்டாடும் தீபாவளிப் பண்டிகையில் ஐந்தாவது நாள் யம பூஜை செய்து முடிக்கிறார்கள்.

ராஜகோபுரத்துக்கு வடபுறம் அமைந்திருப்பது குப்த கங்கை. தமிழ்நாட்டிலுள்ள பெரிய கோயில் திருக்குளங்களுள் ஒன்று. 440 அடி நீளம், 168 அடி அகலம்.

கங்கா பாகிரதி, ஸ்ரீகாசி விஸ்வநாதரிடம், "உலகோர், பாவங்களை கங்கையில் மூழ்கி என்னிடம் விடுவதால் அவைகளைத் தாங்க என்னால் முடியவில்லை" என்று முறையிட, ஸ்ரீவிஸ்வநாதர், "கங்கையே' 'பூகைலாஸம்' என்று தக்ஷிணை தேசத்தில், காவிரிக்குத் தென்பால் ஒரு தலம் உள்ளது. அதற்கு முனிதீர்த்தம் என்றும் பெயர். நீ அங்கு போய் ரகசியமாக (குப்தமாக) இருப்பாயாக. அப்போது உனது பாவங்கள் நீங்கும். அடியார்கள் வந்து நீராடும் போது அவர்களது பாவமும் நீங்கும்; ஆனால் அது உன்னைத் தீண்டாது" என்று அனுக்கிரஹித்தார்.

உடனே, கங்காதேவியானவள், தன்னிடமுள்ள ஆயிரம் கலைகளோடு புறப்பட, ஸ்ரீவிஸ்வநாதர், "எல்லா கலைகளையும் நீ எடுத்துக் கொண்டு போனால், இங்கு நதி மட்டும்தானே இருக்கும்" என்று கூற, கங்கையும் ஒரு கலையை மட்டும் காசியில் வைத்துவிட்டு, தொள்ளாயிரத்து தொண்ணூற்று ஒன்பது கலைகளுடன் ஸ்ரீவாஞ்சியத்தில் வந்து வஸிப்பதாகப் புராணம் கூறுகிறது.



**கொலு பார்க்க வரும் குழந்தைகளுக்கு கொழுக்கட்டை சுண்டல் செய்து தரலாமே? கொழுக்கட்டை மாவில் பூரணத்திற்கு பதில் ஒரு ஸ்பூன் சுண்டலை வைத்து மூடி ஆவியில் வைத்து எடுக்க வேண்டும். குழந்தைகள் விரும்பிச் சாப்பிடுவார்கள்.**

**- மஞ்சுளா ராமசாமி.**

இத்தலத்தில் நீராடும் சமயம், காசி, ராமேஸ்வரம், மகாமகம் முதலிய தீர்த்தங்களில் நீராடிய பலனை இங்கே அன்றைய தினம் அடைந்து விடலாம் என்றும் புராணம் கூறுகிறது.

காசியபர் முதலான முனிவர்கள், கலி தோஷத்துக்கு அஞ்சி இத்தலத்தை அடைந்து, இங்கு நீராடி கடுந்தவம் செய்து, வேண்டிய வரங்களைப் பெற்றமையால், இது இந்த கலியுகத்தில் 'முனிதீர்த்தம்' எனப் பெயர் பெற்றிருக்கிறது. முந்திய யுகங்களில் இது முறையே, தூய புஷ்கரணி, அத்திரி தீர்த்தம், பராசர தீர்த்தம் என்ற பெயர்களுடன் விளங்கியதாம்.

தங்களது பாவங்களைப் போக்கிக் கொள்ள ஏராளமான பக்தர்கள் கார்த்திகை ஞாயிற்றுக் கிழமைகளில் இங்கு வந்து நீராடி யமதர்மராஜனையும், வாஞ்சிநாதரையும் தரிசித்து வணங்குவது வழக்கமாய் இருந்து வருகிறது.

குப்த கங்கையில் நீராடுமுன், கரையிலுள்ள கங்கைக் கரை பிள்ளையாரை வணங்க வேண்டும்.

ஆதிகல்பத்தில் சிவபெருமானது இடது பக்கத்தில் தோன்றிய மகாவிஷ்ணு, உலகைக் காப்பாற்ற ஆற்றல் பெறவேண்டி இத்தலத்தை அடைந்து, சிவபெருமானைக் குறித்து கொடிய தவம் செய்து வந்தார். பல காலம் தவம் செய்தும் சிவபெருமான் பிரத்யட்சமாகவில்லை. வருந்திய மகாவிஷ்ணு, தனது தலையை அறுத்து அக்னியில் எறிய விரும்பிய பொழுது, சிவபெருமான் சுயம்பூதமான லிங்கவடிவில் தோன்ற, "எனக்கு இப்புவியைக் காக்கும் திறமை அளிக்க வேண்டும்" என்று வேண்டினார் மகாவிஷ்ணு.

"முன்பு பிரளய காலத்தில் வேதங்களெல்லாம் என்னை வந்து அடைந்தன. அவ்வேதங்களிலிருந்து உலகம் காக்கும் திறனறியலாம். ஆகையால், காக்கும் விஷயங்களைக் கூறும் வேதத்தை என்னிடமிருந்து கைக்கொள்வாய்" என்று சிவபெருமான் உபதேசம் செய்தார். அவ்விதமே மகாவிஷ்ணு, சிவபெருமானிடமிருந்து, வேதத்தின் பொருளையும், காக்கும் தொழிலையும் கற்றறிந்து, "இக்கலியுகத்தில் பிராணிகளுக்கெல்லாம் நன்மை விளைவிக்க வேண்டி, இங்கேயே லிங்கவடிவினராய் இருக்க வேண்டும்" என்றும் வேண்டிக் கொண்டார். இவ்விதம் சுயம்புலிங்க வடி

வினராய் தோன்றியவர்தான் மூலவர் ஸ்ரீவாஞ்சிநாதர்.

பெரிய லிங்க வடிவிலுள்ள வாஞ்சிநாதர் கிருதயுகத்தில் ரத்தினமயமாகவும், திரேதா யுகத்தில் பொன்மயமாகவும், துவாபரயுகத்தில் வெள்ளிமயமாகவும், இந்தக் கலியுகத்தில் சிவரூபியாகவும் விளங்குவதாகச் சொல்லப் படுகிறது.

இரண்டாவது கோபுரம் தாண்டியதும் அருள்பாலிக்கிறாள் "மங்கள நாயகி". இதர பெயர்கள் : 'வாழ வந்த நாயகி', 'பாக்கிய நாயகி'. இவள் மீதுள்ள 'மங்களாம்பிகை பிள்ளைத் தமிழ்' என்னும் இலக்கியம் சிவராமசுந்தரம் என்பவரால் இயற்றப்பட்டது.

சங்கீத மும்மூர்த்திகளுள் ஒருவரான ஸ்ரீமுத்துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்ரீ வாஞ்சிநாதர் பற்றியும், ஸ்ரீ மங்களாம்பாள் பற்றியும் கீர்த்தனைகள் இயற்றியுள்ளார்.

ஸ்ரீவாஞ்சிநாதம் பஜேஹம் ஸ்ரீ மங்களாம்பா ஸமேதம் (ஸுரடி ராகம்) என்ற கீர்த்தனையில், ஸ்ரீவாஞ்சிநாதரைப் போற்றுகிறார். "சகலபாக் கியங்களையும் தரவல்லதான காசி க்ஷேத் திரத்தை விட அதிக மகிமை உடையவர். சந்திரன், சூரியன், அக்னி இவர்களை மூன்று நேத்திரங்களாகக் கொண்டவர். ஸம்ஸார ஸாகரத்தைக் கடக்க ஒரு மரக்கலம் போன் றவர்" என்றெல்லாம் போற்றுகிறார்.

மங்களாம்பாயை நமஸ்தே (மாளவ ஸ்ரீராகம்) என்ற கீர்த்தனையில், அம்பாளைத் துதிக்கிறார். வாஞ்சிநாதருடைய சக்தியின் காரணமானவள். ஈசனை விடாது பூஜிப்பவள்; மகாலக்ஷ்மி முதலியோர் துதிக்கும் பரமசிவ நாயகி" என்றெல்லாம் துதித்து வணங்குகிறார்.

இத்தலத்தில் மரணம் அடையும் அனைத்து ஜீவராசிகளுக்கும் ஸ்ரீவாஞ்சிநாதர், வலது செவியில் 'பிரணவோபதேசம்' செய்து மறுபிறவியில்லாமல் தன்னையே ஐக்கியப் படுத்திக் கொள்கிறார் என்று சொல்லப்பட் டுள்ளது. இங்கு யமதர்மரும், பைரவரும் அமர்ந்த நிலையில் தவம் செய்வதை நாம் காணலாம்.

இவ்வாலயத்தில் நவக்கிரகங்களுக்கு தனிச் சந்நிதி கிடையாது. இங்கு எல்லா பெருமை களும் வாஞ்சிநாதருக்கே உரியது. கோஷ்ட துர்கை தவிர தனிச் சந்நிதியில் இடம் பெற்றுள்ள அஷ்டபுஜ துர்க்கை விசேஷம் பெற்றவள். இங்கு விருட்சம் 'சந்தன மரம்'.

முக்கியமான உற்சவங்களும், மாசி மகம் சுவாமிக்கும், ஆடிப்பூரம் அம்பாளுக்கும், கார்த்திகை ஞாயிறு முருகனுக்கும் நடைபெறு கிறது. உற்சவ மத்தியில் தீர்த்தோற்சவம் பொதுவாக எந்த ஆலயத்திலும் நடைபெறு வது இல்லை. ஆனால் இங்கு மாசி மக உற்சவத்தில் பரணி நட்சத்திரத்தில் (உற்சவ மத்தியில்) தீர்த்தோற்சவம் நடைபெறுகிறது.

மக உத்ஸவத்தன்று இரண்டாம் நாளான பரணி அன்று, யமனையே வாகனமாகக் கொண்டு ஸ்ரீவாஞ்சிநாதர் தென்கிழக்கு மூலையில் உள்ள 'யம தீர்த்தத்தில்' தீர்த்தம் கொடுப்பதும் தொன்றுதொட்டு நடந்து வருகிறது. தவிர, ஊரைச் சுற்றி 'நாரத தீர்த்தம்', 'அக்னி தீர்த்தம்', 'லக்ஷ்மி தீர்த்தம்', கைலாஸ தீர்த்தம் முதலிய தீர்த்தங்களோடு பிரதான தீர்த்தமான 'குப்த கங்கை'யும் அமைந்துள்ளது. எல்லா புண்யகாலத்திலும் முறைப்படி நீராடி, சிவபெருமானின் அனுக்ரஹத்தை அடைந்த புண்ணியவான்கள் எண்ணிலடங்கார். கார்த்திகை மாதம் பிரம்மோற்சவத்தில் ஐந்து ஞாயிற்றுக் கிழமைகளிலும் புலர்வதற்கு முன் ஸ்வாமி தீர்த்தம் கொடுப்பதும் அதில் நீராடு பவர்கள் பஞ்சமாபாதகங்களில் இருந்தும் விடுபடுகிறார்கள் என்பதும் ஐதீகம்.

இவ்விதம் தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகிய மூன்றாலும் பெருமை மிக்கதும் காசிக்கு வீசம் கூட உள்ளதுமானது மங்களநாயகி ஸமேத ஸ்ரீ வாஞ்சிநாத சுவாமி கோயில்.

– என்.வி.ஆர். ஸ்வாமி

# அன்றாடப் பிரச்னைக்குத் தீர்வு!

பள்ளிக்குப் போகும் குழந்தைகள் இருக்கும் வீட்டில் அநேக தாய்மார்கள் மண்டையை உடைத்துக் கொள்ளும் ஒரு விஷயம் ஸ்நாக்ஸ் என்ன வைப்பது. குழம்பி அலுத்துப் போய் கடைசியில் டப்பாவை நிறைக்கும் சமாச்சாரம் மார்க்கெட்டில் விதம்விதமான ப்ராண்டில் வரும் பிஸ்கட்ஸ் அல்லது அதிக எண்ணெயினால் 'கரகர' வென்று இருக்கும் சிப்ஸ் வகைகள். இது வேலையை சுலபமாக்கினாலும் இதனால் குழந்தைகளுக்கு உடம்பில் போய் சேர்வது என்ன? ஒன்றுமில்லை. 'ஸ்நாக்ஸ்' என்று நேரம் தரப்படுவதே குழந்தைகளுக்கு மேற்கொண்டு பாடத்தை கவனிக்கத் தேவையான சக்தி கிடைக்க சிறிய சத்துணவு வயிற்றில் செல்ல வேண்டும் என்பதே. ஆனால் நடப்பதோ வேறு. இந்த பிஸ்கட்டினால் அநேகம் குழந்தைகளுக்கு மலச்சிக்கல் உருவாகிறது. குழந்தைகளுக்குத் தேவையான எனர்ஜி இதில் எல்லாம் கிடைப்பது இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

நான் இதெல்லாம் ஆலோசித்து என் குழந்தைகளுக்கு ஒரு புதுமையான திட்டத்தை கொண்டு வந்து உள்ளேன். என் குழந்தைகளும் இதனை வெகுவாக வரவேற்கிறார்கள் என்பது சந்தோஷமான விஷயம். மேலும் ஆசிரியர்களின் பாராட்டையும் பெற்றுள்ளேன். தாங்களும் இத் திட்டத்தை முயற்சித்துப் பாருங்களேன். நல்ல சத்தான பொருட்கள் குழந்தைகள் உடம்பில் சேருகின்றன என்று பார்க்கும் போது, செய்யும் சிரமம் ஒன்றும் பெரிதல்ல.

நாளொரு ஸ்நாக்ஸ் என்ற முறையில் பார்ப்போம்.

**திங்கள் – பேல்பூரி**

துருவிய கேரட், பொடியாக நறுக்கிய வெள்ளரித் துண்டுகள் (துருவ வேண்டாம்; நீர் விட்டுக் கொள்ளும்) பொடியாய் நறுக்கிய தக்காளி, வெங்காயம், சிறிது கொத்துமல்லி தழை. இவைகள் அனைத்தையும் அவரவர் டேஸ்ட்படி கூட்டி, குறைத்து, ஒன்றாய்க் கலந்து, ஸ்நாக்ஸ் டப்பாவில் போட்டு மேலாக சிறிது உப்பு தூவவும். நூறு கிராம் அளவு பிடிக்கிற சிறிய பாலிதீன் கவரில் பொரியைப் பேக் பண்ணி, தனியே கொடுக்கவும். வகுப்பில் சாப்பிடுவதற்கு முன்பு காய்கறித் துண்டுகளையும், பொரியையும் மிக்ஸ் பண்ணி சாப்பிடலாம்.

நீ எதைக் குறித்து சிரிக்கிறாயோ அது உன்னை யாரென்று மிகச் சரியாக அடையாளம் காட்டி விடும்!
— கரே; தகவல் : பி. ராஜசேகரன்

## செவ்வாய் – பட்டாணி சாட்

பச்சைப் பட்டாணியை வேகவைத்துக் கொள்ளவும். காய்ந்த பட்டாணி என்றால் முதல் நாளே ஊறவைக்கவும். அரை வெங்காயம் எடுத்து பொடியாக நறுக்கி, சிறிது எண்ணெய் விட்டு வதக்கவும். பிறகு பாதி தக்காளியை அதனுடன் சேர்த்து வதக்கி, சீரகப் பொடி, உப்புப் போட்டு வேகவைத்த பட்டாணியை கலந்து, சிறிது நேரம் வதக்கி எடுக்கவும். கொத்துமல்லி தழை தூவி, அலங்காரமாய் ஸ்நாக்ஸ் டப்பாவில் கொடுத்தனுப்பலாம்.

## புதன் – முளைப்பயறு சாலட்

முளைகட்டிய பச்சைப் பயறுடன், துருவிய கேரட், பொடியாக நறுக்கிய கொத்துமல்லி கலந்து எலுமிச்சம் பழம் பிழிந்து உப்புப் போட்டு கலந்து வைக்கவும். எலுமிச்சம் பழம் பிடிக்காதவர்கள் தக்காளி சேர்த்துக் கொள்ளலாம்.

## வியாழன் – மசால் கடலை

நிலக்கடலையை முதல் நாள் இரவே ஊறவைத்து காலையில் உப்புப் போட்டு வேகவைத்துக் கொள்ளவும். பொடியாக நறுக்கிய வெங்காயம், தக்காளி, கொத்து மல்லித் தழை, துருவிய கேரட், உப்பு எல்லா வற்றையும் கலந்து வேகவைத்த கடலையையும் சேர்த்துக் கொள்ளவும். காரம் தேவையெனில் மிளகுப் பொடி கலக்கலாம். எந்த நவதானியத் துடனும் இதுபோல் செய்து கொடுக்கலாம். விருப்பப்பட்ட எந்த காயும் சேர்க்கலாம். ஆனால் பச்சையாக.

## வெள்ளி – பிரட் சாண்ட்விச்

ரவுண்டாக மெல்லியதாக நறுக்கிய வெள்ளரி, காரட், தக்காளி, வெங்காயத் துண்டுகள், பிரட்டின் இருபுறமும் வெண்ணெய் தடவி விட்டு நடுவில் இந்த நறுக்கிய காய்கறிகளை பரவலாக வைத்து அழுத்தி மூடி கத்தியால் நான்கு சதுர துண்டுகளாக வெட்டி வைக்கவும். மாறுதலுக்கு கொத்துமல்லி ஒரு புறமும் வெண்ணெய் ஒரு புறமும் தடவி நடுவில் காய்கறித் துண்டுகளை வைக்கலாம். சட்னிக்கு கொத்துமல்லித் தழை, சிறிது தேங்காய், பச்சை மிளகாய் காரத்திற்கு ஏற்ப, உப்பு வைத்து அரைக்கவும். கொத்துமல்லி டேஸ்ட் பிடிக்காதவர்கள் தக்காளி சட்னியை தடவலாம். வெண்ணெய்க்கு பதிலாக தேனை தடவி ஆப்பிள் அல்லது வாழைப்பழத்தை நறுக்கியும் வைக்கலாம்.

ஒருவேளை காலை நேரத்தில் இவையெல்லாம் செய்வது கஷ்டம் என்று நினைப்பவர்கள் மாலையில் குழந்தைகள் பள்ளிக்கூடம் விட்டு வந்தவுடன் டிபனுக்கு பதிலாக இது போல செய்து கொடுக்கலாம்.

— எம். பாரதி

# நியூஸ் ஸாலட்

ஸ்ரீலங்காவில் எமர்ஜென்ஸி அறிவிக்கப்பட்டுள்ளது. "பொதுமக்கள் பாதுகாப்புக்காகவும், அடிப்படை சேவைகளை சீராக அமல்படுத்தவும்" என்று இந்த நெருக்கடி நிலைப் பிரகடனத்துக்கு அரசு காரணம் கூறினாலும், ஆகஸ்ட் இறுதியில் நடக்கவிருந்த உள்ளூர் தேர்தலை ஒத்திப் போடவே இந்த திடீர் அறிவிப்பு என்று பலர் கருதுகிறார்கள். ஏற்கெனவே தமிழர்கள் அதிகமுள்ள தெற்குப் பகுதிகளில் நெருக்கடி நிலைச் சட்டம் நடைமுறையில் இருக்கிறது என்றாலும், முழு நாட்டுக்கும் இது தற்போது அனுசரிக்கப்படுகிறது.

சென்னைக் கல்லூரி மாணவி சரிகா ஷா ஈவ்டீஸிங் காரணமாக இறந்தது தொடர்பாக சில கல்லூரி மாணவர்கள் உட்பட ஒன்பது பேர் கைது செய்யப்பட்டனர். இவர்களது ஜாமீன் மனுக்களை நீதிமன்றம் தொடர்ந்து நிராகரித்து வருகிறது. சரிகா ஷாவின் இறப்புக்குப் பிறகு ஈவ் டீஸிங் குற்றத்தில் ஈடுபடுபவர்களுக்கான தண்டனை கடுமையாக்கப்பட்டிருக்கிறது.

• வி.ஐ.பிக்கள் செலுத்தும் மரியாதை



குடியரசுத் தலைவர், ஆளுனர்கள், பாராளுமன்ற உறுப்பினர்கள், ஆகியோரின் சம்பள விகிதம் இருமடங்கிற்கும் மேலாக அதிகரிக்கப்பட்டுள்ளது. ஜனாதிபதியின் மாதச் சம்பளம் இருபதாயிரத்திலிருந்து ஐம்பதாயிரமாக உயர்த்தப்பட, எம்.பி.க்களின் சம்பள உயர்வு சுமார் 160 சதவீதம் உயர்ந்திருக்கிறது.




செஸ் ஆஸ்கார் விருது பெற்றுள்ளார் நமது விஸ்வநாதன் ஆனந்த். நம் நாட்டில் சிறந்த செஸ் வீரர்களை உருவாக்குவதற்கான பயிற்சி மையம் ஒன்றை அவர் துவங்கப் போகிறாராம்.

டெல்லி பல்கலைக் கழகம் தனது மாணவிகள் ஜீன்ஸ் அணிந்து வரக் கூடாது என்று முதலில் தடை உத்தரவு போட்டது. பிறகு புது டெல்லி அரசு, பள்ளி மாணவிகள் குட்டை பாவாடை அணிந்து வருவதற்கு தடை விதித்தது. இதற்குக் காரணமாக அரசு கூறியது - "டெங்கு ஜுரம் இவர்களுக்கு பரவக் கூடாது" என்பதே. பலத்த எதிர்ப்பு காரணமாக இந்த இரு உத்தரவுகளும் இறுதியில் வாபஸ் பெறப்பட்டன.

தொல்லை தரும் தெரு நாய்கள் பற்றி பொது மக்கள் தங்களை தொலைபேசி மூலம் அணுகலாம் என்று சென்னை மாநகராட்சி அறிவித்திருக்கிறது. தொலைபேசி எண் : 6424593.

ஆகஸ்ட் 15 - இந்தியாவுக்கு மட்டுமல்ல தென்கொரியாவுக்கும் அன்றுதான் சுதந்திர நாள். நமக்கு பிரிட்டிஷ் ஆட்சியிடமிருந்து என்றால் அவர்களுக்கு ஜப்பானிய அதிகாரத்திலிருந்து. இந்த ஆண்டு சுதந்திரத் தினத்தை முன்னிட்டு வரலாறு காணாத வகையில் ஏழாயிரத்துக்கும் மேற்பட்ட

அரசியல் கைதிகளை விடுதலை செய்திருக்கிறது தென்கொரியா.

ஆப்பிரிக்காவில் உள்ள அமெரிக்க தூதரகத்தின் மீது தீவிரவாதிகள் அணுகுண்டுகளை வீசியதில், கட்டிட சேதத்தோடு உயிர் சேதமும் ஏற்பட்டது. இதில் இறந்த பத்து அமெரிக்கர்களின் சடலங்கள் அமெரிக்காவுக்குக் கொண்டு வரப்பட்ட போது, அந்நாட்டு வி.ஐ.பிக்கள் அவர்களுக்கு மரியாதை செலுத்துவதைதான் நீங்கள் படத்தில் பார்க்கிறீர்கள்.



• பதினெட்டு அடி உயரச் சிலை

இரும்பு மனிதர் சர்தார் வல்லபாய் படேலின் பதினெட்டு அடி உயரச் சிலை ஒன்று பாராளுமன்றத்தில் குடியரசுத் தலைவரால் திறந்து வைக்கப்பட்டது. இதை வடிவமைத்த சிற்பியின் பெயர் ராம் சுதார்.



• தினேஷ், ரமேஷ் சகோதரர்கள்

குஜராத்தில் நடக்கவிருக்கும் சர்வதேச செஸ் பந்தயத்தில் கலந்து கொள்ளப் போகிறார்கள் தினேஷ், ரமேஷ் சகோதரர்கள். செஸ்ஸில் ஏற்கெனவே பல பரிசுகளை பெற்றிருக்கும் இவர்கள் பார்வையற்றவர்கள். இவர்கள் கலந்து கொள்வது வழக்கமான (அதாவது பார்வையற்றவர்களுக்கான அல்ல) செஸ் பந்தயம் என்பது குறிப்பிடத்தக்கது.

காமென்வெல்த் விளையாட்டுப் பந்தயங்கள் இம்முறை கோலாலம்பூரில் நடைபெறவிருக்கின்றன. இந்தப் பந்தயங்கள் நடைபெறும் முதல் ஆசிய நாடு மலேசியா என்பது குறிப்பிடத்தக்கது.

— ஜி.எஸ்.எஸ்.

சென்னையிலேயே பிரசித்தி பெற்ற அந்தப் பள்ளியின் நிர்வாக அதிகாரி முரளிக்கு 'பேஜரில்' அந்தச் செய்தி வந்தது.

"உங்கள் அன்னை திருமதி வசந்தா இறந்து விட்டார்."

முரளியின் கார் வசந்தாவின் இல்லத்தின் முன்னால் நின்றது. டிரைவர் கதவைத் திறந்துவிட, வெளியே வந்தார் முரளி.

இல்லத்தின் முன்னே உறவினர்கள், நண்பர்கள் கூட்டம் அமைதியாக உட்கார்ந்திருந்தனர். சோகச் சுமை எல்லோரின் மேலும் இறங்கியது.

இவ்வளவு வருடங்களாகத் தன் தாயைப் பார்க்க வராத முரளி, வசந்தாவின் உடலருகில் வந்ததும் மௌனமாக நின்றார். தன்னைப் பின் தொடர்ந்த செயலர் கையில் இருந்த மலர் வளையத்தை அவருடைய தாயாரின் காலில் வைத்து வணங்கி வெளியே நடந்தார்.

எல்லோருடைய பார்வைகளும் முரளியின் மேல் விழுந்தது.

எந்தச் சலனமுமில்லாமல், திறந்து விடப்பட்ட காரின் கதவைப் பற்றி உள்ளே சென்று அமர்ந்தார்.

முரளியின் கார் பள்ளியை நோக்கிச் சென்றது. எப்போதோ பிரிந்த தாயின் முகம் பழைய சம்பவங்களில் அவரை இழுப்பதை அவரால் நிறுத்த முடியவில்லை.

முரளி ஏன் எல்லாப் பாடங்களிலும் குறைவாக மதிப்பெண் வாங்கி இருக்கிறான் என்ற கேள்வியுடன் வகுப்பறைக்குள் நுழைந்தாள் ஆசிரியை உமா.

அன்றைய பாடங்களை நடத்தினாலும், சிந்தனை அவளைச் சுற்றித்தான். ஏனோ தெரியவில்லையே! முரளியின் மீது அவளுக்கு இதமான இரக்கம்.

மதிய உணவு வேளையின்போது கூட, உமா இதைப் பற்றித்தான் மற்ற ஆசிரியைகளுடன் பேசி தன்னுடைய வருத்தத்தைத் தெரியப் படுத்தினாள். வரும் 10ம் வகுப்புத் தேர்வில் மாநிலத்திலேயே முதல் மாணவனாக வருவான் என்று எல்லோரும் நம்பியிருந்த வேளையில், முரளியின் சமீபத்திய தோல்விகள், கேள்விக் குறிகளைத்தான் எழுப்பியது.

தலைமை ஆசிரியை ஜானகியின் அலுவலக அறைக்குள் முரளி வரவழைக்கப்பட்டு அமர்ந்திருந்தான்.

"நீ சிறந்த மாணவன் முரளி! இந்தப் பள்ளியின் பெருமை உன்னிடம்தான்

# சிகரம் தொடும்



# தாய்மை

## சியாமளா ராமஸ்வாமி

இருக்கிறது. இப்பொழுது தேர்வுகளில் ஏன் குறைவாக மதிப்பெண் வாங்கி உள்ளாய்? ஏதாவது உடம்பு சரியில்லையா! மனம் விட்டு என்னிடம் சொல்லப்பா!"

முரளி பேசினான். மனம் விட்டுத் தன் துயரங்களை வெளியே கொட்டினான். அவன் கண்களின் ஓரத்தில் பனி முத்துக்கள்.

"சரி முரளி நீ போகலாம்."

பள்ளியிலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்த முரளியின் மனத்தில் எண்ணச் சிதறல்கள் வெடித்துச் சிதறிக் கொண்டிருந்தன. தலைமை ஆசிரியையிடம் மனம் விட்டுப் பேசி விட்டதிலும், அவர் ஆறுதலாகக் கேட்டமையும் கொஞ்சம் இதமாக இருப்பினும், இதைச் சொல்லியிருக்க வேண்டுமா, என்றும் எண்ணிக் குமறினான்.

எப்பொழுதும்போல் வீடு பூட்டியிருந்தது. அம்மா அலுவலகத்திலிருந்து இன்னும் திரும்பவில்லை. தன்னிடம் உள்ள சாவியில் வீட்டைத் திறந்து, ஹாலில் அமர்ந்து பேனைத் தட்டி விட்டான். மனசின் இறுக்கங்களுக்கு செயற்கைக் காற்று சற்று இதம்தான்.

டிரேயின் மீது பத்திரிகைகள், அழகாக அடுக்கி வைத்தமையை அவன் ரசித்தான். எதிலும் நேர்த்தியை விரும்பிய அவன், ஒரு பத்திரிகையை எடுத்துப் படித்தான். நாட்டம் செல்லாததால், அதை டிரேயில் போட்டு விட்டு, சற்று நடந்தான். கிச்சனில் சென்று சூடாக 'டீ' போட்டுக் குடித்தவுடன், சற்று தெம்பு வந்தது. இல்லத்தின் வெறுமை அவனைப் பாதித்தது. அம்மா இன்னும் வரவில்லை. இரவு மணி 10. கார் வரும் சத்தம். பாஸ்கர் வசந்தாவை இறக்கி விட்டான். சிரித்தபடி இறங்கிய அம்மா, பாஸ்கரிடம் விடை பெற்று உள்ளே வருவதைச் சலனமில்லாமல், முரளி பார்த்தான். கார் வெளியே சென்றது. அம்மா தன் அறைக்குள் நுழைந்து நைட்டியில் உடை மாற்றி ஹாலுக்கு

மூல நோய் வராமல் இருக்கவும், வந்த நோயை குணப்படுத்தவும் கருணைக் கிழங்கு லேகியம் செய்து கொடுக்கலாம். மிகவும் நன்றாக இருக்கும். இதோ செய்முறை விளக்கம்:-

கால் கிலோ கருணைக் கிழங்கை தோல் சீவி, கழுவி நீர் போக உலர வைத்து, கேரட் துருவலில் துருவிக் கொள்ளவும். துருவலை தண்ணீர் சேர்க்காமல் நைசாக அரைக்கவும். கால் கிலோ கருப்பட்டியில் சிறிது தண்ணீர் விட்டு கரைந்ததும், மண் போக வடி கட்டி வைக்கவும். ஒரு உருளியில் 100 கிராம் ந.எண்ணெய் (அ) நெய் விட்டு அதில் அரைத்த கருணைக் கிழங்கு விழுதைப் போட்டுக் கிளறவும். பின் கருப்பட்டி (வடிகட்டிய) நீர் விட்டுக் கிளறவும். கிழங்கு நன்றாக வெந்து சுருண்டு வந்து, எண்ணெய் விட ஆரம்பிக்கும். பிறகு சிறிது ஏலக்காய் தூள் சேர்த்துக் கிளறி இறக்கி விடவும். ஒரு நாளைக்கு இரண்டு ஸ்பூன் வீதம் தினம் சாப்பிடலாம். உடம்புக்கு மிகவும் நல்லது. நாளடைவில் மூல நோய் குணமாகும்.

– ஆர். பாலா



வந்தான்.

"ஏண்டா நீ சாப்பிடலையா?"

"இல்லை."

"சரி வா சாப்பிடலாம்."

"எனக்குப் பசியில்லை."

வசந்தாவின் பதிலுக்குக் காத்திராமல், தன் அறைக்குச் சென்று, படுக்கையில் விழுந்தான். மனம் விட்டுச் சத்தமில்லாமல் அழுததில் தலையணை நனைந்தது. கட்டிலின் அருகில் சின்ன ஸ்டூலில் அப்பா 'பிரேமில்' சிரித்துக் கொண்டிருந்தார். பிளாஸ்டிக் மல்லிகை போட்டோவை அலங்கரித்தது.

''அப்பா என்னை விட்டு ஏன் போயிட்டே'' உள்ளுக்குள் குமுறினான். அம்மாவுடைய போக்கு அவனுக்குப் பிடிபடவில்லை. எப்பொழுதும் பாஸ்கருடன் ஊர் சுத்தல். அப்பா இருந்த வரைக்கும் இது குடும்பமாக, மதிக்கும்படி இருந்தது. அவரும் முரளிக்கு நல்ல ஊக்கம் கொடுத்து படிப்பில் உதவினார். ஆறு மாதத்திற்கு முன் திடீரென இறந்து போன அப்பாவை அவனால் மறக்க முடியவில்லை. அம்மா எப்படி மாறினாள். இரவு தினமும், வசந்தா தாமதமாக வருவதும், முரளியின் உணர்வுகளை மதிக்கத் தவறுவதும், இருவருக்கும் உள்ள இடைவெளியை அதிகமாக்கியது. இப்படி ஒரு வாழ்க்கை தேவை தானா?

ஐந்து நட்சத்திர ஹோட்டலின் சிற்றுண்டி ஹாலில் உள்ள மேஜையை ஜானகியும், வசந்தாவும் பகிர்ந்து அமர்ந்து மங்கிய மஞ்சள் விளக்கு வெளிச்சத்தில் மெதுவாகப் பேசிக் கொண்டிருந்தனர்.

காபியைச் சுவைத்துக் கொண்டே, ஜானகி,

"என்னுடைய வேண்டுகோளுக்கு மதிப்பு அளித்து, உங்கள் நேரத்தை இங்கு எனக்கு ஒதுக்கியமைக்கு நன்றி மேடம் வசந்தா."

"சந்தோஷம். உங்களைச் சந்தித்ததில், முரளியைப் பற்றி ஏதோ சொல்ல வேண்டும் என்று குறிப்பிட்டீர்கள்."

வசந்தாவின் கேள்விக்கு அமைதியாக ஜானகி பதில் அளித்தாள்.

"பள்ளியின் முதன் மாணவனாகப் படித்துக் கொண்டிருந்த, முரளி ஆறு மாதங்களாக மிகவும் மாறியிருக்கிறான். படிப்பில் நாட்டமில்லை. எதையோ நினைத்துக் குழம்பியிருக்கிறான். நீங்கள் விசாரித்தீர்களா?"

வசந்தா தலை நிமிர்ந்தாள்.

"மேடம், அவனை நன்றாகத்தான் நடத்திக் கொண்டிருக்கிறேன். ஆனால் என்னிடமிருந்து விலகிச் செல்கிறான்."

"காரணம் உங்களுக்குத் தெரிந்திருக்குமே!"

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"முரளி, தன்னுடைய அப்பாவின் இடத்தில் இன்னொரு நபரை நினைத்துப் பார்க்கப் பிடிக்கவில்லை. அவனுடைய பிஞ்சு மனசு, இதை ஜீரணிக்க முடியாமல் தடுமாறுகிறது. படிப்பிலும் முன்போல் கவனம் இல்லை. இதை நீங்கள் உணர்ந்து, நடந்தால் எங்களுக்கு முரளியைப் போன்ற நல்ல மாணவனை இழக்க வேண்டாமே, மேடம்."

"மன்னிக்க வேண்டும். இது என்னுடைய சொந்த பிரச்னை. உங்கள் தலையீட்டை நான் விரும்பவில்லை. நான் பாஸ்கரை மறுமணம் செய்து கொள்ளப் போகிறேன். இந்த சமுதாயம் எனக்கு அளித்த நிர்ப்பந்தம். இது என் உணர்வுகளுக்கு ஒத்தடம். மனவலிமைக்குக் கிடைத்த தோல்வி."

''உங்களின் உணர்வுகளுக்கு மதிப்பு அளிக்கிறேன். முரளியின் நிலை?"

"நோ ப்ராப்ளம். அவனை நல்ல ஹாஸ்டலில் சேர்த்து விடுவேன். நிம்மதியாக அவன் படிக்கட்டும். அவனுடைய வாழ்க்கை நல்ல படியாக அமைவதில் இந்தத் தாய்க்கும் அக்கறை உண்டு மேடம்."

"உங்களுடைய பாசம், பரிவு, அரவணைப்பு கிடைக்காதே!"

"மன்னித்துக் கொள்ளுங்கள். இனி இதைப் பற்றி நீங்கள் மனம் குழப்பிக் கொள்ள வேண்டாம். இது என்னுடைய பிரச்னை. ஒரு கூட்டத்திற்குப் போக வேண்டும். விடை பெற்றுக் கொள்கிறேன்."

ஜானகி எழுந்து கை குலுக்கி, வசந்தாவின் கார் வரைக்கும் வந்து வழி அனுப்பி, புல் வெளித் தரையில் நடந்து, தன் டிரைவரைக் கூப்பிட்டுக் காரை எடுக்கச் சொன்னாள்.

இந்தச் சந்திப்பு ஜானகியை வெகுவாகப் பாதித்தது. வசந்தாவிடம் இதை எதிர்பார்த்ததுதான் தவறு. நல்ல நிலையில் இருந்தும் ஜானகி கல்யாணம் செய்து கொள்ள வில்லை. காதலித்த ஒருவன் கோழையாய், பணத்தைப் பெரிதென்று நினைத்து, வேலை தேடி இந்தியாவை விட்டுப் போனவன்தான். வரவே யில்லை. ஜானகி வெறுத்துப் போய் இந்த மண வாழ்க்கையே தேவையில்லை என்று முடிவு எடுத்து, வாழ்வில் பெரிய சாதனை செய்ய வேண்டும் என்று நினைத்து, அதற்கு செயல் வடிவம் கொடுத்து, இந்தப் பள்ளியை நிறுவி, நிர்வகித்து, சென்னையிலேயே பெரிய பள்ளி என்று பெயர் எடுக்கும் வண்ணம் உழைத்தாள். ஒரு நிலைக்குப் பிறகு கல்யாண வாழ்க்கை என்ற பந்தம் தேவையற்றதாகத்தான் அவளுக்குத் தோன்றியது. பெற்றோர்கள், நண்பர்கள் எல்லோரும் வற்புறுத்தியும் ஜானகி மாறாமல், தனிமையை விரும்பி ஏற்று, தன்னிச்சையாக, ஆண்மகன் தலையீடு இல்லாமல் லட்சியப் பாதையில் உறுதியாக நடக்கத் தலைப்பட்டாள். இந்த நிம்மதியைக் கெடுத்து வாழ்க்கைச் சங்கிலிகளில் சிறைப்படத் தயாராயில்லை.



பஜ்ஜிக்குக் கடலை மாவுதான் வேண்டும் என்பதில்லை. 4 கப் பச்சரிசியும், ஒரு கப் உளுத்தம் பருப்பையும் ஊற வைத்து, இட்லிக்கு அரைப்பது போல் வெண்ணெயாக அரைத்து அதில் உப்பு, பெருங்காயத்தூள், காரப் பொடி போட்டுக் கலந்து, அதில் காய்களை நனைத்து பஜ்ஜியாக போடலாம். மிருதுவாக இருக்கும். (அரிசி+பருப்பு ஆட்டும் பொழுதே சிகப்பு மிளகாய் சேர்த்தும் ஆட்டலாம்)

— பாலா இராஜேந்திரன்

முரளியின் நிலை கண்டு மிகவும் பாதிக்கப்பட்டாள். அவனுக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்ற எண்ணம் ஆழமாகப் பதிந்து செயல்பட்டாள்.

வக்கீலைப் போனில் தொடர்பு கொண்டு, முரளியின் நிலைமையை விபரமாகக் கூறினாள். "சார் முரளியை நான் தத்து எடுத்துக் கொள்ளத் தயாராயிருக்கிறேன். ஒரு நல்ல மாணவனை நான் இழக்க மனமில்லை. இதற்கு என்ன செலவானாலும் பரவாயில்லை. ஆனால் விதிமுறைகளுக்கு ஏற்ப இதற்குண்டான ஏற்பாடுகளைச் செய்து என்னைச் சந்தியுங்கள்!"

இரண்டு மாதங்கள் கழித்து, மறுபடியும் ஜானகி வசந்தாவைச் சந்திக்க அவள் இல்லம் சென்றாள். இருவரும் வெகுநேரம் விவாதித்தனர். கருத்துப் பரிமாறல்கள், அந்தரங்கள் அலசப்பட்டன. இதன் விளைவுகளை இருவரும் பேசித் தீர்த்தனர். முடிவில் ஜானகி வென்றாள்.

"மிக்க நன்றி மேடம் ஜானகி. இனி முரளியைப் பற்றி நான் கவலைப் பட மாட்டேன். உங்கள் நிழலில் அவன் வளர்ந்து பயன் பெறட்டும். உங்களை என் வாழ்வில் மறக்க மாட்டேன்."

ஜானகி விடை பெற்று வெளியே வந்தாள்.

பள்ளிக்கு அடுத்த நாள் வந்த முரளியை தன் அறைக்கு அழைத்தாள் ஜானகி.

முரளியிடம் எல்லா விபரங்களையும் கூறினாள். "இனி நீ என்னிடம் வளர வேண்டும். என் பாதுகாப்பில் உன்னைக் கவனித்துக் கொள்கிறேன். இந்தப் பள்ளியின் பெருமையைக் காப்பாற்றுவாய் என்று நம்புகிறேன்."

ஜானகியின் கால்களில் விழுந்து வணங்கி எழுந்த முரளியைப் பார்த்த தலைமை ஆசிரியையின் கண்களில் நீர்த் துளிகள்.

அடுத்து நடக்க வேண்டியவைகள் துரித கதியில் நடக்க ஆரம்பித்தன. வசந்தாவுடன் வக்கீல் விபரமாகப் பேசி அவள் சம்மதத்தைப் பெற்று, அரசாங்க ஒப்புதல்களுக்கு வேண்டிய நமூனாக்களைப் பரிசீலித்து முடித்து, முறையாக முரளியை, ஜானகி இல்லத்துக்கு அனுப்பி வைத்தார்.

ஜானகியின் அரவணைப்பில் முரளி நன்றாகப் படித்து மாநில முதல் மாணவனாகத் தேறியதும், மேற்கொண்டு படிக்க அமெரிக்கா சென்றதும், இந்திய மண்ணுக்குத் திரும்பி, இதே பள்ளியின் நிர்வாக அதிகாரியாக, ஜானகி மறைவுக்குப் பிறகு பொறுப்பு எடுத்ததும், நடந்து போன கதை.

கடந்த காலத்தின் நினைவுக் குமிழிகளிலிருந்து விடுபட்ட முரளியின் அறைக்குள் வசந்தாவின் வக்கீல் நுழைந்தார்.



**மல்லித் துவையலோ, புதினாத் துவையலோ அரைக்கப் புளி சேர்ப்போம். அந்தப் புளியை மல்லித் தழைகளை வதக்கும்பொழுது சேர்த்து வதக்கி அரைத்தால் புளி சுலபமாக அரைபடும்.**

**— மணி பால்ராஜ்**

"உட்காருங்கள் வக்கீல் சார்! என்ன விசேஷம்."

"உங்கள் தாய் திருமதி வசந்தா இந்தக் கவரை அவர்கள் இறந்த பிறகு உங்களிடம் சேர்ப்பிக்கச் சொன்னதால் உங்களிடம் வந்தேன்."

"இது எனக்கா? எப்பொழுது உங்களிடம் கொடுத்தார்!"

"உங்கள் அன்னை இரண்டு மாதங்களுக்கு முன்பே, என்னை அழைத்து, இந்த சீல் இட்ட கவரைக் கொடுத்து, அவர் இறந்த பிறகே, உங்களிடம் சேர்க்கச் சொன்னதால், இன்று உங்களிடம் கொடுக்கிறேன். தேவை இருப்பின் என்னைச் சந்திக்கவும் வருகிறேன்."

வக்கீல் சென்றதும், கவரைப் பிரித்தார் முரளி. அதிர்ச்சி அவருக்குக் காத்திருந்தது.

"அன்பு மகனே!

இந்தக் கடிதம் உன் கையில் கிடைக்கும் சமயம், நான் இறந்திருப்பேன். வக்கீலுக்கு என் நன்றியைத் தெரிவிக்கவும். உன் தந்தை இறந்ததும், என் நடவடிக்கையில் நீ வெறுத்துப் போனாய். என்னிடமிருந்து தூர விலகிச் செல்வதையும் நான் உணர்ந்தேன். அதைத்தான் நான் விரும்பினேன். ஆச்சரியப் படாதே!

உனக்கு ஒரு உண்மையை, உன் தந்தை மறைக்கச் சொன்ன உண்மையைச் சொல்கிறேன். உன தந்தை இறந்தது 'எய்ட்ஸ்' என்ற வியாதியினால். ஆனால் என்னைத் தவிர யாருக்கும் தெரியாது. அம்மாதிரி எங்களைத் தயார் செய்து கொண்டோம். முக்கியமாக உனக்குத் தெரியக் கூடாது என்பதில் அவர் உறுதியாயிருந்தார். இன்னொரு அதிர்ச்சி நானும் அவர் மூலம் 'எய்ட்ஸ்' வியாதியில் பாதிக்கப்பட்டவளானேன். தந்தைக்கும் இது தெரியும். வேறு யாருக்கும் இவைகள் தெரியாது.

தந்தை இறந்தவுடன் நான் யோசிக்க ஆரம்பித்தேன். எனக்குப் பின் உன்னை யார் கவனிப்பார். என் மீது உனக்கு வெறுப்பு ஏற்படும்படி என் வாழ்க்கையை அமைத்து விட்டேன். நீ என்னை வெறுக்க வேண்டும் என்று நான் விரும்பினேன். பாஸ்கருடன் நான் நடத்திய நாடகம் எனக்கு வெற்றியைத் தந்தது. நீ என்னை வெறுக்க ஆரம்பித்தாய். நல்ல சமயத்தில் உன் தலைமை ஆசிரியை என்னைச் சந்திக்கவும் திட்டம் போட ஆரம்பித்தேன். உன்னை அவர்கள் தத்து எடுக்கச் சம்மதித்தேன். திருமதி ஜானகியுடன் பேசி இந்த நல்ல முடிவை எடுத்தேன்.

நீ என்னைப் பிரிந்ததும் நான் தனிமைப் படுத்தப் பட்டேன். உன்னுடைய எதிர்காலம் பாதிக்கப்படக் கூடாது. நல்ல மாணவர் என்ற பெயர் நிலைக்க வேண்டும். ஊர் உன்னைப் புகழ உயர வேண்டும். நீ என்னைப் பிரிந்ததும், பாஸ்கர் அண்ணாவின் பங்கு இதில் மிகவும் உயர்ந்தது. எங்களின் நாடகம் நீ ஜானகி இல்லத்துக்குச் சென்றதும் முடிந்து விட்டது.

இந்த நாடகத்தின் கடைசி அத்தியாயம் தான் நீ கடிதத்தைப் படிக்கும் நேரம். என்னுடைய சொத்துக்கள் என் வக்கீல் மூலம் உன்னை வந்தடையும். பள்ளியின் வளர்ச்சிக்கு என் பங்கு இதுதான். மகனே மன்னித்து விடு! இது மிகவும் பயங்கரமான மறைக்கப்பட்ட உண்மைதான்.

இந்தச் சமுதாயம் யதார்த்தங்களுடன் நம்மை வாழ விடாது. வேறு வழி எனக்குத் தெரியாததால், இந்த முறையைத் தேர்ந்து எடுத்தேன். இதற்காக நான் எத்தனை கண்ணீர் சிந்தினேன் என்பது எனக்கு மட்டுமே தெரியும். உன்னுடைய உயர்வுதான் எனக்கு முக்கியம். நீ சிகரங்களைத் தொடும் திறமைகள் அமையப்பட்டவன். ஆனால் எய்ட்ஸ் உள்ள பெற்றோரின் குழந்தை என்பது உன் வாழ்வை எப்படிச் சிதைத்து விடும் என்பதற்காகவே என்னைக் கல்லாக்கிக் கொண்டேன்.

நீ குன்றின் மீது இட்ட விளக்காக உயர்ந்ததை தூரத்தில் இருந்து ரசித்தேன். எனக்கு இறப்பு ஏற்கனவே எழுதப்பட்டதுதான். வாழ வேண்டிய நீ இதில் பாதிக்கப்படக் கூடாது என்பதில் உதித்ததுதான் இந்த நாடகம். உன் சந்ததிக்கும் இது தெரிய வேண்டாம். நம்மோடு இவைகள் மடியட்டும். உனக்கு என் ஆசிகள்.

உன் தாய் வசந்தா."

சிலையாகி விட்டிருந்தார் முரளி. "அம்மா என்னை மன்னித்து விடம்மா! இப்படி ஒரு தியாகியா நீங்கள்? உங்களைப் பற்றி எப்படியெல்லாம் நினைத்து விட்டேன். இந்தப் பாவத்தை எந்தக் கடலில் சென்று கரைப்பேன்." மனம் குமுறி அழுதது.

# உலகம் உன் கையில்

காம்கேர் கே. புவனேஸ்வரி

கம்ப்யூட்டரில் ஏதேனும் ஒரு புரோகிராம் எழுதக் கற்றுக் கொண்டவுடனேயே வெளிநாடு செல்ல வேண்டும் என்று துடிக்க ஆரம்பித்து விடுகின்றனர் நம் மக்கள்...

வெளி நாடுகளில் புரோகிராம் மற்றும் சிஸ்டம் அனலிஸ்ட் போன்ற கம்ப்யூட்டர் வேலைகளுக்கு ஆள் எடுக்கும்போது அவர்கள் சில வரைமுறைகள் வைத்துக் கொண்டு உள்ளனர்.

கம்ப்யூட்டரில் உயர் படிப்பு, முன் அனுபவம் குறைந்தது மூன்று வருடங்கள்... (ஒரு உதாரணத்துக்குதான் மூன்று வருடங்கள்) இப்படி பல வரைமுறைகள் உள்ளது.

வெளிநாடுகளுக்குச் செல்லும் நம் மக்கள் முன் அனுபவம் போதிய அளவு இல்லாமையினால் அடுத்த இரண்டு... மூன்று மாதங்களுக்குள் தாய் நாடு திரும்ப அனுப்பப்பட்டு விடுகின்றார்கள்.

**– இதைவிட நம் நாட்டிற்கு அவமானம் வேறு உண்டா?**

இதையும் மீறி அமெரிக்க சாப்ட்வேர் நிறுவனங்களில் பல இந்தியர்கள் அரிய சாதனைகளை நிகழ்த்தி வருகிறார்கள்.

இப்போதெல்லாம் நீங்கள் ஒரு விஷயத்தை கேள்விப்படுவீர்கள். அதாவது...

'2000-ம் வருடத்தில் கம்ப்யூட்டர்கள் இயங்காது' என்ற விஷயம் இன்று பட்டி தொட்டிகளில் எல்லாம்கூட பரவி விட்டது...

உண்மை என்னவென்றால்.... நாம் கம்ப்யூட்டரில் தேதி டைப் செய்யும்போது mm-dd-yy என்ற வடிவத்தில்தான் டைப் செய்வோம். அதாவது.. குறிப்பிட்ட தேதியை டைப் செய்யும்போது,

07-02-98 இந்த வடிவத்திலேயே கொடுக்க முடியும். 2000-ம் வருடத்திற்குப் பிறகு, நாம் வருடத்தை எப்படி டைப் செய்வது?

07-02-00 என்று தானே டைப் செய்ய முடியும். இப்படிப் பதிவு செய்தால் ஃபைனான்ஷியல் கம்பெனி மற்றும் வங்கிகளில் பெருங் குழப்பங்கள் ஏற்பட வாய்ப்பு உள்ளது.

இந்தக் குழப்பத்திற்கு Y2K problem என்று பெயர். இதற்குத் தீர்வு

கம்ப்யூட்டர் ஒரு உலகம் சுற்றும் வாலி பன். **'Around the world in 8 dollars'** என்று ராஜ்கபூர் பாடியது போல் **'Around the world in one P.C.'** என்று நாமும் பாடலாம்! பி.சி.யா...? அட, நமக்கே நமக்காக உள்ள பெர்சனல் கம்ப்யூட்டரைதான் சுருக்கமாக **P.C** ன்னு அழைக்கிறோம். இப்பெல்லாம் வீட்டுக்கு ஒரு தொலைக்காட்சி பெட்டி போல வீட்டுக்கு ஒரு கம்ப்யூட்டர் அவசியமாகி விட்டது இல்லையா? குழந்தைகளின் படிப்பா, உங்களுக்கு சமையலில் சந்தேகமா, கணவருக்கு (உங்களுக்கும்தான்) பிஸினஸா இப்படி கல்வியா, செல்வமா, வீரமா, எதற்கும் விடை உண்டு கம்ப்யூட்டரில். சரி, உங்களுக்கென்று ஒரு பி.சி வாங்க முடிவு பண்ணிட்டீங்க! எப்படி வாங்குவது? என்ன பிராண்டு? எங்கு வாங்குவது? அது தரமாகவும் புதிய மாடலாகவும் இருக்குமா? உங்கள் கேள்விக்குப் பதிலாக ஒரு சில டிப்ஸ் இங்கே –

1.முதலில் நீங்கள் வாங்கும் கம்ப்யூட்டர் அசெம்ப்ள்டா (அ) ரெடிமேட் மாடலா என்பதை முடிவு செய்யுங்கள். அசெம்ப்ள்ட் என்பது கம்ப்யூட்டரின் பாகங்களை உதிரியாக வாங்கி ஒன்றாய் இணைத்து 'புதிய மாடலாக' செய்து நிறைய கம்பெனிகள் குறைவான விலைக்கு விற்கின்றன. மலிவாக விற்று 'சர்வீஸ்' சார்ஜ் என்று காசு பிடுங்கும் கம்பெனிகளும் உண்டு. இதில் நீங்கள் முக்கியமாக கவனிக்க வேண்டியது அது நிரந்தரமான நம்பிக்கையான கம்பெனியா? ஏனென்றால் ஒரு சில கம்பெனிகள் நம் நிதிக் கம்பெனிகள் போல் திடீரென்று மூடிவிடக் கூடும். அப்புறம் நமது கம்ப்யூட்டரில் ஏதாவது கோளாறு என்றால் கையைப் பிசைந்து கொண்டு நிற்க வேண்டும்.

ரெடிமேட் மாடலாக வாங்க விரும்புகிறீர்கள் என்றால் எந்தக் கம்பெனித் தயாரிப்புகள் தரமானதாகவும், லேடஸ்ட் டெக்னாலஜி பொருத்தியதாகவும் உள்ளது என்பதை ஆராய்ந்து வாங்குங்கள். உங்கள் நண்பர்கள், ஏற்கனவே கம்ப்யூட்டர் வாங்கியவர்கள் இவர்களிடம் விசாரித்து வாங்குங்கள்.

2. இரண்டாவதாக நீங்கள் கவனிக்க வேண்டியது கம்ப்யூட்டரின் உள்ளே உள்ள பாகங்கள் ஒரிஜினலா என்று. உதாரணமாக நாம் கிரைண்டர் வாங்குகிறோம் என்றால் அதன் உள்ளே உள்ள மோட்டார் தரமான பிராண்டா என்று பார்த்து வாங்குவோம். அது போல்தான் இதுவும். கம்ப்யூட்டரின் உள்ளே இருக்கும்

---

*காண்பதற்காக அமெரிக்காவில் இன்று மெயின் ஃபிரேம் பற்றிய கல்வியில் தேர்ச்சி பெற்றவர்களை வேலையில் அமர்த்துகிறார்கள்.*

*இதனால் இளநிலை பட்டம் பெற்ற மாணவர்கள் மெயின் ஃப்ரேம் பயிற்சி எடுத்துக் கொண்டனர்.*

*முதுநிலை பட்டம் பெற்றவர்களும் இதற்கு விதிவிலக்கல்ல. கம்ப்யூட்டர் அல்லாத மாணவர்கள்கூட 'மெயின் ஃப்ரேம்' பயிற்சி எடுக்கின்றனர்.*

*இதில் என்ன பிரச்சனையென்றால்... வெறும் இளநிலை பட்டம் பெற்றவர்களாக இருந்தாலும்... முதுநிலை பட்டம் பெற்றவர்களாக இருந்தாலும்... அவர்களுக்கு அடிப்படையாக கம்ப்யூட்டரில் 'புரோகிராமிங்' எழுதும் முறையில் முன் அனுபவம் இல்லாமல் இருந்தால், 'மெயின் ஃப்ரேம்!' கற்றுக் கொள்வதும், பயிற்சி பெறுவதும் சிரமமாகிறது.*

*சாஃப்ட்வேர் இன்ஜினியராகவே வேலை செய்து கொண்டிருப்பவர்கள்... 'மெயின் ஃப்ரேம்!' கற்றுக் கொண்டு வெளிநாடுகளில் வேலைக்கு முயற்சி செய்யும்போது கண்டிப்பாக அவர்களால் நமது நாட்டிற்கு பெருமை சேர்க்க முடியும்... சேர்த்துக் கொண்டும் இருக்கின்றார்கள்.*

***அயல்நாடு/உள்நாட்டில் கம்ப்யூட்டர் துறையில் பிரகாசிக்க விரும்புவர்களுக்கு சில டிப்ஸ்!***

*1) கல்வித் தகுதியை உயர்த்திக் கொள்ளுங்கள்.*

*(உ.தா)* B.Sc, maths *முடித்திருந்தால்* M.Sc maths *படியுங்கள்.*

*2) கம்ப்யூட்டரில்* advance course *வரை நன்கு பயின்று தேர்ச்சி பெற்றுக் கொள்ளுங்கள்.*

*(உ.தா)* Oracle - developer *2000*
Visual BASIC,
Power Builder இப்படி.

*3. கம்ப்யூட்டரில் புரோகிராமிங் செய்ய பழகுங்கள். உங்களுக்குத் தெரிந்த*

மதர்போர்ட் **(Mother Board)** மற்றும் 'சிப்' என்று அழைக்கப்படும் **The Main integrated Circuit (IC – இதில்தான் CPU (Central processing unit)** அடங்கியுள்ளது.) இரண்டும் 'இண்டல்' தயாரிப்பாக இருக்க வேண்டும். இதை உறுதி செய்து கொள்ள **'Intel inside'** என்ற லோகோ கம்ப்யூடரின் மேலே பொருந்தியுள்ளதா என்பதை கவனித்து வாங்கவும்.

மற்றும் **hard disk drive, CD- ROM Drive** இவைகள் தரமான கம்பெனிகளின் தயாரிப்பா என்பதும் முக்கியம்.

3) அடுத்தது 'வாரண்டி கார்ட்' மற்றும் 'வாரண்டி பீரியட்ஸ்'. பொதுவாக ஒரு வருடத்திற்குக் குறையாமல் எல்லா கம்பெனிகளும் வாரண்டி தருகிறது. இந்தப் பீரியடில் கம்ப்யூட்டரில் என்ன கோளாறு ஏற்பட்டாலும் இலவசமாக சரி செய்து தருவார்கள். இதிலும் இரண்டு விஷயங்கள் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியவை **"Comprohensive"** மற்றும் **"On-site"** இந்த இரண்டு வார்த்தைகளும் வாரண்டி கார்டில் இடம் பெற்றுள்ளதா. **Comprehensive** என்றால் வாரண்டி பீரியடை குறிக்கும் (குறைந்தது ஒரு வருடம்). **'On-site'** என்றால் கம்ப்யூட்டரில் ஏதாவது கோளாறு ஏற்பட்டால் அது இருக்கும் (வீடு, ஆபீஸ்...) இடத்திற்கே வந்து சரி செய்து கொடுப்பார்கள்.

4) அடுத்தது நீங்கள் என்னென்ன 'சாப்ட்வேர்'கள் லோட் செய்ய விரும்புகிறீர்கள். உ.தா. மல்டி மீடியாவில் பெயின்டிங், போட்டோ ஷாப் என்று நிறைய 'சாப்ட்வேர்'கள் உள்ளன.

இதில் நமக்குத் தேவையானதை லோட் செய்துக் கொள்ளலாம். ஆனால் அவை லேட்டஸ்ட் வெர்ஷனாக இருத்தல் அவசியம். இன்னும் இன்டர்நெட் கனெக்ஷன் இருந்தால் நீங்கள் விரும்பியவற்றை இலவசமாக இன்டர்நெட் மூலம் உங்கள் பி.சி.யில் 'லோட்' செய்து கொள்ளலாம். ஒரு சில கம்பெனிகள் தங்கள் **product**க்கு எஜூகேஷனல் சி.டி. கேம்ஸ் சி.டி என்று இலவசமாக தருகின்றன. ஒவ்வொரு சாப்ட்வேரும் ரூ.300லிருந்து கிடைக்கின்றன.

நீங்கள் இன்னும் முக்கியமாகக் கருத்தில் கொள்ள வேண்டியது இப்பொழுது வாங்கக் கூடிய கம்ப்யூட்டர் அடுத்து வரும் சில வருடங்களுக்கு உபயோகமாக இருக்க வேண்டும். ஆகவே விலையை மட்டும் பார்க்காமல் அதன் தரத்தையும், தொழில் முறையையும் கவனித்து வாங்கவும்.

**— சாந்தி**

சிறு சிறு நிறுவனங்களுக்கு பகுதி நேரமாகவோ (அ) முழு நேரமாகவே புரோகிராம் எழுதிக் கொடுங்கள். இந்த சமயத்தில் பணத்தை மட்டுமே குறிக்கோளாகக் கொள்ளாமல்... உங்கள் திறமைக்குச் சவாலாக எடுத்துக் கொண்டு அவர்களுக்கும் உதவி நீங்களும் உயருங்கள்...

இவை மூன்றையும் நீங்கள் கடைபிடித்தால் இன்றில்லாவிட்டாலும் என்றாவது ஒரு நாள் நீங்கள் கம்ப்யூட்டர் துறையில் பிரகாசிக்கலாம் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

போலி கல்விச் சான்றிதழ், போலி முன் அனுபவ சான்றிதழ் என சிலர் அலைகின்றனர். அதுபோல இல்லாமல் ஆக்கப்பூர்வமான வழியில் உங்களை உயர்த்திக் கொண்டால், காலம் சிறிது கடந்தாலும் "வெற்றிக்கனி" உங்கள் கையில்... அதனை 'திறமை குறைவு!' காரணம் காட்டி தட்டிப் பறிக்க யாராலும் முடியாது.

***அயல்நாட்டு மோகத்தைத் தடுக்க நம் அரசாங்கத்துக்குச் சில யோசனைகள்.***

*1) நம் இந்திய கம்ப்யூட்டர் மாணவர்களுக்கு அவர்களது படிப்பிற்கு ஏற்ற ஊதியம் அளித்தல்*

*2) அயல்நாடு செல்லாமல் நம் நாட்டிற்கே உழைக்கின்ற கம்ப்யூட்டர் மாணவ - மாணவிகளுக்கு ஊக்கத் தொகை கொடுக்கலாம்.*

*அப்படியே வெளிநாடு செல்லத் துடிப்பவர்களை அங்கு அனுப்ப விசா கொடுப்பதற்கு முன்,*

*அவர்கள் கொடுத்த கல்வி மற்றும் அனுபவச் சான்றிதழ்களும் உண்மைதானா? என்று நன்கு பரிசோதித்து விட்டு அனுப்பலாம்.*

*இப்படிச் செய்யும்போது தகுதியின்மையைத் தவிர்த்து உண்மையான நேர்மையான மாணவ மாணவிகளை அனுப்பி நம் இந்திய கௌரவத்தை காப்பாற்ற முடியும்.*

**ப**ண்டிகை, திருநாட்கள் என்பவை யாவருடைய முகத்திலும் சந்தோஷத்தை அள்ளித் தெளிப்பவை. மலர்ந்த முகங்களுடன் கொஞ்சம் ஆடை அணிகளும் சேர்ந்தால் கேட்கவா வேண்டும்? வளைய வருவதே ஒரு மிதப்பு போல் தோன்ற வைக்காதா? நிறைய பேர், நண்பர்கள், உறவினர்கள், அக்கம் பக்கத்தார் என்று வீடு வந்து போவார்கள். போன முறை வந்ததற்கும் இப்போதைக்குமான ,வித்தியாசங்களை ஞாபக அடுக்குகளில் இருந்து ஒப்பிட்டுச் சொல்லி இன்னும் உயர்த்திச் செல்வார்கள். நம் சந்தோஷக் குமிழிகளில் பெருமை வானவில்லின் வர்ண ஜாலங்களை மின்ன விடும் கணமே வீட்டில் உள்ள பழம் பெரியவர்களில் யாராவது அவற்றை உடைப்பார்கள் - 'அடடா! யார் இந்தக் கோலத்தை இங்கே வரிசை தப்பிப் போட்டது?' என்பது போன்ற கேள்வி ஊசிகளால்.

அப்போது தோன்றும் - 'சே! போன வருஷம் இந்தப் பெரிசு இரண்டும் அவங்க சின்ன மகன்

# முதியவர்களின் முணுமுணுப்பை செவிமடுக்கலாம்.. தப்பில்லை!



வீட்டுக்குப் போயிருந்ததுகள். இங்கே நிம்மதியா நம்ம மனசுக்கு நிறைவா பண்டிகை கொண்டாட முடிஞ்சது. இப்போ இங்கே வந்து அது சரியில்லை இதை அப்படிச் செய்யணும் அதை இப்படிச் செய்யணும்னு உயிரெடுக்குதுகள்' என்று.

கூடவே நேற்றைய சம்பவம் ஞாபகம் வரும். கண்டலில் உப்பு கொஞ்சம் கூடியிருந்ததை வந்திருந்த நண்பர்கள் கூட பேச்சு சுவாரசியத்தில் கவனித்திருக்கவில்லை. ஆனால் நம் வீட்டு மாமியோ வாயை வைத்துக் கொண்டு சும்மா இருந்திருக்க மாட்டார்கள். 'ஏண்டியம்மா, உப்பு தூக்கலா இருக்கே, அளவு கூடிடுச்சா அல்லது சரியா பிரட்டி விடலியா?' என்று எல்லோர் முன்பும் கேட்டு அப்படிச் கண்டலில் உப்பு கூடி விட்டால் எப்படி சரிசெய்வது என்பதற்கு டிப்ஸூம் கொடுத்து லெக்சர் அடித்து தன் மேதாவிலாசத்தைக் காட்டி நம்மை அவமானப்படுத்தியது வருடங்களானாலும் மறக்க முடிகிற விஷயமா?

'அதான் இத்தனை வயதில் ஆட வேண்டிய மட்டும் ஆடி ஓய்ந்தாகி விட்டதல்லவா? ஒரொருவர் வீடு மாதிரி பெரியவர்களைத் துரத்தி



நவராத்திரி சமயம் வீடெங்கும் வாழைப் பழமாக இருக்கும். சர்க்கரையை கம்பிப்பாகு வைத்து, பழத்தை ஸ்லைஸ் செய்து போட்டு, ஏலப்பொடி, ஒரு ஸ்பூன் நெய் ஊற்றிக் கலந்து, ஆற வைத்து, ஃப்ரிஜ்ஜில் வைத்தால், பெரியவர்கள், குழந்தைகள் சாப்பிடலாம்.

— ஆர். பார்வதி

விடாமல் வைத்துப் பார்க்கிறோமா இல்லையா? அந்த நன்றி உணர்வுக்காகவாவது கொஞ்சம் அமைதியாக தானுண்டு தன் தேவைகளுண்டு என்று ஒதுங்கி இருக்க வேண்டியதுதானே; இவர்களுக்குத் தேவை இல்லாத விஷயங்களில மூக்கை நுழைத்துக் கொண்டு அட்வைஸ், அட்வைஸ் என்று அலுப்பு தருவானேன்' என்பது போன்ற எண்ணங்கள் ஏற்படுவது அன்றாட செயல்பாடாகி விட்டது.

கலை உலகு, இலக்கிய உலகு, அரசியல் உலகு, ஆன்மீக உலகு, அறிவியல் உலகு என்பனவற்றில் பாருங்கள். முதுமைக்கு அளிக்கப்படும் மரியாதையே தனி. அங்கெல்லாம் அவர்களுடைய ஒவ்வொரு அனுபவத்தையும் அடுத்த தலைமுறை உபயோகித்துக் கொள்ள விழைகிறது. முதுமை என்பது அனுபவங்களின் தொகுப்பு. அனுபவம் என்பது தவறுகளில் கற்ற பாடங்கள். அவர்கள் வாழ்நாளின் பகுதியை, செல்வத்தின் பகுதியை, இன்னபிறவற்றை இழந்து பெற்ற பாடங்கள். அவற்றை அவர்களிடமிருந்து எடுத்துக் கொள்வதென்பது அவர்களுடைய வாழ்நாளின் ஒரு பங்கையும் நமதாக்கிக் கொள்கிற விஷயம் அல்லவா? தனிமனித அனுபவங்களின் தொகுப்புதானே மானிடம் என்கிற பொதுச் சொல். அனுபவம்தானே மனிதனைப் பக்குவப்படுத்துகிறது. பக்குவம் ஏற ஏற மனிதன் இறைத் தன்மைக்கு உயர்கிறான். இந்த உண்மை சமுதாய அளவில் அங்கீகாரம் பெற்றிருக்க, குடும்பங்களில் மட்டும் உணரப்படுவதில்லையா?

அப்படி இல்லை. குடும்பங்களில் முதியவர்களிடம் இருந்து பாடம் பெறுவதற்கு அதிகப்படி 'விலை' தர வேண்டி இருப்பதாக உணரப்படுவதாலேயே இளைய தலைமுறை ஒதுங்க விழைகிறது.

குறிப்பாக மூன்று வகை முதியவர்கள் மீது வீட்டார் குறைப்படுவது தவிர்க்க இயலாமல் உள்ளது. முதல் வகையினர் இள்வயதிலிருந்தே அடக்கி ஆளும் ஆளுமையுடன் வளர்ந்திருப்பார்கள். இவர்கள் பேச்சுதான் வீட்டில் எடுபட்டிருக்கும். இவர்கள் எவ்வளவு வயதானாலும், வாரிசுகள் பெரியவர்களாகிக் குடும்பமாகி இருந்தாலும் கூட இவர்களின் இந்த முரட்டுக் குணம் அப்படியே இருக்கும். இப்படிப்பட்டவர்களின் இளமைப் பருவத்தை ஆராய்ந்து பார்த்தால் முழுமை பெறாத ஏதோ ஏக்கம் பாக்கியிருக்கும். தாயன்பு, தந்தையன்பு, பொருளாதாரக் குறைபாடு, சக நண்பர்களும் சில சமயம் உடன் பிறப்புக்களுமே அனுபவித்த சில் விஷயங்கள் இவர்களுக்குக் கிடைக்காத ஏக்கம், தானே முன்னின்று குடும்பத்தை முன்னுக்குக் கொண்டு வர வேண்டியிருந்த பொறுப்புணர்வு போன்றவற்றில் ஏதாவது இந்த முரட்டுத்தனத்தை ஏற்படுத்தியிருக்கும்.

இரண்டாவது வகையினர் இளமையிலிருந்தே எந்தவித வசதிகளும் அனுபவிக்காமல், அதிக பொருளீட்டும் வாய்ப்புகளும் அமையாமல் சம்பாதித்த மொத்தத்தையும் ஏதோ பிள்ளைகளாவது நன்றாயிருந்தால் சரி என்று பிள்ளை வளர்ப்பில் கரைத்து முதுமை அடைந்தவர்கள். இவர்களின் பிள்ளைகள் நல்ல நிலைக்கு உயர்ந்து நிறைய சம்பாதித்து ஆடம்பரமாகச் செலவு செய்யும் தகுதிக்கு வந்த பின்பு அதைப் பார்த்து பொறாமைப் படுகிறார்களோ என்று பிள்ளைகளே எண்ணும் வகையில் நடந்து கொள்வார்கள். 'நானெல்லாம் எப்படி இருந்தேன். எவ்வளவு சிக்கனம் கடைப்பிடித்தேன். ஒரு நாளாவது ஓட்டலில் சாப்பிட்டிருப்பேனா? ஒருநாள் கிழமைன்னு இவன் அம்மாவுக்கு பூ வாங்கிக் கொடுத்திருப்பேனா? இவன் என்னடான்னா நாலு காசு சேர்ந்ததும் தலைகீழா நிக்கறான்...' என்கிற வகையில் புலம்புவார்கள். இத்தகு பெற்றோருக்குப் பிள்ளைகள் என்ன நல்லது செய்தாலும் ஏற்க மாட்டார்கள். நல்ல துணி எடுத்துத் தந்தாலும் அழுக்கு கந்தையைத்தான் உடுத்துவார்கள். பழையதை மறக்கக் கூடாது என்று விளக்கம் தருவார்கள்.

மூன்றாவது வகையினர் தம் இணையை இழந்தவர்கள். முதுமையில் இணையின் துணை எவ்வளவு அவசியம் என்பதற்கு பாரதிதாசனின் பாடல் ஒன்று உண்டு :

புதுமலர் அல்ல, காய்ந்த
புற்கட்டே அவன் உடம்பு
சதிராடும் நடையாள் அல்லள்
தள்ளாடி விழும் மூதாட்டி

மதியல்ல முகம் அவட்கு
வறள்நிலம், குழிகள் கண்கள்
எது எனக் கின்பம் நல்கும்
**இருக்கின்றான்** என்பதொன்றே

அத்தகைய இணையை இழந்து விட்டவர்களின் போக்கு புரிந்து கொள்ளவே முடியாததாக இருக்கும். அவர்களுக்குள் நிஜமான துக்கங்கள் ஒருபுறம் இருக்க, செய்கிற எந்தச் செயலுக்கும் (சில சமயம் அவர்கள் மனதறிந்தே செய்கிற தவறுகளுக்கும்) 'என்னைத் தனியா விட்டுட்டுப் போயிட்டான்ங்கறதால தானே உங்களுக்கெல்லாம் சுமையாப் படறேன்; அவன் கூடவே போய்ச் சேர்ந்திட்டேன் என்றால் உங்களுக்கும் நிம்மதி எனக்கும் நிம்மதி' என்கிற சமாதானம் கேடயமாகப் பயன்படுத்திக் கொள்வதற்கு இருப்பதனால் சில போலித் துக்கக் குறிப்புகளை வெளிப்படுத்தின வண்ணம் இருப்பார்கள்.

எல்லா வகையான முதியவர்களிடமும் பொதுவான குணங்களாக சலிப்பு, இளைய தலைமுறை மீது நம்பிக்கை இன்மை, பழம் பெருமை மற்றும் புலம்பல் போன்றவை இருக்கத்தான் செய்யும்.

'இவர்கள் இப்படித்தான்' என்று முத்திரை குத்தி அவர்களிடமிருந்து ஒதுங்கியிருந்து, சந்தர்ப்பம் வாய்த்தால் பிரிந்து தனியே சென்று விடுவது என்று இளையதலைமுறை சூத்திரம் வகுத்துக் கொள்கிறது.

முதுமைப் பருவத்தைப் பற்றி வியாச முனிவர் மகாபாரதத்தில் யயாதி பற்றிய அத்தியாயத்தில் ஒரு வரியில் சொல்லுவார் : 'ரூபத்தை அழிப்பதும் துன்பத்தைத் தருவதுமான மூப்பை அடைந்தான்' என்று. அதற்கு விளக்கமாக ராஜாஜி அவர்களும் ஒரு வரிதான் எழுதியிருப்பார் : 'விருத்தாப்பியம் அடைந்த அனைவரும் அதிலுள்ள துக்கத்தை அறிவார்கள்' என்று.

அப்படிப்பட்ட முதுமை அடைந்தவர்களிடம் நாம் கொஞ்சம் பொறுமையைக் கையாண்டால் பெறுகிற பலன்கள் எவ்வளவோ! (எப்படியும் அவர்களை ஒதுக்குவதற்காகவோ பிரிவதற்காகவோ சில முயற்சிகள் எடுக்கத்தானே வேண்டியுள்ளது? அதே முயற்சியில் பாதி செய்தால் கூட அவர்களுடன் ஐக்கியமாகி விட முடியுமே!)

உதாரணமாக மேற்கூறிய வகைகளில் முதல் வகையானவர்களைக் கையாள்வது மிகச் சுலபம். அவர்கள் முட்டை போன்றவர்கள். தம்மைச் சுற்றி முரட்டுத் தோற்றம் கொண்ட ஓட்டினை உருவாக்கிக் கொண்டவர்கள். அந்த ஓடு மெல்லியதுதான் என்று அவர்களுக்குத் தெரியும். அதனால்தான் மற்றவர்களிடமிருந்து ஒதுங்கி சற்று தூரத்திலேயே இருப்பார்கள். பிடிவாதமாக அவர்களை அணுகி அன்பு செலுத்திப் பாருங்கள். ஓடு உடைந்த முட்டை போல் எவ்வளவு குழைந்து போயிருக்கிறார்கள் என்பது தெரிய வரும்.

இரண்டாவது வகையினரைக் கையாள அவர்களுடைய முதிய நண்பர்களின் (நிச்சயம் குடும்ப நண்பர்களாக சிலர் இருப்பார்கள்.) உதவியை நாடுங்கள். நீங்கள் உங்கள் பெற்றோரின் கஷ்டங்களை முழுதும் உணர்ந்திருப்பதையும் அதனாலேயே அவர்கள் அனுபவிக்க விட்டவற்றை அவர்களுக்குக் காட்ட விரும்புவதையும் உணர்த்த முயற்சியுங்கள். தங்கள் பிள்ளைகள் எந்த நிலைக்கு வரவேண்டும் என்று விரும்பினார்களோ அந்த நிலையை அவர்களுடைய பிள்ளைகள் அடைந்து விட்டதை நண்பர்கள் மூலமாக உணர வைக்க முடியும்.

மூன்றாவது வகையினரை அமைதியாக்கி ஆக்கபூர்வமானவர்களாக ஆக்குவது எளிது. அவர்களுக்குத் தங்கள் இணையின் ஞாபகம் வருவதற்கு முன்பே உங்களுக்கு அந்த ஞாபகம் வந்தது போல அடிக்கடி பேசுங்கள். உதாரணமாக கணவரை இழந்த தாயிடம் 'அப்பாவை ரொம்பத் தேடுதும்மா' 'அப்பா இருந்தால் இந்த சந்தர்ப்பங்களில் எனக்கு ஆறுதலா இருந்து கைடு பண்ணுவார்'மா 'நான் அப்பாவை ரொம்ப மிஸ் பண்றேம்மா' என்பன போன்ற வார்த்தைகளை அடிக்கடி சொல்லுங்கள். மருமகன்களும் மாமனாரின் அருமை பெருமைகளாய்க் கேள்விப்பட்டவை பற்றிப் பேசுங்கள். அந்தத் தாய்க்கு தானே கணவரின் இடத்தையும் பூர்த்தி செய்ய வேண்டும்

---

நவராத்திரி கொலுவுக்கு –

கோதுமையை சிவக்க வறுத்துப் பொடி செய்து, வெல்லம், ஏலக்காய், தேங்காய்த் துருவல், ஒரு ஸ்பூன் நெய், சிறிது பால் விட்டுப் பிசைந்து, ஒருநாள் கொடுக்கலாம்.

– ஆர். பார்வதி





தரமான குங்குமம் கொடுங்கள். பல வீடுகளில் இட்டுக் கொள்ளவேண்டி யுள்ளதால், நெற்றியில் புண் வராமல் இருக்கும்.

— ஆர். பார்வதி

என்கிற உத்வேகமும் பொறுப்புணர்வும் வருவதோடு, தன் கணவரை இந்த அளவு ஞாபகம் வைத்திருக்கும் வாரிசுகளுக்காக எதுவும் செய்யத் தயாராகும் மனநிலை வளரும்.

நம்முடைய மூடு, வேலை தெரியாமல் பேசிக் கொண்டே இருக்கும் முதியவர்கள் சில சமயம் நமக்குப் போரடிக்கிறது என்பதைக் குறிப்பாகத் தெரியப்படுத்தினாலும் புரிந்து கொள்வதில்லை. அந்த மாதிரி சமயங்களில் கொஞ்சம் முகத்திலடித்தாற்போல் அங்கிருந்து எழுந்து போக வேண்டி வருகிறதே. அதைக் கூட இன்னும் நாசூக்காக அவர்களுடைய விருப்பங்களையே முன்னுரிமைப்படுத்திச் செய்ய முடியும். 'அம்மா! டீ.வி.ல இந்தப் படம் போடும்போதே உன்னைத்தான் நினைத்தேன். பாரேன் உனக்கு ரொம்பவும் பிடிக்கும்!' 'அத்தே! உங்க ஃபேவரிட் ஐட்டம்தான் சமைச்சிட்டிருக்கேன். அடுப்பில் ஏத்திட்டு வந்திர்றேன்' 'அப்பா! உங்க ஃப்ரெண்டு நடராஜ மாமாவுக்குக் கடிதம் எழுதணும்னு ரொம்ப நாளா சொல்லிட்டிருந்தீங்களே' என்பது போன்ற திசை திருப்பு உத்திகள் அவர்களுடைய ஈகோவைப் புண்படுத்தாமல் உங்கள் விலகல் நோக்கமும் நிறைவேற உதவும்.

ஏனென்றால் முதியவர்கள் நைந்து போன மிகப் பழங்காலப் புத்தகம் போன்றவர்கள். நம்முடைய அவசரப் பிரயோகத்தைக் காட்டுவதாலோ அவர்களை விட்டு ஒதுங்கிக் கொள்வதாலோ அந்த நூல்களைப் பாழாக்குவதோடு அவற்றிலுள்ள நல்ல பல பொக்கிஷங்களை நாம் இழப்பதுதான் மிச்சமாகும்.

நம்முடைய வாழ்க்கை முறைகளில் விஞ்ஞான முன்னேற்றத்திற்கேற்ப பல மாற்றங்கள் ஏற்படுகின்றன. அவை எல்லாம் பழைய தலைமுறை ஆட்களுக்குப் புரிவதில்லை. அவர்களால் நம்முடைய நவீனயுக வேகத்துக்கு ஈடுகொடுக்க முடிவதில்லை. பேசாமல் ஒதுங்கிக் கிடப்பதும் இல்லை என்பன போன்ற சிந்தனைகள் நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிற, சில உறுத்தல்களைச் சமாளித்துக் கொள்ளச் சொல்லிக் கொள்ளும் சால்ஜாப்புகளே.

முதியவர்களுக்கு முற்போக்கான சிந்தனைகள் கிடையாது என்பது மிகத் தவறான ஒரு கருத்து. வீட்டின் மடி, ஆசாரம், நாள், கிழமை, விரதம் போன்றவற்றில் மிகத் தீவிரமாக இருக்கும் எழுபது வயதுக்கு மேற்பட்ட பல பெரியவர்கள், விதவை மறுமணம், வரதட்சணை, பெண்கள் உயர்கல்வி போன்ற சென்சிடிவ் விஷயங்களில் மிகத் தெளிவான முற்போக்கு கருத்து கொண்டிருப்பதைப் பழகிப் பார்த்தால் அறிந்து கொள்ள முடியும். அவர்கள் மறுப்பு தெரிவிக்கும் விஷயங்கள் பெண் சுதந்திரம் என்ற பெயரில் அதீதமாகச் சிலர் பிற ஆடவர்கள் மனத்தில் சலனம் ஏற்படுத்தும் விதத்தில் நடந்து கொள்ளும் முயற்சிகளையும், தற்காலக் கல்வி முறையில் மாணவர்களாகவே கற்பித்துக் கொள்ளும் அநாவசிய ஆண் பெண் நெருக்கங்களையும்தான்.

ஆழ யோசித்தால் வீட்டின் முதியவர்கள் நம் மனசாட்சியின் நடமாடும் உருவங்களோ என்று தோன்றும். அவர்கள் சொல்வதில் நமக்கு எரிச்சல் தரும் விஷயங்களைத் தனிமையில் சிந்தித்து வரிசைப்படுத்திப் பாருங்கள். நாம் மறைக்க நினைத்து நம் மனசாட்சி உறுத்திய விஷயங்களாகவே இருக்கும். அவர்களை ஏமாற்றுவதாக எண்ணி நாம் செய்த பல விஷயங்கள் பிற்காலத்தில் பெருமைப்பட்டுக் கொள்பவைகளாக இருக்காது. சிகரெட், குடி, வீண் செலவு, ஆடம்பர விரயம், காலை தாமதமாக எழுதல், இரவு கண் விழிப்பு, பெண்ணுக்குக் கோலம் சமையல் முதலியன தெரியாதிருத்தல் போன்றவை உதாரணங்கள்.

'இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன் கெடுப்பார் இலானும் கெடும்' என்றார் வள்ளுவர். (தவறுகளைச் சுட்டிக்காட்டும் அமைச்சன் இல்லாத மன்னன் கெடுப்பதற்கு ஆளில்லாமல் கூடத் தானே கெடுவான் என்பது பொருள்) நம்மை இடித்து இடித்துச் சொல்லி நம் தவறுகளைச் சுட்டிக்காட்டியபடி ஒருவர் இருந்தாலே போதும். நாம் திருந்துவது கூட இரண்டாம்பட்சம். தவறு செய்கிறோம் என்பது தெரிந்திருப்பதே கூட மேலான நிலைதான். அது கூடத் தெரியாமல் இருப்பது அழிவில் கொண்டு விடும் நிலை. அந்த நிலைக்கு ஆளாகாமல் நம்மை வைத்துக் கொள்ள முதியவர்களின் முணுமுணுப்பு அவசியம்.

— பெ. நாயகி





# காதிகிராப்ட்

குறளகம், சென்னை – 600 108.

வழங்கும்

## பொம்மை கண்காட்சி விற்பனை



உயர்ந்த கலை நுட்பமும், தரமும் வாய்ந்த பல வண்ண பொம்மைகள் நியாயமான விலையில் ஏராளமாக விற்பனைக்கு உள்ளன.

**பொம்மை கண்காட்சி மற்றும் விற்பனை**

காலம் : 21–8–98 முதல் 1–10–98 வரை

**நேரம்**

காலை 10.00 முதல் 1.00 மணி வரை

மாலை 02.00 முதல் 8.00 மணி வரை

தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம்

"குறளகம்" சென்னை – 600 108. Internet-www:Khadikraft.com

DIPR/1170/DIS/98

**நவராத்திரி கொலு பண்டிகைக்கு தேவையான பொம்மைகள் வாங்க இன்றே குறளகம் பொம்மை கண்காட்சிக்கு வருகை தாருங்கள் !**

# வியந்து கொண்டே, பிரமித்துக் கொண்டே!



செயற்கை முறை கருத்தரிப்பு, டெஸ்ட் டியூப் பேபி இவற்றை உருவாக்குவதில் நிபுணரான டாக்டர் ஜெயம் கண்ணனுடன் பேசிக் கொண்டிருந்தேன். "ஆமா, டெஸ்ட் டியூப்ல பேபிய உருவாக்கறதுன்னா ஆக்சுவலா என்ன பண்றீங்க..." என்று கேட்டபோது ஒரு அழகிய 'உயிர் உருவாகும்' கதையைச் சொல்லிக் கொண்டு வந்தார்.

"ஒரு தலைமுடியளவு மெல்லியதான ஃபெலோபியன் குழாய் வழியே வரும் பெண் முட்டை பற்றியெல்லாம் சொன்ன போது நம் கற்பனையில் முட்டை என்றால் பெரிய அளவு விரியும். ஆனால் மைக்ரோஸ்கோபியில் பார்க்க வேண்டிய அளவு சிறியது..." இப்படி பேச்சு தொடர்ந்தது.

"இந்த ஆராய்ச்சியின் ஆரம்பக் காலங்களிலே விந்துக்களை கருப்பையில் போடுவோம். அப்போது பெண்கள் வலிதாங்காமல் கதறுவார்கள். இப்போது நாங்கள் ஆய்வில் முன்னேறி விட்டோம்" என்று ஒரு டாக்டர் சொன்னார். "ஏன் வலி வருகிறது" என்று கேட்டேன்.

"ஆணின் விந்து பெண் முட்டையைப் போய்ச் சேருவது என்பதற்கு முன் பல நிகழ்ச்சிகள் உள்ளன. 'ஸ்பெர்ம்' எனும் ஆணின் உயிரணு மட்டுமே கருப்பைக்குள் போகும். அதனோடு வருகின்ற திரவங்கள் கருவாயிலேயே சுத்தமாக வடிகட்டப்படுகிறது. ஆண் உயிரணு நுழைந்தவுடன் 'சீல்' வைக்கப்பட்டு விடும். இந்த அற்புதம் இயற்கையாக நடைபெறுகிறது.

ஆனால் நாங்கள் ஆணின் உயிரணுவை திரவத்திலிருந்து மிகச் சுத்தமாக பிரித்தெடுக்கப் படும்பாடு இருக்கிறதே... பல 'பிராசஸ்'கள் உண்டு அதற்கு. 'ஸ்பெர்ம்' எனப்படும் உயிரணுவை மட்டும் வடித்தெடுத்து பெண்ணின் கருமுட்டையோடு சேர்ப்போம்.

ஆரம்பக் காலங்களில் இவற்றினைப் பற்றிய உண்மைகள் தெரியாது. பெண் முட்டையோடு ஆண் உயிரணு சேரும் போது குழந்தை உண்டாகிறது. அதனால் நேரடியாக கருப்பையில் ஸ்பெர்மினைச் சேர்ப்போம் என முயற்சி செய்திருக்கிறார்கள்.

ஆண் உயிரணுவோடு வரும் திரவத்திலே 'ப்ராஸ்டோ கிளான்டின்' எனும் ஹார்மோன் ஏராளமாக இருக்கிறது. இது வேகமாகப் பாயக்கூடியது என்பதால் அந்த உந்து சக்திக்காகக் கடவுள் இதனைச் சேர்த்திருக்கிறார். ஆனால் இது நச்சுத்தன்மை கொண்டது. எனவேதான் திரவத்தோடு கூடிய உயிரணுவைப் போடும் போது ப்ராஸ்டோ க்ளான்டின் நச்சுத் தன்மையால் கருப்பை வேகமாகச் சுருங்கி விரியும். இதனால்தான் வலியில் துடித்திருக்கிறார்கள்..."

இருவர் இன்பமாக இணைந்திருக்கும்போது உள்ளே எத்தனை விந்தைச் செயல்கள் நடக்கின்றன, ஆனால் அதனை செயற்கையாக உருவாக்க எத்தனை பாடு...!

"அது மட்டுமேயல்ல... அத்தனை பாடுபட்டாலும் வெற்றி சதவீதம் மிகக் குறைச்சல்..." என்றார் ஜெயம் கண்ணன்.

அவர் இப்படி இன்னும் பல விஷயங்களைப் பேசும் போது திருமூலரின் திருமந்திரத்தில் படித்த பல விஷயங்கள் எனக்கு நினைவுக்கு வந்தது. கரு உருவாகுதலைப் பற்றி ஐயாயிரம் வருஷங்களுக்கு முன்பு அவர் எழுதியிருக்கிறார்! டாக்டர் ஜெயம் கண்ணன் இந்த நூற்றாண்டின் விஞ்ஞான

ஆராய்ச்சிகளைச் சொல்லச் சொல்ல அது அப்படியே திருமூலரோடு ஒத்துப் போவது மிகவும் ஆச்சர்யமாக இருந்தது.

எங்களின் சுவாரஸ்யமான உரையாடலை ஒட்டி அவரை இதைப் பற்றிய பல பிரமிக்கும் உண்மைகளை எழுதச் சொன்னேன். இது மருத்துவரீதியான கட்டுரை அல்ல. எனவே பயப்படாமல் படிக்கலாம். பல இடங்களில் நம்மை வியக்க வைக்கும். கடவுளைப் பற்றிய ஆச்சர்யம் தோன்றும். அனைத்தும் கலந்த சுவாரஸ்யம் இது...

– மஞ்சுளா ரமேஷ்

ஒரு குழந்தை உருவாக – தேவையானவை பெண் முட்டை ஆண் விந்து என்பது எல்லோரும் அறிந்த ஒன்று. ஆனால் எத்தனை எத்தனை விஞ்ஞான ஆராய்ச்சிகளுக்குப் பிறகு அறிவிக்கப்பட்டுள்ள உண்மை இது தெரியுமா? இந்த கருத்தரித்தல் (Process of fertilisation) கண்டறிய விதவிதமாக மைக்ராஸ்கோப்புகள், இங்குபேட்டர்கள், கல்ச்சர் மீடியாக்கள் என்று ஏராளமான உபகரணங்களை உபயோகித்துக் கண்டுபிடிக்கப்பட்டவை.

திருமூலரின் திருமந்திரம் படிக்கும் போது – எவ்வளவு தீர்க்கதரிசனமாக அவர் இதனை விளக்கியுள்ளார் என்று பார்க்கும்போது உண்மையிலேயே பிரமித்துப் போனேன். வெளிநாடுகளில் பல மருத்துவ ஆராய்ச்சிக் கூட்டங்களில் அறிவிக்கப்பட்டவற்றை திருமூலர் அநாயாசமாக வெளியிடுகிறார். அவற்றுள் ஒன்றிரண்டை மட்டும் இங்கு எடுத்துக் கூறுகிறேன். என் சக மருத்துவர்கள் இதில் படித்து ஆராய நிறைய விஷயங்கள் இருக்கின்றன. ஒரு ஞானப் புதையலே நமக்குத் தெரியாமல் இருக்கிறதோ எனச் சந்தேகமாக உள்ளது...

விஞ்ஞான அறிவு சில நூறாண்டுகளாகத்தான். திருவள்ளுவர் காலம் கி.மு. 75 லிருந்து கி.மு. 36 வரை. திருவள்ளுவரின் திருக்குறளில் திருமந்திரச் சொற்கள் கையாளப்பட்டு இருப்பதால் திருமூலர் காலம் அதற்கும் முந்தையது. இந்த உணர்வோடு படியுங்கள்.

Semen - ஆண் விந்துவில் ஆணின் உயிரணுவாகிய 'ஸ்பெர்ம்' மற்ற பொருள்களுடன் குறிப்பாக ப்ராஸ்டோ க்ளான்டின் என்கிற ஹார்மோன் சத்தினை அதிக அளவில் கொண்டு வெளியாகிற வெண்ணிற திரவம். இந்த ப்ராஸ்டோ க்ளான்டின் பற்றிய விரிவான விளக்கம் 1940-க்குப் பிறகுதான் கிடைத்துள்ளது. முதலில் இது உயிர் உற்பத்தியோடு சம்பந்தப்பட்டது என நினைத்தார்கள். தற்போதோ பிஜி (P.G.) (ப்ராஸ்டோகிளான்டின்) என்பது மனிதனின் உயிர் மூச்சு என்றும், எல்லா உறுப்புகளையும் (இதயம்; நுரையீரல், மூளை போன்ற எல்லாவற்றையும்) சீராக இயக்கத் தேவையான ஒன்று என்றும் தோலில் கூட இது சுரக்கிறது என்றும் தெரிய வந்துள்ளது.

பெண்களிடத்திலும் கருப்பையில் அதிகமாக சுரக்கிறது. மாதவிடாய் சமயத்தில் ஏற்படும் வயிற்று வலிக்கு முக்கியக் காரணம் பிஜியே. மாதவிடாய் சமயம் பெண்கள் பூச் செடிகளைத் தொட்டால் செடி வாடி விடும். ஊறுகாய் போன்ற நாள்பட வைக்கப்படும் பொருட்களைத் தொட்டால் கெட்டுவிடும் என்பதும் இந்த பிஜி சுரப்பினாலேயே.

இந்த பிஜியே கருத்தரிக்க, கருவளர, கருநிலைக்க, குழந்தை, கரு முதிர்ச்சியடைய, பிரசவ வலி உண்டாக என எல்லாவற்றிற்கும் அதிமுக்கியமானது.

இது வேகமாக திசுக்களில் பாயக்கூடிய

மலை அமைக்கும்போது, பின்பக்கத்தில், கண்ணுக்குத் தெரியாதபடி, சின்ன சின்ன டப்பாக்களை (பூசு மஞ்சள் டப்பா போன்றது) மறைவாக இருக்குமாறு மண்ணில் புதைத்து விடுங்கள். பிறகு இதில் சாம்பிராணி பொடி தூவி புகை போடவும் சாம்பிராணிபுகை அலர்ஜி என்பவர்கள் தசாங்கம் வாங்கி எரிய விடுங்கள். இம்மாதிரி செய்தால் அலையலையாகப் புகைவரும். இது பார்ப்பதற்குப் பனிமலை போன்ற எண்ணத்தை ஏற்படுத்தும்.

– ஆர். சாந்தா



# செலவில் சேமிப்பு... அதுவே 'ஃபுட்வர்ல்ட் ஷாப்பிங்'ன் தனிச்சிறப்பு !



சாதாரண ஷாப்பிங்




ஃபுட்வர்ல்ட் இல்
வேல்யூ ஷாப்பிங்

ஃபுட்வர்ல்ட் அறிமுகப்படுத்துகிறது 'வேல்யூ ஷாப்பிங்'. உயர்ந்த தரம். குறைந்த விலை. எவருமே அளித்திராத இணையற்ற சலுகைகள். நிறைந்த வசதி. இனி சாதாரண ஷாப்பிங் வேண்டாமே. 'வேல்யூ ஷாப்பிங்' செய்யலாமே!

RPG



FOOD WORLD

*The right price, right choice supermarket*

ஃபுட்வர்ல்ட் வழங்கும் ஏராளமான வேல்யூ ஷாப்பிங் சிறப்புச் சலுகைகள் மூலம் அதிக பணம் மிச்சப்படுத்துங்கள். சலுகைகள் ஸ்டாக் உள்ளவரை மட்டுமே. சலுகைகள் விதிமுறைகளைப் பொறுத்து வழங்கப்படும். பொருட்களின் விலை மாறுதலுக்குட்பட்டது.

## மகத்தான சேமிப்பு

| | | | |
|---|---|---|---|
| ஃபுட்வர்ல்ட் பொன்னி பச்சரிசி (பிரீமியம்) 20 கிலோ பை | பில்ஸ்பரி சக்கி ஃப்ரஷ் ஆட்டா - 2 கிலோ MRP - ரூ ~~32/-~~ | கேட்பரிஸ் Perk சூப்பர் வேல்யூ பேக் (105 கிராம்) MRP - ரூ ~~33/-~~ | Knorr தக்காளி சூப் அல்லது ஸ்வீட் கார்ன் சிக்கன் சூப் MRP - ரூ ~~23/-~~ |
| ரூ 15/- ஒரு கிலோ | ரூ 28/- | ரூ 29/- | ரூ 17/- |

இச்சலுகைகள் ஆகஸ்ட் 20 முதல் 19 செப்டம்பர் 1998 வரை மட்டுமே!

35, CP ராமசாமி ரோடு, ஆழ்வார் பேட்டை • ஸ்பென்சர் ப்ளாசா, 769 அண்ணா சாலை • 22, தணிகாசலம் ரோடு, தி நகர் • 2-AB, 2வது அவென்யூ, அண்ணா நகர் • 17, முதல் மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு.

* சில கடைகளில் குறிப்பிட்ட பகுதிகளுக்கு மட்டுமே பொருந்தும்.

Trikaya Grey Chn SP 20.98

ஹார்மோன். காற்றிலேயும் பரவக் கூடியது! அதனால்தான் மாதவிடாய் நேரத்தில் பெண்களை துளசிச் செடி பக்கம் போகக் கூடாது என்றார்கள். இவையெல்லாம் சமீபத்திய கண்டுபிடிப்புக்கள், விஞ்ஞானத்திலே!

இப்போது திருமூலருக்கு வருவோம். அன்றே 'ப்ராஸ்டோ க்ளாண்டி'னை வாயுவிற்கு ஒப்பிட்டு திருமூலர் மிக அழகாக விளக்கியுள்ளது விந்தையிலும் விந்தையாகும். மேலும் பிஜி என்பது A - B C - D - E - F1 F2, ∝ (Alpha), β (Beta), γ (Gamma) என்று பத்து வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனி தன்மை கொண்டது. தனித்தனி வேலையை மனிதனின் பல அவயங்களிலே செய்கிறது. PG E பிரவசத்திற்குத் தேவை. PG E 1 ஆணின் உறவு உணர்ச்சிக்குத் தேவை. PG F2 ∝ கர்ப்பத்திற்குத் தேவைப்படுகிறது. PG A-B-C-D மற்ற அவயவங்கள் நன்றாக வேலை செய்ய தேவைப்படுகிறது.

நமது முன்னோர்கள் பத்து விதமான வாயுக்களே உடம்பினை இயக்க உதவுகிறது என்று கூறியுள்ளது இதனோடு ஒப்பிட வேண்டியுள்ளது. வாயுக் கோளாறே பல நோய்களுக்கும் காரணமாக இருக்கிறது என்பார்கள் அவர்கள். இப்போது என் விஷயத்திற்கு வருகிறேன்.

"பூவின் மணத்தைப் பொருந்திய வாயு..." என கரு – உயிர் உண்டாகும் விதத்தினைச் சொல்லும் பாடலிலே குறிப்பிடுகிறார். கருப்பையில் ஒன்றிய கருவினை தளர்த்த பத்து வாயுக்களில் ஒன்றான தனஞ்செயன் (?PGE1) என்ற வாயு கருவுடன் பொருந்தி கர்ப்பத்தை உண்டாக்கி விடுகிறது என்று கூறுகிறார்!

"வருத்த தருணத்தில்" என்பதினை பெண் முட்டை வெளியாகும் நேரமாகிய "Ovulation time" என்று கொள்ளலாம்! படிக்கப் படிக்க பிரமித்தேன்!

இந்த பிஜி ஹார்மோன் காற்றில் பறந்து செல்லும் மகரந்தத்தில் கலந்து விடும். பெண்ணின் உடலில் வெளியாகும் நறுமணத்திலும் பிஜி உள்ளது. மாதவிடாய் காலம், Ovulation time இவற்றில் பிஜி அதிகமாக சுரந்து வெளிப்படுவதால் பெண்கள் அதிகம் உள்ள விடுதிகளில் மல்லிகை, துளசி வளராது. குரோட்டன்ஸ்தான் வளரும். காரணம் இந்த பிஜியில் ஒருசில நச்சுத் தன்மையும் உள்ளது.

இந்த PGE1 ஆண் விந்துவில் வெளியிடும் அளவு அதிகமாக உள்ளதால் கர்ப்ப கால



எந்த விதமான சுண்டல் செய்தாலும் பச்சை மிளகாய், சின்ன துண்டு இஞ்சி சேர்த்து கரகரப்பாக அரைத்து அத்துடன் புதினா மற்றும் கொத்தமல்லி போட்டு ஒரு சுற்று சுற்றவும். இதை கடுகு வெடித்ததும் போட்டு சற்று வதக்கி சுண்டல் செய்தால் சூப்பர் டேஸ்டாக இருக்கும்.

- ராகினி தியாகராஜன்

ஆரம்ப காலத்தில் கருச்சிதைவை உண்டாக்கலாம். அதனால்தான் நமது பெண்கள் கருவுற்ற மூன்றாம் மாதம் தாய் வீடு செல்ல வேண்டும். ஐந்தாம் மாதம் திரும்ப கணவனைச் சேரலாம் என்று வரையறுத்தனர். அதே போலவே ஏழாம் மாதத்திற்குப் பிறகு குறைப் பிரசவம் ஆகாமல் தடுக்க வேண்டியே வளைகாப்பு ஆன பிறகு தாய் வீடு அனுப்புகின்றனர். சிலருக்குப் பிரசவ தேதி குறித்தபடி பிரசவம் ஆகாவிட்டால், பெண்ணை கணவனுடன் சேர அனுமதித்து பிரசவ வலி தானே உண்டாக்க வைக்கவும் முயற்சி செய்யும் பழக்கம் இன்றும் கிராமங்களில் இருந்து வருகிறது.

கருப்பையில் ஏற்படும் புண் சில சமயம் ஆறாது இருப்பதன் காரணம் அதிகம் சுரக்கும் பிஜியே. இதற்கு Prostoglandin Antagonist வகை மருந்துகள் கொடுப்பதன் மூலம் கருப்பை புண்கள் ஆற துணை செய்யப்படுகிறது.

உடலின் பல பாகங்களில் ஏற்படும் புண், ஆஸ்துமா போன்ற நோய்களுக்கும் கடந்த 50 ஆண்டுகளாக உபயோகிக்கப்படும் பிஜி, 5000 ஆண்டுகளுக்கு முன்னே திருமூலர் அறிந்திருந்தார் என்பது வியக்கத்தக்க விஷயமல்லவா?

இந்தக் கட்டுரைத் தொடரில் இப்படி இன்னும் நிறைய 'வியந்து கொண்டே', 'பிரமித்துக் கொண்டே' போவேன். நீங்களும் 'அப்படியே' என்னோடு வாருங்கள்...

# மடிசார் கட்டு கேலிக்குரியதல்ல!

"உடை எப்படி இருந்தால் என்ன? மனம் சரியாக இருந்தால் போதும். கடவுள் வழிபாட்டை இந்த உடை உடுத்திக் கொண்டுதான் செய்ய வேண்டும் என்பதில்லை' என இன்றைய இளம் பெண்கள் நினைக்கிறார்கள் சொல்கிறார்கள்.

ஆனால் நம்முடைய முன்னோர்கள் உடை விஷயத்தில் சொல்லியிருந்த விஷயங்கள் விஞ்ஞான பூர்வமானவை என நான் சமீபத்தில் அறிய வந்தபோது ஆச்சரியமாக இருந்தது" என்கிறார் மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸ் உரிமையாளர் திருமதி நாகஜோதி...

"எங்களுடைய மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸ் மயிலாப்பூர் கோவிலுக்கு அருகில் இருப்பதால் பல வேத விற்பன்னர்கள் வருவதுண்டு சிலர் என்னிடம் பேசுவார்கள். அப்படித்தான் சமீபத்தில் ஒருவரிடம் பேசிக் கொண்டிருந்தபோது ஒரு விஷயம் சொன்னார், இப்பல்லாம் பெண்களுடைய உடைகள் என்பது கன்னாபின்னாவென்று ஆகிவிட்டது. புடைவையில்கூட தெய்வீகமான முறையான மடிசார் போன்ற பாரம்பரியக் கட்டுக்களை கேலிக்குரியதாகவும், கவர்ச்சிகரமாகவும் காட்டுகிறார்கள்!" என்றார்.

'அதென்ன தெய்வீகமான முறை' என்று கேட்டேன்.

"ஒவ்வொரு வகுப்பினருக்கும் புடவைக் கட்டுவதில் ஒவ்வொரு விதம் உண்டு. தமிழ் அந்தணர்கள் மடிசார்க்கட்டு ஒரு மாதிரி. வைணவ வகுப்பினர் ஒரு மாதிரியும், 'மார்த்வா' எனப்படும் கன்னடக்காரர்கள் ஒரு மாதிரியும் தெலுங்குக்காரர்கள் வேறு விதமாகவும் கட்டுவார்கள். ஆனால் எல்லாமே காலைச் சுற்றி குறுக்காக வந்து புடவை கட்டுவதாக அமையும் இல்லையா?" என்று கேட்டார்.

"ஆமாம், கவனித்திருக்கிறேன்" என்றேன்.

"புடவை சாதாரணமாகக் கட்டும்போது பெண்களின் கர்ப்பப் பை போன்றவை பூமியின் புவியீர்ப்பிற்கு ஆளாகிறது. இதனால் மாதவிலக்குக் கோளாறு முதல் பலவற்றாலும் கஷ்டப்படுகிறார்கள். மடிசார்

கட்டாமல் வாசற் படியைத் தாண்டக் கூடாது என்றெல்லாம் அந்தக் காலத்தில் அதனால்தான் சொன்னார்கள். மடிசார் கட்டு பூமியின் ஆகர்ஷண சக்தியிலிருந்து பெண்களைக் காப்பாற்றுகிறது. இது விஞ்ஞானபூர்வமானது.

குறிப்பாக பண்டிகை போன்ற தெய்வீகக் காலங்களில் இந்தக் கட்டு நம்மை பூஜையில் மனம் ஒன்றச் செய்வதற்கு மிகவும் உதவும். தியானம், யோகா பழகுகிறவர்கள் இப்படி உடுத்திக் கொண்டு செய்தால் மிகச் சிறப்பாக மனம் ஒன்ற முடியும்'' என்றார்.

நான் ஒரு பாயிண்ட் கிடைத்தது என்று ''அப்போ சுடிதார் பேண்ட் போட்டுக் கொள்வது நல்லது என நவீனப் பெண்கள் சொல்ல ஆரம்பித்து விடுவார்களே'' என்றபோது கோபப் படாமல் சிரித்தார்.

''நம்முடைய தெற்குப் பகுதி உஷ்ணத்திற்கு ஏற்றவாறு நம்முடைய பெரியவர்கள் உடைகளை ஏற்படுத்தி இருக்கிறார்கள். கடுங் குளிர்ப் பிரதேசங்களுக்கு ஏற்றவாறு அவர்கள் உடுத்திக் கொள்கிறார்கள். அதையெல்லாம் நாம் போட்டுக் கொண்டு பிறகு உடம்பு பூரா வியாதியைப் பட்டியல் போடுவதால் என்ன பிரயோஜனம்''

என்றவரை எங்கள் கடையிலுள்ள புடவைகளைப் பார்க்கச் சொன்னேன்.

அப்போதுதான் நவராத்திரிக்காக வந்திருந்த புதிய ஒன்பது கெஜப் புடவைகள் அவரை மிகவும் கவர்ந்தது. 'பாலிகாட்'டில் இதுவரை யாருமே ஒன்பது கெஜம் போடாததை நாங்கள் அறிமுகப்படுத்த இருந்தோம். அதைப் பார்த்து விட்டு 'இதற்குப் பெயர் வைத்து விட்டீர்களா' என்றார். இல்லை என்றவுடன் 'யோக காயத்ரி' என வையுங்களேன் என்றார். மிக அழகாக அமைந்திருந்த அந்தப் பெயர் எங்கள் எல்லோருக்குமே பிடித்திருந்தது. ஆறு கெஜப் புட வைக்கும் 'தாரணி' எனப் பெயர் வைத்தார்.

வருடா வருடம் கோலாகலமாக நடக்கும் எங்களுடைய தீபாவளி விற்பனை பற்றியும் சொன்னேன். இந்த வருடம் அதே போல தங்க மோதிரம், வெள்ளி காமாட்சி விளக்கு என இருநூறுக்கும் மேலே பரிசுகள் கொடுக்கப் போகிறோம் என்றபோது சந்தோஷப்பட்டார். அப்போது அவருடைய பெயர் விவரம் எல்லாம் கேட்கத் தோன்றவில்லை. ஒரு



## புதுமையான பால் குருமா

குருமா தயாரிக்கும்போது தேங்காய் வீட்டில் இல்லாமல் போனாலோ (அ) தேங்காய் அரைத்து விட நேரமில்லாமல் இருந்தாலோ, தேங்காய் அரைத்து விடுவதற்கு பதிலாக 1 டம்ளர் பசும்பாலை குருமா இறக்கும்போது ஊற்றி ஒரு கொதி வந்ததும் இறக்கி விட்டால் போதும். ½ ஸ்பூன் மிளகுத் தூளும் போட்டு விட்டால் புதுமையான பால் குருமா தயார்.

எந்தக் குருமா செய்வதாக இருந்தாலும் ½ ஸ்பூன் மிளகுத் தூளை சேர்த்துக் கொண்டால் சுவையும் கூடும். உடலுக்கும் நல்லது.

— வசந்தா வில்வநாதன்

மத்தியான நேரத்தில் வந்த அவர் மீண்டும் வருவாரா என பார்த்துக் கொண்டு இருக்கிறேன்" என்றவர் மடிசார் சம்பந்தமாக அதற்குப் பிறகு பல செய்திகளைப் பலரிடமும் கேட்டுத் தெரிந்து கொண்டேன் என்று எழுதியே கொடுத்து விட்டார்.

இறை வழிபாட்டை ஏனோதானோ என்று வேண்டா வெறுப்பாக ஒப்புக்குச் செய்யாமல் உறுதியுடனும், ஈடுபாட்டுடனும், உள் முகத்தோடும் அதன் மகத்துவமறிந்து செய்ய வேண்டும். மடிசார் கட்டு என்பது பெண்களின் மனதில் ஒரு பக்திப் பரவசத்தை உண்டு பண்ணி பூஜைக்கு ஏற்ற மனநிலையை உருவாக்கி விடுகிறது. இது ஒரு சுயகட்டுப்பாடே. திருமணமான பெண்கள் மடிசார் கட்டிக் கொண்டு தெய்வ காரியங்களில் ஈடுபட்டால் கணவரின் ஆயுள் விருத்தியாகும் வளரும் என்பது ஐதிகம். விசேஷ காலங்களில் மடிசார் கட்ட வேண்டும் என்பது சம்பிரதாயம். எனவே பூஜை பண்டிகைகள், ஆச்சார்யாள் போன்ற ஆன்றோர்களை தரிசிக்கும் போதும் மடிசார் கட்டுவது வழக்கம்.

நீதி, மருத்துவம், காவல், இராணுவம் போன்ற துறைகளில் பிரத்யேக உடைகள் அணிவது போல திருமணத்தின்போது மாங்கல்யதாரணம் நடக்கும் தருவாயில் பெண்ணுக்கு மடிசார் கட்டி மங்களகரமான பொலிவை தோற்று விக்கிறார்கள். இதன்பின் திருமணமான அந்தஸ்துடன் பெண்கள் பங்கேற்கும் எந்த நிகழ்ச்சியிலும் குறிப்பாக தெய்வ காரியங்களிலும், வழிபாடுகளிலும், சடங்குகளிலும் மடிசார் கட்டுவது அவசியமாகிறது. மடிசார் கட்டிய பெண்ணைப் பார்க்கும்பொழுது ஒரு தெய்வாம்சமுடன் தோன்றுவது மறுக்க முடியாத ஒன்று. சிவன் அர்த்தநாரீஸ்வர தோற்றத்தில் இருக்கும் சிலைகளை உற்று நோக்கும்போது உமையவளின் தோற்றம் மடிசார் கட்டில் இருப்பது குறிப்பிடத்தக்கது.

நவராத்திரி பண்டிகை என்பது கன்னிப் பெண்கள், சிறுமிகள் ஆகியோர் இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி என அம்பாளை ஒவ்வொரு சக்திக்கும் மூன்று நாட்களாக ஒன்பது நாட்கள் உபாசித்து அந்த மூன்று சக்திகளின் சாராம்சத்தை தங்கள் இயல்பாக மேற்கொள்ள ஒரு வாய்ப்பு.

நம்முடைய நல்ல பாரம்பரிய மிக்க சம்பிரதாயங்களை இன்றைய தலைமுறைக்கேற்ப உருவாக்கி அவர்களுக்கு நம் பெருமைகளை உணர்த்த வேண்டும். நம் புராதான சம்பிரதாயங்களின் நல்ல அம்சங்களை எடுத்துச் சொல்ல வேண்டும்.

தினமும் காலை எழுந்தவுடன் ஒரு பத்து நிமிடமாவது "இறைவன் தெய்வீக ஒளியாக" நம் இதயத்தில் நிரம்பி இருப்பதாக ஒரு பாவனையோடு இதயத்தின் மேல் தியானம் செய்வது நல்லது. அதிகாலையில் நாம் இதைச் செய்து வந்தால் நாள் முழுவதும் அந்த தெய்வீக எண்ணமானது நம்முள் இருக்க வாய்ப்பு அதிகம்.

அதுவும் நவராத்திரி போன்ற பண்டிகை காலங்களில் தெய்வீகச் சிந்தனைகளை வளர்த்துக் கொண்டால் கோபம், படபடப்பு, பொறாமை என பல குணங்கள் மறையும். நாம் நல்லவர்களாவோம். இதுதானே 'அசுரன் மறைந்து அம்பிகை வெற்றிப் பெறுகிறாள்' எனும் தத்துவார்த்தமான மகிஷாசுர வதம்!

பேட்டி: துர்கா பரமேஸ்வரி

Group) பணிபுரியும் வரனுக்கு மணமகள் தேவை. முகவரி : B.V. Sambamurthy, 3, Club Road (Opp. Dr. Ramachandran's House), Rajendra Nagar, East Tambaram, Chennai - 600 059.

❖ ஐயர், வடமாள், ஸ்ரீவத்ஸம், அனுஷம், 27 (பி.எஸ்ஸி.) சென்னை தனியார் 2500/- காட்பாடி சொந்த குடியிருப்பு மணமகனுக்கு தகுந்த இதே இன நடுத்தரக் குடும்ப உள்ளூர் பணி/பணியில்லாத குடும்பப்பாங்கான மணமகள் தேவை. முகவரி : ஏ.எஸ். வீரராகவன், 20, கடம்பர் தெரு, தாராபடவேடு, காட்பாடி, வேலூர் - 632 007.

❖ Iyer, Vadama, Koundinya, Poosam, 30/180cm., B.E., M.S., California, handsome, smart, affluent, Teatotaler, H-I Visa boy, coming shortly, seeks alliance from decent family P.G. girls below 25 years. Contact : Mrs. Rajalakshmi, V., 6, "Gomathi" 12/13 Rangappa Street, West Mambalam, Chennai - 600 033.

❖ Tamil, Iyer, Vadamal, Srivatsa, Sadhyam, 30, B.A.B.L., 6 ft, Flat Promoter, Petroleum Dealer Chennai. Rs. 30,000/- Requires good family girl. Domestically well trained. Contact with horoscope. Venkatasubramanian, 1, Thriuvengadam St., Mandavelli, Chennai. Phone : 4951656 - 4421610.

❖ Vadamal, Revathi, 43, B.Sc., CAIIB - 11,700 clean habits, unfortunate, unintentional divorcee, minor bony deformity normal appearence, seeks broad-minded, understanding Iyer girls. Respond with horoscope. Phone : 403532. R. Pappa, No. 3, Maraimalai Addicalar St., Muthamil Nagar, Pammal, Chennai - 600 075.

❖ சோழிய வெள்ளாளர், பி.காம்., 27/164, TNEB Govt. ரூ.6,000/- சென்னையில் பணிபுரியும் பையனுக்கு தகுந்த மணமகள் தேவை. முதலியார் உட்பிரிவுகள் சம்மதம். பணிபுரியும் பெண்ணாக இருந்தாலும் நலம். குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். முகவரி : S. Sivanesan, No. 40, Sakthi Nagar, Adambakkam, Chennai - 600 088.

❖ வாத்திமாள், காஸ்யப, பூரம், 28, டிசசு, கோத்தாரி கம்பெனி, ரூ. 3000/- நல்ல தோற்றமுள்ள வரனுக்கு, நல்ல குடும்பத்தைச் சேர்ந்த படித்த, அழகான, வேலை பார்க்கும் பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகம், போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். முகவரி : A. Narayanaswamy, 21, East VII Street, Pudukottai - 622 001.

❖ Vadamal, Srivatsam, Uthiradam, 25/175cm/15000/ - well settled doing Business/+2 Dip. in Photography needs good looking, home loving girl below 23 years. Contact : R. Muthusamy, 3, Loganathan Colony, Mylapore, Chennai - 600 004. Ph : 4983904, 4983959.

❖ தமிழ், விஸ்வகர்மா, சதய நட்சத்திரம், வயது 27, எம்.காம்., 167/4000 எல்.ஐ.சி.யில் வேலை செய்யும் மணமகனுக்கு நன்கு படித்த மிகுந்த அழகும் இனிய குணமுடைய பெண் அல்லது மாற்றத்தக்க அரசு வேலை எல்.ஐ.சி.யில் செய்யும் பெண் தேவை. முகவரி : எஸ். ஹரிஹரன், 241/1, முதல் தெரு, காமராஜர் நகர். தொரப்பாடி, வேலூர் - 632 002. போன் : 35678

## மணமகன் தேவை

❖ Tirunelveli Saiva Pillai/24/166cm/M.A.M.Phil (Eng. lit.) Rohini seeks State/Central Govt./LIC/Bank/MNC employed boy from good family of same Community. Apply to Box No. 24708

❖ Alliance invited for very fair, beautiful, Viswakarma M.E., Computer Science girl from Doctors/Engineers/ Professional Viswakarma Community well employed. Groom in the age of 30 to 35. Box No. 24709

❖ Madhwa, Desistha, Bharadwaja, Poosam, B.Sc., 40/153 cm employed in State Bank of India seeks employed, bachelor groom 41-43, with clean habits, simple marriage. No Divorcee. Brahmins only. Box No. 24710

❖ Sourashtra alliance invited for a fair, Slim, good-looking girl B.Com./25/156 cm employed Computer Diploma holder Bombay based Star Magam, Gothram Doorvasharishi. Parents Thanjavur. Brothers, sisters, parents settled in Bombay. Reply with horoscope to Box No. 24711

❖ Alliance invited from Broad-minded grooms for Palghat Vadama parents only daughter, Naithrupakasyapa, Pooram, 25/160, M.Sc., M.Phil., working as Lecturer in City College, Impaired vision on the right eye wearing contact lens. But looks normal, fair domestically well trained. Contact Box No. 24713

❖ இந்து, முத்துராஜா, வயது 28, திருமணமாகி 3 மாதங்களில் வரதட்சணைக் கொடுமை காரணமாக விவாகரத்துப் பெற்ற பெண்ணிற்கு மணமகன் தேவை. மணமகன் தொழில் விவரங்கள் தெரிவிக்கவும். பெட்டி எண் : 24716

❖ Tamil Iyer, Brahacharanam, Bharadwajam, Bharani 165/23 Public Sector, Computer Software Engineer (BE) requires bridegrooms Professionally qualified clean habits Madras/Trichy/Bangalore/Hyderabad based. Public Sector/MNC or NRI's. Box No. 24717

❖ Kowsikam, Vadamal, Anusham, 26/4.10", M.A., B.Ed., only daughter, middle class family seeks well educated/ employed boys. Subsects no bar. Box No. 24718

❖ Tirunelveli Saiva Vellala parents of a fair girl aged 24 years, a Chartered Accountant, born and brought up in Bangalore seek suitable alliance proposals from well qualified and well placed bridegrooms from Tirunelveli Saiva Vellala families. Please apply with details and horoscope to Box No. 24719

❖ Wanted professionally qualified and decently employed boy within 28 years for Iyer, Brahacharanam, Kousikam, Uthiradam, 22/5'.4", B.Sc., B.Ed., fair, good-looking and homely girl. Reply to Box No. 24720

❖ Iyer, Vadamal, Kettai, Srivastha, Medium Complexion girl. 22/160/ICWA (Inter). Postal Assistant, Bright Career Advancements. Alliance invited from suitably qualified/well settled Iyer Grooms. Subsects acceptable. Box No. 24721

❖ இந்து, சிர்கருணீகர் சுத்த சைவம், வயது 27, விசாக நட்சத்திரம், சிவமித்திர மகரிஷி கோத்திரம், (எம்.காம்.) பெண்ணுக்கு அதே இனத்தைச் சேர்ந்த வரன் தேவை. ஜாதகத்துடன் எழுதவும். பெட்டி எண் : 24722

❖ மாத்வா கன்னடம், காசியபம், பாகநாடு, பூரம், 26/150 செ.மீ., பி.எஸ்ஸி., (கணிதம்), மற்றும் கம்ப்யூட்டர் கோர்ஸ், டைப்ரைட்டிங் படித்துள்ள பெண்ணுக்கு தகுந்த இதே இனத்தைச் சேர்ந்த அரசு/தனியார் வேலையில் உள்ள மணமகன் தேவை. பெட்டி எண் : 24723

❖ Wanted suitable alliance for Palakkad Brahacharanam Iyer girl, Viswamithra Gothram, Chatayam Star, 26/152/B.A., employed in Private Company, Chennai. Reply with horoscope and family details to Box No. 24724

❖ முதலியார், பூசம், 8-ம் வகுப்பு, 24/150/1200, தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் அழகான, குடும்பப்பாங்கான சிவந்த நிறமான பெண்ணிற்கு, தகுந்த பணியிலுள்ள வரன் தேவை. எளிய திருமணம். உட்பிரிவு சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 24725

❖ Wanted well-settled and qualified bachelor Brahmin for Bombay based bride, 45 years, youngish looks spinster, 163 cms, fair, graduate, home-loving, decent family. Star Anusham, Suddha Jatakam, Haritha Gothram. Decent simple marriage. Reply Box No. 24726

❖ Alliance invited for Vadamal, Vadhulam, Pooram III Padam, Simha Rasi, 24/160 B.Sc., (Che) GNIIT, domestically well trained, seeks professionally employed boy below 30 years. Box No. 24727

❖ முதலியார், இந்து, உத்திராடம் 3-ம் பாதம், வயது 41, எம்.ஏ., அரசுப் பணி ரூ. 6500/- பெண்ணிற்கு, அதே இனத்தில் மணமாகாத/மனைவியை இழந்து/சட்டப்படி விவாகரத்து பெற்று குழந்தைகள் இல்லாத பட்டதாரி 43-47 வயதிற்குள் அரசு/தனியார்/சொந்தத் தொழிலில் உள்ளவர்கள் கண்டிப்பாக ஜாதகம் மற்றும் குடும்ப விவரத்துடன் முதலிலேயே விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 24728

❖ சேலம், இந்து, குரும்பர், 28/5', B.Sc., PGDCAS., மாநிறம், சைவம், திருமணமாகி ஒரு மாதத்திலேயே பிரிந்து விவாகரத்து பெற்ற பெண்ணுக்கு நல்ல குணமுள்ள மணமகன் தேவை. குழந்தை இல்லாத விவாகரத்தானவர்/குழந்தை இல்லாத மனைவியை இழந்தவர்/திருமணமாகாதவர்களும் விண்ணப்பிக்கலாம். ஜாதி, மதம் தேவையில்லை. பெட்டி எண் : 24729

❖ Middle Class Saivam Pillai parents invite proposal for their daughter 26/5'.1 Magam working in reputed college from professionally qualified eligible boys. Settled in Bombay preferred. Caste no bar. Box No. 24730

❖ Telugu Brahmin girl, Pooram, 31/154 graduate fair, Good-looking employed Nationalised Bank Chennai musically talented seeks Telugu/Any South Indian Brahmin Boy. Graduate well employed/established business. Box No. 24731

❖ வடமாள், காசியப, சதயம், 28/5.2" 2500/- எம்.காம்., பி.சி.ஏ. தனியார் பள்ளியில் ஆசிரியையாக வேலை பார்க்கும் பெண்ணிற்கு (அரசுப் பணி/தொழில்) பட்டதாரி மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 24732

❖ ஆற்காடு முதலியார், பூரம், 22 வயது, 161 செ.மீ., படிப்பு (எம்.காம்.) பெண்ணுக்கு இன்ஜினியர் அல்லது மத்திய மாநில அரசில் பணிபுரியும் மணமகன் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். தொலைபேசி எண் : 6444541. பெட்டி எண் : 24733

❖ Madhwa Deshastha, Viswamitra, Poorattadhi, 29/155, employed graduate, Good-looking, domestically trained girl, seeks alliance from well placed Madhwa/Smartha, Marathi/Kannada Groom. Box No. 24734

❖ For Vellala Mudaliar girl, 30/154, M.Com., Avittam, 3rd padam, Pure Jathagam, Vegetarian, fair, good-looking, Steno-grapher, Income-tax Deptt. Nagpur. (groom preferably Mumbai/North Based). Send Bio-data to Box No. 24735

❖ Wanted a tall, well placed Professional in Chennai for Iyer, Beautiful Brilliant Eminent Practising Lawyer, Spinster 35/170. Bachelors, Issueless Widowers apply with details to Box No. 24736

❖ Vadamal, Vadhoolam, Ashwini, Dec. 73, 160Cm, M.Sc. Physics, Computer, Literate Medium, Complexion, only Daughter, Private, Firm, Shenoy Nagar, Chennai. Seeks Qualified well employed lively Groom from respectable family. Box No. 24737

❖ நான் ஸ்மார்த்த வடமாள், 36, புனர்வசு, ஆறு வயது பெண் உண்டு. தனியார் பள்ளி ஆசிரியை, பரஸ்பர விவாகரத்து, சட்டபடி தரப்பட்டவள், நீங்கள் 42க்குள் உட்பட்டவராய், மனைவியும் குழந்தையும் இல்லாதவராய் பரஸ்பர விவாகரத்து பெற்றவராய், இன்னும் திருமணமாகாமல் ஸ்மார்த்த அந்தணராய் இருப்பின் மட்டும் முழு விவரமும், ஜாதகமும், ஸர்மா பெயருடன் அனுப்பவும். குருவின் ஆணைப்படி.பெட்டி எண்: 24738

❖ Iyer girl, 32/160cms graduate very fair, good looking innocent divorcee immediately after marriage seeks. Really well placed divorcee/widower without encumbrance/bachelors from good family upto 38 years. Horoscope optional. Box No. 24739

❖ Vadagalai, Kousikam, Mirugaserisam, B.Com., 30/165 Executive Secretary good looking, divorcee without encumberance. Seeks Brahmin groom upto 35 years bachelors/divorcee without encumberance employed India/Abroad. Box No. 24740

❖ For Iyer girl, Astasahasram, Srivatsa, Mrigaseersha, 27/165 cms, B.Com., with Computer Diploma working in Private Company, fair, good-looking innocent divorcee without encumbrance, middle class, seeks suitable broad minded Iyer alliance without encumbrance. Box No. 24741

❖ சாலை விபத்தில் கணவரை இழந்த 26 வயது செட்டியார் இன, குழந்தையுள்ள தஞ்சையைச் சேர்ந்த, வைப்பு தொகை மூலம் மாதம் ரூ. 2500 வருமானம் உள்ள, பெண்ணிற்கு மணமகன் தேவை. அரசுப் பணி, வியாபார தொடர்பு உள்ளவர்கள் தொடர்பு கொள்க. ஜாதி, மறுமணம் தடையில்லை. பெட்டி எண் : 24742

❖ Iyer, Brahacharanam, Gowthama, Thiruvonam, very fair, 5'.6", 24, professional, god fearing, home loving, good family background. seeks alliance from well settled broad-minded grooms in India/Abroad. Apply with horoscope with Bio-data. Box No. 24743

❖ Vadama, Tamil Iyer, Non-Srivatsa, Delhi based boy, preferably professionally qualified, for graduate girl, 27/153/Anusham, employed in Foreign mission. Please reply with details and horoscope to Box No. 24744

❖ Vadamal, Bharathwajam, Magam, 7th place Raghu, smart, good-looking, 26/5'.3" M.A.B.Ed., aided School Teacher learning Computer seeks professionaly qualified, settled India/Abroad Boy of same sect. Contact to Box No. 24745

❖ கன்னட மாத்வ பிராமணர், காஸ்யப கோத்திரம், 31/5.1"/5200/- எம்.எஸ்ஸி., பி.எட்., படித்து சென்னையில் தனியார் பள்ளியில் வேலை பார்க்கும் பூரட்டாதி நட்சத்திரம், மணமகளுக்கு இதே பிரிவைச் சேர்ந்த மணமகன் தேவை. பெட்டி எண் : 24747

❖ வாணியச் செட்டியார், 33/850 எஸ்.எஸ்.எல்.சி., தையல் டிப்ளமா பெற்ற, விவாகரத்தான, சிவப்பு நிறம், அழகுடைய பெண்ணுக்கு, 42 வயதுக்குட்பட்ட, குறைந்தது பத்தாம் வகுப்பில் தேர்ச்சியுற்ற, நிரந்தர வருமானமுள்ள, பரந்த மனப்பான்மையுள்ள, சென்னையிலுள்ள, தாரமிழந்த மணமகன் தேவை. ஜாதி தடையில்லை. பெட்டி எண் : 24748

❖ Mudaliar, Thuluvavellala sisters 29, M.A., M.Phil., 160 cms, Swathi, 25 M.Com., 165 cms, Punarpusam fair, good-looking, seeks alliance from Bank/Reputed

:ompanies/Central & State Govts/Business. Subsects no bar. Ph : 596 8959 Box No. 24749

❖ Iyer, Brahacharanam, Nithyandha, Hastham, 24/ B.Com., PGDBA, (ACS), Dip. in Computer Course, seeks professionally qualified groom within 30. India/ Abroad. Ph : 625 3622 Box No. 24750

❖ Aswini, Bharadwaj, Brahacharanam, 23 years, 160cms, Post-graduate, good complexion with Mars in 8th place seeks suitable alliance. Box No. 24751

❖ Vathima, Athreya Puram, 30/165/9000/- Central Government with Quarters girl seeks suitable Brahmin boys. Subsect acceptable. Contact : R. Prabakaran, 38-B, Krishnaswamy St, Ganapathypuram, Chrompet, Chennai - 600 044.

❖ Iyer, Brahacharanam, Koundinya, Sravanam, girl doing B.A., through correspondence 25 years, 5.8", Stenographer, Border Security Force (transferable job) Contact : T.S. Srinivasan, Pocket A-3, H.No. 139 G, DDA Flats, Mayur Vihar Phase III, Delhi - 110 096.

❖ Vellan Chettiar girl, MBBS Doctor, Chennai, 25/ 5.4"/Well employed, wheatish, intelligent, seek well settled Doctors/Engineers/Professional Chettiar boys. Reply wtih horoscope, Bio-data to M.Venkatesan, No. ., Ganesh Street, Gopalapuram, Chennai - 600 086.

❖ சோழிய வெள்ளாளர், திருவாதிரை, வயது 30, டிப்ளமோ (கம்ப்யூட்டர் சயின்ஸ்) வேலையிலுள்ள/மாட்டடம் கம்ப்யூட்டர் கிராபிக்ஸ் இன்ஸ்டிட்யூட் நடத்தும் பெண்ணுக்கு படித்த/குணமுள்ள/நல்ல வேலையிலுள்ள/ தொழில் செய்யும் மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். உட்பிரிவுகள் சம்மதம். முகவரி : ர. கலியமூர்த்தி, 9, நாகேஸ்வரன் கீழ வீதி, கும்பகோணம் - 612 001. போன் : 430 764.

❖ Alliance invited from non-Koundanya Boy, below 30 years for Bombay based Brahacharanam, Thiruvonam, 24/160 cm (M.Com.,) girl, Subsect acceptable. Contact : C.N. Subramaniam, 33, Anniah Reddy Road, Ulsoor, Bangalore - 560 008.

❖ Alliance invited for Naidrupakashyapa, Vadama, Moolam Iyer girl 23/163, B.Com., I.C.W.A.I. (final) from qualified well employed Iyer Boys (India/Abroad) below 29. Contact : Krishnan, 13, Kasturba Nagar, Chennai - 600 020.

❖ Alliance invited from professionally qualified boys or doctor doing PG Vadama, Bharadwaja, Karthigai, 26/161, Subsects acceptable. Contact : Prof. N. Muthukrishnan, 616-C, 13th South Street, Thiagaraja Nagar, Tirunelveli - 627 011.

❖ வாத்திமா, காச்யப, மூலம் 32/162 செ.மீ., எஸ்.எஸ்.எல்.சி., 1500, சென்னையில் பணிபுரியும் வரனுக்கு படித்த நல்ல வேலையில் இருக்கும் மண மகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் போட்டோவுடன் தொடர்பு கொள்ளவும். முகவரி : நா. அப்புசாமி ஐயர், 1எ/1, நரசிம்மன் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை 600 033.

❖ நாயர், பரணி, 29, 5.6", மாநிறம், எட்டாவது வரை படித்த பெண்ணுக்கு நல்ல வேலையிலுள்ள இதே பிரிவைச் சேர்ந்த மணமகன் தேவை. முகவரி : கே. லக்ஷ்மி அம்மாள், நெ. 130/2 பம்மல் மெயின் ரோடு, சென்னை - 600 075.

❖ தென்கலை, ஸ்ரீவத்ஸம், புனர்பூசம், 29, மத்திய அரசு பணிபுரியும் பெண்ணுக்கு மத்திய/மாநில/பொதுத் துறை பணியில் உள்ள தகுந்த வரன் தேவை. வடகலை சம்மதம். முகவரி : K. Gopalakrishnan, 2, Gopalan South Mada Street, Palayamcottai - 627 002.

❖ Vadama, Moudgalya, Anusham, 28/150/3500 employed PVT Company, Chennai seeks groom employed/Business. Girl has slight handicap in Right hand and leg not distinctly visible. Totally self reliant. Slight handicap also acceptable. Ph : 494 1762, Chennai.

❖ Iyengar, Vanniyar intercaste parents need educated, employed Vegetarian, Brahmin or similar groom for their daughter, Srivastava, Hastham, DECE, 25, 148, Normal Complexion. Contact : V. Rathinavalli, B-1, New Raman Nagar, Metturdam - 636 403.

❖ Alliance invited from educated, employed (any) Brahmin boy for Telugu Iyer girl, 24/Bharani, Kasyaba, BBA, BDPS APGDCA, 5'. Contact : Lalitha, 101, Sivakalyan Apt, Phase II, Bhagyanagar Colony, Kukatpally, Hyd - 72.

❖ சோழிய வெள்ளாளர், அஸ்வினி, 26/153, எம்.ஏ. எம்.எட்., தனியார் பள்ளி பெண்ணுக்கு தகுந்த பணியிலுள்ள மணமகன் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். முகவரி : பி. மாரியப்பன், 8பி, ராஜரத்தினம் பிள்ளை தெரு, ராமலிங்க நகர், உறையூர், திருச்சி - 620 003.

❖ மலையாளம், நாயர், சுவாதி நட்சத்திரம், வயது 28, பி.எஸ்ஸி., கணிதம், சொந்தத் தொழில், மாதம் ரூ. 10,000/- இதே இனத்தைச் சேர்ந்த அரசு (அ) தனியார் நிறுவனத்தில் நிரந்தரப் பணியில் உள்ள மணமகன் தேவை. முகவரி : கே. ஜானகி அம்மாள், 64, தம்மண்ணன் ரோடு, அரிசிப்பாளையம், சேலம் - 9.

❖ வடமாள், ஹரித கோத்திரம், ஆயில்யம் முதல் பாதம், பி.காம்., 23/5'.4", Fair பெண்ணிற்கு, நல்ல உத்தியோகத்தில் உள்ள நல்ல வரன் தேவை. முகவரி : ஜி. சுப்ரமணியம், சைட் நெ. 95, ஈ.பி. காலனி, வடவள்ளி, கோவை - 641 041.

❖ சோழிய வெள்ளாளர், 26, பி.எஸ்ஸி., பூரம், மணமகளுக்கு நன்கு படித்த, வேலையிலுள்ள, சுயதொழில் செய்யும், இதே இனத்தில் மணமகன் தேவை. முகவரி : M. Ramalingam, 18, Kasiviswanather North St., Kumbakonam - 612 001.

❖ வடமாள், வாதூலம், மிருகசீரிஷம், 28/160/எம்.காம்., கம்ப்யூட்டர்ஸ் படித்த பெண்ணுக்கு இதே இனத்தைச் சேர்ந்த நல்ல வேலையில் உள்ள 33 வயதிற்குள் பட்டதாரி மணமகன் தேவை. முகவரி : வி. சேஷாத்ரிநாதன், 24, பிள்ளையார் கோவில் தெரு, மேட்டுப்பாளையம், மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.

❖ Alliance invited from Non-Srivatsa parents of qualified and decently employed boys for fair, Punarpoosam girl, 27, ht. 5'.4", B.Sc., C.A. Inter, ICWA Inter, Diploma in Computerised Accounting employed as Faculty in a Computer Centre. Contact : R. Balasubramanian, 2029, Ellaiamman Kovil St., Thanjavur - 613 009.

❖ Telugu Brahmin girl, B.Sc., MCA, 25/155 fair, slim, Jamadagni Gothram, Punarvasu 4, seeks alliance from same community. Professionally qualified preferably software within 30. Contact with horoscope to Ramachandran, 55, 2nd Cross, NTI Layout, Vidyaranyapura, Bangalore - 560 097. E-mail. luxme@hotmail.com.

❖ Vadamal, Raksha Gothram, Ayilyam, Spinster, 36/ 150 Officer in LIC seeks Graduate employed groom. Contact : T.N.Ramamurthy, "Sri Ganapathy Nivas", 7-24/15, Pattinathar St., Sri Ram Nagar, Kottaiyur (po) - 630 106.

❖ Iyer, Brahacharnam, Kousikam, Sadayam 34/150. SSLC, fair, home loving girl, boys with in 40 employed Central/State/Private sector can apply Sundararajan, 64, Mangamma Nagar, Srirangam, Trichy - 620 006.

❖ Wanted decently employed groom for graduate Naidu Andhra girl very fair, 25 years. 5.4", divorcee well accomplished caste language no bar except SC ST refer Mukunda Rao Lakshmi Medical Stores, Seetharamapuram, Eluru Road, Vijayawada - 2.

❖ பாதராயணம், அஷ்டசகஸ்ரம், கேட்டை 22/பி.காம்., doingAcs, 5.3", கம்ப்யூட்டர் படித்த பெண்ணிற்கு Professionally qualified, decently employed வரன் தேவை. விவரங்களுக்கு ஜி.ஆர். மகாதேவன், 5, கேசவப் பெருமாள் மேல வீதி. மயிலாப்பூர், சென்னை - 600 004. தொ. 4940823/4935537

❖ Vadama, Haritha, Pooram, B.Com., ICWAI final (last group), 17-6-72, 170cms, very fair, slim, good-looking girl seeks professionals. Send horosocpe to K.V. Sitaram, Manager, UCO Bank, Swaraj Round, High Road, Trichur - 680 001.

❖ Iyer, Vadamal, Srivatsam, Kirthikai, Rishabam Chevvai dosham, 22/158 slim, fair, graduate Nutrition CNSD seeks alliance upto 27 from qualified well settled grooms with good family, back ground. Contact : J. Ramanan, E-54, Ambedkar Street, Block 20, Neyveli - 607 803.

❖ ஐயர், அஷ்டசகஸ்ரம், காஸ்யப, சதயம் 23/பி.காம்., Type/Computer knowledge மணமகளுக்கு தகுந்த அரசு/தனியார் வேலையிலுள்ள மணமகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகம், குடும்ப விவரத்துடன் தொடர்பு கொள்ளவும். முகவரி : எஸ். சங்கரராமன், சி-56, புகழேந்தி சாலை, வட்டம் -2, நெய்வேலி - 607 801.

❖ Vadama, Bharadwajam, Thiruvadhirai, Rahu in Lagnam, 23/5'.4½", B.Com., PGDCA, doing ICWA, wheatish, homely girl seeks professionals, well employed. Contact : G. Venkatesan, F2/5, 12th Cross Street, Indira Nagar, Chennai - 600 020.

❖ Iyer,Vadama Srivatsa, Uthiradam, 24/169cms, M.A. final medium complexed girl seeks well qualified groom employed India/Abroad. Early marriage. Contact : Advertiser, 945, Adarsh Nagar Layout, Arishina Kunte, Nelamangala Taluk, Bangalore - 562 123.

❖ பேரி செட்டியார், சைவம், வயது 27, எம்.ஏ., லிட்டரேச்சர் படித்த பெண்ணுக்கு நன்கு படித்தவராக வும், சைவ குடும்பமாகவும் உள்ள மாப்பிள்ளை தேவை. முகவரி : K. G. Janarthanan, Sri Raghavendra Saree Centre, Shop No. 4, Sindur Towers, (Near Alwarpet Signal, 95, Luz Church Road, Chennai - 600 004. Ph: 4992598, 4342399.

❖ US based match for Iyer girl, 34, Thiruvadirai, USMD, greencard holder, Professor of Medicine, in a leading US university. Send Bio-data & Photo to K.V. Ramanathan, 19311 63rd Avenue. NE, Scattle, WA 98155. U.S.A.

❖ செங்குந்தர், சுவாதி, 29, 5', பி.ஏ. நல்ல சிவந்த பெண்ணிற்கு எம்.பி.பி.எஸ்./பி.இ. அரசு, தனியார் நிரந் தரப் பணியாற்றும் மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். முகவரி : எம். நடராஜன், 6, மாணிக்க வாசகர் தெரு, எழில் நகர், தஞ்சாவூர் - 613 007.

❖ செங்குந்தர் 28, 152 செ.மீ., பி.எல். படித்து மூலிகை வைத்தியம் செய்யும் ஆயில்யம் நட்சத்திரம் உள்ள மணமகளுக்கு அரசு தனியார் பணி மற்றும் தொழில் வியாபாரம் செய்யும் அதே இன தகுந்த மணமகன் தேவை. முகவரி : டாக்டர். எம். சபாபதி, 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, கெல்லீஸ், சென்னை - 600 010.

❖ தமிழ் விஸ்வகர்மா பெண் வயது 30, மக நட்சத்திரம், நல்ல நிறம், நல்ல தோற்றம், மெலிந்த சரீரம், 152 செ.மீ., படிப்பு +2 பாஸ், தையல் மற்றும் சமையல் கலை நன்றாகத் தெரியும். சராசரி உயரம், நல்ல தோற்றத்துடன், நன்கு படித்து வேலையில் உள்ள வரன் பார்க்கிறோம். தொடர்பு கொள்ள : கே. சங்கரன், 43, சுவாமிமலை மெயின்ரோடு, மேலக்காவேரி (அஞ்சல்), கும்பகோணம் - 612 002.

## மணமகன்
## மணமகள் தேவை

❖ ஐயர் பிரஹசரணம், ஷடமர்ஷணம், உத்திரட்டாதி, 38, M.Com., D.I.L., மத்திய அரசுப் பணி ரூ. 10,000/- இதே இனத்தைச் சேர்ந்த பட்டம் படித்த குடும்பப்பாங்கான பெண் தேவை. மேற்படி குடும்பம் சேர்ந்த மூலம் 34, பி.எஸ்ஸி., படித்த பெண்ணிற்கு பட்டம் படித்த அரசு மற்றும் தனியார் வேலையிலுள்ள மணமகன் தேவை. பெட்டி எண் : 30463

❖ Iyer, Brahacharanam, Athreya bride, 28, 160, Revathi, B.Tech., employed, Bridegroom 30, 168, Krithigai, M.SC., (Tech) Comp. Sci. M.Sc., (Hons) Maths employed in USA wants to settle in India. Box No. 30464

❖ Iyer, Brahacharanam, Sankrithi, Bride to Sathayam, 36, B.Com., 5'.9", 6,000/- Rane Brake Linings Ltd., Chennai. Bridegroom to Uthradam, 27, B.Sc., B.Ed., PGDCA, 5'.4", Apply to V. Lakshmanan, 28, Tennur High Road, Trichy - 620 017.

❖ இந்து சோழிய வெள்ளாளர், சகோதரன்: சுவாதி, பி.ஏ./30/168/6000. இராணுவத்தில் (எம்.ஈ.ஜி.) பெங்களூரில் பணிபுரியும் மணமகனுக்கு டிகிரி படித்த அழகும், குணமும் நிறைந்த பெண் தேவை. சகோதரி : ரோகிணி, பி.ஏ., (பி.காம்.), 28/160, 4-ல் செவ்வாய் தோஷம் உடைய மணமகளுக்கு டிகிரி படித்து அரசு/தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் மணமகன் தேவை. என். நாகரத்தினம் அம்மாள், 15, ராஜாஜி தெரு, அய்யப்ப நகர், திருச்சி - 21. போன் : 459 448.

❖ Kaundinya, Vadama, Punarpoosam, 32/5'.6"/+2/10,000 Business, seeks educated homely girl and sister, Moolam 25/5'.5", fair, Metric seeks educated employed Boy. Annapoorani, 6 PE Koil West Mada Street, Ayanavaram, Chennai - 600 023.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. MANJULA RAMESH
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097
Telephones — Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621
Annual Subscription : India Rs. 150/-; Overseas : Rs. 750/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 75/-; Overseas : Rs. 375/- (Air Mail)

# உங்கள் குழந்தை சுறுசுறுப்புடன் இருக்க சமச்சீரான போஷாக்கு மிகவும் அவசியமானதாகும்.

றுசுறுப்புடனும், துடிப்புடனும் விளங்க உதவும் சக்தியை பெற உங்கள் குழந்தைக்குத் தேவை 'சரியான' கலோரிகள். **புரோட்டீன்கள், கார்போஹைட்ரேட்டுகள் மற்றும் கொழுப்புச்** சத்துக்களின் பொருத்தமான சமச்சீர் அளவில் இருந்து மட்டுமே இந்த லோரிகள் கிடைக்கின்றன.

ந்த 'சரியான' கலோரிகளை பெற உதவும் மிகச் சிறந்த வழி **போஷாக்கு நிறைந்த மச்சீர் உணவு ஆகும்.**

ங்கள் மருத்துவரையே கேட்டுப்பாருங்கள். **4 மாதங்களுக்குப் பிறகு** உங்கள் ழந்தைக்கு தாய்ப்பால் மட்டும் போதாது என்பதை அவர் சொல்வார். எனவே ங்கள் குழந்தைக்கு இப்போது தேவை, போஷாக்கு நிறைந்த சமச்சீரான திட ஆகாரம். தினந்தோறும்... வாரமும் தோறும்...

ஆகவேதான் தாய்மார்கள் **செரிலாக்கை** பெரிதும் நம்புகிறார்கள். போஷாக்கு நிறைந்த சமச்சீரான திட ஆகாரமான செரிலாக்கில் பாலும் கோதுமையும் உள்ளது-புரோட்டீன் சத்தின் செழுமையான இரு ஆதாரங்கள். செரிலாக்கில் கொழுப்புச் சத்துக்கள், கார்போஹைட்ரேட்டுகள், இரும்புச் சத்து மற்றும் கால்ஷியம் ஆகியவை சரியான அளவில் உள்ளன. மேலும் இது விட்டமின்கள் A, D, E, C மற்றும் B-காம்ப்ளக்ஸ்-ஆல் செறிவூட்டப்பட்டுள்ளது.

எல்லாவற்றுக்கும் மேலாக, செரிலாக் நெஸ்லேயின் புரட்சிகரமான **-லைன் என்ஸைமேடிக் டெக்னிக்கால்** தயாரிக்கப்படுகிறது. இச் செய்முறையால் தானியமானது ப்ரீ-டைஜஸ்ட் செய்யப்பட்டு விடுகிறது. ஆகவே குழந்தை செரிலாக்கை வெகு எளிதாக ஜீரணித்து விடும். மேலும் செரிலாக், மென்மையானது, சுவை மிகுந்தது.

எனவே 4 மாதங்களுக்குப்பிறகு உங்கள் குழந்தைக்கு செரிலாக் அளியுங்கள். ஏனெனில் இதிலுள்ளது 'சரியான' கலோரிகள். இது போஷாக்கு நிறைந்த சமச்சீரான திட உணவாக இருப்பதால் ங்கள் குழந்தை சுறுசுறுப்புடனும், துடிப்புடனும் விளங்கும்.






**ங்கள் குழந்தைக்கு செரிலாக் அனுகூலத்தை அளியுங்கள்.**

**இலவசம். செரிலாக் பேபி கேர் புக்.**
உங்கள் குழந்தையின் வயது/பிறக்கக் கூடிய தேதி, உங்களுக்கு விருப்பமான மொழி ஆகிய விவரங்களை இம்முகவரிக்கு எழுதவும்:
Cerelac (MI), Post Bag No. 21, New Delhi-110029.

ORTANT NOTICE: MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY. INFANT FOOD SHALL BE INTRODUCED ONLY AFTER 4 MONTHS OF AGE.

त्वपूर्ण सूचना: माँ का दूध आपके शिशु के लिए सर्वोत्तम है। ४ महीने के वाद ही उसे शिशु आहार देना शुरू करें।

# மங்கையர் மலர்



## நவராத்திரி இரட்டைச் சிறப்பிதழ் - II

செப்டெம்பர் '98 இதழுடன் இணைப்பு

# கச்சிதமான கூந்தலுக்குத் தேவை
# கச்சிதமான கண்டிஷனர்.

GARNIER

## Ultra DOUX

**கண்டிஷனர்**

**கூடுதல் பளபளப்பு. கூடுதல் மென்மை. கூடுதல் துடிப்பு.**

சூரிய ஒளி, காற்று மற்றும் அடிக்க
வாருவதால் உங்கள் கூந்த
சேதமடைகிறது. இயற்கைச் சாறுகளை
கொண்டு ஃபார்முலேட் செய்த உல்த்
து என்ரிச்சிங் கண்டிஷனர், மற்
ஷாம்ப்பூகளினால் இயலாத அளவில்
உங்கள் கூந்தலை மிருதுவாக்
உயிர்ப்பித்து, கூடுதல் பளபளப்
மற்றும் மென்மையை அளிக்கிறது.



சேதமடைந்த கூந்தல் | உல்த்ரா தூ கண்டிஷன்ட் கூந்

உலர்ந்த, சாதாரண மற்றும் போஷாக்
குறைவான கூந்தலுக்காக எங்க
தயாரிப்புகளிலிருந்து தேர்ந்தெடுக்கவும்




Ultra DOUX

Interface 10242 TAM

GUARANTEED BY LABORATOIRES **GARNIER**

# இதுவரை பலிக்காத பிரார்த்தனைகளும் இனி பலிக்கும்!

நமக்குப் பலித்த பிரார்த்தனைகள் ஏராளம். பலிக்காதவையும் ஏராளம். நம் திறமை தோற்றபின் பிரார்த்தனையை நாடுகிறோம். அதுவும் தவறினால் நம் கதி என்ன? அது போன்ற பிரார்த்தனையை அன்னைக்குச் செய்தால்,

அது இப்பொழுது பலிக்கின்றது என்பது அன்னை அன்பர்களுடைய அனுபவம். தவறாது பலிப்பதும் வழக்கம். 19 வயதுப் பையனுக்கு பேச்சு நின்றபின் "வேண்டாத தெய்வமில்லை, போகாத கோயிலில்லை, இருக்காத விரதமில்லை, எதுவும் கை கொடுக்கவில்லை" என்றவர் ஆஸ்பத்திரிக்குப் போனார். டாக்டர்கள் இந்த வியாதிக்கு மருந்தில்லை, தெய்வத்திற்குப் பிரார்த்தனை செய்யுங்கள் என்பதைக் கேட்டு மனமுடைந்து வீடு திரும்பியவரை பஸ்ஸில் பார்த்து, மறுநாள் அன்னை தரிசன நாள் எனக் கூறி வரச் சொல்லி சமாதி புஷ்பம் ஒன்று தந்து, பேச்சு நிச்சயமாக வரும் என்றார். அவர் கூறியது வியாழக்கிழமை. ஞாயிறு மாலை பையன் ஒரு வாக்கியம் பேசினான், இரவு முழுவதும் பேசினான், வீட்டிற்கு வந்து விட்டான்.

ஒரு முஸ்லீம் தமிழ் நாட்டிலுள்ள கோயில்கள், மசூதிகள், சர்ச்சுகள் எல்லாவற்றையும் போய்ப் பார்த்து எங்கு சக்தியுள்ளது எனத் தேடினார். வடலூர் சபையில் அவருக்கு ஓரளவு திருப்தி ஏற்பட்டது. அன்னை ஸ்ரீ அரவிந்தர் சமாதியில் அவர் முழுத் திருப்தியடைந்தார். அவர் தமக்கு பூர்த்தியான பல்வேறு பிரார்த்தனைகளை கட்டுரையாக எழுதினார்.

அன்னை ஓர் அவதாரம், தசாவதாரத்தில் பெண் அவதாரமில்லை.

அவதாரம் பெண்ணாக வந்தது.

அன்னையில்தான்,

இந்த அவதாரச் சிறப்பென்ன? நாம் தெய்வத்தை நாடிப் போகிறோம்; அன்னை நம்மை நாடி வருகிறாள். நம்மை அவர் நாடி வருவதால் பலிக்காத பிரார்த்தனைகள் பலிக்கின்றன. பரம்பரையாக நாம் பிரார்த்திக்கும்பொழுது அதிக பட்சம் பிரார்த்தனை பலிப்பது

- அன்னையிடம் பிரார்த்தனை பலிப்பது குறைந்த பட்சம்,
- அன்னை கேட்பதைவிட அதிகமாகக் கொடுப்பவர்,
- கேட்காததையும் கொடுப்பவர்
- கேட்கத் தெரியாததையும் கொடுப்பவர்

கிளார்க் உத்தியோகம் தேடியவருக்கு ஆபீசர் உத்தியோகமும், 2 லட்சம் கடன் கேட்டவருக்கு பாங்கு 4 லட்சம் கொடுத்ததும் அன்னையின் அருள், ஆபீஸ் குமாஸ்தாவாக இருந்து அதுவே பெரிது என்றவருக்கு மேடைப் பிரசங்கமும், தலைமைப் பதவியும், பெரிய வருமானமும், ஊரில் பெரிய அந்தஸ்தையும் அன்னை கொடுத்தபொழுது "இதை யெல்லாம் நான் நினைத்தும் பார்க்கவில்லை" என்றார் அவர்.

தெய்வங்களில் பெண்களுண்டு. அவதாரமாக வந்த முதற்பெண் அன்னையே.

- யோகம் பெண்ணுக்கும் உண்டு
- ஸ்ரீ அரவிந்தர் யோகம் ஆண்களை விடப் பெண்களுக்கே அதிகப் பலன் தரும் என்கிறார்.
- பிறப்பிலேயே பெண்கள் தெய்வ சக்தியை பெறும் அமைப்பைப் பெற்றுள்ளனர்,

என்று அன்னை கூறி விபரமாக விளக்கியதுடன், நம் ஆசிரமத்தில் பெருவாரியாகப் பெண்களைச் சேர்த்தார். அன்னைக்கு 4 அம்சங்களுண்டு எனவும், அவை

- மஹேஸ்வரி
- மஹா காளி
- மகா லட்சுமி
- மகா சரஸ்வதி என்பவை என ஸ்ரீ அரவிந்தர் கூறுகிறார்.

சரஸ்வதியை நாம் கல்விக்குரிய தெய்வம் வீணையும் கையும்... விரிந்த முகமலர் என அறிவோம். ஸ்ரீ அரவிந்தர் ஞானத்தை மஹேஸ்வரிக்

**கர்மயோகி**

கும் வலிமையை -மகா காளிக்கும், இனிமையும் பூரணமும் (perfection) மகா லட்சுமிக்கும், சரஸ்வதிக்கு நுட்பமான, சிறப்பான, அயராத உழைப்பு தரும் ஞானத்தையும் அளிக்கின்றார். ஸ்ரீ அரவிந்தர் சரஸ்வதியைப் பற்றி கூறிய சில கருத்துகள்-

- கலையும், கலைக்குரிய ஞானமும் சரஸ்வதிக்குரியவை.
- தாம் விரும்பியவர்க்கு உள்ளுரை ஞானத்தை நுட்பமாக வழங்குபவர்.
- சூட்சுமமும், பொறுமையும் யோக ஞானமாக நாம் சரஸ்வதியிடமிருந்து பெறுகிறோம்.
- உழைப்பின் சிறப்பை உணர்ந்த கண்ணும், உயிருள்ள கையும் சரஸ்வதி நமக்களிப்பதாகும்.
- உலகை நிறுவும் பயனுடைய அயராத உழைப்பு, தெளிவான நிர்வாகம், சிறப்பான தலைமை, பொறுப்பான திறமை முதலியவற்றை நமக்கு வழங்குகிறார் சரஸ்வதி.
- குறை என்பது அவள் அறியாதது. தவறு அவள் பொறுக்காதது.

புதுவையில் வாழ்ந்த 53 வருஷங்களில் அன்னை பல்வேறு தெய்வங்களுடன் தொடர்பு கொண்டுள்ளார்.

- கடல் தேவதையுடன் உரையாடி தம் கட்டிடத்தை இடிக்கக் கூடாது என்று சம்மதிக்க வைத்தார்.
- விநாயகர் அன்னை முன் தோன்றி தம் கோவிலுக்குப் பிரகாரத்தில் ஆசிரம இடம் வேண்டும் எனக் கேட்டுப் பெற்றார்.
- துர்கை ஆண்டுதோறும் துர்கா பூஜைக்கு வருவார்.



நவராத்திரி கொலுவுக்கு என்று அழைத்திருந்த ஏழெட்டுப் பேர் வீட்டுக்குப் போய் திரும்பினால் வீட்டில் காராமணி, பட்டாணி, மொச்சை என்று பலவிதமான சுண்டல் பொட்டலம் மயம்! என்ன செய்வது?

அடுப்பில் வாணலியைப் போட்டு இரண்டு ஸ்பூன் எண்ணை விட்டுக் காய்ந்ததும் பட்டை சோம்பு மசாலா சேர்த்து இரண்டு வெங்காயத்தையும் தக்காளியையும் பொடியாக நறுக்கிப் போட்டு வதக்கியதும் ஒரு எலுமிச்சம் பழம் அல்லது புளி கரைத்து விட்டு ஒரு ஸ்பூன் சர்க் கரையுடன் மொத்த கடலைச் சுண்டலையும் அதில் கொட்டி ஒரு மசாலாக் கூட்டு தயாரியுங்கள். இரவு சப்பாதிக்கு அதை பரிமாறியதும் பிரமாதம் வீட்டில் எல்லோரும் ரசித்துச் சாப்பிடுவார்கள்.

— குரு. ஜெயலட்சுமி

- தெய்வங்களும், ரிஷிகளும் அன்னை நடத்தும் தியானத்தில் தூண்கள் மீதுள்ள கொரனாசில் உட்கார்ந்து கலந்து கொள்வார்கள்.
- ஆகஸ்ட் 15, '73ல் அன்னை தந்த கடைசி தரிசனத்தின்போது சச்சிதானந்தத்திலிருந்து ஓர் தெய்வம் வந்து தரிசனம் முடியும்வரை இருந்தது.

ஜடப் பொருள்களுடனும், விலங்குகளுடனும் அன்னை தொடர்பு கொண்டவர்.

- தரையில் விரிக்கப்பட்ட கம்பளம் "நான் எவ்வளவு அழகாக இருக்கிறேன்" என்று அன்னையிடம் கூறியது.
- சாதகர் வீட்டில் வளர்ந்த மயில் அன்னை அறைக்கு எதிரில் வந்து நாள் முழுவதும் அன்னையைக் கண்டு திரும்பிப் போய் உயிர் விட்டது.
- அன்னை வளர்த்த 12 பூனைகள் ஆன்மீகத்தை எப்படிப் பெறுகின்றன என சோதனை செய்தார்.
- பால்கனி தரிசனத்தின் வழியாகப் போன கழுதைக் குட்டி நின்று அன்னையை நோக்கியதால், அதன் பக்தியை ஏற்று அதை வாங்கி அன்னை வளர்த்தார்.
- அன்னை வரும் வழியிலிருந்த தென்னை மட்டைகளை எடுத்து ஒளித்தபொழுது அவை குரல் கொடுத்து அன்னையை அழைத்தன.
- பட்டுப் போன மரம், தன்னை வெட்டக் கூடாது என அன்னையிடம் முறையிட்டு காப்பாற்றிக் கொண்டது.
- கோடாலியை மரத்தில் குத்தி வைத்த பொழுது மரம் அன்னைக்கு முறையிட்டு கோடாலியை எடுக்கச் சொல்லிற்று.

### நாம் அன்னையை வணங்குவது எப்படி?

நினைவே வழிபாடு

நெஞ்சமே கோயில் என்பதே முடிவானவை

தூய மனத்தின் நெகிழ்ந்த நினைவே உயர்ந்த வழிபாடாகும்.

### எதற்காக நாம் அன்னையிடம் பிரார்த்திக்கலாம்?

யோக இலட்சியங்களைத் தவிர்த்து வாழ்வில் அரிதான நெஞ்சம் நிறைந்த மன நிம்மதிக்கும், வளமை நிறைந்த வாழ்வுக்கும் பிரார்த்தனை செய்தால், பிரார்த்தனை முடியுமுன் அவை பலிக்கும். அன்னை மகா லட்சுமியானதால், செல்வம் அன்பர்கட்கு தவறாது பெருகும். அன்பர்கள் அனுபவங்களில் முக்கியமானவற்றைக் கூறுகிறேன்.

- இதுவரை எனக்குப் பலிக்காத பிரார்த்தனையேயில்லை.
- அன்னையை ஏற்ற பின் பிரச்னை என்றால் என்ன என்றே தெரியாமல் போய் விட்டது.
- இது போன்ற மன நிம்மதியை நான் இதற்கு முன் அறியேன்.
- அமர்க்களமான என் வீடு, அமைதி தவழுகிறது.
- பிள்ளைகள் படிப்பிலிருந்து எல்லாப் பிரச்

சிலைகளும் எப்படி போயின என அறியேன்.

● "நான் பறக்கிறேன், சந்தோஷம் பொங்கி வழிகிறது"

● மெடிகல் பில் என்னாயிற்று? டாக்டரிடம் போவதில்லை இப்பொழுதெல்லாம்.

● ஜாதகம் கண்டம் விஷயத்தில் பொய்த்தது.

● 18 ஆண்டுக்குப் பின் குழந்தை பிறந்தது.

● கான்சரும் பிரார்த்தனையால் மறைந்தது

● 10 ரூபாய் நோட்டைப் பார்க்காத நான் எப்பொழுதும் பல 100 ரூபாய் நோட்டு வைத்திருக்கிறேன்.

● நானும் வீடு கட்டுவேன் என நினைக்கவில்லை.

● இழந்த செல்வத்தை இரட்டிப்பாய் பெற்றேன்.

● நானும் இன்று மனிதனாய் உலவுகிறேன் என்றால் அது அன்னையால்தான்.

● என் மேல் வழக்குப் போட்ட 48 தொழிலாளியும் மனம் மாறி எனக்கு சாதகமாக வாக்குமூலம் கொடுத்தனர்.

● கொடூரமான மனைவி குணம் மாறி நல்ல குடும்பம் நடத்துகிறாள்.

● என் கணவரை மாதம் ஒருமுறை நான் பார்த்ததில்லை. அன்னையிடம் வந்தபின் தினமும் வீட்டுக்கு வருகிறார்.

காகிதப்பூ காப்பாற்றியவை நம்ப முடியாதவை.

● ஓடிப்போன பையன் தந்தி புதுவைக்கு அனுப்பியவுடன் வந்தான்.

● அன்னையிடம் வந்த பின் வருமானம் இரட்டிப்பது அனைவருடைய அனுபவமாகும்.

புஷ்பங்கள் ஜீவனுள்ளவை என்று வலியுறுத்துகிறார் அன்னை. சில முக்கியமான புஷ்பங்களை மட்டும் குறிப்பிடுகிறேன்.

நாகலிங்கப் பூ - செல்வம் பெருகும்

கொடி ரோஸ் (சுமுகம்) - சச்சரவை விலக்கி அமைதியை ஏற்படுத்தும்.

எருக்கம் பூ - தைரியத்தைத் தரும்.

குவளைப் பூ - வெற்றி

பவழ மல்லி - ஆர்வம்

துளசி - பக்தி

சண்டையும் சச்சரவுமான வீட்டில் கொடி ரோஸ் (சுமுகம் என்று அன்னை அழைப்பது) மலரைக் கொண்டு வந்தால் வீடு அமைதியாகிறது.

சாமந்தி - தெம்பு

சோர்வானவர் சாமந்தியை அன்னை படத்திற்கு முன் வைத்திருந்து கையில் எடுத்தால் சோர்வு நீங்கும்.

செய்வினையால் பாதிக்கப்பட்டு நலிந்த குடும்பங்களிலே, மந்திரம் செய்து எடுக்க முடியாமல் அவதிப்படுபவர், அன்னை படத்தை வீட்டில் வைத்து, வீட்டை சுற்றி அதை எடுத்துப் போய் சாம்பிராணி போட்டால் முதல் நாளே சேஷ்டைகள் மறையும். மூன்று நாள் செய்வது நல்லது.



"பென்சில் சீவும்போது பென்சிலின் எழுதும் கூர் பகுதி அடிக்கடி உடைந்து விடுகிறதா? சீவுவதற்கு முன் பென்சிலை சிறிது நேரம் குளிர் சாதனப் பெட்டியில் வைத்திருந்து பின் சீவினால் கூர் உடையாமல் சீராகவும், சீவ எளிதாகவும் வரும்!"

– மகராசிசிவம்

**அன்னையை அனுப்புதல்**

மாதம் 20 நாள் பாம்பே, டெல்லி என டூர் போகும் கணவன் வரும் வரை நிம்மதியற்ற மனைவி, கணவன் போகும் இடத்திற்கெல்லாம் அன்னையை முதலில் அனுப்பினார். அவர் இழந்த நிம்மதி நிலையாக வந்தது. கணவன் போன இடத்திலெல்லாம் வேலை சிறப்பாக முடிந்தது.

வைர வியாபாரி பாம்பே, ஹைதராபாத், சென்னை என சென்று வியாபாரம் செய்யப் போனால், 4,5 முறை போன பின்பே வியாபாரம் படியும். அவர் தாம் போகும் முன் அன்னையை அனுப்ப ஆரம்பித்தார். போன எந்த இடத்திலும் இல்லையென்று கூறாமல் தவறாது வாங்கியதை அவரால் நம்ப முடியவில்லை.

நாம் செல்லும் வேலைகளுக்கு முன்னால் அன்னையை அனுப்பினால், வேலை தவறாது கூடி வரும். இது அன்னையே கூறிய முறை. தொந்தரவு சொல்பவர்கட்கு அன்னையை அனுப்பினால் அவர்கள் அங்கிருப்பதில்லை!

அன்னை பிறந்த நாளான பிப்ரவரி 21ம், ஸ்ரீ அரவிந்தர் ஜென்ம தினமான ஆகஸ்ட் 15ம் ஆசிரமத்தில் தரிசன நாட்களாகும். அன்று அவர்கள் வசித்த அறை தரிசனத்திற்காகத் திறக்கப்படும். சமாதியைச் சுற்றி பக்தர்கள் உட்கார்ந்து தியானம் செய்வார்கள்.

நேர்மை, வெற்றி பெறவும், மனம் நிம்மதியால் திளைக்கவும், அனைவருக்கும் உள்ள பிரச்னைகள் நம்மிடம் வராமலிருக்கவும், பிரச்னைகள் வாழ்வை விட்டு அடியோடு போகவும், நம்மை நிரந்தரமாக உள்ளொளியுடன் வாழச் செய்யவும் உதவுவது அன்னை வழிபாடு.




Parryware






E.I.D. Parry (India) Limited, Ceramics Division, Dare House, Chennai 600 001.

HTA.7835.98

**MATCHING WALL TILES AND SANITARYWARE IS AS EASY AS MATCHING CLOTHES . FINALLY.**

*Experience the joys of mixing and matching. Glamourooms now bring over a thousand possible combinations of wall tiles and sanitaryware. In colours, shapes, designs and patterns. Pick your favourite.*

நன்றாக நினைவிருக்கிறது.
அவள் என்னை
முதன் முதலாக
காக்க வைத்தது.

திண்ணையில் என் அமர்வு.
இன்னும் சிலருடன்
மனதில் ஆவல்
உள்ளே பெண்டுகள்
அதையும் இதையும்
எடுத்துக் கொண்டு
நடந்தும் ஓடியும்
நெஞ்சின் துடிப்பைத்
துரிதப்படுத்தினர்.

கட்டிலையும்,
கொட்டிக் கொட்டிக் காதலையும்
பங்கு போட்டுக் கொண்டவள்
அம்மா என்று கத்த.
இலவச இணைப்பாய்
வீல் என்ற ஒலி

# காத்திருக்கிறேன்

மகிழ்ச்சித் தேன்
செவிகளில் மழையாய்ப் பெய்தது

அவளின் முதல் வருகையும்
அவளுக்கான
என் முதல் காத்திருத்தலும்
ஆழமான கோலங்களாய்
மனதில் உறைந்து விட்டன

பள்ளியில் சேர்த்த
முதல் நாள்
வகுப்புக்கு வெளியே
அவளுக்காகக் காத்திருந்து
தூக்கிவர
வழியிலேயே
அவள் தூங்கிவிட்டது
அவள் எனக்குச் சொன்ன
இன்பக் கதைகளிலெல்லாம்
இனியது.

ஒன்றரை ரூபாய்க்கு அவள்
கண்ணாடி வளையல் வாங்க,

நான் இரண்டு மணி நேரம்
கடைக்கு வெளியே
காவல் காத்தது
சுகமான வலி

கல்லூரியில் சேர்ந்த
முதல் நாள் மாலை,
பணியில் சேர்ந்த
முதல் நாள் மாலை
அவள்
அனுபவக் கதைகளைக் கேட்டு
காத்திருந்த நேரங்களோடு,
துணை நலமறிந்த
முதலிரவகன்றபின்,
அவளது முகமலரின்
வண்ணம் காண
நான் தவித்துப் போய்
காத்திருந்த நேரமும்,
ஈராண்டுகள் ஓடிய பின்னர்
எழில் கொஞ்சும்
மனிதப் பிஞ்சொன்றுடன்,
மருத்துவ மனையிலவள்
மயங்கிக் கிடக்க,

## — ஜோசப்குமார்

அவள் கண் விழித்தலுக்காய்
நான் காத்திருந்த நேரமும்
மறந்திட இயலா
மங்கல நேரங்கள்.
ஆயிற்று.
இரண்டு நாட்களாக
பனிக்கட்டிகளுக்கிடையே
வாசம்.

வரும்வரை காத்திருங்களென்று
அவளிடமிருந்து தகவலாம்.
அமெரிக்கா அடுத்த தெருவா?
விண்ணூர்தி, மண்ணூர்தி ஏறி
வர வேண்டுமே, அவள்.
ஆக,
வழக்கம் போல் அவளுக்காகக்
காத்துக் கிடக்கின்றேன்.

எல்லாம் தயாராம்
குழியும், பெட்டியும்
கூடை கூடையாய் புஷ்பங்களும்

அதோ, தெருமுனையில்
அவளது முதல் வருகையின் போது
நான் கேட்ட அதே ஒலி,
மீண்டும்.....

நவராத்திரியில் முப்பெரும் தேவியரின் அருளைப் பெற பூஜைகள் செய்து, படிகள் வைத்து, அழகாக பொம்மைகள் அடுக்கி, தினம் பிரசாதம் படைத்து, பலரை வீட்டிற்கு அழைத்து உபசரித்து... என்று அடுக்கிக் கொண்டே போகலாம் இதன் சிறப்புக்களை.

அதிலும், நம் வீட்டு கொலுவில் நாமே செய்த பொம்மைகளையோ பொருள்களையோ வைத்தால், அழகு கூடுவதோடு மனம் எவ்வளவு பெருமைப்படும்! அந்த வகையில், நவராத்திரியில் அடங்கியுள்ள கலையம்சத்தை, ஒவ்வொருவருள்ளும் புதைந்துள்ள கைவினை ஆற்றலை வெளிப்படுத்தும் வகையில் இருவரைச் சந்தித்தோம்.

மரங்கள், செடிகள்; விதவிதமாய் பொம்மைகள், தேர், மண்டபம், பூந்தொட்டி என்று மிக அழகாகச்





• சந்தானம்

# அந்தமானுக்குப் போனாலும் சிப்பி வேண்டும்!



• ஸ்ரீலட்சுமி

சிப்பியில் செய்து வைத்திருக்கிறார் திருமதி. ராஜம்மாள் எனும் வயதான மூதாட்டி. இதை நாற்பது ஆண்டுகளாகச் செய்யும் இவருக்கு இப்போது வயது 85.

"கடைகளில் சிப்பியிலான பொருட்களைப் பார்த்தபோது, அதைவிட அழகாக நம்மால் செய்ய முடியுமே என்று திடீரென்று தோன்றியது. பொழுதுபோக்காகத் தொடங்கி, சில ஆண்டுகளில் பூம்புகார், விடிஐ போன்ற இடங்களுக்கு ஆர்டரின் பேரில் செய்து கொடுக்க ஆரம்பித்தேன். சிறுதொழில் வளர்ச்சிக் கழகத்தின் பள்ளியில் பயிற்சியாளராகவும் சிறிது காலம் பணியாற்றினேன்.



எங்கெல்லாம் சிப்பிகள், சங்குகள் கிடைக்குமோ அங்கெல்லாம் சென்று, ஆட்களைத் தேடிப் பிடித்து, கடலிலிருந்து வந்து கொட்டுகையிலேயே கிலோ கணக்கில் சொல்லி வைத்து விடுவேன். பின்பு, அழுக்குப் போக, ஆசிட் போட்டுக் கடைக்காரர்கள் சுத்தம் செய்து தருவார்கள். நான் முழுதும் அவர்களுடனே இருந்து வாங்கி வருவேன். திருவான்மியூர், திருவொற்றியூர், மகாபலிபுரம், ஏன் அந்தமானுக்கு யாராவது போனாலும், வரும் போது சிப்பிகள் வாங்கி வரச் சொல்வேன்!"

என்கிறார் இவர்.

சிப்பியின் இயற்கை வடிவத்தை கலைக் கண்ணோடு பார்த்து அதனதன் வடிவிற்கு ஏற்ப பொம்மையின் பாகமாக்கி விடுகிறார். இடுப்புக்குக் கீழே சங்கும், மேலே பெரிய சிப்பியும், தலைக்குச் சிறிய சிப்பியும் வைத்து உடையாக ஜிகினா பேப்பரை ஒட்டியிருக்கிறார். அந்தப் பொம்மையின் ஜடை பின்னல் மிக அழகு. மிகச் சிறிய சிப்பிகளைக் கம்பியால் இணைத்து, நீளமாக்கி, கருப்பு பெயிண்ட் அடித்து, வெள்ளைச் சோழிகளைப் பூவாகச் சூட்டியிருக்கிறார்.

மற்றொரு பொம்மைக்குக் கழுத்தில் டைமண்டு வடிவ கண்ணாடிகளால் நெக்லெஸ் செய்திருக்கிறார். பொறுமையும், கலையார்வமும் ஒவ்வொரு பொருளிலும் தெரிகிறது.

'ஏசியன் கேம்ஸ் டெல்லியில் நடந்த போது போய்ப் பார்த்தேன். விதவிதமாக அலங்காரம் செய்து ஆடியவர்களைப் போலவே, சிப்பியில் செய்து அதே போல் உடையெல்லாம் பண்ணி வைத்தேன்.

அப்புறம், கஞ்சியில் தோய்த்த துணியை ஏதாவதொரு பொம்மை முகத்தில் வைத்துக் காய்ந்ததும் எடுத்தால் மோல்டில் வைத்தது போல் அதே வடிவத்தில் கிடைக்கும், வெளி நாட்டில் இப்படிச் செய்கிறார்கள் என்று என் மகள் சொன்னாள். அது போலவும் பல பொம்மைகள் செய்திருக்கிறேன். நவராத்திரிக்கு கொலு வைக்கும் போது என் பொம்மைகளை அடுக்குவதில் உள்ள மகிழ்ச்சியே தனி' என்று குழந்தையைப் போல் ஆர்வமாய்ச் சொல்கிறார்.

கச்சேரி செட், லக்ஷ்மி, சரஸ்வதி, முருகன், ஆண்டாள், குழந்தையுடன் நிற்கும் மேனகை, விசுவாமித்திரர் - வசுதேவன் தேவகியுடன் ஆலிலைக் கிருஷ்ணர் என்பதோடு கிறித்துவ மணப்பெண், குழந்தை ஏசுவைக் கையிலேந்திய மேரி என்று வியக்க வைக்கிறார் இவர்.

"எல்லாருக்கும் கடலைப் பார்த்தா, பீச், சுண்டல்னு ஞாபகம் வரும். இவர் மட்டும், 'இங்க எங்கே சிப்பிகளைக் கொட்டி வைச்சிருப்பா' என்ற யோசனையிலேயே வருவார்" என்கிறார் இவருடைய மருமகள் லக்ஷ்மி.

கடந்த நான்கு வருடங்களாக, வயது காரணமாக இதை நிறுத்தி விட்ட ராஜம்மாள்,

"கடல் நமக்கு என்னவெல்லாம் தர்றது.. கேட்காமலேயே அள்ளிக் கொட்டும். நாமதான் அதை நல்லா பயன்படுத்திக்கணும்," என்று நெருங்கிய தோழி போலக் கடலைக் கூறுகிறார்.

**ஆழ்வார்ப்பேட்டையில் 'ஹாபி க்ராஃப்ட்ஸ் சென்டர்' என்ற பயிற்சிப் பள்ளியை நடத்தி வருகிறார் ஸ்ரீலக்ஷ்மி மோகன் ராவ். நவராத்திரி வந்து விட்டால் புதிதாகத் தாமாகவே ஏதாவது செய்து கொலுவில் வைப்பதற்காகத் தனிக் கூட்டம் வந்து விடுகிறது இவரிடம். அவர் கூறுகையில் -**



• ராஜம்மாள்

''என்னிடம் மூன்று தலைமுறையினர் - பாட்டி, அம்மா, பேத்தி என்று வயது வித்தியாசமின்றி 5 வயதிலிருந்து 75 வயது வரை வருகிறார்கள். பொதுவாக இது 'காஸ்ட்லி ஹாபி' என்றாலும், நாங்கள் குறைந்த கட்டணமே விதிக்கிறோம். அதோடு, இங்கு 6 மாதப் பயிற்சி ஒன்று உண்டு. முடித்ததும் சான்றிதழும் வழங்கப்படும். கஷ்டப்படும் பெண்களை வெளி ஆர்டர்களை முடிக்கும் வேலையில் ஈடுபடுத்தியும் உதவுகிறோம்," என்கிறார்.



படங்கள் : ராஜு



அவர் வீடே ஒரு கண்காட்சி போல் உள்ளது. தெர்மோகோலில் செய்த தேர், ஐஸ்க்ரீம் குச்சிகளில் செய்த கடிகாரம், மெழுகில் செய்த பொம்மைகள், ப்ளாஸ்டர் ஆப் பாரீசில் செய்த பொருட்கள், பேப்பர் மேஷ் பொருட்கள் என்று கண்ணைக் கவர்கின்றன.

ஒரு பொருள் வித்தியாசமாய் நம் கண்ணில் பட்டது. அது பற்றிக் கேட்டபோது –

"இந்தக் கலைக்கு 'ஜானூர்' என்று பெயர். இது இந்தோனேஷிய முறையாகும். வாழைத் தண்டை நிற்க வைத்து, தென்னங்குருத்தில் சுற்றி வர அழகுபடுத்துவது இதன் சிறப்பு" என்றார்.

இப்படிப் புதிய வகைகள் மட்டுமல்லாமல் எளிய பல கைவினைப் பொருட்கள் – மிக நேர்த்தியாக, மிக அழகாகச் செய்கிறார்.

"கொலு நேரத்தில் வெற்றிலைப் பாக்கு வைத்து தாம்பூலம் கொடுக்க வசதியாக, சிறிய உல்லன் நூலில் பின்னிய பைகள் (கைக் குழந்தைகளின் ஸ்வெட்டர் சாக்ஸ் போல), தேங்காய் பழம் வைக்கும் கூடைகள், கைக் குட்டைகள், பேப்பர் மேஷ் கிண்ணங்கள், எம்பிராய்டரி செய்யப்பட்ட துணிப் பைகள் என்றிவற்றை முக்கியமாகக் கற்றுத் தருகிறோம்.

ஐந்து வயது குழந்தைகள் கூட, சோப்பினால் பொம்மைகள், துணியாலான சிறிய பைகள், ஐஸ்க்ரீம் குச்சிகளில் அலங்காரப் பொருட்கள், தெர்மோகோலில் சிறிய பொம்மைகள் என்று மிக ஆர்வமாய் தங்கள் வீட்டுக் கொலுவில் வைப்பதற்கென்றே வருடா வருடம் வருகிறார்கள்," என்று ஆச்சரியப்பட வைக்கிறார்.

அகில இந்திய பொம்மைக் கண்காட்சி ஐதராபாத்தில் நடைபெற்றபோது, தமிழ்நாடு சார்பில் பங்கேற்றிருக்கும் இவர், 25 ஆண்டுகளாக இத்துறையில் இருக்கிறார்.

அதோடு,

"ஒவ்வொரு வருட கொலுவிலும், ஒரே மாதிரி பொம்மைகளை அடுக்காமல், விதவிதமாக வைத்தால் அழகாக இருக்கும். நான் ஒருமுறை ஐஸ்கிரீம் குச்சிகளால் செய்த பொருட்களை மட்டுமே வைத்தேன்; ஒருமுறை தெர்மோகோல் மட்டும், ஒருமுறை உல்லன் விளையாட்டுப் பொருட்கள் மட்டும் என்று இப்படியே அவரவர் புதுமை எண்ணங்களுக்குத் தகுந்தவாறு வைத்தால் குழந்தைகளும் மிகுந்த ஆர்வத்துடன் போட்டி போட்டுச் செய்வார்கள்," என்று ஆர்வமாகக் கூறுகிறார்.

*பெட்ரோல் பங்குக்கும் நவராத்திரி கொலுவுக்கும் என்ன சம்பந்தம்? நிறையவே இருக்கிறது என்கிறார் இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் சென்னைப் பகுதியின் துணை விற்பனை மேலாளர் திரு வெற்றி செல்வகுமார். இவர்கள் ராஜ் எண்டர் பிரைசஸ் நிறுவனத்தார் வைத்துள்ள பங்குகளில் – அடையாறு மற்றும் கீழ்ப்பாக்கத்தில், ஐ.ஓ.சி. சார்பில் வருடந்தோறும் கொலு வைக்கிறார்கள். இதுகுறித்து வெற்றி செல்வகுமார் கூறுகையில் –*

"பெட்ரோல் போட வரும் வாடிக்கையாளர்கள் வேலைப் பளு நீங்கி, ஓய்வான ஒரு மனநிலைக்கு வர ஏதாவது புதுமையாக, அதுவும் முக்கியமாகப் பண்டிகை தினங்களில் செய்ய வேண்டும் என்று எண்ணினோம். காந்தி ஜெயந்தி சுதந்திர தினம் போன்ற நாட்களில் இனிப்பு வழங்குவதெல்லாம் பொதுவாகச் செய்வது. அதை விடவும் நன்றாக, புதுமையாகச் செய்ய வேண்டும் என்று நினைத்த போதுதான் கொலு வைக்கலாமே என்று தோன்றியது.

முதல் வருடம் வைத்தபோது சில வாடிக்கையாளர்கள், பலர் வந்து போகும் பொது இடத்தில் கொலு வைப்பது அவ்வளவு ஆச்சாரமாக இல்லையென்றும் ஐதீகம் கெடு

***

*விருந்துக்கு வந்த என் தோழிக்குப் புதியதாக ஏதாவது பொரியல் செய்ய நினைத்தேன். அதன்படி வீட்டில் இருந்த நீளமான மற்றும் பெரிய அளவிலான சாம்பார் மிளகாய் என்னும் குடமிளகாயை பொடியாக நறுக்கி, வெங்காயம், கடுகு, கடலை பருப்பு தாளித்து, மிளகாயுடன் உப்பு சேர்த்து வதக்கி பொரியல் செய்திருந்தேன். அவர் என்ன பொரியல் என தெரியாமல், மிகவும் நன்றாக இருப்பதாகக் கூறினார். சுவையும் மணமும் நன்றாக இருக்கும்.*

*– ஆர். பாலா*



# குடும்ப தலைவிகளின் சரியான தேர்வு

# chefmaster™

## INSTANT CHAPPATHI MAKER

ஒரு வாடிக்கையாளர் கூறுகிறார்.

"நான் chefmaster ரை வாங்கும் வரை அனைத்து சப்பாத்தி மேக்கரும் ஒன்றுதான் என நினைத்தேன். ஆனால் அது தவறு என்று உணர்ந்தேன். chefmaster ல் மட்டுமே விசேஷ 'GERMAN THERMOSTAT,' 'DUPONT' அங்கீகாரம் பெற்ற 'TEFLON-2' Coating, துருப்பிடிக்காத சேலம் ஸ்டீல் மூடிகள் மற்றும் ISI முத்திரை பெற்ற ப்ளக் ஆகிய தனித்தன்மையான அம்சங்கள் உள்ளன. மேலும் 1 வருட உத்தரவாதமும் உள்ளது இவையனைத்தும் போதாதா நான் என் chefmaster ரை தேர்வு செய்தேன் என்று."

எத்தனையோ சப்பாத்தி மேக்கர்கள் வந்து போகலாம். ஆனால் அனைவரும் விரும்புவது நிரந்தரமான chefmaster மட்டுமே









TEFLON IS REGD TRADEMARK OF DUPONT - USA

Distributors:

சென்னை : Sha Tharaji Ramlal & Sons, 50, Basiyakaralu Naidu Street, Chennai Ph : 518558

சேலம் : V.C.R.Metals Company, 8-B, Second Agraharam, Salem. Ph : 260205, 262393

கோவை : Hi-Tech Engineers, 92, Lakshmi Towers, Mettupalayam Road, Coimbatore. Ph : 446231

திருச்சி : Mangal & Mangal, 25, NSB Road, Trichy. Ph : 702324, 702360

தயாரிப்பாளர் : **Premier Machine Tools**, Regd. off : 84-A, Vinayakar Street, Sivananda Colony, Coimbatore - 641 012, INDIA. Ph : 436833 Fax : 0422-439389

முக்கிய நகரங்களில் **DISTRIBUTOR** தேவை.

# உங்களின் கனவு இல்லத்திற்கு

**Booking Open**

**METTUPALAYAM ROAD**




எழில்மிகு இல்லங்களை உருவாக்கித் தரும் ஸ்ரீவத்ஸா, கோவையில் உங்களுக்காகவே அளிக்கிறது இரண்டு சாய்ஸ் – ஸ்ரீவத்ஸா கார்டன்ஸ் மற்றும் ஸ்ரீவத்ஸா ஹில் வியூ. இங்கு காண்பீர் உங்கள் தேவைக்கேற்ப



Duplex House



Apartments

**ஸ்ரீவத்ஸா கார்டன்ஸ்**

- ஊட்டி செல்லும் வழியில் கோவை ரயில் நிலையத்திலிருந்து 7 கி.மீ. தொலைவில்.
- கிளப்ஹவுஸ், நீச்சல் குளம், சூப்பர் மார்கெட், உடற் பயிற்சி மையம், 24 மணி நேர பாதுகாப்பு.
- 24 ஏக்கர்களில் வில்லா, டுப்ளக்ஸ் வீடுகள் மற்றும் அப்பார்ட்மென்ட்ஸ்.



## ஸ்ரீவத்ஸா ரியல் எஸ்டேட்ஸ் லிட்.

**கோயம்புத்தூர்:** 8/2, மேட்டுப் பாளையம் ரோடு, கோயம்புத்தூர், 641 043. போன்: 91–0422–437422, 432574, 432184, 441481. ஃபேக்ஸ்: 91–0422–430899. தந்தி: SRIVATSACO
Email: <Sreevatsa.cbe@smy.sprintrpg.ems.vsnl.net.in> Web site: http://www.sreevatsa.com



சுண்டல் செய்ய உபயோகப்படுத்தும் பருப்பு வகைகளை ஊறப் போட்டதும் ஒரு சிட்டிகை சோடா உப்பு போட்டு விட்டால், சீக்கிரம் வெந்து விடும். வேக வைக்கும் போது ஒரு துளி மஞ்சள் பொடி போட்டால் வாசனையாக இருக்கும்.
– எஸ். விஜயா சீனிவாசன்.

மென்றும் எதிர்ப்பு தெரிவித்தனர். ஐதீகம் கெட்டுவிடக் கூடாது என்பதற்காகவே நாங்கள் தினம் கோயில் ஆச்சாரியாரைக் கொண்டு பூஜை செய்து, பிரசாதம் விநியோகித்து பண்பாட்டு முறை மாறாமல் கொலு வைத்தோம். அடுத்த வருடம், நவராத்திரிக்குச் சில நாட்களுக்கு முன்னரே பலர் 'இந்த வருடம் கொலு வைக்கவில்லையா' என்று கேட்கத் தொடங்கி விட்டனர்.

மாலை வேளைகளில் சிறிது கூட்டம் அதிகமிருக்கும். வந்து பார்ப்பவர்களே புதிய ஐடியாக்கள் கொடுப்பர். சிலர் பொம்மைகளையும் தந்து வைக்கச் சொல்வார்கள். பூஜையிலும் தவறாமல் கலந்து கொள்வார்கள். இது விற்பனையை அப்படியொன்றும் அதிகப்படுத்தாது; எங்கள் நோக்கமும் அதுவல்ல. வாடிக்கையாளர்களுடன் நல்ல தொடர்பும், அவர்களுடைய திருப்தியும் ஒட்டுதலும் நிச்சயம் கூடுகிறது. பங்கில் வேலை செய்வோரும் உரிமையோடு ஒன்றாகச் சேர்ந்து அலங்கரிக்கும் கூட்டு மனப்பான்மையும் வளர்கிறது. முக்கியமாக, நம் பாரம்பரியத்தின் பெருமையை எங்களால் முடிந்த முறையில் வலியுறுத்துகிறோம்'' என்கிறார்.

*'ராஜ் எண்டர்பிரைசஸ்'சின் (அடையாறு மற்றும் கீழ்ப்பாக்கத்தில் கொலு வைப்பவர்கள்) அதிபர் டாக்டர். சந்தானம் கூறுகையில் –*

''ஐ.ஓ.சி. கொலு சமயத்தில் இந்தப் புதுமையான, கலாச்சாரத்தை மேம்படுத்தும் பணியில் எங்களை ஈடுபடுத்தியவுடனே, எங்கள் குடும்பத்தினர் அனைவருமே ஆவலுடன் படிகள் வைத்து அலங்கரிக்கத் தொடங்கி விட்டனர். பார்க்க வரும் மக்களும் இதை ஒரு கண்காட்சி போல் ரசித்துப் பார்த்தும் போவார்கள். சிறிய அளவில் தொடங்கிய இது, நான்கு வருடங்களாக நல்ல வளர்ச்சியோடு நடத்தப் பெறுவதற்குக் காரணம் மக்கள்தான். புதிய புதிய ஐடியாக்கள் தருவதோடு பாராட்டி ஊக்கப்படுத்திச் செல்வார்கள்.

ஐதிகம் கெடாமல் செய்வதில் நாங்கள் எப்போதும் குறிப்பாக இருக்கிறோம். பூஜை, சுண்டல் என்பதெல்லாம் போக, நாதஸ்வர இசையுடன் காலையில் தொடங்கி பாரம்பரிய இசையையே தொடர்ந்து ஒலிபரப்புகிறோம்.

இதன் சிறப்பம்சம், தினம் பிரசாதம் விநியோகிப்பதோடு, இறுதி நாளில் பெண்களுக்குத் தாம்பூலம் தருவதுதான். 9 பெண்களுக்கு தர ஆரம்பித்து, 27 பெண்களாகி சென்ற வருடம் 54 பெண்களுக்குத் தந்தோம்.

தெய்வ வழிபாட்டோடு கலையும் பண்பாடும் இணைந்த இந்தப் பண்டிகையை எல்லாருக்கும் பொதுவானதாகக் கொண்டாடுவதில் தனி மகிழ்ச்சியுண்டு'' என்று பெருமை பொங்கக் கூறுகிறார்.

*நவராத்திரி கொண்டாட்டத்தில் பாட்டியும் அம்மாவும் சிறு வயது குழந்தைகளும் மட்டுமே ஆர்வமாய் பங்கேற்கின்றனர்; இளம்பெண்கள், அதிலும் கல்லூரிக்குச் செல்வோர் அதிக ஆர்வம் காட்டுவதில்லை என்பது பலருடைய குற்றச்சாட்டு. இதை முழுவதுமாகப் பொய்யாக்குகின்றனர் இராணிமேரி கல்லூரி இசைத் துறை மாணவியர்.*

*1914-ல் இக் கல்லூரி தொடங்கப் பெற்றதிலிருந்து இருக்கும் இசைத் துறையில் வருடந்தோறும் விஜயதசமியை மிகச் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர். இது குறித்து, இசைத் துறைப் பேராசிரியர் திருமதி. ரீத்தா ராஜனையும் திருமதி. ஜெய சீதாலக்ஷ்மியையும் கேட்ட போது –*

"கிட்டத்தட்ட 20 வருடங்களாக நாங்கள் நவராத்திரியைக் கொண்டாடி வருகிறோம். அதிலும் கடந்த பத்து வருடங்களாக, அந்த நேரத்தில் முழுக் கல்லூரியும் நாங்கள் கொண்டாடும் விஜயதசமி விழாவை எதிர்பார்த்துக் காத்திருக்கும்.

குருகுல முறை இன்று இல்லை. ஆனால், இசை என்ற அரும்பெரும் கலை அம்முறைப்படி கற்றால்தான் முழுமை பெறும். அதை மறக்காமல் நினைவில் கொள்வதற்

காகத்தான் விஜயதசமியை ஆசிரியர்கள் மாணவிகள் என்று நாங்கள் ஒரு குடும்பம் போல் கொண்டாடுகிறோம்.

பட்டுப் பாவாடை, தாவணி, புடவை, பின்னிய தலையில் பூ என்று அன்று மாணவியரைப் பார்த்தாலே நம் பாரம்பரியமும் கலாச்சாரமும் வலுவாய் நிற்கும் அழகு தெரியும். போட்டி போட்டுக் கோலம் போடுவர்; சரஸ்வதி, லட்சுமி, பார்வதி படங்களை அலங்கரித்து, இசைக் கருவிகளையெல்லாம் அடுக்கி வைப்பர்;'பேண்ட் செட்' எங்களுக்கு உண்டு. அதைக் கூடக் கடவுள் முன் வைத்துப் பூஜை செய்வோம். கல்லூரி என்பதே மறந்து போய் ஏதோ வீட்டின் சுபநிகழ்ச்சி போலவே இருக்கும்.

இதன் மிகச் சிறந்த அம்சம் என்னவெனில், இதைக் காண வரும் மற்ற துறை ஆசிரியர்களையெல்லாம் நிற்கவைத்து எங்கள் மாணவிகள் விழுந்து ஆசி பெறுவார்கள். அவர்களும் கையில் அட்சதை எடுத்து மனம் மகிழ்ந்து வாழ்த்துவார்கள். பிறகு, வெற்றிலை, பாக்கு அடங்கிய தாம்பூலமும் சுண்டல் அல்லது வேறு பிரசாதமும் தருவோம். மாணவியராக இருந்து அதே ஆசிரியருடன் பணிபுரியும் இளைய ஆசிரியர்கள் மூத்த ஆசிரியர்களிடம் ஆசிபெறுவார்கள்.

பாட்டுப் பாடி, கருவிகள் இசைத்து, பண்பாட்டை ஒட்டிய பெரிய உற்சவம் போலவே இருக்கும். எத்தனை முற்போக்குச் சிந்தனைகள் வந்தாலும் பண்பாட்டைப் பேணிக் காக்கும் ஆர்வம் நிச்சயம் இளைஞர்களுக்கு உண்டு. அதோடு, இந்த விழாவால் மேலோட்டமான உறவு என்பதெல்லாம் காணாமல் போய் குரு – சிஷ்யர் ஆரோக்கியமான, உரிமை கலந்த உறவு ஏற்படுகிறது.

எங்கள் துறை மட்டுமல்லாமல் அனைத்துத் துறையினரும் முதல்வரும் காட்டும் ஆர்வம் பெரும் தூண்டுதலாய் அமைகிறது. விஜயதசமி பூஜையில், சமஸ்கிருதத் துறைப் பேராசிரியர்கள் மந்திரங்கள் ஓதிச் சிறப்பிப்பது மிகச் சிறப்பான விஷயம். நாங்கள் கல்லூரி என்பதையே மறந்து போய் விடுவோம்," என்கிறார்கள் இவர்கள்.

நவராத்திரியில் அடங்கியுள்ள மிகச் சிறப்பான விஷயங்களைப் பலரும் தெரிந்துகொள்வதற்காக அனைவருக்கும் பொதுவானதாக ஆக்கி அவரவர் எண்ணங்களுக்கேற்ப புதுமையாகச் செய்கிறார்கள். வீட்டிற்குள் வைக்கும் கொலுவை விடவும் இது இன்னும் பயன்தக்கதாக அமைகிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

தொகுப்பு : **மு. சுப்புலட்சுமி**

ESTD 1955 ஸ்ரீ PH: 0431-706823&704312



# வடதேச காசி யாத்திரைகள்

19 to 23 நாட்கள் கொண்ட யாத்திரை சென்னையிலிருந்து தனி 3 டயர் கோச் மூலம் புறப்பட்டு ஆக்ரா, மதுரா, ஜெய்ப்பூர், டில்லி, அரித்வார், ரிஷிகேஷ், அலகாபாத், அயோத்யா, காசி(வாரணாசி), கயா, கல்கத்தா, குர்தா ரோடு, பூரி, புவனேஷ்வர் கோனார்க் சென்னை திரும்புகிறது. நபருக்கு டிபன், காபி, போஜனம் உள்பட ரூ. 8575/- நேபாள் போய்வரும் பஸ் கட்டணம் ரூ. 2000/- தனியாக செலுத்த வேண்டும். வராதவர்கள் கட்ட வேண்டாம். முழு தொகையையும் செலுத்தி பதிவு செய்து கொள்ள வேண்டும்.

*தீபாவளி கங்கா ஸ்நான ஸ்பெஷல்! தங்க அன்ன பூர்ணி தரிசனம்*

17 நாட்கள் கொண்ட யாத்திரைக்கு தனி 3 டயர் கோச் 8.10.98ம் தேதி புறப்படுகிறது. சென்னை, ஆக்ரா, டில்லி, ஹரித்வார், ரிஷிகேஷ், அலகாபாத், அயோத்தியா, காசி, கயா, கல்கத்தா, பூரி, புவனேஷ்வர், கோனார்க், (குர்தா ரோடு), விஜயவாடா வழியாகச் சென்னை திரும்புகிறது. கட்டணம் ரூ. 7975/- வழக்கமான போஜன வசதி உண்டு. ரூ. 2500/- வீதம் அட்வான்ஸ் அனுப்பி பதிவு செய்து கொள்ள வேண்டும்.

எமது யாத்திரைகளில், கரூர், திரு.கே.திருமலைசாமி, ரங்கநாயகி தம்பதியர், திரு. பி.நாச்சிமுத்து, தாயம்மாள் தம்பதியர், திருமதி. சஞ்சீவமணி, திருமதி. ஆர்.ஜானகி, விழுப்புரம் கிளியனூர், திரு.வெங்கட்ராம ரெட்டியார், எஸ்.சரோஜினி, திரு. கே. குருசாமி ரெட்டியார், ஸ்ரீராமகிருஷ்ண ரெட்டியார் Co-op Central Bank Ex.GM, திருமதி. குருசக்தி தம்பதியர், கும்பகோணம் முத்துராம் கிளினிக், திரு. எம்.ராமலிங்கம், சிவகாமிசுந்தரி தம்பதியர் மலேசியா, சிரம்பான் திரு. எம்.பத்துமலை, சரஸ்வதி தம்பதியர், சேலம். டி.சி.சேது ராமலிங்கம், எஸ்.பிரேமா தம்பதியர், சென்னை என்.சண்முக சுந்தரம், உடுமலை டாக்டர். கே. ஆறுமுகம், திருவாளர்கள் எ.வேலுமணி, டி.குமாரசாமி, கே. கலாவதி, எஸ்.கே.தங்கவேல், டி.செண்பகவல்லி, கரூர். திரு.ஆர். லட்சுமி நரசிம்மன், எம்.பிரேமாகுமாரி, கோவை திரு. ஆர்.விஜயகுமார், கிருபாலட்சுமி, திருவாளர்கள் வி. வெங்கடேச தம்பதியர், வ.ரங்கபிரகாஷ், வி.ஹேமலதா, காரைக்கால், திரு.பி.ஆறுமுகம், சரோஜா தம்பதியர், தூத்துக்குடி திரு.எஸ்.வி.என்.நடராஜன் குடும்பத்தாரும், உறவினர்களும், காஞ்சிபுரம் திரு. டி.தாதாராவ் (State Bank of India) குடும்பத்தாரும் பதிவு செய்துள்ளார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். பல அன்பர்கள் வேண்டுகோளுக்கு இணங்க இவ்வருட தீபாவளி யாத்திரைக்கு இரண்டு 3 டயர் கோச் ஏற்பாடு செய்துள்ளோம். உங்கள் டிக்கட்டுகளை முன் கூட்டியே ரிசர்வ் செய்து கொள்வது நலம்.

*விவரத்திற்கு ரூ. 2 ஸ்டாம்ப் அனுப்புதல் வேண்டும்*

## ஸ்ரீ நாமகிரி டிராவெல் சர்வீஸ்

34A/2 அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி–620 002.

PHONES: 704312, 706823



# 1.9.98 முதல் 7.9.98 வரை

## சிறப்பு தள்ளுபடி விற்பனை




- தரமான மதுரை சுங்குடிப் புடவைகள்
- பெங்கால் காட்டன்
- பாலிகாட்டன் & பிரிண்டட்
- பத்திக் & பிரிண்டட்
- வெங்கடகிரி
- தேவேந்திரா
- காஞ்சி காட்டன்

மற்றும் அனைத்து ரக பேன்ஸி காட்டன்
சாரீஸ் மொத்தமாகவும் சில்லறையாகவும்
வாங்க சிறந்த இடம்

## மதுரை சுந்தரம் டிரேடர்ஸ்

18A, சுந்தரம் பிள்ளைத் தெரு, புரசைவாக்கம் (டேங்க்),
சென்னை - 7. போன்: 6427450

**எங்களுக்கு வேறு எங்கும் கிளைகள் கிடையாது**

# புதிய கோணம்

"படத்தைத் தலைகீழாக மாட்டி விட்டு, புரியவில்லையென்றால் எப்படி? உலகம் நமக்காக என்ற பார்வையை மாற்றி, நாம் உலகிற்காக என்று வாழுங்கள். துன்பமெல்லாம் நீங்கும்" – என்கின்றார் ஆன்மீகச் சொற்பொழிவாளர்.

நம் மீது மனவருத்தப்படுபவர்களை நல்லவர்கள் என்று நினைத்துக் கொண்டு, நம்மைத் தாழ்த்திக் கொள்வானேன்? மனவருத்தம் உள்ளவர்கள் தமது உணர்ச்சிகளின் கைதிகள் என உணர்ந்து கொண்டு, நாம் மனஅமைதியோடு இருக்கலாம் அல்லவா!

புதிய கோணத்தில் பார்த்தால் பிரச்னைகளுக்குப் புதிய தீர்வு கிடைக்கலாம் சிந்தனைக்கு வேலை கொடுத்தால் சிறப்பாக வாழலாம்.

நமது சொல்படி நடக்க வேண்டும் குழந்தைகள் என்பது வழக்கமான கோணம். குழந்தைகளின் சொல்படி நாமும் சில சில சமயம் நடக்க வேண்டும் என்று மாற்றிக் கொள்வது, குழந்தைகளின் மனநிலையையும் ஆர்வங்களையும் புரிந்து கொள்ள துணைசெய்யும்.

கல்லூரிப் பேராசிரியையின் சொற்பொழிவின் போது 'நோட்ஸ்' எடுப்பது கஷ்டமாகப்பட்டது கவிதாவிற்கு. பேராசிரியையின் அனுமதியுடன் முக்கியமான பாடங்களின் சொற்பொழிவை 'டேப்'பில் பதிவுசெய்தாள். இரவு தூங்கப் போகும் முன் போட்டுக் கேட்கத் தொடங்கினாள். படிப்பது எளிதாகி விட்டது.

ஒரு பாடத்தைப் படித்து விட்டு கேள்விகளுக்குப் பதில் சொல்வது வழக்கமானது. ஆசிரியை அகிலா ஒரு புதுமை செய்தாள். "பிள்ளைகளே, பாடத்தைப் படியுங்கள். அதன்பின் நீங்களாக பதினைந்து கேள்விகளை எழுதுங்கள்" என்றாள். கேள்வி கேட்க வேண்டுமானாலும், பாடத்தைப் புரிந்திருக்க வேண்டுமல்லவா! அதுவே



# புதிய வாணம்



பிள்ளைகளுக்கு ஒரு படிப்பு ஆகி விட்டது.

கணவன் சத்தம் போடும்போதெல்லாம் காரண காரியங்களைச் சொல்லி அவனைச் சமாதானப்படுத்தி வந்தாள் நிர்மலா. அவளுக்கு அது சலித்துப் போய் விட்டது. பதிலேதும் சொல்ல வேண்டாம் என்றோர் புதிய கோணத்தைத் தேர்ந்தெடுத்தாள். ஒரு வாரத்தில் கணவன் கோபப்படுவது கணிசமாகக் குறைந்து விட்டது.

மத்தியானம் ஒரு மணி நேரம் தூங்கினால்தான் உடம்பு ஒத்துழைத்தது சரளாவிற்கு. ஆனால் வேலைகள் முடியாமல் போனது. ஒவ்வொரு மணி நேரத்திற்குப் பிறகு பத்து நிமிடம் ஓய்வு எடுத்தால் என்ன என்று சிந்தித்தாள். அதன்படி நடந்ததும் வேலைகளும் முடிந்தன. மனத்திலும் புத்துணர்ச்சி ஏற்பட்டது.

மாதக் கடைசியில் பணம் கேட்கும் வேலைக்காரிக்கு மாதச் சம்பளத்தை நிறுத்தினாள் சுமதி. இரண்டு வாரத்திற்கு ஒருமுறை சம்பளம் என்று பழக்கினாள். வேலைக்காரி திட்டமிட்டுச் செலவிட அது தூண்டியது.

நமது அணுகுமுறை ஒரே திசையில் பார்க்கப் பழகி விட்டது. அதனால்தான் சூழ்நிலைகள் மாறினாலும், நாம் மாறாத பார்வையோடு விஷயங்களை நோக்குகின்றோம்.

பிள்ளை பெரியவளாக வளர்ந்த பின்னும் குழந்தையை நடத்துவது போல் நடத்துகிறோம். வேதனைப்படுகின்றோம், அதனால்.

கணவன் மனம் மாறிய பின்னும், முன்பு போலவே நடந்து கொள்கின்றோம்; துன்பத்திலே அடைந்து கிடக்கின்றோம்.

புதிய கோணத்தில் பார்ப்பது மிகவும் அவசியம். ஒவ்வொரு நாளும் புது நாளே. புது சூழ்நிலைகளே. பார்வையில் புதுமை இருந்தால், வாழ்வில் சுவையிருக்கும் என்பது உண்மை.

— பத்மாவதி செல்வராஜ்

அரைகிலோ கடலை பருப்புடன் 100 கிராம் பச்சரிசி சேர்த்து ஊறவைத்து, கெட்டியாக ஆட்டவும். அதில் வெங்காயம், பச்சை மிளகாய், இஞ்சி, பூண்டு, சோம்பு என யாவும் கலந்து, பிசைந்து எண்ணெயில் பகோடா போல் உதிர்த்து, சிவந்ததும் எடுக்கலாம். இந்த பகோடா மாறுதலான சுவையுடனும், மணமுடனும் இருக்கும்.

– ஆர். பாலா



கயவன், மர்மம், கணவன், தவிப்பு
ஓர் இளம் பெண்ணை
சூழ்ந்து வரும் விறுவிறுப்பான தொடர்.

உங்கள் விஜய் டி.வி.யில்
செவ்வாய்தோறும் இரவு 8.30 மணிக்கு
விறுவிறுப்பான ஒரு மர்மத்தொடர்



ஸ்டாப்ஏக் க்ரீம் பாம்-ன்

# 'புதிய பா(ர்)வை'

ஒரு சமூக விரோதியின் ஆசை வார்த்தைகளுக்கு
பலியான இளம் பெண் தன்னை மீட்டுக்கொள்ள
பெரும் புயலாய் மாறி
அந்தக் கயவனையே வேரோடு சாய்க்கும் உக்கிரம்.
காணத்தவறாதீர்
அச்சமூட்டும் அழகினை.

வழங்குபவர்கள்
Stopache CREAM BALM



ஆன்மீகம் என்பது ஆனந்த நிலை தரும் உணர்வு. வார்த்தைகளால் வர்ணிக்க முடியாதது. தாமே பூஜைகள் செய்தும், பிறர் செய்யும் பூஜைகளைக் கண்டுகளித்தும் இரண்டு விதமாக ஆன்மீக நிலையை உணர்ந்தாலும், ஒப்பில்லாத அந்த உணர்வினை தாம் அனுபவித்து ஆன்மீகத்தால் வாழ்வில் படிப்படியாக உயர் நிலையடைந்து மகிழ்ந்தது எப்படி என்பதை சில வாசகிகள் நம்முடன் பகிர்ந்து கொள்கின்றனர். பெரியவர்கள் மூலம் தாம் கற்றுக் கொண்ட பூஜைகளை, பிரார்த்தனைகளைத் தன் வீட்டிலேயே செய்து, அதிலேயே பேரானந்தம் அடைவதுடன், தனக்காக மட்டுமின்றி, தம்மை சேர்ந்தவர்களுக்காகவும் பிரார்த்தனைகள் செய்கிறார்

# அளவிலா மனநிம்மதி வருவது

திருவல்லிக்கேணி சீதா லக்ஷ்மி ரங்கசாமி அவர்கள்.

''மிகவும் ஆசாரமான வைணவ குடும்பத்தில் பிறந்தவள் நான். திருமணமாகி புகுந்த வீடு வந்ததும் வீட்டிலேயே விளக்கேற்றி பிரார்த்தனை செய்து கொள்ளுவேன். பன்னிரண்டு வருடம் முன்பு என் மாமியார் படுத்த படுக்கையாக இருந்த சமயம், நாங்கள் மிகவும் சுகாதாரமான நிலையில் அவரை துடைத்து, குழிப்புண்களுக்கு மருந்து போட்டு வைத்தும், குழிப்புண் காரணமாகக் காலே தனியாகக் கழன்று விடும் என்று சிலர் பயமுறுத்த, எனக்கு மிகவும் பயமாகவும், வேதனையாகவும் இருந்தது. அந்தச் சமயம் என் சித்தியின் பேத்தி மேல் நரசிம்மர் வருவது வழக்கம். என் சித்தி இது பற்றி கேட்க, ''லக்ஷ்மி நரசிம்மர் பிரதட்சணம் செய்தால் நல்லபடியாக ஆகும்'' என்று சொன்னதன் பேரில் (கோவிலில் அல்லது வீட்டில்) நூற்றி எட்டு பிரதட்சணம் செய்ய ஆரம்பித்தேன். என் மாமியார் காலமும் நல்லபடியாக முடிந்தது. இன்று வரை விடாமல் தினமும் செய்கிறேன். ஒரு பலகையின் நடுவில் கோலம் போட்டு, ஸ்தோத்திர, புராண கதை புத்தகங்களை சுற்றிலும் வைத்து நடுவில் திருவிளக்கை ஏற்றி வைத்து பிரார்த்தனை செய்து கொண்டு 108 பிரதட்சணம் வர வேண்டும். எனக்கோ, என்னை சேர்ந்தவர்களுக்கோ வேண்டுதல்கள் இருந்தால் அதை மனதில் நினைத்துக் கொண்டு செய்கிறேன். திருமணம், சொந்த வீடு, குழந்தைப் பேறு அனைத்துக்கும் பலன் தந்திருக்கிறார் லக்ஷ்மி நரசிம்மர்.

• சீதா சுந்தர்



என் கணவர் 'ரகமி' எனும் பெயரில் எழுத்துலகில் நன்கு அறிமுகமானவர். வேறு எந்த வருமானமும் இல்லாத நிலையில், லக்ஷ்மிநரசிம்மர் பூஜையின் பலனால் மிகவும் கௌரவமாக, மன சஞ்சலமற்று நிம்மதியாக வாழ்ந்து கொண்டிருக்கிறோம். வீட்டிலே இருந்தபடியே இறைவனை வழிபடுவது எங்கள் இருவரின் வழக்கம்.

அவரது சொந்த கிராமமான கீழ் கொவளமேட்டில் சிதிலமடைந்திருந்த ஆஞ்சநேயர் கோவிலில் இருந்த விக்கிரகத்தை, அங்குள்ள ஆதிகேசவ பெருமாள் கோவிலினுள் தனி சன்னதியாக பிரதிஷ்டை செய்ய,

• ஜானகி ராஜகோபாலன்





• கிருஷ்ணவேணி

நல்ல உள்ளமும், ஆன்மீக சிந்தனையுமுள்ள பல அன்பர்களிடமும் நன்கொடை வசூலித்து தந்த பின் கும்பாபிஷேகமும் நடந்தது. அச்சமயம் இருதய நோய் வந்து 'கல்யாணி மருத்துவ மனையில்' அட்மிட் ஆனார். மிகவும் சீரியஸாக இருந்து சிவப்பு விளக்கு போட்டு, பன்னிரண்டு மணி நேர கெடுவும் வைத்தனர். அரை மயக்க நிலையில் இருந்த என் கணவருக்கு ஆஞ்சநேயர் சஞ்சீவி மலையைத் தூக்கிச் செல்வது போன்ற காட்சியும், அந்த அறைக்குள் பரிமளசுகந்த மணமும் வந்ததும், நர்சை அழைத்துத் தண்ணீர் கேட்டார். சில நிமிடங்களில் மானிட்டரில் இருந்த ஈசிஜி நிலையும் சரியாகி விட்டது. இது ஒரு 'மெடிகல் மிராக்கல்' என்று சிலுவை போட்டுக் கொண்டார் அந்த கிருஸ்துவ டாக்டர். மூன்று முறை ஹார்ட் அட்டாக் வந்தது. தினமும் செய்யும் பிரதட்சணம் என்னைக் காக்கும் கவசமாக உள்ளது. பிரதட்சணம் செய்வதற்கு ஒரு முறை உள்ளது.

# ன்மீகத்தில்தான்...



• சீதாலக்ஷ்மி ரங்கசாமி

*ஓம் நமோ*
*நாராயணாய*
*ஸ்ரீமந் நாராயண*
*சரணம் சரணம்*
*பிரபத்யே*
*ஸ்ரீமதே நாராயண*
*நமஹ :*

என்று 108 முறையும், லக்ஷ்மி நரசிம்ம ஸ்லோகம் மூன்று முறை சொல்லியும் சுற்றி முடிக்க வேண்டும். எப்பேர்ப்பட்ட பிரார்த்தனையும் நிறைவேறுமென்பதே உண்மை! கோவிலுக்குச் சென்று மணிக்கணக்காக நின்று, தீர்த்தம் வாங்கும் வரை இடிபட்டும், பேசிக் கொண்டும் இருப்பதில் எனக்கு உடன்பாடு இல்லை. அதனால் சில விசேஷ தினங்களில் மட்டும் கோவிலுக்குச் செல்கிறேன். வீட்டிலேயே பிரார்த்தனை செய்வதே மன அமைதி தருகிறது. தினமும் ஸ்ரீசுக்தம், ஆஞ்சநேய, கருட ஸ்தோத்திரம், சுதர்சனாஷ்டகம் போன்ற சிறு ஸ்லோகங்கள் சொல்லிக் கொண்டேதான் நாள் முழுவதும் வேலை செய்கிறேன். இரவும் தூக்கம் வரும் வரை சொல்வதால் கெட்ட கனவுகள் வராமல் நிம்மதியான தூக்கம் வருகின்றது. நம்பிக்கை தான் கடவுள்!

சிறு வயதிலிருந்தே பக்திமார்க்கத்தில் வளர்ந்ததால் கோவிலுக்குச் சென்றாலும் சரி, ராமகிருஷ்ண மடத்துக்குச் செல்கையில் கிடைக்கும் மனநிம்மதி வேறு எங்குமில்லை என்கிறார் சென்னை தொலைக்காட்சியில் அசிஸ்டென்ட் இன்ஜினியராக இருக்கும் திருமதி சீதா சுந்தர்.

"கடவுள் நம்பிக்கை என்பது நினைவு தெரிந்த நாள்முதல் உண்டு. சிறு வயதில் நம் கலாச்சார வழக்கப்படி மாலை விளக்கேற்றியதும் சுவாமி முன் உட்கார்ந்து இரண்டு பாட்டு பாடி விட்டுத்தான் மறு வேலை. முருகனை மிகவும் பிடிக்கும். முருகா! முருகா! என்பதிலே ஏதோ ஒரு அந்நியோன்னியம் இருப்பதாகத் தோன்றும்.

கல்லூரியில் படிக்கையில் இராமகிருஷ்ண மடத்துக்குச் செல்வதிலும், பஜனை, ஆரத்திகளில் கலந்து கொள்வதிலும் ஈடுபாடு ஏற்பட்டது. தியாகராயநகர் மடத்தில் நூற்றுக்கணக்கான பெங்காலி பஜன்ஸ் கற்றுக் கொண்டேன். அவர்களது சேவை மனப் பான்மை என்னை ஈர்த்தது. அதன் காரண மாக அன்னை சாரதா தேவியின் நேர் சிஷ்யையான பாரதி பிராணாஜியிடம் தீக்ஷை எடுத்துக் கொண்டேன். அது நம்மைக் கவசம் போல் காக்கும் என்பது அனுபவபூர்வமான உண்மை! மனஉறுதியும், தன்னம்பிக்கையும், தோல்வி கண்டு துவளாத உள்ளத்தையும் கண்டிப்பாய் அந்த மந்திர உபதேசம் தருகின்றது.

திருமணத்திற்கு முன்பு '72-ல் பம்பாயில் வேலை கிடைத்த சமயம் அங்கு 'கார்ரோடு' பகுதியில் இருந்த மடத்துக்குச் சென்று வந்த போது கிடைத்த சிநேகிதியின் நட்பு இன்று வரை தொடர்கிறது. அங்கு சுவாமிஜி அன்னை சாரதா தேவியின் மீது சார்த்திய புடவை ஒன்றை எனக்குத் தந்ததை பொக்கிஷ மாக வைத்திருக்கிறேன். ஹைதரா பாத்துக்கு மாற்றல் ஆன போது கூட மடத்துக்கான கட்டிடம் கட்டி முடியும் தருவாயில் இருந்த போது நான் தீக்ஷை பெற்ற சிஷ்யை என்றும், என் ஈடுபாட்டையும் அறிந்து அங்கேயே தங்க இடவசதி செய்து தந்தனர். மனதுக்குப் பிடித்த ரம்யமான தெய்வீகமான அந்த இடம் கிடைத்தது மிகவும் சந்தோஷம் அளித்தது.

சென்னை வந்ததும் வீடு தேடிய சமயம் ராமகிருஷ்ண மடத்துக்குச் சென்று "உன்னை விட்டு வெகு தூரம் எப்படிச் செல்வேன். இதற்கு வழிகாட்ட வேண்டியது உன் பொறுப்பு" என்று முறையிட்டுப் பிரார்த்தனை செய்து கொண்டேன். கடவுள் அருளால் ராஜா அண்ணாமலைபுரத்தில் வீடு கிடைத்தது. என் ஓர்ப்படி மாயாவுடன் சேர்ந்து பாபா பஜன்கள் நடக்கும் 'சுந்தரம்' செல்லவும் ஆரம்பித்தேன். வீட்டிலிருந்து நடக்கும் தூரத்தில்தான் சுந்தரம், இராம கிருஷ்ணமடம், ஷீரடி சாய்பாபா கோவில் சிருங்கேரி மடம் அனைத்தும் உள்ளது. இதை வாழ்வில் என் பாக்கியமாகக் கருதுகிறேன்.

எனக்குப் பிடித்த முருகனே என் புகுந்த வீட்டிலும் குலதெய்வமாக உள்ளதும் என்னை மகிழ்ச்சி கொள்ளச் செய்கிறது. என் கணவர் வேலை மாறும் சமயம் 'சுந்தரம்' சென்று பிரார்த்தித்துக் கொண்டேன். அவருக்கும் வேலை கிடைத்தது. எங்கே தெரியுமா? பாபா புத்தகங்கள் வெளியிடும் 'சாயி ஸ்ரீராம் பிரஸ்ஸில்'. எந்த பிரச்னை வந்தாலும் கடவுள் தீர்த்து வைப்பார். நாம் ஏன் தலையைப் பிய்த்துக் கொள்ள வேண்டும் என்று இருக்கிறேன். பிரச்னை என்று ஒன்று வந்தால் தீர்வு என்ற ஒன்றும் இறையருளால் இருக்கும்தானே? நாம் ஏன் அநாவசியமாகக் கவலைப்பட வேண்டும்?

நமக்குள் இருக்கும் ஞானபலத்தைத் தட்டி எழுப்பினால் தடங்கலின்றிப் பிரவாகமாய் காமாட்சி அன்னையின் அருள் கிடைக்கும் அதுவும் நம் இல்லத்திலேயே என்பதை பிரத்யக்ஷமாய் உணர்ந்தேன் என்கிறார் பெசன்ட் நகரிலுள்ள திருமதி கிருஷ்ணவேணி.

"எட்டு வயது முதல் திருமணமாகும் வரை அம்மா சொல்லும் 'லலிதாம்பாள் சோபனத்தையும் தொடர்ந்து தேவி பாடத்தையும் செவ்வாய், வெள்ளியில் சொல்வேன். திருவிளக்கு நமஸ்கார பூஜை என்பதை முப்பத்தி இரண்டு வாரம் செய்தால் திருமணம் ஆகும். எனக்கும் இருபத்தியொரு வயதில் திருமணம் ஆனது. தினமும் காமாட்சி பூஜை செய்கிறேன். குடும்பச் சூழ்நிலை காரணமாக எங்கள் வீட்டை விற்று விட்டோம். என் கணவருக்கு ரிசர்வ் வங்கியில் வேலை. இரண்டாவது முறை லோன் கிடைப்பதும் கஷ்டம். வீட்டு லோன் கிடைப்பது முன்பெல்லாம் கொஞ்சம் சிரமம்தான். வீட்டிலே திருவிளக்கு நமஸ்கார பூஜை ஆத்மார்த்தமாக, பக்தி சிரத்தையுடன் செய்து வந்தேன். ரிசர்வ் வங்கி சொஸைட்டி ஒன்றை ஏற்படுத்தி ஃபிளாட் கட்டிய போது சிறு ஃபிளாட் புக் செய்தோம். அம்மன் அருளால் திரும்ப லோன் கிடைத்து பெரிய ஃபிளாட்டிலே இருக்கிறோம்.



அவசரத்தில் இந்து நிமிடத்தில் பாயசம் செய்ய ஒரு எளிய வழி. கடலை பருப்பையோ, பயத்தம் பருப்பையோ வாணலியில் நெய் விட்டு பொன்னிறமாய் வறுக்கவும். பாலில் வெல்லம் கரைத்து கொதிக்க விடுங்கள். அந்த நேரத்தில் வறுத்ததை மிக்ஸியில் நறநறவென்று பொடித்து அதில் கலக்கி ஏலத்தூளும் சேர்த்து கொதிக்க விட்டால் 'ஏ'கிளாஸ் பாயசம் ரெடி.

– மஞ்களா கிருஷ்ணன்.

## வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



**அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!**



அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க அணுகுங்கள்




## YESDE ASSOCIATED BUILDERS LTD.

FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS

26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.
Phone: 4340224/4340210/-4342667. Fax: 044-2344333

நீங்கள் எப்பொ
ழுதும் உங்கள் ஆரோக்கியத்தை
நன்கு பாதுகாக்கிறீர்கள். ஆனால் உங்கள்
சருமம் ? வேம்பின் சம உணவை உங்கள் சருமத்திற்கு
அளியுங்கள். இயற்கையின் மதிப்புமிக்க பரிசான அதை
மார்கோ உங்களுக்குத் தருகிறது. மார்கோவில் உள்ள வேம்பு
உங்கள் சருமத்தில் மென்மையாக உட்புகுந்து சுத்தப்படுத்துகிறது.
அழுக்கையும், அதிகமாயுள்ள எண்ணைப்பசையையும் நீக்குகிறது.
கிருமிகளை அழிக்கும் வேம்பின் குணம் உங்கள் சருமத்தை
வியாதிக் கிருமிகளிலிருந்து பாதுகாக்கிறது.
உங்கள் சருமத்தை வளமாகவும்
மென்மையாகவும்
ஆக்குகிறது.
அதற்கு ஆரோக்கியத்
தையும், பளபளப்
பையும், புத்துணர்ச்
சியையும் அளித்து,
உங்களை அழகுபடுத்துகிறது.
இயற்கை வழியிலே...




INTERFACE 3130 TAM

இயற்கையிலிருந்து இனிய சருமத்திற்கு முற்றிலும் பாதுகாப்பு

குழந்தைகள் படிப்புக்காக பிரார்த்தனை ஒன்று உண்டு. தேர்வு சமயத்தில் செய்யும் பூஜை உள்ளது. பலகை மீது கீழ்க்கண்ட கோலத்தைப் போட வேண்டும். தினமும் போட முடியாதவர்கள் மாக்கோலம் போட்டு வைத்துக் கொள்ளலாம்.






கடுக்காயை அரைத்து நெற்றியி லுண்டாகும் அலர்ஜி புண்ணுக்கு (ஸ்டிக்கர், குங்குமம் ஆகியவை வைப்பதால் வரும் புண்ணுக்கு) போட்டுக் கொண்டேயிருந்தால் புண் சீக்கிரம் ஆறி விடும்.

– மரகதம்.

45 நாட்கள், பன்னிரண்டு மண் அகல்கள் ஏற்றி வைத்து கந்தசஷ்டி கவசம் படித்து வர வேண்டும். தினமும் பாலில் சிறிது சர்க்கரைப் போட்டு நைவேத்தியம் செய்ய வேண்டும். முதல் நாளும், கடைசி நாளும் சர்க்கரைப் பொங்கல், பானகம், நைவேத்தியம் முடிக்கு மன்று பிரசாதத்தை ஐந்து ஆண் குழந்தை களுக்குத் தர வேண்டும். என் மகளும், மகனும் சுமாராகப் படிப்பவர்கள்தான். தேர்வு சமயம் நான் நம்பிக்கையுடன் பூஜை செய்ததில் மகள் எம்.ஏ. முடித்துவிட்டு திருமணமாகி அமெரிக் காவில் இருக்கிறாள். மகன் எம்.பி.ஏ. படிக் கிறான். நல்ல பலன்தரும் இந்தப் பூஜையை நிறைய பேருக்கு நான் சொல்லித் தந்து பலனடைந்துள்ளனர்.

நவராத்திரி சமயம் திருமணமாக வேண் டிய வயதில் உள்ள பெண்கள் வீட்டிலே பத்து நாட்களுக்குள், தினமும் குலதெய்வத்தை மனதில் நினைத்துக் கொண்டு மஹா கணபதியை நினைத்து, கிருஷ்ண அஷ்டோத் திரம் சொன்ன பிறகு லக்ஷ்மி அஷ்டோத்திரம் சொல்லி பூஜை செய்தால் கண்டிப்பாகக் கல்யாணம் நடக்கும். நவராத்திரி பத்து நாட்களும்




கோலம் போட்டால் மஹாகணபதியும் லக்ஷ்மியும் நிலைத்து நிற்பார்கள். இல்லம் செழிக்க இந்த நவராத்திரியில் அனைவரும் போட்டு பலன் பெறவும்.

சந்தோஷி மாதா விரதம் இருக்கையில் புளியைத் தொடக் கூடாது என்றெல்லாம் சொல்லி மிகவும் கடினமான அனுஷ்டானம் இருப்பதாக நினைக்கின்றனர். குடும்பத்தில் உள்ள பெண்கள் அதுபோல பயப்படவே வேண்டாம். புளிப்பைத் தாம் சாப்பிடாமல் இருந்து விட்டு முக்கியமாக பொட்டுக் கடலையும், வெல்லமும் நைவேத்தியம் செய்து பக்திசிரத்தையுடன்,

*"சந்தோஷம் அளிக்கும் சந்தோஷிமாதா;*
*சகலமும் கொடுத்திடும் சௌபாக்கிய மாதா;*
*கணநாதன் மகளே வரமெல்லாம் தாதா;*
*மனமெல்லாம் உன்னிடமே அளித்தேன் வா வா."*

என்று மனமுருகி அழைத்து அவள் அதைப் படித்தாலே போதும். என் அனு பவத்தில் சொல்கிறேன். "குடும்பம் ஒரு கோவில்" என்பதே உண்மை. வேதங்களும், புராணங்களும் அதையே சொல்கின்றது. வீட்டை, குடும்பத்தினரை பராமரித்து, வேலை களை சிரத்தையாக அலுத்துக் கொள்ளாமல் செய்தாலே பெண்களுக்குத் தெய்வ பலம் கிடைக்கும். வேலை செய்கை யில் சிரமம், அலுப்பு தெரியாமல் இருக்க மனதுக்குப் பிடித்த ஸ்லோகங்களை சொல் லிக் கொண்டு, பாட்டு கேட்டுக் கொண்டோ செய்தால் மனநிம்மதி கிடைக்கும்" என்கிறார், முகம் நிறைய சிரிப்புடன் வீட்டு வேலைகளை செய்து கொண்டுதான்!

குரு மூலமாக மந்திர உபதேசம் எடுத்துக் கொண்டு பலவிதமான பூஜைகளை செய்து கொண்டு பெரிய குடும்பத்தில் மூத்த

மருமகளாக இருந்து வாழ்வில் அனைவருக்கும் வழிகாட்டுகிறார் பாரதிதாசன் நகரிலுள்ள திருமதி ஜானகி ராஜகோபாலன்.

"ஆசாரமான குடும்பம் எங்களுடையது. மாமனார் வைதிகம். வில்லியநல்லூர் கிருஷ்ண மூர்த்தி சாஸ்திரிகள் என்று பெயர். நாகப்பட்டினத்தில், "நரசிம்மசுவாமி முகவெட்டு" கட்டிக் கொண்டு நரசிம்ம ஜெயந்தி, ஸ்ரீராம நவமியில் நடக்கும் பிரகலாத சரித்திரத்தில் முக்கியப் பாத்திரம் அவர்தான். நானும் காலம் செல்லச் செல்ல படிப்படியாய் பூஜைகளில் ஈடுபாடு கொண்டு தினமும் மடிசார் கட்டும் பழக்கத்தையும் மேற்கொண்டேன்.

ஐந்து நாத்தனார்கள், மூன்று மைத்துனர்கள் உள்ள பெரிய குடும்பம். நாத்தனார்களின் திருமணத்துக்காக 'சுயம்வர கல்யாணி' எனும் நமஸ்கார பூஜை எடுத்துக் கொள்ளச் சொன்னார், எதிர் வீட்டுக்கு வந்த குரு ராஜேஸ்வரி சர்மா. மிகச் சிறந்த ஸ்ரீவித்யா உபாசக குடும்பத்தைச் சேர்ந்தவர். பூஜைகள் செய்வதில் மிகச் சிறந்தவர். முதல் சந்திப்பிலேயே என் மனம் அவர் செய்யும் பூஜைகளில் ஒன்றி விட்டது. அவருடைய வீட்டுக்குள் நுழைந்தாலே மனம் லேசாகி, சாந்தி ஏற்படும். அங்கிருந்து பிரிந்து செல்ல மனம் வராமல் தவிக்கும் நிலை ஏற்படும். புனிதமான இடத்துக்குள் நுழைந்த உணர்வு நம்மை ஆட்கொள்ளும். அவர் எனக்கு தீக்ஷை எடுத்து வைத்தார். அதன்படி தினமும் செய்கிறேன். நான் உட்காரும் இடத்துக்கு முன் கோலம் போட்டு, மஞ்சளை எடுத்து வைத்துக் கொண்டு, கணபதி, துர்க்கை, தட்சணாமூர்த்தி, பஞ்சாட்சரம் எனும் சூரிய நமஸ்காரம் இவற்றை பதினாறு ஆவர்த்திகள் உட்கார்ந்து ஜபித்து விட்டு அதன் பிறகு நின்றும், நடந்தும், இருந்தும் முடிந்தவரை ஜபிப்பேன்.

நவராத்திரி பத்து நாட்களும் துர்க்கா, லக்ஷ்மி, சரஸ்வதிக்கு பூஜைகள் உண்டு. தினமும் வடை, பாயசத்துடன் நைவேத்தியம். துர்க்காஷ்டமிக்கு குங்கும அர்ச்சனை செய்து விட்டுக் குழந்தைகள், சுவாசினிகளுக்கு தாம்பூலம், சாப்பாடு அனைத்தும் உண்டு. தம் வீட்டுக்கு வரும் சிஷ்யர்களிடம் வாய் ஓயாமல் உலக விஷயங்களைப் பேசும் எங்கள் குரு அந்த பத்து நாட்களும் கடுமையான மௌன விரதம் இருப்பார். எப்பேர்ப்பட்ட சூழ்நிலையிலும் பேச மாட்டார்.

கடவுளின் பாதார நம்பிக்கையுடன் கெட்டியாகப் பிடித்துக் கொள்பவர்களுக்கு சஞ்சலமே இல்லை. ஐந்து வருடம் முன்பு கதிராமங்கலத்திலுள்ள ராகவேந்திரா மடத்தின் பூர்ணாபிஷேகத்துக்கு நண்பர் குடும்பத்துடன் சென்றேன். திரும்புமன்று அம்பாசிடர் கார் பங்சர் ஆகி எதிரிலுள்ள மரத்தில் மோதி, சக்கரம் கழன்று, தலைகீழாக பள்ளத்தில் விழுந்ததால் முன்சீட்டிலிருந்த நான் 'நரசிம்மா' என்று கத்தியதுதான் தெரியும். உடம்பில் தோள் பட்டை, மார் கூட்டுக்குள் உள்ள எலும்புகள் (பினாஸ்க் உள் கண்ணாடி போல்) நொறுங்கி ரத்தம் உறைந்து, ரயில்வே மருத்துவமனையில் அட்மிட் செய்யப்பட்டு மூன்று நாள் கழித்து நினைவு வந்தது. ஆறு மாதம் ஆன பிறகு ஒருவழியாக நான் வணங்கும் தெய்வங்களின் அருளால் குணமாகி பழையபடி நடமாடி என் நாத்தனார், மகளுக்கெல்லாம் திருமணம் செய்து வைத்துள்ளேன் என்றால் கடவுள் கருணையைத் தவிர வேறு என்ன?

பலவிதமான கடவுள்களை வணங்குவதால், "நீ தருகிறாயா? நான் தரட்டுமா?" என்று அவர்களுக்குள் நினைத்து யாருமே தர மாட்டார்கள் என்பார்கள். அது தவறு. கடவுளை எந்த ரூபத்தில் எப்படி, எப்போது அழைத்தாலும் வருவார். 'சாமி இல்லா. விட்டால் சாதம் இல்லை' என்பது படிக்கா விட்டாலும் எங்களுக்குப் பெரியோர் சொன்ன வாக்கு. அதை கெட்டியாகப் பிடித்துக் கொண்டுள்ளேன். மணமாகி 51 வருடம் ஆகிறது. சினிமா நாடகம் பார்த்த தில்லை. பூஜை எங்கு நடந்தாலும் போவேன். குரு மூலம் முறையாக பக்தி மார்க்கத்தில் ஈடுபடுவது மிகவும் அவசியம். ஆன்மீகப் பாதையே நம் உயர்வுக்கு வழிகாட்டும் என்கிறார்.

"நீ பூமியில் பிறக்கு முன்பே உனக்காக உன் தாயின் மார்பிலே பாலைச் சுரக்க வைத்தவன் இறைவன். நீ இறந்த பின்னும் உனக்காக இன்னொரு உலகையே படைத்து வைத்திருக்கக்கூடும். அதனால் இறை நம்பிக்கையுடன் இரு" என்கின்ற தாகூரின் வரிகளைத் தாரக மந்திரமாய் நினைத்து வாழ்ந்து மகிழ்வோம்!

— பானுமதி இராமச்சந்திரன்

காலி ஆஃப்டர் ஷேவ் லோஷன் பாட்டில்களை திறந்து கொலுப்படி பின்புறம் வைத்தால் அறையே கமகமவென்று இருக்கும்.

— உஷா



Supplement to Mangayar Malar September '98

# கண்ணாடிக் கனவுகள்



வாங்க... வாங்க... வாங்களேன். அப்படியே படியிலேயே நின்னா என்ன அர்த்தம்? நீங்கள்லாம் வந்தது எனக்கு எவ்வளவு சந்தோஷமா இருக்கு தெரியுமா? எங்கே வருவீங்களோ, மாட்டீங்களோன்னு நெனைச்சேன்.

ஐயோ. நெஜமாவே என்னை மதிச்சி நீங்கள்லாம் வந்துட்டீங்களா? பாப்பா. வா. பக்கத்தில வாயேன். எனக்கு ஒன் தலை முடியை ஒரு தடவை தடவிக் குடுக்கணும் போல இருக்கு. எவ்வளவு நீளமான முடி! நல்லா அடர்த்தியா ஜம்முனு இருக்கே! எனக்குக் கூட சின்ன வயசில ஓம்மாதிரிதான் முடி இருந்தது. குஞ்சலம் வச்சிப் பின்னல் போட்டு முன்னாடி இழுத்து விட்டுக்கிட்டாத் தொடை வரைக்கும் வரும்.

சுத்தி இருக்கிறவங்க எல்லாம் 'அடியே தமயந்தி ஒன் புருசனைக் கட்டிப் போட்டு வச்சிக்க ஒனக்கு இந்தப் பின்னலே போதுண்டி'ன்னு சொல்லுவாங்க. ம்ஹூம். அது அந்தக் காலம். நடுவுல ஒரு பதினாலு வருஷம் காட்டுக்குள்ளே மாட்டிக்கிட்டேன். வெளிய வர முடியலை. என்னைச் சுத்தி இருந்தவங்க எல்லாம் ஒரு மாதிரி காட்டுமிராண்டிங்க. என் முடியைக் கண்டாலே அவங்களுக்குப் பிடிக்கலை. ஒருநாள் ராத்திரி தூக்கத்தில பல்லால கடிச்சே என் முடியை எல்லாம் வெட்டிட்டாங்க. விடிஞ்சி எழுந்து பாத்தா பெருச்சாளி கடிச்சிக் குதறிப் போட்ட மாதிரி இருந்தது என் தலைமுடி. ஒன்னு அழுதேன். வேற என்ன பண்ண முடியும்?

அந்தச் சமயத்தில நான் ரொம்ப மாறிப் போயிருந்தேன். உடம்பு வத்திப் போயிருந்தது. மனசுல எப்பப் பாரு ஒரு பயம். அதனால அழுதேன். அப்பப் போனதுதான். இப்பச் சும்மா எலி வால்தான். இது கூடப் பரவாயில்லைன்னுதான் தோணுது. எண்ணெயைத் தலையில வச்சிட்டு மாங்கு, மாங்குன்னு சீயக்காயைப் போட்டுத் தேய்ச்சி 'எண்ணெய் போச்சா, எண்ணெய் போச்சா'ன்னு தலைமுடியைத் திருப்பித் திருப்பிப் பாக்க வேண்டியதில்லை. 'ஈரம் இருக்கா, காய்ஞ்சிடுச்சா'ன்னு தொட்டுத் தொட்டுப் பாக்க வேண்டியதில்லை. எதுக்கு சிரிக்கறே? வால் அறுந்த நரி மாதிரி பேசறேனேன்னா? ஏதாவது ஒரு சமாதானம் சொன்னாத்தானே மனசு கேட்டுக்கிட்டு சரின்னு அடங்கிப் போறது?

ஒம் பேரென்ன? வித்யாவா? நல்ல பேரு. வாயில நொழையாத பேரா வச்சிக்காமே வித்யான்னு வெச்சிக்கிட்டிருக்கியே. ஸ்கூல்ல மத்த பொண்ணுங்களோட உட்கார்றப்ப கொஞ்சம் ஜாக்கிரதையாவே இரு. இல்லேன்னா அவங்க தலையிலேர்ந்து பேனு வந்து ஒன் தலைல ஏறிடப் போறது. அப்புறம் ரொம்பக் கஷ்டம். பேன் தொல்லைக்கு எங்கிட்ட ஃபர்ஸ்ட் கிளாஸா ஒரு வைத்தியம் இருக்கு. எட்டிக்கா இல்லே... எட்டிக்கா... என்ன சொல்ல வரே? ஒன் தலையில பேன் இல்லையா? ரைட். நல்லதாப் போச்சி.

அடேடே. என்னது இது? நான் சொன்னாத்தான் உக்காரணுமா? நீங்களா உக்காரக் கூடாதா? உக்காருங்களேன். உக்கார வேணாம். நாம பெரியவங்க எல்லாம் உள் ரூமுக்குப் போயிடலாம். கொழந்தைகள் எல்லாம் இங்க இருக்கட்டும்.

ஸ்கூல் போற பொண்ணுங்கன்னா எனக்கு தனிப் பிரியம். அதான் நான் வித்யாகிட்ட பேசிட்டிருந்துட்டேன். வித்யா. ஒரு ஹெல்ப் பண்றியா? எனக்கு முன்ன பின்ன கொலு வச்சிப் பழக்கம் இல்ல. என்னவோ காமா, சோமான்னு வெச்சிட்டேன். நல்லா இல்லைன்னு எனக்கே தெரியுது. நீ என்ன பண்றே? நீ வீடரா இரு. உன் ஃப்ரண்ட்ஸை எல்லாம் சேத்துக்கிட்டு அழகாப் படி வச்சி பொம்மையை எல்லாம் மறுபடி அலங்காரமா அடுக்கு. அடுக்கி வெச்ச கொலுவைக் கலைக்கணுமான்னு யோசனை எல்லாம் பண்ணாதே. அதனால ஒண்ணும் ஆய்டாது. என்ன பண்றியா? தாங்க்ஸ்.

ஒண்ணுமில்ல. ஒரு வாய் காப்பிதான். குக்கர்ல பட்டாணியைப் போட்டிருக்கேன். வெந்தவுடனே எறக்கித் தாளிச்சிட்டேன்னா எல்லாருக்கும் சுண்டல் குடுத்துடுவேன். என்ன எல்லாரும் என்னை ஒரு மாதிரியாப் பாக்கறீங்க? நீங்கள்லாம் வருவீங்கன்னு எனக்கு நம்பிக்கையேயில்ல. உங்களையெல்லாம் பாத்தவுடனே கையும் ஓடலை. காலும் ஓடலை. எதுக்கும் இருக்கட்டும்னு பட்டாணியை ஊறப் போட்டிருந்தது நல்லதாப் போச்சி. அதான் வேகப் போட்டேன்.

எனக்கு ஏன் நம்பிக்கை வரல்லேன்னு கேக்கறீங்களா? ரெண்டு மூணு தரம் பட்டுட்டேனே. பதினாலு வருஷம் ஜெயில்ல இருந்துட்டு வந்தவ, அதுவும் ஒரு கொலையைப் பண்ணிட்டுன்னு தெரிஞ்சா ஒரு மாதிரி

குளம் கட்டியபின் தெப்போற்சவம் வேண்டாமா? நவராத்திரி மாலை வேளைகளில் கோவில் அருகே இருக்கும் குளத்தில் நாம் தட்டில் நீர் வைப்போம் அல்லவா? அதில் 4 (அ) 5 அகல் விளக்கு வையுங்கள். கடைகளில் விற்கும் கப் கேண்டில் (வண்ணமயமாக இருக்கும்) வாங்கி அகலில் வைத்து ஏற்றி விடுங்கள். தெப்பம் பிரமாதமாக கண்ணைக் கவரும்.

**– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.**



திக்குன்னுதானே இருக்கும்?

ஆனா ஒண்ணு. திருட்டு ஒரு பழக்கமா மாறலாம். சூது ஒரு பழக்கமா ஆகலாம். கொலை ஒரு பழக்கமா ஆகுமா என்ன? பதினாலு வருஷத்துக்கு முன்னால கொலை பண்ணி ஜெயிலுக்குப் போய் தண்டனையெல்லாம் அனுபவிச்சிட்டு வந்தவ இன்னும் கொலைப் பழக்கத்தோட இருப்பான்னு யாராவது நெனைச்சா அது பித்துக்குளித்தனம் இல்லையா? கேக்கறேனேயொழிய நாங்கூட அப்படித்தான் நடந்துக்குவேன்.

எனக்கு இப்ப யார் மேலேயும் கோவம் இல்ல. வருத்தம் இல்ல. என்னைச் சுத்தி இருக்கறவங்க என்னைக் கொஞ்சம், கொஞ்சமாப் புரிஞ்சிப்பாங்கங்கற நம்பிக்கை எனக்கு இருக்கு.

ஜெயில்லேர்ந்து வெளிய வந்தப்ப கண்ணைக் கட்டிக் காட்ல விட்ட மாதிரி இருந்தது. கைல கொஞ்சம் காசு இருந்தது. ஆனா எத்தனை நாளைக்கு? என்னை வச்சிக் காப்பாத்த யாருமே கெடையாது. அண்ணா, தம்பின்னு ஒருத்தரும் இல்லே. அப்பா மூஞ்சிய நான் பாத்ததே இல்லே. நான் ஜெயிலுக்குள்ளே வந்ததுக்கப்புறம் அம்மாவும் வாயைப் பொளந்துட்டார். எங்க போறது? என்ன பண்றது?

ஜெயில்ல எனக்கு ஒரு வார்டன். ஜான்ஸி ராணின்னு நாங்க பேரு வச்சிருந்தோம். ஒரு உதை விட்டாள்னா அடி வயிறு கர்ப்பம் கலங்கிடும். அந்த மாதிரி ஆளு. ரொம்ப ஸ்ட்ரிக்ட். ஆனா ரொம்ப நல்ல மாதிரி. ஸ்ட்ரிக்டா இருக்கறவங்க எல்லாம் நல்லா இருக்க மாட்டாங்கன்னு சொல்ல முடியுமா என்ன?

அந்த வார்டன்தான் என்னைக் கூப்புட்டு பேப்பர்ல வந்திருக்கிற விளம்பரம் ஒண்ணைக் காமிச்சாங்க. வயசான ரெண்டு பேருக்கு சமைக்க ஆள் வேணும்னு விளம்பரம்.

நான் விளம்பரத்துல இருந்த அட்ரஸுக்குப் போயிருந்தேன். வயசானவங்க அங்க யாரும் இல்ல. வயசான அம்மாவோட பொண்ணுதான் அந்த அட்ரஸ்ல இருந்தது. சமைக்க ஆள் கேட்டு விளம்பரம் பண்ணியிருந்தீங்களே. அதான் நான் வந்திருக்கேன்னு சொன்னேன்.

"அப்படியா"ன்னு கேட்டுட்டு என்னை மேலும் கீழும் பாத்தாங்க.

எம் மூஞ்சி ரொம்ப அப்பாவித்தனமாத்தான் இருக்கும்.

"ஓம் பேரு என்ன?"ன்னு கேட்டாங்க.

"தமயந்தி"ன்னேன்.

"எங்க அம்மா அப்பாவுக்குத்தான் சமைச்சிப் போடணும். அம்மாவுக்கு எங்கூட இருந்து



பலகாரம் செய்யும் போது தேவையான அளவு சுடுநீரில் டால்டாவை உருக விட்டு மாவுடன் சேர்த்துப் பிசைந்தால், டால்டா ஓரிடத்திலேயே தங்காமல் மாவுடன் பரவலாகக் கலந்து விடும். பலகாரமும் நல்ல ருசியாக, கரகரப்பாக இருக்கும்.

— ஜெயா

சாப்பிடறதில இஷ்டம் இல்ல. மாப்பிள்ளை வீட்ல எப்படி இருக்கறதுன்னு யோசனை. அவங்களுக்குத்தான் சமைச்சிப் போடணும். மந்தைவெளிலதான் இருக்காங்க. அங்கயே தங்கி சமைச்சிப் போட முடியுமா?"

"தாராளமா."

"ஒனக்குக் குடும்பம், குழந்தைங்க...?"

"எனக்கு இன்னும் கல்யாணமே ஆகலை. கல்யாணம் வேணாம்னு விட்டுட்டேன். அம்மா ஒருத்திதான் இருந்தாங்க. இப்ப நான் தனி ஆளு."

"அப்படின்னா சரி. அம்மாவோட ஒத்துப் போறது கொஞ்சம் கஷ்டம். நானே அம்மாவுக்கு மருமக மாதிரிதான். ஒன்னையும் மருமகளாத்தான் நெனைச்சிப்பாங்க. போடி, வாடின்னு அதிகாரம் தூள் பறக்கும். எல்லாத்திலயும் ஏதாவது ஒரு குத்தம் கண்டு பிடிச்சிக்கிட்டே இருப்பாங்க. அவங்களைச் சமாளிக்க முடியுமா ஒன்னால?"

"அதெல்லாம் சமாளிச்சிடுவேன். ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு மாதிரி குணம். அவங்களை அப்படியே ஒத்துக்கிட்டா நமக்கு எதுவும் கஷ்டமாத் தோணாது. ஒரு ரோஜாப்பூ மாதிரி இன்னொரு ரோஜாப் பூ இருக்க முடியுமா என்ன? ஒவ்வொண்ணும் தனிதான். எல்லா ரோஜாவும் ஒண்ணுன்னு நாம நெனைச்சிக்கிட்டா ஒண்ணா ஆய்ட முடியுமா?"

"நல்லாப் பேசறே. வித்தியாசமாப் பேசறே. எனக்கு ஒன்னைப் புடிச்சிருக்கு. ஆனா ரெண்டு மாசம் கழிச்சி இதே மாதிரி பேசறியான்னு பாக்கலாம். ரெண்டு மாசத்துல ஒனக்கும் எங்க அம்மா அப்பாவைப் புடிச்சிப் போகணும். அவங்களுக்கும் உன்னைப்

புடிக்கணும். அப்புறம் பர்மனன்டா நீ அவங்க கூடயே இருக்கலாம் என்ன?"

"சரி"ன்னேன்.

சம்பளம் எதுவும் பேசிக்கலே. முதல்ல அவங்களுக்குப் பிடிக்கணுமே. அப்புறந்தானே மத்ததெல்லாம்?

மந்தைவெளி வீட்டுக்குப் போனேன். அது ஒரு தனி பங்களா. முன்னாடி தோட்டம். அசோக மரம், பவழமல்லி, மா, தென்னை, மருதாணி, கண்டைக்கா, வாழை, எலுமிச்சைன்னு அததுக்கு இஷ்டம் போல வளர்ந்த தாவரங்கள். காம்பவுண்ட் ஓரத்துல மகிழ மரம் ஒண்ணு. வாழை மரங்களுக்குப் பக்கத்துல முருங்கை மரம் ஒண்ணு. காத்தடிச்சா கும்முனு மகிழம்பூ வாசனை வீட்டுக்குள்ள குபுகுபுன்னு வரும்.

மூச்சை இழுத்து அந்த வாசனையை நெஞ்சுல நிறைச்சுக்கிட்டா அப்படியே மூச்சை நிறுத்திட்டா நல்லா இருக்குமேன்னு தோணும். பங்களான்னா புதுசாக் கட்டினது இல்ல. பழைய மாடல். தரைல ரெட் ஆக்ஸைடைப் போட்டுத் தேய்ச்சி விட்டிருந்தது. அப்படியே பவழத்தை இறைச்சி விட்ட மாதிரி தரை. புழங்கறதுக்கு நெறைய எடம்.

அது போதாதுன்னு வீட்டுக்குப் பின்னால ஒரு அவுட்-ஹவுஸ். ஒரு ஹால். ஒரு கிச்சன். ஒரு பெட்ரூம். ஒரு டாய்லெட். அது எனக்காம். ரொம்ப சந்தோஷமா இருந்தது. எங்க போறது, எப்படி இருக்கறதுங்கற யோசனைல இருந்தவளுக்குப் புதையலே கெடைச்ச மாதிரி அந்த வீடு. படுத்துக்க ஒரு இடம். சாப்பாட்டுக் கவலையில்லை. சம்பளம்னு அவங்க எதைப் போட்டுத் தந்தாலும் எனக்குப் போதும். பல் பொடிக்கும், மஞ்சக் கெழங்குக்கும் எவ்வளவு ஆய்டப் போறது.

பாட்டிம்மாவுக்கு தொண, தொணன்னு எப்பவும் பேசிக்கிட்டிருக்கணும். அதுல கொறை, இதுல கொறை, இது சொள்ளை, அது நொட்டைன்னு எதையாவது சொல்லிக்கிட்டிருக்கணும். எனக்கு அது ஒண்ணும் தொந்தரவா இல்லே. வாழ்க்கை ஒரு மாதிரி செட்டிலாய்ட்டதுன்னு நெனைச்சிட்டிருந்தேன்.

இந்த மாதிரி செட்டில் ஆன விஷயத்தை வார்டன் கிட்டப் போய் சொல்லிட்டு வரணும்னு தோணிச்சி. அவங்கதானே எனக்கு இந்த வழியைக் காமிச்சவங்க. சொல்லலேன்னா நல்லாயிருக்குமா என்ன?

ஒருநாள் மத்தியான நேரத்தில வார்டனைப் போய்ப் பார்த்தேன். ஒரு முழம் பூ, அரை டஜன் வாழைப்பழம், தேங்கா வெத்திலையெல்லாம் ஒரு எவர்சில்வர் தட்டுல வெச்சிக் கொண்டு போய்க் குடுத்து, வேலை கெடைச்ச விஷயத்தைச் சொன்னேன். வார்டன் சிரிச்சாங்க. என்னை நேருக்கு நேர் நிமிர்ந்து பார்த்தாங்க. அந்தப் பார்வைக்கு என்ன அர்த்தம்னு எனக்குத் தெரியலை.

"தமயந்தி. நீ இந்த மாதிரி ஜெயில்ல இருந்து வெளிய வந்தவங்கற வெவரத்தை ஒன்னை வேலையில வச்சிருக்கவங்ககிட்ட சொல்லிட்டியா?"ன்னு கேட்டாங்க.

எருமைப் புண்ணுல காக்கா வந்து கொத்துன மாதிரி இருந்துச்சி. தொண்டைல என்னவோ அடைச்சது.

"இல்லேம்மா"ன்னு சொன்னேன். அடிபட்ட மாதிரி இருந்தது என் குரல்.

"அது தப்பு. நாளைக்குத் தெரிய வந்ததுன்னா நல்லா இருக்காது. நாம என்னவோ அவங்களை சக்கையா ஏமாத்திட்ட மாதிரி அவங்களுக்குத் தோணிடும். இப்பவே சொல்லிடு."

"அது வந்தும்மா..."

"நீ சொல்லலைன்னா, நான் சொல்ல வேண்டி இருக்கும்."

"சரிம்மா"ன்னு வெளிய வந்தேன்.

நான் சொல்லலைன்னா, ஜான்சிராணி மூலமா எப்படியும் தெரிய வந்துடும். அது

இந்த நவ ராத்திரிக்குக் காய்கறி ரவுண்ட் டேபிள் செய்யலாம். பெரிய சைஸ் முள்ளங்கி, பீட்ரூட், காரட், நூல்கோல் தோல் சீவி அரை இன்ச் கனத்திற்கு வட்டமாக நறுக்குங்கள். குண்டூசி ஒன்றால் மேற்புறம் குத்தி ஒரு தடிமனான கீரைத் தண்டு டேபிள் உயரத்திற்கு ஏற்றாற் போல் கட்செய்து குண்டூசியின் ஊசி பாகத்தைத் தண்டில் பொருத்தி விடுங்கள். ஆங்காங்கு பார்க்கில் வையுங்கள். அட்டகாசமாக இருக்கும்.

– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.



இன்னும் கேவலம். அதனால பாட்டிம் மாவோட பொண்ணுக்கு போன் போட் டேன். அவங்கதான் எடுத்தாங்க.

"ஹலோ"ன்னு அவங்க குரல் கம்பீரமாக் கேட்டது.

"நான்தான் தமயந்தி"

"தமயந்தியா... என்ன விஷயம் சொல்லு. அம்மாவை ஒனக்குப் புடிச்சிருக்கா? அம் மாவுக்கு ஒன்னைப் புடிச்சிருக்கா?"

"அது பத்தி பேசத்தாம்மா நான் கூப்பிட் டேன்" என்றேன் சன்னக் குரல்ல.

"என்ன? என்ன ஆச்சி? எங்கம்மாவோட ஒத்துப் போக முடியலையா? எங்கம்மா எப் பவும் இப்படித்தான். ஒடம்புதான் முடியலை இல்லை. யார் வந்து ஒத்தாசை பண்றாங் களோ அவங்களைக் கடவுள் அனுப்பியிருக் கார்னு நெனைச்சிக் கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிட்டுப் போக வேண்டியதுதானே? அம்மாவோட நாக்குல சனி. இப்படித்தான் வர்றவங்க கூட எல்லாம் சண்டை போட்டு வெரட்டி அடிச்சிட வேண்டியது. என்ன பண்றதுன்னு நான் இங்க கெடந்து பேய் முழி முழிக்க வேண்டியது."

"அம்மாகிட்ட தப்பே இல்லேம்மா."

"பின்ன? வேறென்ன? சம்பளமா?"

"அதெல்லாம் ஒண்ணும் இல்ல. நான் ஒரு விஷயத்தை உங்ககிட்டேர்ந்து மறைச்சிட் டேன். அதான் சொல்லிடலாம்னு போன் பண்ணேன்."

"என்ன அது?"

சொன்னேன். கொலை பண்ணினது, ஜெயில்ல இருந்தது, வெளிய வந்தது, அல் லாடினது, வேலைக்குச் சேந்தது எல்லாம் சொன்னேன். கொரல்ல அழுகையும் கையா லாகத்தனமும் சேந்து என் பேச்சே சரி யில்லை. கொஞ்சம் காத்து, கொஞ்சம் அழுகை, கொஞ்சம் சத்தம்னு எப்படியோ சொல்லி முடிச்சிட்டேன்.

எதிர்ப்பக்கத்துலேர்ந்து சவுண்டே இல்லை.

"அம்மா"ன்னேன்.

"தமயந்தி. கேக்கறதுக்கு' மொதல்ல திக் குன்னுதான் இருந்தது. இப்ப ஐயோ பாவமேன்னு தோணுது. ஆனா இதுல நான் சொல்றதுக்கு எதுவுமே இல்ல. என் வீட்டுக் காரர்கிட்டக் கேட்டுட்டுத்தான் எதுவும் சொல்ல முடியும். அதனால நீ நாளைக்கு போன் பண்றியா? நேர்ல எல்லாம் வர வேணாம்."

"சரிம்மா"ன்னேன். நேர்ல வர வேணாம்னு சொன்னப்பவே எனக்குத் தெரிஞ்சிப் போச்சி. மறுநாள் போன் பண்ணேன். அந்தம்மா குரல் ரொம்பக் கம்மிப் போய் இருந்தது.



இப்பொழுது குறுத்து (இளம்) இஞ்சி கிடைக்கிறது. அதன் தோலை நீக்கி நன்கு கழுவி காரட் துருவலில் துருவி ஒரு ஸ்பூன் அளவு எலுமிச்சை சாதம் தயாரிக்கும் போது கலந்தால் சுவையும் மணமும் சூப்பரோ சூப்பர்! ஜீரணமும் ஆகும்!
- ஜெயா

"தப்பா எடுத்துக்காதே தமயந்தி. என்ன தான் இருந்தாலும் ஒரு கொலை பண்ணிட்டு ஜெயிலுக்குப் போய்ட்டு வந்திருக்கறவனை வேலைக்கு வச்சிக்கறதுக்கு என் வீட்டுக்காரர் மனசு ஒப்பலை."

"பரவால்லைம்மா. பரவால்லை. அதுக்கு நீங்க ஏன் வருத்தப்படணும்? எனக்கு வேற ஏதாவது ஒரு வழி கெடைக்கும். நான் பாத்துக் கறேன்"னு போனைத் தொட்டில்ல மாட் டிட்டு நான் வெளிய வந்து பிளாட்பாரத் துலயே உட்கார்ந்து கொஞ்ச நேரம் மூஞ்சை மூடிக்கிட்டு அழுதேன்.

நான் ஏன் அந்தக் கொலையைப் பண்ணித் தொலைச்சேன்?

என்ன ஒரு ஆங்காரம், ஆத்திரம் எல்லாம் இருந்திருந்தா நான் அப்படிப் பண்ணியிருப் பேன்?

அதனாலத்தானே இப்படி நாதியத்துப் போகும்படியா ஆய்டிச்சி?

அப்ப எனக்கு இருபத்து மூணு வயசு. எஸ்.எஸ்.எல்.ஸி.யிலே நல்ல மார்க்கு. அம்மா பாத்திரம் தேய்ச்சி, அப்பளம் இட்டு எப் படியோ எஸ்.எஸ்.எல்.ஸி. வரைக்கும் படிக்க வச்சிட்டாங்க. இல்ல படிக்க வச்சிட்டான்னு சொல்லணுமா?

ஜெயில்ல எங்கூட யார், யாரோ இருந் தாங்க. எப்படி எப்படியோ பேசினாங்க. அத னால என் பேச்சே மாறிப் போயிட்டது. சில நேரங்களில் வெஜிடேரியன் வீட்டுப் பொண் ணுங்க பேசற மாதிரி பேசறேன். சில நேரங் களிலே நான்-வெஜிடேரியன் லோகஸ் பேசற டைப்ல பேசிடறேன். தப்பா எடுத்துக்க

வேணாம். என்ன?

என்ன சொல்ல வந்தேன்? என் படிப்பு பத்தி. இல்லையா? காலேஜ் போய் படிச்சி பெரிய வேலைக்கெல்லாம் போகணும்னா நெறைய பணம் செலவாகுமே. அம்மா தனியா எத்தனை நாளைக்குக் கஷ்டப்படறதுன்னு மேல படிக்கலை. ஒரு எக்ஸ்போர்ட் கம்பெனில வேலைக்குச் சேர்ந்தேன். மாசம் ஆயிரம் ரூபா சம்பளம். நல்ல சம்பளம் அது.

கிரின்னு ஒரு சூப்பர்வைசர். எக்ஸ்போர்ட் கம்பெனில அவனுக்கும் கொஞ்சம் பங்கு இருந்தது. கவுன், கவுனாத் தச்சி ஃபாரினுக்கு அனுப்பற கம்பெனி அது. அக்கவுன்ட் செக்ஷன்ல எனக்கு வேலை. டைப்பிங் தெரியும், கணக்கு எல்லாம் தெரியும். வேலையில ஒரு கொறையும் வக்கல.

கிரிக்கு என்னை ரொம்பப் புடிச்சிப் போச்சி. எனக்கும் கிரியை ரொம்பப் புடிச்சிப் போச்சி. அதை லவ்வுன்னு அப்ப நெனைச்சேன். இப்ப சிரிப்பா வருது. அது லவ்வு இல்ல. வேற ஏதோ ஒண்ணு. மனசு போட்ட கணக்குன்னு சொல்லலாம். இல்ல ஒடம்பு போட்ட திமிருன்னு சொல்லலாம்.

கிரிக்கு சுருள் சுருளா முடி. நல்ல ரோஸ் கலர்ல உதடு. அது ரெண்டுமே எந்தப் பொண்ணையும் மயக்கிடும். ஆம்பிளைங்கதான் பொம்பளைங்க பின்னால அலைவாங்கறதுல்லாம் சும்மா. பொண்ணுங்களுக்கும் அந்த மாதிரி அலையற விஷயமெல்லாம் இருக்கு. கிரி பாக்க அட்டகாசமா இருப்பான். கூலிங் கிளாஸ் போடுவான். எப்பவும் ஜீன்ஸ் பேண்ட். விதவிதமா ஷர்ட்டு. சென்ட்டு. ஃபாரின் சிகரெட். கார்.

அந்த கிரிக்கு எம்மேல ஆசையிருக்குன்னு தெரிஞ்சா, எனக்கு அந்த நேரத்துல எப்படி இருந்திருக்கும்னு யோசனை பண்ணிப் பாருங்க. எந்தப் பொண்ணுக்கும் கிடைக்காத வாழ்க்கை எனக்குக் கெடைச்சிடுச்சின்னு ரொம்ப ஆனந்தப்பட்டேன். கர்வப்பட்டேன்.

கிரிகிட்ட ஒடனே பசு மாடு மாதிரி தலை யாட்டிட்டேன். அப்புறம் கிரியும் நானும் சுத்துனோம். பீச் என்ன? சினிமா என்ன? ஹோட்டல் என்ன? ஐஸ்க்ரீம், பீச்மெல்பா, ஃபலூடா, புடவை, ஜிமிக்கின்னு எப்ப வானத்தைப் பாத்தாலும் எனக்குன்னு ஒரு வானவில் தெரிஞ்சுக்கிட்டேயிருந்தது.

மல்லிகாதான் என் ஆபீஸ் ஃபிரண்டு. ரொம்ப நெருக்கமானவ. எப்பவும் எங்கேயும் ஒண்ணாப் போவோம். வருவோம். அவ கூட சினிமாவுக்குப் போயிருக்கேன். கோவிலுக்குப் போயிருக்கேன். எனக்கு என்ன சந்தோஷம்னாலும், துக்கம்னாலும் அவகிட்ட சொல்லுவேன். என் ஹெல்த் சம்பந்தப்பட்ட பிரச்னையெல்லாம் கூட நான் அவகிட்ட சொல்லுவேன். மாசா மாசம் நடக்கற விஷயத்துல எப்பவாவது வலி ஜாஸ்தியானா அவ மடில முகத்தைப் புதைச்சிக்கிட்டு அழுவேன். அவ என் முதுகையும், வயித்தையும் தடவிக் குடுத்து சமாதானப்படுத்துவா. அப்படிப்பட்டவகிட்டக் கூட நான் கிரி பத்தி சொல்லலை. ரொம்ப ரகசியமா வெச்சிருந்தேன்.

அப்படிப்பட்ட சமயத்துலதான் நான் கிரி கூட ஆபீஸ் விஷயமா கோயம்புத்தூர் போக வேண்டியிருந்தது. கோயம்புத்தூர்ல ஒரு நல்ல ஹோட்டல்ல டபுள் ரூம். ஏ.ஸி. சாப்பாடு ஃபர்ஸ்ட் கிளாஸா இருந்தது. ரூம்ல வால் போஸ்டர்ல ஒரு காடு. அருவி. மைனான்னு என்னென்னவோ இருந்தது. அந்த வால்போஸ்டர்ல படமாத் தெரிஞ்சதெல்லாம் நெஜமாத் தெரியற மாதிரி அந்த ஹோட்டல்ல ஒரு ஏற்பாடு பண்ணியிருந்தாங்க. ஒண்ணும் இல்ல. ஒரு டேப். அதைச் சுத்த விட்டா நீர்வீழ்ச்சி ஜோன்னு விழற சவுண்ட் கேக்கும். சிட், சிட், சிட்னு குருவி எல்லாம் கொஞ்சற கொஞ்சல் கேக்கும். சின்னதா ஒரு நீரோடை சலசலன்னு போற சங்கீதம் கேக்கும். ஒரு பக்கம் அக்காக் குருவியோட அக்கோய். கண்ணை மூடினா காட்டுக்குள்ள இருக்கற மாதிரி ஒரு ஃபீலிங்.

10 ஐஸ்கிரீம் கப்களில் ஒரு கைப்பிடி மணல் நிரப்பி கேழ்வரகை விதைத்து விடுங்கள். முளை வந்தபின் ஆங்காங்கு கொலுப்படியின் இருபுறம், பார்க்கில் ஆங்காங்கு ஹாஸ்பிடலில் ஒன்றிரண்டு, ரோடுகள் போட்டால் ஆங் காங்கு 4, 5 வைத்து விடுங்கள். இந்த 'போர்ட்டபின் பாட் பிளான்ட்'ஐ தினமும் இடம் மாற்றியும் வைக்கலாம். – லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.



கத்தி வர சில்லுனு இருந்துதா, நான் என்னை மறந்து.. என்னை மறந்து... என் மேல கை வச்ச கிரி கிட்ட... புரிஞ்சிருக்கும்னு நெனைக்கறேன்.

எனக்கு அது தப்பாவே தோணலை. சந்தோஷமாத்தான் இருந்தது. அதான் கல்யாணம் நடக்கப் போவுதேன்னு நெனைச்சிக்கிட்டேன். மறுபடியும் மெட்றாஸ் வந்து வழக்கம் போல வேலைல மூழ்கிப் போய்ட்டேன். ஒருநாள் சாயங்காலம், வீட்டுக்கு வர்றதுக்காக ஸ்ரீலங்கா ஹோட்டலுக்கு எதிர்ல இருக்கற பஸ் ஸ்டாப்புல நின்னுக்கிட்டிருந்தேன்.

ஹோட்டல்லேர்ந்து ஒரு கார் வெளியே வந்தது. காரை கிரி ஓட்டிட்டு வந்தான். அவன் பக்கத்துல மல்லிகா. பக்கத்து, பக்கத்துல சும்மா உக்காந்திருந்தாக் கூட எனக்கு ஒண்ணுமே தோணியிருக்காது. மல்லிகா அவன் மேல அப்படியே சாய்ஞ்சி உக்காந்திருந்தா. அவன் என்னவோ சொல்றது தெரிஞ்சது. இவ சட்டுனு திரும்பி அவன் ஒதட்டுல பச்சக்னு...

என் வயித்துல நெருப்பை அள்ளிக் கொட்டின மாதிரி இருந்தது. கிரி ஒதட்டை நாக்கால வருடிக்கிட்டே, சிரிச்சிக்கிட்டே காரை ஓட்டிட்டுப் போனான்.

இதுக்கு என்ன அர்த்தம்?

மறுநாள் காலைல மல்லிகாவைப் பார்த்துக் கேட்டேன்.

கிரியும், அவளும் உயிருக்குயிரா லவ் பண்றாங்களாம். அவ சொன்னா. அது மட்டுமில்ல. அவங்களுக்குள்ளே எல்லாம் ஆய்டிச்சாம். அதுவும் சொன்னா.

என் வாழ்க்கை. நான் மனசுக்குள்ளே கட்டி வச்சிருந்த கோட்டை, என்னோட இன்பமான சொர்க்கம் எல்லாமே என்கிட்டேர்ந்து வெலகிப் போறது தெரிஞ்சது. என்னை மண்ணுல போட்டுத் தேய்ச்சிட்ட மாதிரி எனக்குத் தோணிச்சி. என் வாழ்க்கையை அந்த மல்லிகாதான் பறிச்சிக்கிட்டான்னு அவ மேல கண்ணு மண்ணு தெரியாம மூர்க்கமா ஒரு கோவம் வந்தது.

மல்லிகாவை விட நான் உயரம். அவளை விட எனக்கு ஒடம்புல வலு ஜாஸ்தி.

"என்னடி சொன்னே?"ன்னு அவ கழுத்துல என் கைய வச்சி அழுத்தி அப்படியே சுவத்துல போய் இடிச்சேன். என் கைக்கு எப்படி அவ்வளவு பலம் வந்ததுன்னு எனக்குத் தெரியாது.

ஒரு நாலு பேர் பாய்ஞ்சி வந்து என்னை விலக்கினாங்க. மல்லிகா அப்படியே கீழே விழுந்தா. செத்துப் போயிருந்தா.

என் வாழ்க்கை ஜெயில்ல வந்து நின்னது. ஜெயில்ல மொத நாள் லாக்கப்புக்குப் பின்னால நிக்கறப்ப என்னை மல்லிகா வந்து பாக்கப் போறான்னு கூடப் பைத்தியக்காரத்தனமா நெனைச்சேன்.

அதுக்கப்புறம் பதினாலு வருஷம்.

கிரி ஒரு பொம்பளைப் பொறுக்கின்னு செய்தி வந்தது. மல்லிகாவும் போய்ட்டா, நான் ஜெயில்லன்னு அவன் கவலைப்படவே இல்ல. அவனுக்கு ரேணுகா கெடைச்சிட்டானாம்.

மல்லாக்கப் படுத்துக்கிட்டு 'தூ'ன்னு துப்பினேன். எம்மேலேயே வந்து விழுந்தது. எனக்கு வேணும். எனக்கு வேணும். அடுத்தவங்களைப் புரிஞ்சிக்கத் தெரியாத முண்டமா இருந்துட்டேனேன்னு எனக்கு ஆத்திரம் வந்தது. ஜெயில்ல இருந்த மொத கொஞ்ச நாளைக்கு நான் முரட்டுத்தனமாத்தான் நடந்துக்கிட்டேன். ஜான்ஸிராணி கிட்ட நிறைய அடி உதைல்லாம் பட்டு கொஞ்சம் கொஞ்சமா என் ஆத்திரமெல்லாம் அடங்கிப் போச்சி. யாராவது என்னைச் சீண்டினாக் கூட நான் கோவப்படாம இருக்கக் கத்துக்கிட்டேன். தலைமயிரை வெட்டி விட்டுட்டாங்களா? போகட்டும் போன்னு விடறதுக்குத் தெரிஞ்சது.

வெளிய வந்து மந்தைவெளி பாட்டிம்மா கிட்ட வேலைக்குப் போய் அது இல்லைன்னு ஆனதுக்குப் பின்னால நான் ஒரு புத்தகக் கடைல போய் வேலை கேட்டேன். சுவாமி புத்தகம் எல்லாம் அச்சடிச்சி விக்கற கம்பெனி அது. வேலை கேக்கறப்பவே நான் ஜெயில்லேர்ந்து வந்தவங்கறதையும் சொல்லிட்டேன். அவங்க எனக்கு வேலை கொடுத்தாங்க. புத்தகம் விக்கற சேல்ஸ் கேர்ள். சம்பளம் அதிகம்



ஸ்கெட்ச் பேனாவின் வெள்ளை மூடியை சேமியுங்கள். நவராத்திரியில் கோவில் குளம், பார்க் இவற்றிற்கு எல்லை போல் மணலில் சொருக ஒரே மாதிரியாக ஏற்ற இறக்கம் இல்லாமல் இருக்கும் எல்லைகள்.

— லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்

இல்லை. ஒரு சின்ன ரூமை வாடகைக்கு எடுத்துக்கிட்டேன். ஒருவேளை பொங்கிக்கிட்டேன். போதுமா இருந்தது. புத்தகக் கடைக்குப் போய் புக் விக்கற வேலை இல்லாத நேரத்துல புத்தகம் எல்லாம் எடுத்துப் படிக்க ஆரம்பிச்சேன்.

அதுதான் என்னை ரொம்பவே மாத்தி விட்டது. கடவுள்னா அன்புங்கறதை எனக்குப் புத்தகம் மூலமாத்தான் தெரிஞ்சது. கடவுளைப் பாத்தா என்னவோ அன்புமயமா இருக்கற ஒரு உருவத்தைப் பாக்கற மாதிரி இருந்தது. சும்மா 'ஹரே, ராமா, ஹரே கிருஷ்ணா'ன்னு பாடினாலே ஒடம்பெல்லாம் சிலிர்த்துப் போச்சி. அடடா, வாழ்க்கையில இவ்வளவு சந்தோஷமான ஒரு விஷயத்தை மிஸ் பண்ணிட்டோமேன்னு நெனைக்க ஆரம்பிச்



சேன்.

அப்பத்தான் குருமூர்த்தியோட பழக்கம் ஏற்பட்டது. அது ஒரு வித்தியாசமான அனுபவம். புத்தகக் கடைலேர்ந்து ரெண்டு தெரு தள்ளி குருமூர்த்தியோட கடை இருந்தது. கடையே கொஞ்சம் பழசா இருக்கற மாதிரி இருக்கும். பழைய பொருளை எல்லாம் வாங்கி வெச்சிக்கிட்டு விக்கறதுதான் குருமூர்த்தியோட வேலை. பழைய பொருள்னா இதுதான், அதுதான்னு எதையும் குறிப்பிட்டுச் சொல்ல முடியாது.

ஒரு மரப்பாச்சி பொம்மை. ஒரு முக்காலி. ஒரு திண்டு. பித்தளையில தவழ்ந்து போற கிருஷ்ணன் பொம்மை. என்னென்னவோ இருக்கும்.

அந்தக் கடை தற்செயலா என் கண்ணுல பட்டது. உள்ளே நுழைஞ்சேன். நான் தங்கியிருந்தது ஒரு ஃபிளாட் சிஸ்டத்து கிரவுண்ட் ஃப்ளோர் பாச்சிலர் ரூம்ல. எல்லா ஃப்ளாட்ல இருக்கறவங்களும் பழக்கம். போன கொஞ்ச நாள்லே நான் யாருங்கறதைச் சொல்லிட்டேன். கொஞ்ச நாள் கொஞ்சம் தடுமாத்தமா இருந்தது. அப்புறம் அதுவும் சரியாய்டிச்சி. மேல் வீட்டு மாலதி தன்னோட ரிசப்ஷன்ல ஒரு முக்காலி இருந்தா நல்லா இருக்கும்னு எங்கிட்ட சொன்னது ஞாபகம் வந்தது. அந்தக் கடைல இருந்த முக்காலி வேலைப்பாடோட அழகா இருந்ததா? வாங்கிட்டேன். மாலதிக்குன்னே அது அங்க வந்து இருந்த மாதிரி எனக்குப் பட்டது. விலை ரொம்பக் கம்மி. நான் குருமூர்த்தி கடைலயே அதைத் தொடச்சி, லைட்டா பாலீஷ் எல்லாம் தடவி மாலதிகிட்டே குடுத்தேன்.

மாலதிக்கு ரொம்பப் பிடிச்சிப் போச்சி. எவ்வளவுன்னு கேட்டா. வெலையைச் சொன்னேன். ஒரு அம்பது ரூவா சேத்துக் குடுத்தா. எதுக்குஇதுன்னு கேட்டேன். எனக்கு உதவியா இருக்கும்னு சொன்னா. இது கூட நல்ல வழியா இருக்கும் போல இருக்கேன்னு தோணிச்சி.

குருமூர்த்தி கடைக்குப் போய் நின்னு நிதானமாப் பாத்து எதையாவது வாங்கிட்டு வர்றது பழக்கமாப் போச்சி. வாங்கிட்டு வர்றதை கொஞ்சம் லாபத்தோட விக்கறதும் பழக்கமாப் போச்சி.

அப்புறம்தான் குருமூர்த்தியோட எனக்குப் பழக்கம் அதிகமாப் போச்சி. பழக்கம்னா பெருசா ஒண்ணும் இல்லை. நான் அந்தக் கடைக்குப் போனா குருமூர்த்தி எழுந்து நின்னுப்பார். மூஞ்சியில எப்பவுமே ஒரு சின்ன சிரிப்பு இருக்கும். பேச்சே கெடையாது.

"இது எவ்வளவு?"

"நாப்பது ரூவா."



**கண்டலை தாளிதம் செய்து இறக்கியபின் இரண்டு டேபிள் ஸ்பூன் கசகசா வறுத்துப் போடித் தூத் தூவுங்கள். தூளாக இருக்கும்.**

**- லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.**



"இது?"

"அறுவது."

இவ்வளவுதான் எங்களுக்குள்ள பேச்சு. குருமூர்த்திக்கு ஐம்பது வயசு இருக்கும். தலைமுடி எல்லாம் நரைச்சிப் போயிருந்தாக் கூட அதை பம்முன்னு தூக்கி வாரிக்கிட்டு இருக்கறதைப் பாத்தா அதுல ஒரு அழகு இருக்கும். வெள்ளைச் சட்டை. ஒரு வேஷ்டி. செருப்பு. மணிக்கட்டுல ஒரு செப்பு வளையம். அவ்வளவுதான். ரொம்ப எளிமையான ஒருத்தர்னு பாத்தாலே தெரியும்.

அந்தக் கடைக்குப் போகப் போக எனக்குன்னு வெலை கொறைச்சிக் கொடுக்கற மாதிரி தோணும். நான் வாங்கினாலும், வாங்காட்டாலும் அதைப் பத்தி ஒண்ணும் பெருசா எடுத்துக்காத மாதிரி தோணும். அந்தக் கடைல போய் எவ்வளவு நேரம் நின்னாலும், வேடிக்கை பாத்தாலும் குருமூர்த்தி அதை சகஜமா எடுத்துக்கற மாதிரி தோணும்.

கொஞ்ச நாள்ல நான் எதுக்காகப் பொருளை வாங்கறேன், யாருக்காக வாங்கறேங்கற வெவரத்தையெல்லாம் குருமூர்த்திகிட்டே சொல்லிட்டேன். வீட்டுக்கு வரச் சொல்லிக் கூப்பிட்டேன்.

குருமூர்த்தி ஒருநாள் வீட்டுக்கு வந்தார். ஒரு பஜ்ஜி போட்டு சட்னி அரைச்சிக் குடுத்தேன். காப்பி போட்டுக் குடுத்தேன். நல்லா ரசிச்சி சாப்பிட்டார். குருமூர்த்திக்கு கல்யாணம் ஆகலேன்னு தெரிய வந்தது. அவரும் அவரோட அக்கா மட்டும்தான். ஏன் கல்யாணம் ஆகலை? என்னவோ ஆகலை. என்னவோ வேணாம்னு தோணி விட்டாச்சி.

கொஞ்சம் கொஞ்சமா என் மனசில குரு

மூர்த்தியை உள்ளே விட்டுட்டேன்னு அப்புறம்தான் தெரிஞ்சது. ஆனா நான் எதையும் வெளிய சொல்லலே. இது நெஜமா லவ்வு தானா, இல்லைன்னா முன்ன மாதிரியான்னு எனக்கே இன்னும் நிச்சயமாத் தெரியலை. தெனாலிராமன் பூனை மாதிரி என் நிலைமை. அதனால நானா போய் கழுத்தை நீட்டி மாட்டிக்கத் தயாரா இல்லே. கடவுளைப் புடிச்சிருக்கு. என்ன பண்றோம்? கடவுள் பேரைச் சொல்றோம். சந்தோஷம். கோயிலுக்குப் போறோம். சந்தோஷம். கும்பிடறோம். சந்தோஷம்.

குருமூர்த்திகிட்டயும் அப்படியேதான் நடந்துக்கிட்டேன். தனியா இருக்கறப்ப, 'குருமூர்த்தி, குருமூர்த்தி'ன்னு சொல்லிப் பாப்பேன். சந்தோஷமா இருக்கும். கடைக்குப் போய் அவரைப் பாத்தா, கும்பிட்டா சந்தோஷமா இருக்கும்.

அப்படியே இருந்துட்டுப் போகட்டும்னு தான் நெனைச்சிக்கிட்டேன்.

ஆனா குருமூர்த்தி ஒருநாள் என்னைப் பக்கத்துல கூப்பிட்டாரு.

"தமயந்தி. ஒங்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்"னாரு.

"சொல்லுங்களேன்."

"கோவிச்சிக்க மாட்டியே?"

"நான் எதுக்குக் கோவிச்சிக்கப் போறேன்?"

"இல்ல. இந்த வயசுல போய் எனக்கு லவ்வான்னு கேட்டுடக் கூடாது பாரு."

"என்னது?"

"பாத்தியா. அதுக்குள்ள ஷாக் ஆறியே."

"அதில்ல. ஒங்களுக்கா லவ்வுன்னு சொன்னீங்க."

"ம்."

"யாரு?"

"அப்படின்னா?"

"பொண்ணு யாருன்னு கேட்டேன்."

"தெரிஞ்சிக்கிட்டு கேக்கறியா இல்லத் தெரியாம கேக்கறியா?"

"நெஜமா. தெரியாமத்தான் கேக்கறேன்."

"நீதான் தமயந்தி."

"என்னது? எம்மேலயா லவ்வு?"

"சிரிக்காதே. எனக்கு ஒன்னை லவ் பண்ற தகுதி இல்லியா?"

"லவ் பண்றதுக்கு என்ன தகுதி வேணும்?"

"பின்ன எதுக்கு சிரிக்கறியாம்?"

"என்னைப் பத்தித்தான் நான் சொல்லியிருக்கேன் இல்ல?"

"அது பதினாலு பதினஞ்சி வருஷத்துக்கு முன்னால. உனக்கு அப்ப மனசு கண்டபடி அலைபாய்ஞ்சிருக்கும். பேராசை, பாதுகாப்புன்னு என்னென்னவோ விஷயமெல்லாம் ஒம்மனசை ஆட்டிப் படைச்சிருக்கும். மெச்சூரிட்டியே இல்லாம நீ நடந்துக்கிட்டதுக்கு ஒன்னைக் காரணமா சொல்ல முடியாது தமயந்தி. இப்ப நீ மாறிட்டே. நான் ஒன்னைத்தான் லவ் பண்றேன். உன் பதினஞ்சி வருஷ முன்னாடி வாழ்க்கைய தண்ணில எழுதி வச்ச கோலம்னு நெனைச்சிக்குவேன். அது எப்பவோ அழிஞ்சி போய்டிச்சி. அதனால..."

"அதனால?"ன்னு கேட்டேன்.

"நீதான் பதில் சொல்லணும்"னு சொன்னாரு!

ரெண்டு ராத்திரி தூங்கலை. தப்பா, சரியா போராட்டம். நான் தனியா இருக்கேன். நாலு சுவத்துக்கு நடுவுல இப்ப இருக்கறதும் கிட்டத்தட்ட ஜெயில் வாழ்க்கை மாதிரிதான். கூட ஒரு துணை இருந்தா எவ்வளவு நல்லா இருக்கும்னு யோசிச்சிப் பார்த்தேன்.

எனக்குக் கொழந்தை, குட்டின்னு பெரிய ஆசைல்லாம் இல்ல. என் சந்தோஷத்தை, என் துக்கத்தை வெளிய சொல்ல, ஒரு துணை. என்ன தப்புன்னு தோணிச்சி.

அலங்காரம் பண்ணிக்கிட்டு குருமூர்த்தி கடைக்குப் போனேன்.

இப்பவும் அதே சின்ன சிரிப்புதான். பெருசா சிரிச்சா என்னவாம்?

அரை கிலோ முழு வேர்க்கடலை சிறிது நெய் விட்டு ஒன்றிரண்டாக (தோல் நீக்கியது) வறுத்துக் கொள்ளுங்கள்: தேவையான அளவு ஒரு கால் கிலோ சர்க்கரை நன்கு முற்றிய பாகு காய்ச்சி இறக்கி துளி ஏலப் பொடி சேர்த்து நெய்யில் பிரட்டிய வேர்க்கடலையை சேர்த்துக் கிளறி விடுங்கள். சிறிது நேரத்தில் சர்க்கரை பூத்து வேர்க்கடலை தொக்கல் ரெடி. சிறு சிறு பிளாஸ்டிக் கவரில் போட்டுத் தாருங்கள். ஸ்வீட் கண்டல்!

– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.



"வா. தமயந்தி. ஏன் கண்ணெல்லாம் செவந்திருக்கு?"

"ரெண்டு நாளாத் தூங்கலை."

"ஏன்?"

"உங்களாலதான்."

"நானும் ரெண்டு நாளாத் தூங்கலை தமயந்தி. இப்பக் கூட மனசு திக்கு திக்குன்னு அடிச்சிக்குது. நீ என்ன பதில் சொல்லுவியோன்னு. அதனால நான் ஒங்கிட்ட அதைப் பத்தி கேக்கறதாவே இல்லை."

"சரி."

"அப்படின்னா?"

"ஒத்துக்கிட்டேன்னு அர்த்தம்."

குருமூர்த்தி முதல் தடவையா பெரிசா சிரிச்சாரு. அக்கா ஊருக்குப் போயிருக்கறதாச் சொன்னாரு. வந்துடட்டும். கேட்டுட்டு கல்யாண தேதியை முடிவு பண்ணிடலாம்னு சொன்னாரு.

அக்கா ஊரிலேர்ந்து திரும்பி வர்றதுக்கு ஒரு மாசம் இருந்தது. நான் மத்தியான நேரத்துல அவர் கடைக்குப் போய் அஞ்சி நிமிஷம் பேசிட்டு வருவேன். சாயங்காலம் மறுபடி கடைக்குப் போய்டுவேன்.

கல்யாணத்துக்கு யார், யாரைக் கூப்புடறது? என்னென்ன வாங்கறது? குடித்தனம் எங்க வக்கறது? அக்கா தனியா இருப்பாங்களா, நம்ம கூட இருப்பாங்களா? எல்லாத்தையும் பேசிக்கிட்டு இருந்தோம்.

கடைசில ஒரு பேச்சு நடந்தது. அதுலதான் குருமூர்த்தியோட எனக்கு இருந்த சம்பந்தம் முறிஞ்சி போச்சி.

"கல்யாணத்தை எப்படி நடத்தலாம்?"னு கேட்டேன்.

"ஏன். சிம்பிளாத்தான். ஒரு ரெஜிஸ்ட்ரார் ஆபீஸ்ல. ரெஜிஸ்டர் மேரேஜ்."

"ரெஜிஸ்டர் மேரேஜா?"

"ஏன்? அதான் லீகலா செல்லுபடியாற கல்யாணம்."

"இல்லேன்னா கல்யாணம் செல்லுபடியாகாமப் போய்டுமா? நம்ப கல்யாணம் ஒரு கோயில்ல எளிமையா நடக்கணும்."

"கோயிலா?"

"அதுக்கு ஏன் இவ்வளவு பதட்டப்படறீங்க?"

"கோயில்ல மட்டும் நான் நுழைய மாட்டேன் தமயந்தி. ஒனக்கு ஒரு விஷயம் தெரியாது. எங்க குடும்பம் சாமிய நம்பி அழிஞ்சி போன குடும்பம். எங்க அம்மா கும்பிடாத தெய்வம் இல்ல. போகாத கோயில் இல்ல. இருந்தாலும் சின்ன வயசிலேயே எங்க அப்பாவை ஒரு ஆக்ஸிடெண்ட்ல பறிகொடுத்துட்டாங்க. என் தங்கை ஒருத்தி காமாட்சி கோயில் குளத்துல விழுந்து செத்துப் போனா.



**பிளாஸ்க் கழுவும் பிரஷ்ஷின் கைப்பிடி கொஞ்சம் உடைந்து போனதால் கழுவ வசதிப்படவில்லை. உபயோகமில்லாமல் இருந்த அதை சுத்தம் செய்து என் அக்காள் வாழைத் தண்டு நறுக்கியதும் அதன் நாரை எடுக்க அதைக் கடைவது போல் செய்தாள். என்ன ஆச்சர்யம், ஒரு துளி நார் கூட வாயில் சிக்கவில்லை. எல்லாம் பிரஷ்ஷுடன் போனது.**

**— கி. மஞ்சுளா.**



அம்மாவை ப்ரெஸ்ட் கான்ஸர் சாப்பிட்டது. தம்பியை ஒரு ரெயில் காவு வாங்கிடுச்சி. அதுவரைக்கும் சாமி மேல பக்திதான். கோயில்தான். குளம்தான். விபூதி என்ன? ருத்ராட்சம் என்ன? எல்லாம் இருந்தது. தம்பி செத்தவுடனே சாமி மேல இருந்த நம்பிக்கையை அறுத்தேன். படத்தை எல்லாம் போட்டு உடைச்சேன். ஒரு கோயில் கிடையாது. ஒரு கும்பிடு கிடையாது. இன்னை வரைக்கும் எதுவும் ஆகலை. அக்காவும் நானும் நிம்மதியா இருக்கோம். அதனால கோயில்ல மட்டும் என்னை நுழையச் சொல்லாதே."

"என்னங்க இது? இப்படிப் பேசிக்கிட்டு. கடவுள் மாத்திரம் இல்லேன்னா நான் இந்த மாதிரி புது மனுஷியா ஆகியிருக்கவே மாட்டேன். எனக்குக் கல்யாணம் நடந்தா அது தெய்வத்துக்கு முன்னாலதான் நடக்கணும். இல்லேன்னா கல்யாணமே வேணாம்."

"சரி. அப்ப இந்தக் கல்யாணம் நடக்காது."

சட்டுன்னு திரும்பி வந்துட்டேன். திடீர்னு அப்படி ஆகும்னு எதிர்பார்க்கலேயில்லை. வீட்டுக்கு வந்தா என்னவோ சாவு வீட்டுக்குள்ள நுழைஞ்ச மாதிரி இருந்தது. அழுகையா வந்தது. அழுதேன். பொம்மையைக் குடுத்துட்டு, புடுங்கிக்கிட்ட மாதிரி. கடவுளே. கடவுளே.

வேணாம். எதுவுமே வேணாம். தனியாத்தானே வந்தோம்? தனியாவே போய்டலாம்னு என்னை நானே சமாதானப்படுத்திக்கப் பார்த்தேன். முடியலை. திருப்பித் திருப்பி குருமூர்த்தி நெனைவாவே இருந்தது.

கிரி கூட நான் நெருக்கமால்லாம் இருந்

திருக்கேன். அப்ப நான் இந்த மாதிரி பைத்தியம் பிடிச்ச மாதிரில்லாம் இருந்ததில்லை. ஆனா குருமூர்த்திக்கும் எனக்கும் நடுவுல எந்தவிதமான ஒடம்பு நெருக்கமும் இல்ல. குருமூர்த்தியோட வெரல் நகம் கூட எம்மேல பட்டதில்ல. இருந்தாக்கூட நான் பிச்சியா மாறிட்டேன். மனசு திரும்பத் திரும்ப 'குரு' 'குரு'ன்னு ஜபம் மாதிரி சொல்லிக்கிட்டே இருந்தது. இதான் லவ்வா? குருகிட்டேர்ந்து எனக்கு எதுவும் வேணாம். சொத்து, சுகம் எதுவும் வேணாம். ஆனா ஆனா... குரு வேணும். குருவைப் பாத்துக்கிட்டிருந்தாப் போதும்.

ஆமா. இதான் லவ்வுன்னு தோணிச்சி. நாம எதுக்கு அவ்வளவு அடம்புடிச்சோம்? கடவுள் கோயில்ல மட்டுந்தான் இருக்கார்னு ஏன் பைத்தியக்காரத்தனமா நெனைச்சோம்? ரெஜிஸ்டார் ஆபீஸ்ல கடவுள் இல்லையா என்ன? அங்க போய்த் தாலி கட்டிக்கறதுக்குப் பதிலா மோதிரம் மாத்திக்கிட்டா என்ன? அதுவும் இல்லேன்னா ஒரு கையெழுத்துப் போட்டாத்தான் என்ன? கடவுள் சாட்சியா இருக்க மாட்டாரா? இருப்பார். நிச்சயமா இருப்பார்.

அன்னைக்கு குருமூர்த்தியைத் தேடிப் போயிடறதுன்னு நெனைச்சிக்கிட்டேன். நல்லா அலங்காரம் பண்ணிக்கிட்டேன். காலைல சாப்பாடு எதுவும் வேண்டியிருக்கலை.

கதவைத் தெறக்கறேன். வாசல்ல குருமூர்த்தி.

''தமயந்தி''ன்னு கூப்புட்டார். கண்ல தண்ணி.

"என்ன? என்ன?"ன்னு கேட்டேன்.

"ஐ லவ் யூ தமயந்தி. என்னால நீ இல்லாம வாழ முடியும்னு தோணலை. நான் தோத்துப் போய்ட்டேன். அதனால கோயில்லயே தாலி கட்டிக் கல்யாணம் பண்ணிக்கலாங்கற முடிவோட வந்திருக்கேன். என்னை நீ ஒத்துக்குவியா தமயந்தி?"

எனக்கு என்ன பேசறதுன்னே தெரியலை. மயிர்க்கால் எல்லாம் வெறைச்சி நின்னுடுச்சி. கண்ல தண்ணி 'கொட்டட்டுமா' 'கொட்டட்டுமா'ன்னு கேட்டுக்கிட்டு. சிலுத்துப் போச்சி.

"உள்ள வாங்க"ன்னு கூப்பிட்டேன்.

உள்ள வந்தாரு.

"குரு. ஐ லவ் யூ"ன்னு சொன்னேன்.

அப்புறம் ரொம்ப நேரம் சிரிச்சிக்கிட்டிருந்தோம். கோயில்ல தாலி கட்டி, ரெஜிஸ்ட்ரார் ஆபீஸ்ல ரெஜிஸ்டர் பண்ணி எங்க கல்யாணம் நடந்தது.

எது உண்மையான காதல்னு தெரியாம ஒரு பதினாலு வருஷம் ஜெயில்ல இருந்ததை நெனைச்சா வெக்கமா இருக்கு. இதுதான் ரியல் லவ்வுங்கறது புரிஞ்சதுக்கப்புறம் வாழ்க்கை சொர்க்கமா ஆய்டிச்சி.

லவ்வுங்கறது உடம்பு சம்பந்தப்பட்டது இல்லே. சொத்து சம்பந்தப்பட்டது இல்லே. அதெல்லாம் ஆம்பளையும் பொம்பளையும் போடற கணக்கு. சில கணக்கு ரைட் ஆய்டும். சில கணக்கு தப்பாய்டும். ஆனா நிஜமான லவ்வுல எதுவுமே தப்பாறது இல்லே. ஏன்னா இங்க கணக்கே இல்லையே.

அடேடே.. கொஞ்சம் இருங்கோ. பட்டாணி அடிப்புடிச்ச வாசனை வருது. நான் ஒரு பைத்தியம். உங்ககிட்ட பேசிட்டே மத்ததை எல்லாம் மறந்துட்டேன். இந்த மனுஷன் எங்க போனார்? உங்களைத்தானே? கொஞ்சம் பரபரன்னு கடைக்குப் போய் ஸ்வீட், காரம் எல்லாம் வாங்கிட்டு வாங்களேன். வந்தவங்களை வெறுங்கையோட அனுப்ப எனக்கு மனசில்ல... ●

நவராத்திரி சுண்டல் செய்யும்பொழுது, தேங்காய், அல்லது தனியா மிளகாய் வறுத்துப் பொடி செய்து போடுவோம். அப்படியில்லாமல் பட்டாணி சுண்டலுக்கு மட்டும் வேகவைத்து கடுகு, பெருங்காயம், கருவேப்பிலை போட்டு இறக்கும் பொழுது, மிளகுப் பொடி செய்து வைத்துக் கொண்டு லேசாக தூவி இறக்கினால் வித்தியாசமான சுவையோடு நன்றாக இருக்கும். ஆனால் பட்டாணி மொச்சை இரண்டிற்கு மட்டும் தான் எடுப்பாக உள்ளது.

– சித்ரா ஸ்ரீதர்.



**ஒவ்வொருவருக்கும் வாழ்க்கையில் ஒவ்வொரு பிரச்னை. பிரச்னைகள் இல்லாத மனிதன் ஏது? சமீபகாலமாக தன் துன்பங்களுக்குக் காரணம் தேடி பரிகாரம் செய்பவர்கள் நிறைய பேர். ஜோதிடம் பார்த்துப் பரிகாரம், வாஸ்து பரிகாரம்... ஆனால் புதுமையாக ஏழை எளிய மக்களும் செய்யும் வகையில் மரம் நடும் பரிகாரத்தினைச் சொல்கிறார் கண்ணன் பட்டாச்சார்யார். எது எப்படி இருப்பினும் நிறைய நல்ல மரங்களை நடுவது சுற்றுச் சுழலுக்கும் மிகவும் நல்லதாயிற்றே! அவர் பல சுவையான செய்திகளைக் கூறுகிறார்...**

# நல்வாழ்வு பெற மரம் நடலாம்!



**விருட்சமே வினைகளைத் தீர்க்கும் என அடித்துச் சொல்லும் சோதிட சாஸ்திர சிம்மம் என். கண்ணன் பட்டாச்சார்யா...**

ஒவ்வொரு தர்மமும் ஒரு சாஸ்திரமாக தொகுக்கப்பட்டு நம் வாழ்வு செழிக்க நம் ரிஷிகளினாலும் மகான்களாலும் தரப்பட்டுள்ளது. 64 கலைகள் எனப்படும் 64 சாஸ்திரங்கள் விரிவாக இதனைப் பரக்கப் பேசுகின்றது. பல புராணங்களிலும் அரிய பொக்கிஷங்களாக இன்னும் பல இரகசியங்கள் புதைந்துள்ளன. எல்லாமே நம் வாழ்வு செழிக்க நம் முன்னோர்களால் நமக்குத் தரப்பட்டுள்ள வரங்கள்.

வேதங்கள் நான்கு. நாம் வேதத்தை ஒரு தேவதையாக உருவகப்படுத்தினால் அதன் ஆறு அங்கங்களாக, சிக்ஷை, வியாகரணம், நிருத்தம், கல்பம், சந்தஸ், ஜ்யோதிஷம் முதலியவற்றைக் கூறுவார்கள். வேத புருஷனின் கண்ணாக சோதிடம் விளங்குகின்றது. இதைப் பற்றி கர்க்கர், நாரதர், பராசரர், வராக மித்திரர், வெங்கடேச தெய்வக்ஞர், காளிதாசன் மற்றும் பல மகரிஷிகளால் சொல்லப்பட்டுள்ளது. இதில் வராக மித்திரர் ஆரியபட்டர் எழுதியவைகள் மிகப் பிரசித்தி பெற்றவை.

சோதிடத்திற்குத் தெளிவான வாழ்க்கை, உபாசனா மார்க்கம் இரண்டும் மிக அவசியம். சொல் பலிதம் என்பது தெய்வ அருளால்தான் அமையும். சோதிட சாஸ்திரம் மனிதர்களுக்கு வரக் கூடிய இன்னல்களை

அறிந்து களைய உதவுகிறது என்பதில் ஐயம் இல்லை. அது போல சோதிடம் கணித்துக் கூறுவதும், பரிகாரம் கூறுவதும் மிக முக்கியமானது ஆகும்.

இன்று நம் கர்மாக்கள் தீர பலவித பரிகாரங்கள் சொல்லப்படுகின்றன. பரி காரங்களைச் செய்வதால் புண்ணியம் வருமா எனக் கேட்போர்களுக்குப் புண்ணியம் வராவிட்டாலும் பாபம் வர வாய்ப்பு உண்டு என கூறுவேன். உதாரணமாக பசுவை தானம் ஒருவர் செய்கின்றார் என்றால் தானம் பெற்றவர் ஒரு வருடத்திற்கு திதிகளில் அதிதியாகவோ, நிமிந்தகராகவோ இருந்து உண்ணக் கூடாது. அந்தப் பசு மாட்டையோ அந்த பசு மாட்டின் சந்ததிகளையோ விற்கக் கூடாது. அந்தப் பசுவின் பாலையும் வியா பாரமாக்கக் கூடாது. இவ்வாறு செய்தால் தானம் பெற்றவருக்கும், தானம் கொடுத் தவருக்கும், இருவருக்குமே லாபம் ஏற்படும்.

அடுத்து அன்னதானமும், வஸ்திர தானமும் இல்லாதவர்களுக்கு தான் போய்ச் சேர வேண்டும். கடலில் மழை பெய்வது போல் இருப்பவர்களுக்குத் தானம் செய்யக் கூடாது. செய்த தானத்தை பிரஸ்தாபிக்கக் கூடாது. பூமி தானம் செய்வதானால் தோஷம் இல்லாத பூமியை வேதம் அறிந்தவருக்கே கொடுக்க வேண்டும். தானம் வாங்கிய பூமி விற்கப்படக் கூடாது. இப்படி இருக்கும்போது எப்படி பரிகாரங்கள் செய்து தோஷங்களில் இருந்து விடு பட முடியும்? இதற்கு நம் முன் னோர்கள், சித்தர்கள் கூறிய விருட்ச சாஸ் திரம் கை கொடுக்கின்றது. ஒருவருக்குக் குரு





**பாத்ரூமின் ஏதேனும் ஒரு மூலையில், ஒரு துண்டு பச்சைக் கற்பூரம் வைத்துப் பாருங்கள். மூக்கைப் பிடிக்காமலேயே பாத்ரூமுக்குள் நுழையலாம்.**

**— பிரபாலிங்கேஷ்**



சரியில்லை என்றால் அவர் குருபலன் கிடைக்க வேத பாராயணம் அந்தணர்களை செய்யச் சொல்லி நன்மை அடையலாம்.

சனி சரியில்லா விடில் ஆயுள் பலம் வேண்டி மிருத்யுஞ்ச ஹோமம் செய்யலாம். ஆனால் இவை செய்ய பெரும் திரவியம் தேவைப்படும்.

சாதாரண மனிதர்களால் இதைச் செயல் படுத்த முடியாது. தெய்வம் பணம் உள்ள வர்களுக்கு மட்டுமா? அல்லது பணமில்லாத சாதாரண மனுஷர்களுக்கும் தெய்வம் உண்டா என சந்தேகம் வரலாம். ஆனால் விருட்ச பரிகாரம் பணமுள்ளவர், பண மில்லாதவர் ஆகிய அனைவருக்கும் பொது வானது. செவ்வாய் அருள் பெற வேப்ப மரம் நட வேண்டி வருவதால் பணமுள்ளவர் தோட்டங்களில் வாங்கி இதை நடலாம். பணமில்லாதவர்கள் இந்தப் பரிகாரத்தை வெளி இடங்களில் வளர்ந்துள்ள வேப்ப மரத்தை பாதுகாப்பாக எடுத்து விருட்ச சாஸ்திரப்படி செலவு இல்லாமல் வைத்துப் பயன் பெற முடியும்.

எல்லோருக்கும் பொதுவானது விருட்ச சாஸ்திரம். இதில் எவ்வித பேதமும் இல்லை என்பது உறுதி. இந்த சாஸ்திரம் யாருக் காகவோ சொல்லப்பட்டதன்று. அழிந்து விட்ட இரகசியத்தை நம் மனித வர்க்கம் செழிக்க சாகா கலை அறிந்த சித்தர்களால் வழங்கப்பட்டது. காடு மேடுகளிலும், ஹரித் துவார், மானஸ தேவி மலைகளிலும், திரு வண்ணாமலையிலும் நாம் சந்தித்த சித்தர் களால் கொடுக்கப்பட்ட சுவடிகளின் மொத்த வடிவம். சொப்பன வாராஹி அருளால் கடினமான பல வருட உழைப்புக்குப் பின் வெளி வந்த சாஸ்திரம் இது.

ஒரு மனிதன் தான் இறக்கும் முன் ஒரு நல்ல செயலை செய்ய வேண்டும். அல்லது ஒரு மரத்தையாவது நட வேண்டும். நீ மறைந்த பின் உன் பெயரை அது சொல்லும் என்பார்கள். ஆறு உயிர்களில் முதல் உயிர் மரம்தான். மரங்களுக்கு உயிர் உண்டு உணர் வும் உண்டு. ஒவ்வொரு மரத்திலும் ஒரு தெய்வம் உண்டு. ஒவ்வொரு கிரகத்திற்கும் ஒரு விருட்சம் உண்டு. பஞ்சாங்கத்தில் கூட 27 நட்சத்திரங்களுக்கு 27 மரங்கள் கொடுக்கப் பட்டு இருக்கும். நாம் ஒரு நட்சத்திரத்திற்கு 4 பாதம் வீதம் 27 நட்சத்திரத்திற்கு 108 பாதம் முழுமைக்கும் 108 மரங்களைக் கண்டு எழுதியுள்ளோம்.

இன்றும் கல்யாண வீடுகளில் அரசாணி கால் நடுதல் என்னும் சடங்கு உண்டு. அரசு ஆணி வேர் தராமல் அந்தக் கன்றை திரு மணம் செய்து கொள்ளும் தம்பதிகள் தோட் டத்திலோ குளங்களை ஒட்டியோ அவற்றை



**கொலுவில்...**

கடையில் விற்கும் கலர் கலர் அப்பளங்கள் வடகங்களை எண்ணெயில் பொரித்து கயிற்றில் வரிசையாகக் கோர்த்து ஒருநாள் தொங்க விடுங்கள். புது அட்ராக்ஷன் கிடைக்கும்.

— உமா நாராயணஸ்வாமி

வெட்டாத இடத்தில் நட்டு விட்டுத் திருமணம் செய்து கொண்ட பின் ஒடிய மரத்தையும் நடுவார்கள். இன்று அரசாணி கால் நடுதல் என்று அரச மரக் குச்சியை கல்யாண மண்டபத்தில் கட்டி வைக்கிறோம்!

அசோகர் தான் யுத்தத்தில் இம்சை செய்த பாவம் தீர புத்த மதத்தைத் தழுவி பின் விருட்ச சாஸ்திரத்தைப் பின் பற்றி மரங்கள் நட்டார் என்பது உலகறிந்த விஷயம். ஸ்ரீனிவாசர் மஹாத்மியத்தில் ஸ்வாமி தன் குல தெய்வமான வன்னி மரத்தின் வேரை தங்க தட்டில் வைத்து பூஜித்து நட்ட பின் வராக ஸ்வாமி உத்தரவு பெற்று பத்மாவதி தாயாரை திருமணம் செய்து கொண்டார் என குறிப்பிடப்பட்டுள்ளது.

பகவத் கீதையில் கிருஷ்ணர், 'அச்வத்த ஸர்வ வ்ருக்ஷாஹும்
தேவர் ஷீணாம்ச நாரத; விபவ:
விருட்சங்களில் அரச மரமாகவும் ரிஷிகளில்
நாரதராகவும் உள்ளேன்' எனக் கூறுகின்றார்.

ஆஞ்சநேயர் ஸ்லோகத்தில் பாரி ஜாத தருமூல வாஸினம் என பவள மல்லி வேரில் ஆஞ்சநேயர் வசிப்பதாகக் கூறப்பட்டுள்ளது. வெள்ளெருக்க வேரில் விநாயக பெருமான் வஸிப்பதாகவும் கூறப்பட்டுள்ளது. மேலும் மூலதோ ப்ரும்ம ரூபாய மத்யதோ விஷ்ணு ரூபிணே
சுகர்த்த: சிவ ரூபாயா விருக்ஷராஜயதே நம:

என்றபடி அச்வ மரம் த்ரிமூர்த்தி சொருபமாகக் கொள்ளப்படுகின்றது. ஒவ்வொரு திருக்கோயில்களிலும் முதலில் மரமே தெய்வமாகவும் அந்த மரத்தைச் சார்ந்தே அந்த க்ஷேத்திரம் அழைக்கவும் படுகின்றது.

அரவிந்தர் ஆசிரமத்தில் ஒரு நாள் அன்னை உணவருந்த அமர்ந்த பின் தோட்டத்தில் அழுகுரல் கேட்கின்றது. யாரோ மரத்திற்குத் தீங்கு செய்திருக்கின்றனர் எனக் கூறி தோட்டத்தைப் பார்க்கச் சொன்னார். தோட்டத்தில் மரத்தை வெட்டும் கோடாலியை ஒருவன் மரத்தில் சொருகி இருப்பதைக் கண்டு அன்னையிடம் தெரிவித்தனர். துடித்துப் போன அன்னை மரத்திலிருந்து கோடாலியை உடனே அகற்றினார்.

இரமண மகரிஷி இருப்பிடத்தில் முதலியார் பாட்டி என்பவர் பாதிரி இலைகளை சேகரிப்பதைக் கண்டு 'எதற்கு' என வினவ "ஈஸ்வரனை பூஜிக்க இலட்சம் இலை சேகரிக்கின்றேன்" என்றார். இரமணரோ, "மரத்தை இப்படி குலுக்கி இலைகளை உதிர்க்கின்றாயே அவற்றிற்கு வலிக்காதா? இம்மாதிரி செய்யாதே" என்றாராம்.

நடந்த இந்த இரு உண்மை நிகழ்ச்சிகள் நாம் எல்லோரும் கேள்விப்பட்ட ஒன்றே யாகும். மரங்கள் தெய்வீக சக்தி வாய்ந்தவை. எந்தந்த தோஷத்திற்கு எந்த மரம், அமைதிக்கு ஞானத்திற்கு, வம்ச விருத்திக்கு, ஒற்றுமைக்கு என பலதரப்பட்ட விருட்சங்களை சுவடிகளில் குறிப்பிட்டுள்ளனர். அவற்றை வெகு நாள் ஆராய்ச்சியில் தொகுத்து உள்ளோம்.

உதாரணமாக வீட்டின் முன் முருங்கை மரம் இருந்தால் அது ஆகாது என வெட்டுபவதைவிட அதன் அருகில் செம்பருத்தி செடி வைத்து தோஷத்தை நிவர்த்தி செய்யலாம். இதுபோல வீட்டின் முன் வாயிலுக்கும் சுற்றுச் சுவருக்கும் எதிரே மத்தியில் கிணறு அமைந்தால் பக்கவாட்டில் பன்னீர் மரம் வைத்து இடையில் துளசி மாடம் வைப்பதால் தோஷம் நீங்கும் எனலாம். அதுபோல வாஸ்து தோஷம் உள்ள வீடுகளை இடிப்பதை விட, கிணறுகளை மூடுவதை விட, விருட்சங்கள், செடி, கொடிகளை, அமைப்பதால் போக்கிக் கொள்ளலாம். செவ்வாய் தோஷம் போன்ற சோதிட தோஷங்களுக்கும் எளிய முறையில் விருட்சம் வைப்பதால் தீர்த்துக் கொள்ளலாம்.

எனது திருவல்லிக்கேணி கிழக்கு குளக் கரை தெருவில் ஆறாம் எண் இல்லத்தின் அருகில் பல பெரிய மனிதர்கள் உதவியுடன் பல விருட்சங்கள் வளர்ந்து வருகின்றன" என்கிறார் இவர். இவருடைய குழந்தைகளும் விருட்ச சாஸ்திரம் மற்றும் ஜோதிடம், வாஸ்து சாஸ்திரம் கற்றுக் கொண்டு வருகின்றனர்.

**மங்கையர் மலருக்கு ஆண் வாசகர்களும் உண்டு என்பதனால் ஆண்களுக்காக ஒரு வார்த்தை!**

கூட்டுக்குடும்ப நிலை மாறி கணவன், மனைவி, குழந்தைகள் என்ற நிலைமை அதிகமாகி உள்ளது. இரண்டு பேரும் கட்டாயம் சம்பாதிக்க வேண்டும் என்ற நிலைமையும் ஆகிவிட்டது. இல்லையென்றால் குழந்தைகளுக்குக் கல்வி (ஒருவர் சம்பாத்தியத்தில் பாதி ஆகிவிடுமே), வீடு மற்ற அத்தியாவசிய தேவைகளை நம்மால் ஈடு கொடுக்க முடியாத நிலைமை. இந்த நிலைமையில் ஒருவருக்கு ஒருவர் நேரம் கொடுக்க முடியாமை அதிகமாகி விட்டது. நேரம் போதமையாலும், பெண்களால் வீட்டுப் பொறுப்பு, அலுவலக வேலை, குழந்தைகளின் நலன் எல்லாம் சேர்த்து சுமக்க முடியாமல் போகிறது. இதனால் இருவரும் ஒற்றுமையாக இருக்கும் நேரத்தைவிட வாக்குவாதம் செய்யும் நேரமே அதிகமாகிவிட்டது. ஏன் வாக்குவாதம் செய்கிறோம் என்பதைக் கூட சிந்திக்க நேரம் இல்லையே நமக்கு!

இந்த நிலைமையை மாற்ற வழி உண்டா. நம் பெற்றோர்களுக்கு இந்த பிரச்னை இருக்கவில்லை. ஏனென்றால் நம் அம்மா காலத்தில் அம்மா பெரும்பாலும் வேலைக்குச் செல்லவில்லை. அப்பா மேல் அம்மா வைத்திருந்த பயம் கலந்த மரியாதை, மதிப்பு இன்றைய தம்பதியருள் இல்லை. அவசியமும் இல்லை. ஏனென்றால் இன்று இருவரும் சரிநிலை சமம் என்ற நிலைமை வந்து விட்டது. இந்த நேரத்தில் கணவன், மனைவியருக்குள் ஒரு சிறு mutual understanding இருந்தால் இவ்வளவு பிரச்னை வராது. அது எப்படி என்று

# ஆண்களுக்காக ஒரு வார்த்தை

பார்ப்போம். பெண்கள் ஆண்களைவிட அதிகம் உழைக்கிறார்கள். ஆபீஸிலே ஆண்களைப் போலவே உழைத்தாக வேண்டும், கை நீட்டி ஒரே அளவுதான் சம்பளம் வாங்குகிறோம். உழைக்கவில்லை என்றால், அலங்காரம் பண்ணிண்டு வந்துடுவாளுக, வேலையில் ஒன்றும் இல்லை என்று பேசுவார்கள். வீட்டிற்கு வந்தவுடன் குழந்தைகளின் அன்றைய பேச்சு, படிப்பு, சமையல், அடுத்த நாளைக்கான உணவு எல்லாம் கவனித்து, சொந்த நலனை கவனிக்காமல், பாதி நேரம் சரியாக உண்ணாமல், ஹெல்த் கெட்டு போய் இதனால் பிரச்சனை. 2 குழந்தை பிறந்த பிறகு, தன் உடலை கவனிக்காததால், உடல் பெருத்து விட... இந்த வயதிலேயே மாமியாட்டம் இருக்கே என்ற கிண்டல் வேறு. ஆண்கள் வேளைக்கு சாப்பிட்டு, ஓய்வு எடுத்து ஒரே மாதிரி இருப்பார்கள். எந்த வயசிலும் இந்த பிரச்சனைக் கெல்லாம் இன்றைய தனிக்குடித்தன ஆண்கள் சில சின்ன யோசனைகளை கையாண்டால் நல்ல வாழ்க்கை கிடைக்க தீர்வு உண்டு. உள்ளார்த்தமாக செய்யுங்கள், நடிப்பை தாங்க மாட்டாள் பெண். இதனால் குடும்ப சூழ்நிலை மாறும், உங்கள் மதிப்பு உயரும். உங்கள் குழந்தைகளும் நல்ல சூழ்நிலையில் வளருவார்கள். ஒரு மாறுதலுக்கு

ஒருநாள் காலை நீங்கள் காபியுடன் மனைவியை எழுப்பலாமே. (குறைந்தபட்சம் விடுமுறையிலாவது!) நீங்கள் பேப்பரும் படியுங்கள். கூடவே குழந்தைகளை தயார் செய்யுங்கள். இதை நாங்கள் ஏற்கனவே செய்கிறோம் என்ற பதில் வரலாம். இதற்கு எல்லாம் மேலே, ஒரு சின்ன ஆனால் முக்கியமான செய்கையினால் தலைகீழாக மாறலாம். வேலைக்குப் போகும் மனைவிகள் 90% காலையில் எல்லா வேலைகளையும் செய்துவிட்டு, காலை உணவு சாப்பிட (உடம்புக்கு ரொம்ப அத்தியாவசியமானது) நேரம் இல்லாமல் ஓடுகிறார்கள். ஆண்களே நீங்கள் அப்பொழுது அதை கவனித்து அவர்களுக்குச் சாப்பிட நீங்கள் தயார் செய்யலாம். பிரெட் சாப்பிடுபவர்களுக்கு 2 துண்டு ப்ரெட் டோஸ்ட் செய்து தரலாம், முட்டை சாப்பிடுபவர்களுக்கு ஆம்லெட் அல்லது சாதம் சாப்பிடுபவர்களுக்கு சாதத்தை சட்டென்று கலந்து தரலாம். சின்ன டப்பாவில் போட்டு அன்பாகக் கொடுத்தனுப்பலாமே! இதனால் பெண்களுக்கு ஏற்படும் சந்தோஷம் எழுத்தில் அடங்காது. பழங்கள் சீசன் காலத்தில் அவர்கள் பையில் 2 பழம் போட்டு அனுப்பினால், சாப்பிடும் நேரம் உங்களை எண்ணி மகிழ்வாளே! இந்த வேலைகளை செய்ய 5 நிமிட நேரமாகுமா. டப்பாவை துடைத்து லன்ச் பேக் செய்யலாம். சமையல் வேலையைவிட இதர வேலைகளே நேரத்தை எடுத்துக் கொள்கிறது. உடல்நிலை உங்களுக்குச் சரியில்லாதபோது மனைவி எப்படி கவனிக்கிறாள். அவளுக்கு சரியில்லாதபோது ஜலதோஷம் நேரத்தில் தண்ணீரில் வேலை செய்ய வேண்டாம் என தடுத்து, நீங்கள் செய்தால் அவள் திரும்பத் தரும் அன்பை விவரிக்க முடியாது. (கணவன் செய்கிறாரே என ஜலதோஷம் வந்தால் சொல்லாமல் செய்கிற பெண்களும் உண்டு, செய்யட்டுமே என்று அனாவசியமாக மூக்கை உறிஞ்சும் பெண்ணும் உண்டு. இதில் உங்கள் மனைவி எந்த டைப் என்று நீங்கள் தெரிந்து உதவ வேண்டும்.)

### பெண்களுக்கும் ஒரு வார்த்தை:

ஒரு நேரம் இருவரும் திரும்பினாலும் நீங்கள் சீவி, சிங்காரிக்க வேண்டாம், நம்மால் முடியாது. ஆனால் புன்னகைக்கலாமே! அதேபோல் கிளம்பும் போதும், திரும்பியவுடனும் அவசியமான முக்கியமான விஷயங்கள் பேசுவதை தவிருங்கள்.

இந்த எண்ணங்கள் தனிக்குடும்பமாக வாழும் ஒவ்வொரு பெண்ணின் மனதிலும் (அதுவும் வேலைக்குப் போகும்) உள்ளது. இதை தானே வெளிப்படுத்த தயக்கம். செய்யவில்லையே என்ற ஆதங்கத்தை கோபமாக வெளிப்படுத்துகிறார்கள். அது புரியாமல் ஆண்களும் வீட்டிற்கு ஏன்டா வருகிறோம், வள்,. வள் என்று குரைப்பதை கேட்க என்கிறார்கள். திரும்பவும் வாக்குவாதம். எனவே இவற்றை யோசியுங்கள். நேராக எண்ணங்களைச் சொல்ல முடியாத பெண்களே, உங்கள் மனத்தில் இவை இருந்தால், உங்கள் கணவனிடம் இதை கொடுத்து படிக்கச் சொல்லி, நல்ல புரிந்து கொண்ட தம்பதிகளாக ஆக வாழுங்கள்!

— கலாமணி

வேர்க்கடலையை நன்றாக வறுத்து மிக்ஸியிலோ (அ) மாவு மிஷினிலோ கொடுத்து நைஸாக மாவாக பொடி பண்ணி வைத்துக் கொள்ளலாம். எந்தப் பொரியல் செய்தாலும் போடலாம். ரோஸ்ட் மாதிரி கரகரவென்று இருக்கும். பயத்தலாடு பிடிப்பது போல் செய்விட்டு, ஏலக்காய் சேர்த்து வேர்க்கடலை லாடும் செய்யலாம். சுவை அபாரமாக உள்ளதுடன் பல் இல்லாதவர்களும் சாப்பிடலாம். உடம்புக்குச் சத்தானது கூட.

— என். கல்பனா



**சோயாவை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்படும் உணவுக் குறிப்புகளில் சிறந்தவற்றிற்கு சக்தி சோயா பைட் நிறுவனம் ரூ. 1000/- பரிசாக அளித்து வருகிறது. அந்த வகையில் இம்மாதம் பரிசு பெறும் சிறந்த சமையல் குறிப்பு—**

## முதல் பரிசு ரூ. 1000/- பெறும் சமையல் குறிப்பு

புரதச் சத்து நிறைந்துள்ள இவ்வுணவைச் சாப்பிட்டால் பல மணி நேரங் களுக்கு பசி எடுப்பதில்லை. குறைந்த மணி அளவு, எளிமை, இனிமையுடன் கூடிய, அதே சமயம் புரதச்சத்து நிறைந்த "புட்டிங்" செய்ய வேண்டிய பொருட்கள்:

சோயாபைட் உருண்டைகள்-இரண்டு கைப்பிடிகள் எடுத்து சுடு தண்ணீரில் ஊற வைத்து, குளிர்ந்த நீரில் இட்டு, கசக்கி, ஒட்டப் பிழிந்து எடுத்து 'மிக்ஸி'யில் இட்டு சுழற்றவும். உதிர் உதிராகிவிடும். இதை அளந்து 1 கப்–எடுத்துக் கொள்ளவும்

1 கப்–கனத்த அவல்

தண்ணீரில் நன்றாக அலசி தண்ணீரில் மூழ்கி இருக்கும்படி வைத்து ஊறவைக்கவும். ஊறிய அவலையும் ஒட்டப் பிழிந்து எடுத்துக் கொள்ளவும்.

முளைத்த பச்சைப் பயிறு – ½ கப்
காரெட் துருவல் – ½ கப்
தேங்காய் துருவல் – ½ கப்
பன்னீர் (பாலாடைக்கட்டி துருவல்) – ½ கப்
பால் – 2 கப்
வெல்லம் பொடி செய்தது – 2 கப்
சர்க்கரை – ½ கப்
நெய் – 5 டேபிள் ஸ்பூன்
முந்திரிப் பருப்பு- சிறு துண்டங்களாக ஒடித்துக் கொள்ளவும்
உலர்ந்த திராட்சை – அவரவர் இஷ்டத்திற்கு ஏற்ப.
ஏலக்காய்ப் பொடி – ¼ டீஸ்பூன்

*செய்முறை:*

வாணலியில் பச்சைப் பயறுடன் சிறிது தண்ணீரும் ½ கப் பாலும் சேர்த்து அடுப்பில் வைத்து வேக வைக்கவும். சிறிது வெந்ததும் சோயா பைட் துருவல் இட்டு, ½ கப் பால் இன்னும் சேர்க்கவும். இனி ஊறிய அவலை சேர்த்து வேக விடவும்- சிறிது சிறிதாக பாலை சேர்த்து வேக வைத்துக் கொள்ளவும். அடுத்து காரெட் துருவல் சேர்க்கவும்.

சிறிது தண்ணீரில் வெல்லத்தைப் பொடி செய்து சேர்த்து, அடுப்பில் வைத்து கொதிக்க விடவும். வெல்லம் நன்கு கரைந்து வந்ததும், வடிதட்டில் கல்மண்போக வடிகட்டவும்.

வாணலியில் வெல்லக் கரைசலுடன், சர்க்கரையையும் சேர்த்து கொதிக்க விடவும். இதில் வேக வைத்துள்ள "ஸோயாபைட்"(1ல் கூறியவை) கலவையைச் சேர்த்துக் கிளறவும்.

இறுகி வரும் பொழுது தேங்காய்த் துருவலைச் சேர்க்கவும். ஏலக்காய்ப்பொடி சேர்த்துக் கிளறவும்.

நெய்யை சூடு செய்து, வேண்டிய அளவு முந்திரிப் பருப்பு, உலர்ந்த திராட்சையை வறுத்து, "புட்டிங்"கில் கொட்டி, நெய் தடவிய ஒரு வட்டமான பாத்திரத்தில் சமமாக, பரவலாகக் கொட்டவும்.

ஒரு பெரிய தட்டில், இப்புட்டிங்கை தலைகீழாகக் கவிழ்த்துக் கொள்ளவும். இக்கலவை வட்டமாக தட்டின் நடுவில் உள்ளது. இதன் மேல் துருவிய "பன்னீர்" துருவலை பரப்பி அலங்கரிக்கவும்.



# ஸ்வீட் சோயா புட்டிங்

குறிப்பு: இனிப்பு அதிகம் வேண்டுவோர் இன்னும் சர்க்கரை சேர்த்துக் கொள்ளவும்.

– விசாலம் நாராயணஸ்வாமி,
கோயம்புத்தூர்

**ஆறுதல் பரிசு**

## சோயா மஹ்மல் பதிர்போனி

*தேவையான பொருட்கள்:*

சோயாமாவு – 4 கப்
பொட்டுக் கடலை மாவு – 4 கப்
தேங்காய் பெரிய மூடி துருவியது – 1 கப்
சர்க்கரை – 5 கப்
முந்திரி – 25 கிராம்
பாதாம் பருப்பு – 10
ஏலக்காய் – 6
வெண்ணெய் – 100 கிராம்
மைதா – ¼ கிலோ
அரிசி மாவு – 2 ஸ்பூன்
நெய் – 4 ஸ்பூன்

*செய்முறை:*

முதலில் மைதா மாவை கொஞ்சம் வெண்ணெய் சிறிது நெய் கொஞ்சமாக தண்ணீர் விட்டு தேவையானால் கேசரி பௌடர் சேர்த்து நன்றாக அடித்துப் பிசைந்து ஒரு மணி நேரம் ஊற வைக்க வேண்டும். பிறகு சோயா மாவை சற்று சூடேற வறுக்க வேண்டும். அதிகம் வறுக்க வேண்டாம். அதுபோல் பொட்டுக்கடலையும் கொஞ்சம் சூடுபட வறுக்கவும். தேங்காய்த் துருவலையும் சற்று வறுக்கவும். பின்பு பாதாம் முந்திரி ஏலம் இவைகளையும் ஒரு புரட்டுப் புரட்டிக் கொள்ளவும்.

பிறகு சர்க்கரையை மிக்சியில் போட்டு மாவாக அரைத்துக் கொள்ளவும். பிறகு சோயா, பொட்டுக் கடலை, பாதாம், முந்திரி, தேங்காய் இவைகளையும் அரைத்து சர்க்கரைப் பொடியுடன் கலக்கவும்.

இரண்டு ஸ்பூன் அரிசி மாவுடன் நான்கு ஸ்பூன் நெய்விட்டு நன்றாக நுரை வரும் வரை குழைக்கவும். இதற்கு பதிர் என பெயர்.

பரிசுக்குரிய குறிப்புகளைத்
தேர்ந்தெடுத்தவர்–
**சாந்தா இராமானுஜம்**

பிறகு சர்க்கரையுடன் கலந்த பொடியில் கொஞ்சம் வெண்ணெய் போட்டு கெட்டியாக தளராமல் பூரணம் செய்து கொள்ள வேண்டும். பிறகு மைதா மாவை அப்பளமாக இட்டு நெய் அரிசி மாவு சேர்த்த கலவையை அப்பளத்தின்மேல் நன்றாக சுருட்டவும். பிறகு மறுபடியும் மேலிட்டு அப்பளமாக இட்டு நெய் மாவு தடவி சுருட்டவும். இதுபோல் நான்கு தடவை மாவு தடவி சுருட்டி முன்பே செய்த பூரணத்தை வைத்து அப்பளமாக போளி போல் லேசாக குழவியால் இடலாம்.

தோசைக் கல்லில் போட்டு அதிக தீ எரியவிடாமல் தோசைத் திருப்பியால் திருப்பி எடுக்கவும்.

இதுவே சோயா மஹ்மல் பதிர் போளி. நல்ல சத்துள்ள டிபன் ஆகும். கையில் எடுக்கும் போதே பொலபொலவென பார்க்க அழகாக இருக்கும்.

– கடலூர் காமு, திருப்பாப்புலியூர்

# மாற்றுங்கள்

உங்கள் பழைய மிக்ஸியை
கொடுத்து புதிய பிரிமியர் 3-ஜார்
கிச்சன் மிஷின் பெறுங்கள்

**சேமிப்பு**

**ரூ. 755***



- ஹெவி டியூட்டி மோட்டார்
- உலர்ந்த மற்றும் ஈரப்பதமாக அரைக்க 3 வகை ஜார்கள்.
- அதிக சுமையானால் தானாக துண்டிக்கும் பாதுகாப்பு.
- நீடித்து உழைக்கக் கூடிய எவர்சில்வர் பிளேடுகள்.

---

*இச்சலுகை ஸ்டாக் உள்ள வரை மட்டுமே !*



**Premier**

*Kitchen Machine*

*Tackle the toughest cooking jobs*

*அதிகபட்ச சில்லறை விலையில்

அளவிற்கடங்காத தவ வலிமையைப் பெற்று எல்லா ரிஷிகளுக்கும் உயர்ந்தவராக வரமுனி என்ற மஹரிஷி இருந்தார். தவத்தின் பயனால் உயர்ந்த தன்மையை அடைந்த வரமுனிக்கு தான் மட்டுமே பெரிய தபஸ்வி என்ற 'தான்' என்ற கர்வமும் அஹம்பாவமும் வந்து விட்டது. அதன் காரணத்தால் மற்ற ரிஷிகளை மதிக்காமல் இருந்து வந்தார். அவரின் தவ வலிமையை கேள்வியுற்ற அகஸ்திய மஹ ரிஷியும் அவருடன் பெரும் தவசீலர்கள் ஐம்பது பேர்களும் -வர முனியைக் காண அவருடைய இடத்திற்கு வந்தார்கள். அஹம்பாவத்திலும் தான் என்ற கர்வத்துடனும் இருந்த வரமுனி தன்னைக் காண வந்த அகஸ்தியர் மற்ற தவசீலர்களை பொருட்படுத்தாமலும், வந்தவர்களுக்குத் தகுந்த மரியாதை செய்யாமலும் இருந்த படியால் அகஸ்திய மஹரிஷியும் மற்றவர்களும் மிகுந்த கோபமடைந்து வரமுனியை நோக்கி "நீர் மஹிஷமாகக் (எருமை) கடவீர்'' என்று சாபமிட்டனர். சாபம் அடைந்த வரமுனி தன் தவற்றை உணர்ந்து மஹரிஷிகளிடம் மன்னிப்பு கோரியும், சாபவிமோசனமும் வேண்டினார்.

வரமுனி சரண் அடைந்து மன்னிப்பு கோரியதால் மனமிரங்கிய மஹரிஷிக்கள் "மஹிஷமாக பிறக்கும் உன் மறு ஜென்மத்தில் எல்லா பாவங்களைப் போக்கக் கூடியவளும் கருணைக் கடலுமான அன்னை அனுக்ரஹிப்பாள்'' என்று சொல்லி திரும்பி விட்டார்கள்.

# மஹிஷாசுர

தனு என்பவனுக்கு அதிபராக்கிரமசாலியான ரம்பன், கரம்பன் என்ற இரண்டு மகன்கள் இருந்தார்கள். அவர்களுக்கு புத்திர பாக்கியம் இல்லாதபடியால் தன் வம்சம் தொடர்வதற்கு புத்ரபாக்கியம் வேண்டி கரம்பன் என்பவன் ஜலத்திலும், ரம்பன் என்பவன் யக்ஷபுரி என்ற இடத்தில் ரஸாலம் என்ற ஆல மரத்தின் அடியில் பஞ்சாக்னி என்ற ஐந்து அக்னிகளை தன்னை சுற்றி வளர்த்து கடுந் தவம் செய்தான். கரம்பனை இந்திரன் முதலையாக உருமாறி விழுங்கி விட்டான். கரம்பனுக்கு இந்திரனால் அழிவு ஏற்பட்டதை அறிந்த ரம்பன் தன் தலையை வெட்டி அக்னியில் ஹோமம் செய்ய முயலும் சமயம் அக்னி பகவான் அவன் முன் தோன்றினார். அவரிடம் ரம்பன் தனக்கு பல ரூபங்களை எடுப்பவனாகவும், ஜெயிக்க முடியாத பராக்கிரமசாலியாகவும் மூன்று உலகங்களையும் வெற்றி கொள்பவனாகவும் உள்ள ஒரு புத்ரன் (மகன்) வேண்டும் என்று கோரிய வரத்தை அளித்த அக்னி பகவான், வரத்தை அளிக்கும்போது அசுரர்கள் எப்பொழுதும் காமத்திலும் பொருளிலும் ஆசையுடையவர்கள் என்பதை மனதிற் கொண்டு ரம்பனிடம் "நீ எந்த ஸ்திரியை முதலில் காண்கிறாயோ அவளிடத்தில் உனக்கு புத்திரன் பிறப்பான்'' என்பதையும் சேர்த்து வரமளித்து மறைந்தார்.

ரம்பன் தன் தவத்தை முடித்துக் கொண்டு காட்டின் வழியாக தன் இருப்பிடம் நோக்கி திரும்பி வந்து கொண்டு இருக்கும்போது, நல்ல பெண் எருமையை ரம்பன் முதலில் பார்த்ததால் அந்த எருமை கருவுற்று ஆண்மகன் ரம்பனுக்கு மகனாகப் பிறந்தான். மஹிஷத்திடம் பிறந்தபடியால் மஹிஷன் என்ற பெயரை அவனுக்கு வைத்தார்கள்.

மஹிஷன் என்ற மஹா அசுரன் இமய மலையில் கடுந்தவம் செய்து மனிதர்கள், அசுரர்கள், தேவர்கள், மற்றைய பூதங்கள் ஆகியவைகளிடமிருந்து மரணம் வரக் கூடாது என்றும், பெண்கள் பலமுள்ளவர்கள் இல்லை என்ற காரணத்தை மனதில் கொண்ட மஹிஷன் யாரிடம் எனக்கு ஆசை (காமம்) ஏற்படுகிறதோ அந்தப் பெண்ணால் மரணம் வரட்டும் என்று வேண்டி வரத்தைப் பெற்றான். அந்த வரங்களைப் பெற்றதால் மமதை கொண்ட மஹிஷாசுரன் அஞ்சனம் என்ற மலையில் மாஹிஷம் என்ற பெரிய மாளிகையை ஏற்படுத்தி ஆட்சி செய்து வந்தான்.

வரத்தின் பயனாக மதம் கொண்ட மஹிஷாசுரன் அஷ்டதிக் பாலகர்களான சூரியன், சந்திரன், அக்னி, வாயு, யமன், நிருருதி, வருணன், இந்திரன் ஆகியவர்களின் அதிகாரங்களை தன் வசமாக்கிக் கொண்டான். மஹிஷாசுரனிடத்தில் ஏற்பட்ட அச்சத்தால் ரிஷிகளும் வேத விற்பன்னர்களும், பிராமணர்களும் தங்களுடைய ஹோமத்தின் அவிர்பாகத்தை மஹிஷாசுரனுக்குக் கொடுத்தபடியால், தேவர்கள் பலமிழந்து பூமியில் பரதேசிகளாக சுற்றித் திரிய ஆரம்பித்தார்கள்.

மும்மூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு, சிவன் இதர தேவர்களும் பலவித யோசனைகள் செய்து முடிவாக பராசக்தியால் தங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள சக்தியின் ஒரு பகுதியை வெளிக்கொண்டு வந்து ஒரு

பெண்ணை சிருஷ்டித்தார்கள். ஜெகன்மாதா புவனேஸ்வரியை வேண்டிக் கொண்டு தங்களிடமுள்ள ஒவ்வொரு சக்தியையும் ஒவ்வொருவரும் அளிக்க அந்த சக்திகள் எல்லாம் சேர்ந்து 'திரிகுணா' என்ற பெயரையுடைய மாபெரும் சக்தி 18 கைகளுடன் அழகான பெண் உருவில் தோன்றினாள்.

# மர்த்தினி

இந்த சக்தியைக் கண்ட மும்மூர்த்திகளும், தங்களிடமுள்ள ஆயுதங்களை தேவிக்கு வழங்கினார்கள். சிவன் – சூலத்தையும், விஷ்ணு - சக்கரத்தையும், பிரம்மா – கமண்டலத்தையும், இந்திரன் - வஜ்ராயுதத்தையும், அக்னி வருணனும் – சக்தியையும், வாயு - வில்லையும், ஐராவதம் - மணியையும், யமன் - தண்டத்தையும், நிருருதி - பாசத்தையும், காலன் - கத்தி கேடயத்தையும், ஸமுத்திரம் - தாமரை மலரையும், குபேரன் - பானங்கள் நிறைந்த பாத்திரத்தையும், ஹிமவான் - சக்தி பொருந்திய ஸிம்மத்தை வாகனமாகவும் சூரியன்



(சிதம்பரம் கோவிலிலுள்ள மகிஷாசுரமர்த்தினி சிற்பம்)



வாழைத் தண்டை பொடியாகி நறுக்கி, நாரை நீக்கியதும் வேக விடுங்கள். பிறகு மசித்து அந்தக் கூழில் கடலை மாவு, அரிசி மாவு, உப்பு, மிளகாய்த் தூள் சேர்த்துப் பிசிறி பகோடா போட்டால் சுவையாக இருக்கும்.

— மஞ்சுளா கிருஷ்ணன்

தேவியின் உடல் ஒளிக்கிரணங்களாகவும் மற்ற வர்கள் தேவிக்கு ஆபரணங்களும் ஆடைகளும் அளித்தபடியால், அழகிய ஆடை ஆபரணங் கள் அணிந்து பலவித ஆயுதங்களை தன் 18 கைகளில் ஏந்தி சிம்ம வாகனத்தில் அமர்ந்து மிகுந்த பேரழகுடன் திகழ்ந்தாள்.

ஸிம்ம வாகனத்தில் அமர்ந்த பேரழகி யாக தேவியைக் கண்ட மஹிஷாசுரன் தேவியின் மேல் மோஹித்து, தன் மனைவி யாக அழைத்தான். தேவி கடும் சினம் கொண்டு மஹிஷா சுரனுடன் கடுமையான போர் செய்து அவனை வதம் செய்தாள். மஹிஷாசுரன் தேவியை யார் என்று மரண தறுவாயில் உணர்ந்து கொண்டு வேண்ட அவனுடைய மஹிஷ (எருமை) தலையை தன் திருவடியின் கீழ் தாங்குகிறாள். முன் ஜென் மத்தில் வர முனி என்ற சிறந்த தவசீலராக இருந்தபடியால் அந்த புண்ணிய பலனாக மஹிஷாசுரனுக்கு தேவியின் திருவடியை சேரும் பெரும் பாக்கியம் கிடைத்தது. துர்க மனை அழித்தபடியால் துர்கா என்ற பெய ரைப் பெற்ற தேவி மஹிஷா சுரனை வதம் செய்த படியால் ''மஹிஷாசுரமர்த்தினி'' என்று போற்றப்படுகிறாள்.

மஹிஷாசுர வதத்தை பிரதானமாகக் கொண்ட மகிஷமர்த்தினியே துர்கா பரமேச்வரியாவாள். மகிஷாசுர வதத்தை பிரதானமாகக் கொண்ட தேவி மாகாத்மயம் அடங்கிய சண்டிஹோமத்தை ஸ்ரீபுவனேஸ் வரி ஸ்வாமிகள் நடத்தும்போது பார்க்க வேண்டும். ஹோம குண்டத்திலிருந்து வரும் தீயின் நாக்குகள் சுழன்று சுழன்று மேலோங்கி வரும் போது, துர்கா பரமேஸ் வரி நர்த்தனம் செய்வது போல் தோன்றும். வாளும், வில்லும், சூலமும், பாசமும் கொண்டு, கதையும் கட்கமும் தாங்கி, சங் கும் சக்கரமும் வைத்து, அழகும் ஒளியும் சேர்ந்து துர்கா பரமேஸ்வரி மின்னுவது போல் தோன்றும். யாகக் குண்டமே துர்கையோ என்பது போல இருக்கும்.

வாழை மரங்களும், தென்னங் குருத்துகளும் பசுமையை காட்டும், பதினாறு ஸ்தம்பங்களில் பதினாறு தேவதைகளின் உருவம், அவர்களுக் குண்டான கொடிகள் மேலே பறக்கும், வண்ணத்தில் யாகசாலை ஜொலிக்கும். நான்கு பக்கமும் நான்கு வாயில்களில் புனித நீர் நிரப்பிய கலசங்கள் யாவற்றிலும் வேதங்களே ஆவாஹனம். பூசணிக்காய் துண்டம் செய்து, பூசணித் துண்டுகளை அகலாய் அமைத்து அவற்றில் தீபங்கள் யாக குண்டம் சுற்றி இருக் கும். கோமயம் தெளித்து சுத்தம் செய்யப் பட்டிருக்கும். யாகத்தின் மேற்கூரையில் பெரிய தாரா பாத்திரம் தொங்கும். உருக்காத நெய்யை தாராபாத்திரம் தாங்கும். ஹோமம் ஆரம்பித்த பின் வேள்வித் தீயின் சூடு பட்டு நெய் வேள்விக் குண்டத்தில் விழும். ஜ்வாலை ஜ்வாலையாய் அக்னி யாகக் குண்டத்தில் வரும்போது அன்னை நமக்கு அபயமளிப்பது போல் தோன்றும். துர்கா சப்தசதி பாராயணம் சண்டி ஹோமத்தில் மந்திரமாக மாறும். உச்சாடனம் முக்கியம்.

ஸ்ரீ புவனேஸ்வரி ஸ்வாமிகளிடத்தில் தீக்ஷை பெற்றவர்களே யாகம் செய்வார்கள். ருத்ரகணங்கள் போன்று தீக்ஷைப் பெற் றவர்கள் காட்சியளிப்பார்கள். கழுத்தில் உத்திராக்ஷம், மேனியெல்லாம் திருநீறு, நார்மடி வஸ்திரங்கள் அணிந்து அமர்வார்கள். இது ஸ்ரீஸ்வாமிகளின் கண்டிப்பான கட்டளை. அன்னைக்கு ஆராதனம் செய்யும்போது சிவ கணங்களாக ஆகி விட வேண்டும் என்று சொல்வார். மந்திரம் சொல்லச் சொல்ல உற்சாகம் ஏறும். சப்தசதி அத்தியாய தேவதை களை ஆவாஹனம் செய்யும்போது சாக்ஷாத்காரம் தெரியும்.

கூடை கூடையாய்ப் பழங்கள், தாம்பாளங் களில் பக்ஷணங்கள், மூங்கில் தட்டுகளில் திரவ்யங்கள், சௌபாக்கிய வஸ்துக்கள், சமித் துக்கள், வாழைக்கனிகள், இவற்றைப் பார்க் கும்போது இயற்கையாய் அன்னை காட்சி தருகிறாளோ என்பது போலிருக்கும். சப்தசதி எழுநூறு மந்திரங்களையும் ஹோமம் செய் வதைப் போன்ற உசத்தியான உபாசனை வேறெதுவும் இல்லை. துர்கா பரமேஸ்வரியின் லீலையை சரித்திரத்தை, அற்புதங்களைச் சொல்லி ஹோமம் செய்வது என்பது அதிசய மான, விசித்திரமான பலன்களைத் தரவல்ல

# வைரம் ஜொலிக்கிறது

"சுடும் வரைக்கும் நெருப்பு, சுற்றும் வரை பூமி, போராடும் வரை மனிதன்" என்ற பிரபல கவிதை வரி தனக்கும் பொருந்தும் என அம்மா அடிக்கடி சொல்லுவாள். ஒன்பது முறை கருவுற்று ஐந்து குழந்தைகள் பெற்று உடம்பு நாராகிப் போனது அம்மாவுக்கு. செருப்பால் அடித்து பருப்பு சோறு போட்டது போல் என்று அப்பாவின் அன்பை விட, அக்கறையை விட கோபம் தான் அம்மா அதிகம் கண்டது. நாற்பது ஆண்டுகளாய் பலர் எதிரிலேயே திட்டு, உதை. அப்பாவுக்கு ஆபிஸ், பஜனை, சமூக சேவை இவைதவிர வேறெதுவும் தெரியாது. ஐந்து குழந்தைகள் படிப்பு, பெண்கள் கல்யாணம் என சகலத்தையும் அம்மா, அப்பாவின் ஒற்றைச் சம்பளத்திலேயே சமாளித்தாள். இதற்கெல்லாம் அம்மா கண்டுபிடித்த உபாயம் சீட்டு வரிசைகள் முதலில் அக்கம் பக்கத்திலும் பின்னர் ஸ்ரீராம் நிறுவனத்திலுமாக சீட்டு சேர்ந்து எல்லா தேவைகளையும் சமாளித்தாள். அன்றுபட்ட கஷ்டங்களுக்கு எல்லாம் இன்று ஏதோ ஒரு விதத்தில் விடிவுகாலம். இன்று டி.வி., பிரிட்ஜ், கெய்சர், கிரைண்டர் என எல்லா வசதியும் உள்ளது. வேரில் விட்டால் கிளையில் தளிர்க்கும் என்பது போல், தலையெடுத்துள்ள எங்கள் குடும்பத்தின் ஆணிவேர் எங்கள் அம்மா தான். அம்மாவிடமிருந்து சகல குணங்களையும் கற்றுக் கொண்ட நாங்கள் விடாமல் பிடித்துக் கொண்ட இன்னொரு விஷயம் ஸ்ரீராம் சிட்ஸ்.

பால சாண்டில்யன்
சென்னை-33

# வாழ்க்கை இனிக்கிறது

திருமணமாகி என் கணவருடன் நான் வாழ்ந்தது இரு வருட காலம் தான். ஆம், இரட்டையர்களாக பிறந்த என் செல்வங்களை (பத்ரி மற்றும் பாலாஜி) காண்பதற்கு அவர் இருக்கவில்லை. பள்ளிப் படிப்பை முடித்து 6 மாதமே ஆகி இருந்த நான் என் இரண்டு குழந்தைகளையும் என் அண்ணியின் பொறுப்பில் விட்டு விட்டு டீச்சர் டிரெயினிங் படித்தேன். புத்தகத்தை திறந்தால் பச்சிளம் குழந்தைகளின் முகங்கள். ஒரு நாள் லீவு கிடைத்தால் கூட குழந்தைகளை காண ஓடி வருவேன். டிரெயினிங் முடிந்து ஒரு கிராமத்தில் டீச்சர் வேலையும் கிடைத்தது. குழந்தைகள் வளர்ந்தனர். பள்ளி சென்றனர். அவர்கள் வளர்ச்சிக்காக நானும் படிக்கத் துவங்கினேன். மெல்ல மெல்ல பட்டப் படிப்பை முடித்தேன்.



திருச்சிக்கு மாற்றல் கிடைத்தது. புத்தகங்களில் படித்ததாலும், ஏஜெண்ட் ஒருவரின் வற்புறுத்தலாலும் என் குழந்தைகள் இருவர் பெயரிலும் ஸ்ரீராமில் சீட்டு சேர்ந்தேன். சீட்டு சேர்ந்த யோகம், கடவுள் அருள் பையன்கள் இருவருக்குமே இன்ஜினியரிங் சீட்டு கிடைத்தது. சக டீச்சர்களின் Suretyயுடன் இரண்டு சீட்டையும் எடுத்து கல்லூரிக்குப் பணம் கட்டினேன். இப்பொழுது என் வீட்டிலிருந்து மூன்று சீட்டுகள். ஒன்று எனது, மற்றவை என்ஜினியர் பத்ரி மற்றும் பாலாஜியுடையது.

திருமதி. எம்.ஆர். பார்வதம்
திருச்சி.

தாகும். மேலும் ஒரு சரித்திரத்தை, அற்புதத்தை, லீலாமகிமையை சொல்லி செய்யப்படும் ஹோமம் சண்டி ஹோமமே ஆகும்.

துர்கையே அவளது பெருமையை உணர்த்த, தெளிவு படுத்த ஏற்றுக் கொண்ட அவதாரங்கள், மஹிஷாசுரமர்த்தினி, சண்டி, சாமுண்டி, காளி போன்ற திருவுருவங்களாகும்.

சண்டி ஹோமத்தில் ஸ்வாமிகள் பூர்ணாஹுதி செய்யும்போது, விண்ணுலகம் கீழிறங்கி வந்து விட்டது போலிருக்கும். ஸகலதேவர்களும் யாகாக்னியை தரிசிப்பது போன்றும், திவ்ய தேஜஸ் நிரம்பப் பெற்ற ஸ்தலமாக யாக சாலை மிளிரும். வண்ணங்களில் பட்டுப் புடவைகள் மேலேயிருந்து வந்த வண்ணம் பூர்ணாஹுதியில் தேவிக்கு ஸமர்ப்பிப்பார்கள். மேலேயிருந்து சரிந்து விழும்படியாக புடவைகளை சுருட்டி வைத்திருப்பார்கள். பராம்பிகை இரு திருக்கரங்களை ஏந்தி வாங்கிக் கொள்வாள்.

துர்கா தேவியின் பரிவாரங்கள், சக்திப் பட்டாளங்கள், பூர்ணாஹுதியில் ஆரவாரம் செய்வார்கள். ஆஹாகாரம் செய்வார்கள். மிகுந்த சக்தி வீரியத்தோடு துர்கா தேவி தீப் பிழம்பாய் எழுந்து கடாக்ஷிப்பாள். பாலேடும், கனிகளும் அப்போது அளிப்பார்கள். தாம் பூலம் மடித்துத் தருவார். புஷ்பாஞ்சலி செய்வார் ஸ்வாமிகள். இப்படி பலமுறை பல இடங்களில் சண்டி ஹோமம் நடத்தியிருக்கிறார்கள் ஸ்ரீஸ்வாமிகள். மழை வரும். யாகசாலையை புனிதப்படுத்தி மழை சென்று விடும். அதிகப் பிரார்த்தனைக்கு மெச்சி சண்டி யாகத்தினை தரிசிக்க மழையாய் வருவார் வருணன். தரு



**கோதுமை மாவிலோ, மைதா மாவிலோ துளி டேபிள் சால்ட் கலந்து அள்ளி வைத்து விடுங்கள். பூச்சியோ, வண்டோ வராது.**

**— சந்திரா**

ணம் இதுவல்ல, என்று மழையைப் பொழியாமல் திரும்பிச் செல்வார்.

ஒவ்வொரு அஷ்டமியிலும் துர்கா ஸ்ஹஸ்ர நாமார்ச்சனையை சென்னை அம்பத்தூர் கங்கை நகரிலுள்ள ஸ்ரீபரத்வாஜ ஆசிரமத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் நடத்துவார்கள். யோகமாயா ஸ்ரீபுவனேஸ்வரி அஷ்டமி தினங்களில் வாள், வில், திரிசூலம், ஏந்தி, சிங்கவாகனம் தாங்க அலங்காரம் ஏற்பாள். எலுமிச்சம் பழ மாலைகளோடு ஸேவை தருவாள். நவாக்ஷரீ ஹோமமும் சண்டி பூஜையும் ஸ்ரீஸ்வாமிகள் செய்வார்கள்.

நவராத்திரி ஸமயத்தில் துர்கா பூஜையை முதல் மூன்று நாட்கள் விமரிசையாக நடத்துவார்கள். பெரிய குத்துவிளக்கை அலங்கரித்து தீபமேற்றி, பூமாலை சார்த்தி நவதானியம், நாணயங்கள், சிவப்பு மலர்கள், மஞ்சள், குங்குமம், இவைகளை தனித்தனியாக பெரிய தட்டுகளில் கொடுத்து தம்பதிகளைக் கொண்டு துர்கா ஸ்ஹஸ்ரநாமம் செய்யச் சொல்வார் ஸ்ரீஸ்வாமிகள்.

ஸ்ரீ ஸ்வாமிகள் நடத்தும் அஷ்டமி துர்கா பூஜையில் பல அற்புத அதிசயங்கள் நடந் துள்ளன.

ஒரு இளைஞர் தன் சகஜ சுபாவத்திலிருந்து வேறு பட்டவர். உலாத்திக் கொண்டேயிருப்பது, கை, கால்களை அலம்பிக் கொண்டேயிருப்பது, துப்பிக் கொண்டேயிருப்பது, காதிலே யாரோ பேசுவது போல் இருப்பதாக சொல்வது, தனியாக ஒரே அறையில் படுத்துக் கொண்டேயிருப்பது, தன்னைப் பற்றித்தான் வந்தவர்கள் பேசிக் கொள்கிறார்கள் என அவர்களிடம் சண்டை போடுவது - இப்படி அவர் மனக்கோளாறு அடைந்த நிலையில் இருந்தார். அவருடைய பெற்றோர் பெற்ற மகனை நினைத்து மனக் குமுறினர். ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகளிடம் தஞ்சம் புகுந்து விபரம் தெரிவித்தனர். கருணையுள்ளம் கொண்ட ஸ்ரீஸ்வாமிகள் அஷ்டமி பூஜையில் பல பச்சிலைகள், மூலிகைகள் தீர்த்தத்தை கும்பத்தில் போட்டு துர்கா பூஜையை நடத்தினார். மூலிகைகளையும், பச்சிலைகளையும் இளைஞரின் தலையில் வைத்து, முன் பூஜை செய்த கும்ப தீர்த்தத்தை அவர் தலையில் ஊற்றினார். புனித தீர்த்த வடிவில் துர்கை அல்லவா இருக்கிறாள். தீர்த்தம் மனநிலையை மாற்றியது. கோளாறை நீக்கியது. சுய சகஜ வாழ்வுக்குத் திரும்பினார்.

**- ஸ்ரீ பரதவாஜ் ஸ்வர்மிகள்**

இந்த இனிய திட்டம் 5-10-98 வரை மட்டுமே

**கரும்பு சுவைக்க சன்மானமும் உண்டு!**




*ஸ்ரீராம் டிரஸ்ட் வழங்கும் சந்தா முதலீட்டுத் திட்டம்!*

**ஸ்ரீராம் டிரஸ்டில் ரூ. 10,000 முதலீடு செய்யுங்கள். 5 ஆண்டுகளில் ரூ. 20,000 (இரு மடங்கு) பெற்றுக் கொள்ளுங்கள்.**

*அத்துடன்*

**• 4 இலக்கிய பொக்கிஷங்களை அன்பளிப்பாகப் பெறுங்கள் •**



1. 'கல்கி' வார இதழ் 5 ஆண்டுகளுக்கு (260 வாரங்களுக்கு) உங்கள் இல்லம் தேடி வரும்.
2. 'கல்கி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்கு பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.
3. பொன்விழாக் காணும் 'அமுதசுரபி' இலக்கிய மாத இதழ் 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி வரும்.
4. 'அமுதசுரபி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.



*ரூ. 10,000 (ரூ. பத்தாயிரம்) 'ஸ்ரீராம் டிரஸ்ட்' பெயருக்கு செக்/டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி :*

'ஸ்ரீராம் டிரஸ்ட்', ஏ-7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு, சென்னை - 600 102. தொலைபேசி எண் : 628 6869, 628 7879



1. முழுப்பெயர் : திரு/திருமதி/செல்வி..........................................
   முகவரி :..........................................
   ..........................................
   ..........................................
2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர் :
   முழுப்பெயர் :..........................................
3. வாரிசுதாரர் :..........................................
4. கல்கி, அமுதசுரபி இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி :..........................................
   ..........................................
   ..........................................

CHEQUE/D.D. No. Dt. ON

Rs. .......................................... அன்புள்ள

இடம் ..........................................

தேதி .......................................... முதலீட்டாளர் கையொப்பம்

# நீரிழிவு நோயால் பாதிக்கப்படும் கண்கள்

டாக்டர் இராமமூர்த்தி,
டாக்டர் சித்ரா



அழகான இந்த உலகினை கண்டு களிக்க மனிதனுக்கு முக்கியமாக தேவைப்படுவது கண் பார்வை. கண் பார்வை இல்லாதவர்களுடைய உலகம் மிகவும் குறுகி விடுகிறது. இந்த பரிதாபமான நிலை பல்வேறு காரணங்களால் ஏற்படக்கூடும். அதில் ஒன்று நீரிழிவு நோய். தகுந்த எச்சரிக்கைகளுடன் நடந்து கொள்ளாத நிலையில், கண்களில் பாதிப்பு ஏற்படும். இந்த சிக்கலான நிலை தங்களுக்கு ஏற்பட்டுள்ளதா? ஏற்படாமல் தவிர்க்க முடியுமா? அதற்காக என்ன தற்காப்புகள் எடுத்து கொள்ளலாம்? அப்படியே ஏற்பட்டிருந்தாலும் மேலும் மோசமடையாமல் சிகிச்சை செய்து கொள்வதெப்படி? போன்ற பல சந்தேகங்களுக்குப் பதிலளிக்கின்றனர் கோவை ஆர்.எஸ். புரத்தில், சுப்பிரமணிய வீதியில் உள்ள தி 'ஐ' பவுண்டேஷனில் மருத்துவமனிக்கும் டாக்டர் ராமமூர்த்தி மற்றும் டாக்டர் சித்ரா ராமமூர்த்தி.

**கேள்வி :** நீரிழிவு நோயினால் கண்கள் பர்திக்கப்பட்டுள்ளதா என்று எவ்வாறு கண்டு பிடிப்பது?

**டாக்டர் ராமமூர்த்தி :** பொது மக்கள் முதலில் நீரிழிவு நோய் எப்படி ஏற்படுகிறது என்று தெரிந்து கொள்ள வேண்டும். நம் உடலில் கணையம் என்ற உறுப்பில் 'இன்சுலின்' எனப்படும் திரவம் உடலில் போதிய அளவு சுரக்காத போதுதான் நீரிழிவு நோய் ஏற்படுகிறது. சிறு வயதில் தீவிரமான நோய் ஏற்பட்டிருந்தால் அதன் பின் விளைவாக நீரிழிவு நோய் ஏற்படலாம். முக்கியமாக பரம்பரை வழியாகவே இந்நோய் ஏற்பட அதிக வாய்ப்புள்ளது. எத்தனை உணவு உண்டாலும் காரணமின்றி எடை குறைவது, காயங்கள் ஆறாமலிருப்பது, அதிகப்பசி, அதிக தாகம், அடிக்கடி சிறுநீர் கழிப்பது போன்றவையே நீரிழிவு நோய் ஏற்பட்டுள்ளதற்கான அறிகுறிகள்.

நீரிழிவு நோய் ஏற்பட்டுள்ளதென தகுந்த சிறுநீர், இரத்தப் பரிசோதனைகள் மூலம் அறிந்து கொண்டதும் கண்களையும் பரிசோதனை செய்து கொள்ள வேண்டும். நீரிழிவு நோயினால் கண்களில் ஏற்படும் பாதிப்பை பொது மக்களால் தானாக தெரிந்து கொள்ள முடியாது. நீரிழிவு நோய் ஏற்பட்ட ஆரம்பக் காலத்தில் கண்பார்வை பாதிக்காது. கண்களின் பார்வை சக்தி குறைபடும் நேரத்தில் கண்ணில் இந்த நோயின் பாதிப்பு மிக அதிகமாகிவிடும். அதனால் நீரிழிவு ஏற்பட்டதறிந்ததும் வருடா வருடம் கண் மருத்துவரிடம் கண்களில் பாதிப்பு ஏற்பட்டுள்ளதா என்று பரிசோதித்துக் கொள்வது மிக அவசியமாகும்.



**கத்தரிக்காய், குடமிளகாய் போன்றவைகளை அடைத்த கறி செய்யும் போது, காயில் மசாலாக்களை அடைத்த பின் பிளவுகளின் மேலாக சிறிது கடலைமாவு அல்லது பொட்டுக்கடலை மாவை தூவி, இட்லி தட்டில் வைத்து ஒரு ஆவி (அதிக நேரம் வேண்டாம்) வந்தபின் எடுத்து, வழக்கம் போல கறி செய்தால், சீக்கிரம் வதங்கும். அதிக எண்ணெய் தேவைப் படாது. முக்கியமாக அடைத்த மசாலா வெளியில் சிதறாது.**

**— எஸ். பட்டம்மா**

**கேள்வி : நீரிழிவினால் கண்கள் எவ்வாறு பாதிக்கப்படும்? இந்த பாதிப்பு நீரிழிவு நோயாளிகள் அனைவருக்கும் ஏற்படுமா?**

**டாக்டர் சித்ரா :** நீரிழிவினால் நோயாளிகளுக்கு ஏற்படும் மாற்றங்களுக்கு, நீரிழிவு விழித்திரை நோய் (diabetic retinopathy) என்று பெயர். கண்ணின் உட்புறப்பகுதி மிகவும் நுண்ணிய திசுக்களால் ஆன விழித்திரை எனப்படும். இதனைக் காமிராவில் உள்ள படச்சுருளோடு ஒப்பிடலாம். விழித்திரையில் உள்ள தனிப்பட்ட நரம்பு அணுக்கள், பார்வையின் துடிப்பினைப் பெற்று பார்வை நரம்பு (optic nerve) மூலம் அவற்றை மூளைக்கு அனுப்புகின்றன. விழித்திரையின் ஒரு பகுதியான மேகுலா எனப்படும் மையப்பகுதிதான் தெளிவான பார்வைக்குப் பொறுப்பாகும். நீரிழிவு நோயினால் விழித்திரையில் உள்ள சிறிய இரத்தக் குழாய்கள் பாதிக்கப்படுகின்றன. இரத்தக் குழாய்களின் உட்புறச் சுவர்கள் பலமிழந்து சிறு சிறு பைகள் போன்று தோன்றுகின்றன. இரத்தக்குழாய்கள் பலமிழப்பதால் அதன் சுவர்கள் வழியாகத் திரவம் ஊடுருவி வெளியேறிச் சுற்றுப்புறத்தை வீக்கமடையச் செய்கின்றது. மஞ்சள் நிறப் பொருட்கள் விழித்திரையில் படிகின்றன. இந்த மாற்றங்களால் பார்வை மங்கலாகிறது. காரணம், விழித்திரையின் நடுப் பகுதியான மேகுலாவில்தான் இந்த மாற்றங்கள் நிகழ்கின்றன.

இன்னும் சிலருக்கு நீரிழிவு நோய் காரணமாக விழித்திரைக்குத் தேவையான அளவு பிராணவாயு செல்லாமல் குறைந்துவிடும். இதனை ஹைபோக்ஸியா என்று கூறுவோம். இந்நிலையைச் சமாளிக்க மேலும் சில இரத்தக் குழாய்கள் உருவாகும். ஆனால் அவை மெல்லியனவாக இருப்பதால் உடைந்து இரத்தம் கசியத் தொடங்கும். இதனால் பார்வை போய் விடக்கூடும். சிலருக்கு மோசமாகாமல் அதே நிலையில் நின்று விடக்கூடும். சில வேளைகளில் திரும்ப, திரும்ப இரத்தம் கசிவதனால் விழித்திரை சுருக்கி இழுக்கப்பட்டு அது பிரிந்து வரக்கூடிய வாய்ப்பிருக்கிறது.

நீரிழிவு நோய் ஒருவருக்கு எவ்வளவு தீவிரமாக உள்ளது என்பதை விட அவருக்கு எத்தனை காலமாக நோய் உள்ளது என்பதைப் பொறுத்தே, நீரிழிவு விழித்திரை நோய் ஏற்படுகிறது. சிலருக்கு நோய் கண்டு பிடிக்கப்பட்டுள்ள நிலையிலேயே கூட கண் பாதிக்கப்பட்டிருக்கலாம். பத்து வருடங்களாக நீரிழிவு நோயினால் பாதிக்கப்பட்டவர்களில் மூன்றில் இரண்டு பகுதியினர் நீரிழிவு விழித்திரை நோயினால் பாதிக்கப்பட வாய்ப்புள்ளது.

**கேள்வி : விழித்திரை பாதிக்கப்பட்டவர்களுக்கு எவ்வாறு சிகிச்சையளிக்கிறீர்கள்?**

**டாக்டர் ராமமூர்த்தி :** நீரிழிவு நோயுள்ள, ஆனால் விழித்திரை பாதிக்கப்படாதவர்கள் உணவில் கட்டுப்பாட்டுடனும், உடற்பயிற்சி செய்வதுடன், ஆறு மாதங்களுக்கு ஒரு முறை கண்களை கண் மருத்துவரிடம் பரிசோதனை செய்து கொள்ள வேண்டும். நோயினால் பழுது பட்ட விழித்திரைகளுக்கு போட்டோ கோயாகுலேஷன் என்ற முறையில், பாதிக்கப்பட்ட பகுதிகள் எரிக்கப்பட்டு விழித்திரை மேலும் பழுதாகாமல் மேலும் பார்வை குறையாமல் பாதுகாக்கப்படுகிறது. போட்டோ கோயாகுலேஷன் சிகிச்சை பெறுவதன் மூலம் அநேக நோயாளிகள் வாழ் நாள் முழுவதும் தேவையான பார்வையுடன் நன்றாக வாழ்க்கை நடத்துகின்றனர். இந்த சிகிச்சை பெற முடியாத அளவு நோய் அதிகமாயிருந்தால் நுண்ணிய அறுவை சிகிச்சை செய்வோம்.

**கேள்வி : விழித்திரை எந்த அளவுக்கு பாதிக்கப்பட்டிருக்கிறது என்று எவ்வாறு கண்டு பிடிக்கிறீர்கள்?**

**டாக்டர் சித்ரா :** விழித்திரையில் ஏற்பட்டுள்ள பாதிப்பை அறிய ஃபண்டஸ் ஃப்ளோரசின் அஞ்சியோகிராபி (Fundus Fluorescein Angiography.) என்ற ஒரு பரிசோதனையை செய்வோம். இந்தப் பரிசோதனையில் ஃப்ளோராசின் என்ற ஒரு வண்ணச்சாயம் (dye) கையில் உள்ள நரம்பின் வழியே ஊசி மூலமாக செலுத்தப்படும். அந்த சாயம் விழித்திரையில் படரும் போது விழித்திரையை பல வித கோணங்களில் படமெடுப்போம். இதனை அடிப்படையாகக் கொண்டே விழித்திரையின்

பாதிப்பு நிர்ணயிக்கப்படுகிறது. இந்த பரிசோதனை செய்வதற்கு நாற்பத்தி ஐந்து நிமிடங்களுக்கு முன் கண்கள் திரவம் விடப்பட்டு தளர்த்தப்படுகின்றன. (Dilate) இந்த பரிசோதனையினால் கண்களில் வலி, உறுத்தல், எரிச்சல் எதுவும் ஏற்படாது. சிலருக்கு இந்த திரவம் ஊசி மூலம் செலுத்தப்பட்ட உடன் ஒரு நிமிடத்திற்கு வாந்தி எடுக்கத் தோன்றலாம். அதனால் வயிறு காலியாக இருக்கும் போது தான் இந்தப் பரிசோதனை செய்யப்படும். பரிசோதனை செய்த முப்பத்து ஆறு மணி நேரம் வரை உடலில் தோல் நிறமும், சிறுநீர் வெளியேறும் போது அதன் நிறமும் மஞ்சள் நிறமாயிருக்கும். இதனால் கவலைப்படத் தேவையில்லை. இந்த பரிசோதனையின் முடிவை வைத்து எந்த அளவிற்கு லேசர் சிகிச்சை அளிக்க வேண்டும் என்று முடிவு செய்யப்படும்.

**கேள்வி : விழித்திரை பாதிப்பை லேசர் கதிர் கொண்டு எவ்வாறு சிகிச்சை அளிக்கிறீர்கள்?**

**டாக்டர் ராமமூர்த்தி :** பாதிப்பின் தீவிரம் அறிந்த பிறகு முகத்தை பதிய வைத்த நிலையில் அமரச் செய்து கண்களில் ஒரு காண்டாக்ட் லென்ஸ் பொருத்துவோம். இதனால் கண்ணின் உட்பகுதி தென்படுகிறது. லேசர் என்ற கருவியின் மூலம் ஒளிக்கதிர்கள் கண்ணிற்குள் செலுத்தப்பட்டு புதிதாக உண்டாகியுள்ள பலூன் போன்ற பைகளை, புதிதாக உருவாகியுள்ள இரத்தக் குழாய்களை அழிப்போம். இதனைத் தொடர்ந்து அளிப்பதால் புதிதாக குழாய்கள் உண்டாகாமல் இருக்கவும் ஓரளவு வழி வகுக்கலாம். லேசர் தெரபி பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய முக்கிய தகவல்கள் சில:

1. லேசர் என்பது ஒளி சக்தியை உண்டாக்கி அதை பெருக்குவதே. இதன் விளைவாக சக்தி வாய்ந்த ஒளிக்கற்றை ஒளி அலைகளின் மூலம் உருவாக்கப்படுகிறது.

2. லேசர் தெரபி பார்வை மேலும் மோசமடையாமலும், இருக்கும் பார்வையை அப்படியே தக்க வைக்கவும் மட்டுமே செய்ய முடியும். ஏற்கெனவே பழுதடைந்து போன பார்வையைத் திரும்பப் பெறச் செய்ய முடியாது.

3. லேசர் சிகிச்சையை ஒரே முறையில் செய்ய முடியாது. தொடர்ந்து செய்து கொண்டால்தான் இருக்கும் பார்வையை தக்க வைத்துக் கொள்ள முடியும்.

4. லேசர் சிகிச்சை செய்து கொள்ள மருத்துவமனையில் சேர்ந்து படுக்கையில் படுத்துக் கொண்டு சிகிச்சை செய்து கொள்ள அவசியமில்லை. சிறிதும் வலியில்லாமல் தொடர்ந்து உணவு முதல் எந்த கட்டுப்பாடும் இன்றி சிகிச்சை செய்து கொள்ளலாம்.



**உப்புத் தண்ணீர் பிடித்து வைத்த பாத்திரங்களில் வெள்ளையாக சொரசொரப்புடன் உப்பு படிந்து அசிங்கமாக இருக்கிறதா? கவலை வேண்டாம். மோர் ஊற்றி வைத்து நான்கு அல்லது ஐந்து மணி நேரம் கழித்து பாத்திரத்தை கழுவிப் பாருங்கள். பாத்திரம் 'பளிச்' சென்று மின்னும்!**

**– பொள்ளாச்சி கே. சித்ரா**

இரத்தம் கசிந்து கட்டிக் கொண்டிருந்தாலோ, விழித்திரை பிரிந்து வரும் நிலையிலோ மட்டும்தான் அறுவை சிகிச்சை செய்யப்படும்.

**கேள்வி : நீரிழிவு நோயினால் பாதிக்கப்பட்டுள்ளவர்கள் என்னென்ன தற்காப்பு முறைகளை கையாள வேண்டியது அவசியம்?**

**டாக்டர் சித்ரா :** பொதுவாகவே நீரிழிவு நோயைக் கட்டுப்பாட்டில் வைக்க உணவு, உடற்பயிற்சி ஆகியவற்றில் ஒழுங்குமுறை இருக்க வேண்டும். நோய் தீவிரமாகாமலிருக்க மருந்துகளை ஒழுங்காக உட்கொள்ள வேண்டும். விழித்திரை நோய் ஏற்கெனவே கூறியபடி எந்த நிலையிலும் வரலாம் என்பதை மனதில் கொண்டு கண் மருத்துவரிடம் தகுந்த இடைவெளிகளில் கண்களை பரிசோதித்துக்கொள்ள வேண்டும். அதிலும் நீரிழிவு விழித்திரை நோய் குறிப்பாக இளவயதிலேயே நீரிழிவு நோயினால் பாதிக்கப்படுபவர்கள், இள வயதிலேயே அதிக இரத்த அழுத்தத்துடன் நீரிழிவு நோய் இருப்பவர்கள், கர்ப்பமுற்ற காலத்தில் நீரிழிவினால் பாதிக்கப்படுபவர்கள் ஆகியோருக்கு அதிகம் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. இந்த வயதிலேயே கண் பார்வை பாதிக்கப்பட்டால் வாழ்க்கை மிகச் சிரமமானதாகிவிடும். எனவே நல்ல மருத்துவ வசதிகள் இருக்கும்போது, அவற்றை பயன்படுத்திக் கொண்டு வாழ்க்கையை ஒளி மயமானதாக்கிக் கொள்வது, உங்கள் கையில்தான் இருக்கிறது!

பேட்டி : **ராஜ்யஸ்ரீ சந்திரசேகர்**

# அழகுக்கு அழகு செய்ய...



ங்கள் மிகவும் அழகாக இருக்கிறீர்கள் என்று யாராவது நம்மைப் பார்த்துச் சொன்னால் நம் உள்ளம் எப்படிப் பூரித்துப் போய் விடுகிறது. அதிலும் பெண்களின் உள்ளம் பெரும் மகிழ்ச்சி அடையும் என்பதில் ஐயமில்லை. எல்லா வகையான உணவிலும் ஏதாவது ஒரு சுவை கலந்திருப்பதைப் போலவே எல்லோரும் ஏதாவது ஒரு வகையில் அழகாகவே இருக்கிறார்கள். அழகுக் கலை என்பது தொன்றுதொட்டு நம் நாட்டில் நிலவி வரும் ஒப்பற்ற கலை. இதற்கு அஜந்தா, எல்லோரா சிற்பங்களே தக்க சான்றுகள் ஆகும்.

அழகு சில பேருக்குப் பரம்பரை வழியாகவும் (Beauty is Heriditary) வரலாம். ஒரு வம்சத்தில் கூந்தல், சருமம் அழகாக இருந்தால் இவையாவும் அவர்கள் சந்ததியினரும் பெறக்கூடியவையே. அழகைப் பாதுகாக்கவும், பெறவும் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயங்கள் - ஆரோக்கியம், சத்துணவு, சுத்தம், உடற்பயிற்சி, இவையாவும் மனத்தில் வைத்துப் போற்றினால் அழகை அதிகரிக்கவும் பாதுகாக்கவும் செய்யலாம்.

ஆரோக்கியத்தைப் பாதுகாக்க நாம் உட்கொள்கிற உணவு, உடற்பயிற்சி, சுத்தம் இம் மூன்றும் மிக அவசியம். அதிகமான உழைப்பு, கவலைப்படுதல், தூக்கமின்மை, மலச்சிக்கல் இவை எல்லாம் அழகைப் பாதிக்கும் விலை உயர்ந்த பொருள்களினால் ஆரோக்கியத்தைப் பாதுகாக்க முடியும் என்பது தவறு. கீரை, பச்சைக் காய்கறிகளில் உள்ள சத்து அழகையும் ஆரோக்கியத்தையும் பாதுகாக்கிறது. கீரை மலிவானது. எக்காலத்திலும் கிடைக்கக்கூடியது. தினந்தோறும் கீரை சாப்பிட்டால் ஆரோக்கியமாகவும் அழகாகவும் இருக்கலாம். இருவேளைகளிலும் குளிர்ந்த நீரில் குளிப்பதாலும், முடியைச் சுத்தமாக வைத்துக் கொள்வதாலும், சுத்தமான ஆடைகள் அணிவதாலும், உடம்பு, சருமம் எல்லாம் சுத்தமாக இருக்கும்.

உடற்பயிற்சியினால் இரத்த ஓட்டம் பெருகும். தினந்தோறும் பத்து நிமிடம் உடற்பயிற்சி செய்ய வேண்டும். வெளி அழகு தெரிய வேண்டுமென்றால் உள் அழகைப் பாதுகாக்க வேண்டும். சினம், பொறாமை இவற்றை விடுத்து அன்பு, புன்சிரிப்பு இவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும்.

எத்தனை வருடம்தான் ஜவ்வரிசியை வெள்ளை முத்து கோலம் என்று போடுவது? ஒரு மாற்றம் செய்யுங்களேன். 4 அல்லது 5 வகையான ஃபுட் கலர் எடுத்து தலா ஒரு கைப்பிடி ஜவ்வரிசியை (தனித்தனியாக) துளி எண்ணெய் பிசிறி சாயம் ஏற்றுங்கள். (நீர் சேர்த்தால் ஜவ்வரிசி ஒட்டிக் கொண்டு உருவம் சிதைந்து விடும்.) தாம்பாளத்தில் இஷ்டப்பட்ட கோல டிசைன் போட்டு கலர் ஜவ்வரிசியால் நிரப்புங்கள். தேவையானால் சுற்றி வெள்ளை ஜவ்வரிசியால் பார்டர் கட்டுங்கள். கலர் ஜவ்வரிசி கோலம் இந்த நவராத்திரிக்கு அசத்தும்.

– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.



சருமம் பளபளப்பாகவும், மென்மையாகவும் ஆரோக்கியமானதாகவும் இருக்க சத்துணவு, உடற்பயிற்சி சுத்தம் மிகவும் அவசியம். நம்முடைய சருமம் எப்போதும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை.

நாம் இருக்கின்ற இடம், குளிர்சாதன அறை, காற்று, கெட்ட காற்றைச் சுவாசித்தல் இவைகளினால் சருமத்திற்குத் தொல்லைகள் வரலாம். நமக்கு வயதாகும் பொழுது சருமத்திற்கும் வயதாகி விடும். வயதானால் சருமத்தின் தன்மையும், நிற அமைப்பும் மாறும். நாம் பிறக்கும் பொழுது 80 சதவீதம் ஈரப்பசை நம் சருமத்தில் இருக்கும். வயதாக ஆக உடம்பிற்கு மென்மை, ஈரப்பசை கொடுக்கும் உயிர் அணுக்கள் குறைந்து கொண்டே வருவதால், சருமத்திலும் ஈரப்பசை குறையும். சத்துணவு, சுத்தமான காற்று, மலச்சிக்கல் இல்லாமல் பார்த்துக் கொள்ளுதல், தேகப்பயிற்சி – சருமத்தை இதன் மூலம் நன்கு தக்கவைத்துக் கொள்ளலாம்.

ஃபேஷியல் மசாஜ் செய்வதன் மூலம் இரத்த ஓட்டம் அதிகரிக்கும். சருமத்திலுள்ள அழுக்கும், எண்ணெய்ப் பசையும் ஒன்றாகச் சேர்ந்து பாக்டீரியாவுடன் வெள்ளை, கருப்புப் புள்ளிகளாக தோலிற்கு மேல் வருகிறது. இவற்றைச் சிறந்த மூலிகை பேக் மூலமாகவும், அரோமா ஃபேஷியல் மூலமாகவும் சரிசெய்யலாம். இந்தச் சிகிச்சைகளை நான் செய்யும்போது சரியான சத்துணவு எல்லாவற்றிற்கும் அடிப்படையாக அமைய வேண்டும் என்பதை அறிவுறுத்துவதில் கவனமாக உள்ளேன்.

எவ்வளவுதான் முடியைப் பற்றி எழுதினாலும் நிறைய வாசகிகள் முடியைப் பற்றி நிறைய சந்தேகங்கள் எழுதியுள்ளனர். (என்னுடைய 481 7157 தொலைபேசியிலும் என்னுடன் பேசலாம்.)

பொதுவாக தேக ஆரோக்கியத்துக்கான வைட்டமின்கள் அடங்கிய முழு உணவே கூந்தல் வளர்ச்சிக்குப் போதுமானது. முடிக்கு வித்தாக இருப்பது இரும்புச் சத்து கொழுப்புச் சத்து போன்றவையாகும். இரும்புச் சத்து அதிகமுள்ள காய்கறிகள் முருங்கைக் கீரை, அகத்திக் கீரை, புளிச்சக் கீரை, கருவேப்பிலை, பருப்பு வகைகள், காய்கறி வகைகள்.

வாரம் இருமுறை அழுக்குப் போக கேசத்தை சுத்தப்படுத்த வேண்டும். நான் மூலிகை எண்ணெய் மசாஜ் செய்து ஹென்னா கண்டிஷர் போட்டு, முடிக்குச் செழுமையாக மூலிகை எண்ணெய் தயார் செய்து உபயோகப்படுத்துகிறேன். பலவீனமான வேர் கால்கள் முடியை பலவீனப்படுத்தாமல் இருப்பதற்காக மூலிகை எண்ணெய் தயார் செய்து பொடுகு, இளநரை போகப் பயன்படுத்துகிறேன். மூலிகைகள் சிறந்த 'பேக்'கள் சருமத்திற்குப் பளபளப்பைக் கொடுக்கிறது.

- ஹேமா லக்ஷ்மண்

(அழகு மற்றும் சிகை அலங்கார நிபுணர்)

# இதயமே கோயிலான தேவி

லலிதா சகஸ்ரநாமத்தில் முதல் நாமமே ஸ்ரீமாத்ரே நம : என்பதாகும். அன்னையை வணங்குவது, போற்றுவது, ஆராதிப்பது ஜீவனுடைய கடமையாகும். தாய்மையை உணராத ஜீவன் எங்குமில்லை. மாத்ருதேவோ பவ : "தாயைத் தெய்வமாக எண்ண வேண்டும்" என்று வேதம் முழங்குகிறது.

மானிடர்கள் இந்த ஜன்மத்திற்குக் கிடைத்த தாயை தெய்வமாக வணங்க வேண்டுமென்றால், எல்லா ஜன்மத்திற்கும் - எல்லா உலகங்களுக்கும் தாயாகிய பராசக்தியை தாயாக வணங்க வேண்டியது நமது கடமையல்லவா? அம்பிகையை தாயாக எண்ணி வணங்குவதால் இறைவனை நெருக்கத்துடனும், உரிமையுடனும் கொண்டாட இயலுகிறது.

மானிடப் பிறவியிலுள்ள தாய், கருணையோடும் அன்போடும், பொறுமையோடும், சகிப்புத் தன்மையோடும் இருப்பவளாக இருக்கையில் அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயகியான அன்னை பராசக்தி எப்படி இருக்க வேண்டும் என்பதை நாம் கற்பனை செய்து கொள்ள வேண்டும்.

தாயைக் காண உருகும் பிள்ளையைப் போல், அன்னை பராசக்தியின் அணுக்கத்தை நாம் எப்பொழுது பெறுவோம் என்று நம் மனங்கனிந்து உருகிப் பிரார்த்திக்க வேண்டும்.

"உன்னையே சதா எண்ணி பக்தியுடன் துதிப்பவன் என்ன வேண்டுமென்று எண்ணுகின்றானோ, அவைகளையெல்லாம் அடைகிறான்" என்று சங்கர பகவத் பாதாள் கூறியபடி நாம் எண்ணுகின்றவற்றை நம்மை அடையச் செய்கிறாள் அன்னை பராசக்தி.

உலகமானது சக்தி, செல்வம், அறிவு என்று மூன்று வித சக்திகளின் அடிப்படையில் இயங்கி வருகிறது. இம்மூன்றையும் தரும் தெய்வங்களாக (மலைமகள், அலைமகள், கலைமகள்) அதாவது துர்க்கா, லக்ஷ்மி, சரஸ்வதியாக



நாம் வழிபடுகிறோம்.

அன்னை பராசக்தியை அணிமா, மஹிமா முதலிய எட்டு வகை அம்சமாகப் பிரித்து அவைகளை அஷ்டமா சக்திகள் என்று குறிப்பிடுவார்கள். அதைப் போல், திருமகளுக்கு எட்டு வகை சக்திகள் உண்டு. அவைகள் - தனலக்ஷ்மி, தான்யலக்ஷ்மி, சந்தான லக்ஷ்மி, கஜலக்ஷ்மி, தைர்யலக்ஷ்மி, விஜயலக்ஷ்மி, ஐஸ்வரிய லக்ஷ்மி, ஆதிலக்ஷ்மி என்று பெயர் பெறுகின்றன. ஒவ்வொரு லக்ஷ்மியும் ஒவ்வொரு சக்தியை நமக்கு அளிக்கிறாள்.

தேவி உபாசகர்கள் பராசக்தியை ஆறு அம்சங்களாக பாகுபாடு செய்து வழிபடுகிறார்கள். பிரபஞ்ச இயக்கத்திற்கு

ஆதார சக்தியாக விளங்குகின்றன. இவர்கள் முறையே பராசக்தி, ஞானசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி, குண்டலினி சக்தி, மாத்ருசக்தி என்பனவாகும்.

தேவி சூக்தத்தில் – வேதம், சக்தியை, "வாக்" என்று குறிப்பிடுகிறது. காண்பது, கேட்பது, முகருவது எல்லாமே சக்தியின் இயக்கங்கள்தாம் என்று பராசக்தியே கூறுகிறாள்.

ஒவ்வொரு வருஷத்திலும் ஆறு ருதுக்களின் ஆரம்பத்தை நவராத்திரியாக வழிபடுவது வழக்கம். இவைகளில் வசந்த நவராத்திரியும், சாரதா நவராத்திரியும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.





புரட்டாசி மாதம் சுக்ல பக்ஷத்தில் வருவதுதான் சாரதா நவராத்திரி; புரட்டாசி சுக்ல பக்ஷத்தில் முதல் நாளன்று ஹஸ்த நக்ஷத்திரம் கூடும் நாள். அந்த தினம் தேவி பூஜைக்கு உகந்த நாள்.

முதல் மூன்று தினங்கள், துர்க்கை, மத்தியிலுள்ள மூன்று தினங்கள் லக்ஷ்மி முடிவிலுள்ள மூன்று தினங்கள் சரஸ்வதிக்கும் ஆக நவராத்திரியில் முப்பெரும் சக்திகளும் வழிபாட்டிற்குரியவர்கள்.

இந்த ஒன்பது நாட்களும் முறையே மகேஸ்வரி, கௌமாரி, வராஹி, மகாலக்ஷ்மி வைஷ்ணவி, இந்திராணி, மஹாசரஸ்வதி, நாரசிம்மி, சாமுண்டி ஆகிய வடிவில் ஆராதிக்கப்படுகிறார்கள்.

நவராத்திரி விரதத்தை அனுசரித்த பின்பே, ஸ்ரீராமபிரான் சீதையையும், ராஜ்யத்தையும் பெற்று வாழ்ந்ததாக இராமாயணம் கூறுகிறது.

நவராத்திரி ஒன்பது தினங்களும் அம்பிகையை வழிபட இயலாவிட்டாலும் பத்திரகாளி தோன்றிய எட்டாம் நாளான அஷ்டமியன்று தேவியை வழிபட்டாலும் போதுமானது.

நவராத்திரியின் முதல் நாள் மதுகைடபரை அழித்த அம்பிகையைக் குமரியாகவும், இரண்டாம் நாள் மகிஷாசுரனின் சேனைகளை வதம் செய்யப் புறப்பட்ட துர்க்கையை ஸ்ரீராஜ ராஜேஸ்வரியாகவும், மூன்றாம் நாள் மகிஷாசுரவதம் செய்த தேவியை மகிஷத்தின் சிரசில் வீற்றிருக்கும் கோலத்தில் சூலத்துடனும், நான்காம் நாள் ஜெயலக்ஷ்மியாக வெற்றி வடிவத்திலும், ஐந்தாம் நாள் அம்மன் நிசும்பனின் தூதுவன் சொல்வதைக் கேட்கும் பாவனையிலும், ஆறாம் நாள் சர்ப்பாசனத்தில் சண்டிதேவி அமர்ந்திருக்கும் திருக்கோலத்திலும், ஏழாம் நாள் சண்டமுண்டவதைக்குப் பின்னர் பொன்னாசனத்தில் அமர்ந்து யாழ்மீட்டும் கோலத்திலும், எட்டாம் நாள் ரக்த பீஜனை

அழித்ததற்குப்பின் கருணை மிக்க தோற்றத்துடன் 'காட்சியளிப்பவளாகவும், ஒன்பதாம் நாளன்று வில், அம்பு, அங்குசம், பாசம் தரித்த கோலத்திலும் அம்பிகையை வழிபடுதல் சிறந்ததாகக் கருதப்படுகிறது.

பத்தாம் நாளன்று, அம்பிகை இலிங்கத்தைப் பூஜித்து, சிவசக்தி ஐக்ய ரூபிணியாகக் காட்சி அளிக்கிறாள்.

நவராத்திரி ஒன்பது தினங்களும் குமாரி, திரிமூர்த்தி, கல்யாணி, மோஹினி, காளிகா, சண்டிகா, சாம்பவி, துர்க்கா, சுபத்ரா என்ற பெயர்களில் பத்து வயதுக்குட்பட்ட அழகிய கன்னியர்களை துர்க்கையின் வடிவாகப் பாவித்து வழிபடுவார்கள்.

இவ்வாறு ஒன்பது நாட்களுக்குப் பின்னர் ஸ்ரீ அம்பிகையின் வெற்றியைக் குறிக்கும் வண்ணம் விஜயதசமியாகக் கொண்டாடுகிறோம். இந்த நாட்களில் வித்தியாரம்பமும், புதுத்தொழில்கள் துவங்குவதும் நடைபெறும். இந்த நவராத்திரியானது சக்தி வழிபாட்டில் முக்கியமாகக் கருதப்படுகிறது.

இவை தவிர' பராசக்தியை பத்து வித திருவுருவங்களில் வழிபாட்டுக்குரியவைகளாக அமைக்கப்பட்டுள்ளன. அவைகள் - பாலா, லலிதா, அச்வாருடா, அன்னபூரணி, ராஜமாதங்கி, வாக்வாதினி, வராஹி, பராபுவனேஸ்வரி, சண்டி ஆகிய இப்பெயர்கள் துர்க்கா சப்தசதியில் வருகின்றன.

மகாதேவியின் இந்த பத்து வடிவங்களும் சௌபாக்யத்தையும், மோக்ஷத்தையும் அளிப்பனவாகும்.

தவிர, தந்திர சாஸ்திரத்தின் பிரகாரம் மகாவித்தைகள் பத்து உள்ளன. அந்த பத்துவித தேவிகளை முறையே காளி, தாரா, மகா திரிபுரசுந்தரி, புவனேஸ்வரி, பைரவி, சின்ன மஸ்தா, தூமாவதி, வித்யா பகளா, மாதங்கி, கமலா என்று குறிப்பிடப்படுகிறது.

பத்து வித்தைகளில் முதல் மகா வித்தையான காளிகாவுக்கே முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. சாக்தர்களில் காளி மந்திரத்தைக் கொண்டு வழிபடுவனே சிறந்தவன் என்று சொல்லப்படுகிறது. மிகவும் பாபம் செய்தவன் கூட "காளி மந்திர" அனுஷ்டானத்தினால் நற்பேறு பெறலாகும் என மோஹினி தந்திரம் கூறுகிறது.

பரசுராம க்ஷேத்திரமான மலையாளத்தில் அம்பிகையை பகவதி என்றே குறிப்பிடுகிறார்கள். காளியின் மறு பெயரே பகவதியாகும். பூரணமான ஐஸ்வரியம், தர்மம், யசஸ், ஸ்ரீஞானம், விஞ்ஞானம், நியமம், யோனி, வீர்யம் ஆகியவை "பகம்" என்ற பதத்திற்குப் பொருளாகும். கேரளாவில் மட்டும் 27,000 பகவதி கோயில்கள் உள்ளனவாகக் கணக்கிடப்பட்டுள்ளது. பகவதியின் திருவுருவங்கள் பெரும்பாலும் மந்திரத்தினாலானவை!

சோற்றாணிக்கரை பகவதியை ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாள் தமது "ஸௌந்தர்ய லஹரி"யில் வெகு அழகாகக் குறிப்பிட்டுள்ளார். அம்பிகையின்

## இது என்ன பாயஸம்!

பாலைச் சுண்டக் காய்ச்சி, சாக்லேட்களை (சுமார் 25) சிறு துண்டுகளாக நறுக்கிப் போட்டு ஏலக்காய்ப்பொடி, பாதாம் பருப்பு, முந்திரிப் பருப்புத் துண்டங்களையும் சேர்த்து, கார்ன் ஃப்ளோர் அரை டீஸ்பூன் சிறிது பாலில் கரைத்து விட்டுக் கிளறி இறக்கிச் சாப்பிட, பாயசம் சூப்பராகயிருந்தது.

– லட்சுமி சுந்தரம்



திருவுருவம் - மார்பிலிருந்துதான் அமைந்துள்ளது. மலையாள பகவதிகளில் மிகவும் பிரசித்தி பெற்றவள் சோற்றாணிக்கரை பகவதியேயாகும். இந்த சந்நிதியில் எப்பொழுதும் "லலிதா சகஸ்ரநாமம்" பாராயணம் கேட்ட வண்ணம் இருக்கும்.

காலையில் சரஸ்வதியாகவும், பகலில் காளியாகவும், மாலையில் மஹாலக்ஷ்மியாகவும் பாவித்து உடைகளால் அலங்கரித்துப் போற்றப்படுகிறாள். சங்கும், சக்கரமும் கொண்டுள்ள பகவதிதேவி ஸ்ரீசக்கரத்தின் மீது அமர்ந்திருக்கிறாள்.

கொடுங்களூர் பகவதியின் சக்தியும் வெகு மகத்தானது. சண்டிகேஸ்வரியின் விக்ரஹம், பகவதியின் சந்நிதிக்கு முன் காட்சி தருகிறது. பிரதான சந்நிதிக்கு இடது பக்கத்தில் ஏழு மாதாக்களின் சந்நிதியுள்ளது. ஆதிசங்கரபகவத் பாதாள், இங்கும் ஸ்ரீசக்கரத்தைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார். அன்னை பகவதி எட்டுக் கரங்களுடனும், மூன்று கண்களுடனும் கோரைப் பற்களுடனும் மிகவும் உக்ரமாகக் காட்சி தருகிறாள். இத்தலத்தை உள்ளன்போடு வழிபட்டால் பெரியம்மை போன்ற சகலவித நோய்களும் அகலுகின்றன.

கல்லன்குளம் பகவதி கோயில் ஒரு சிறு குன்றின் மீது அமைந்துள்ளது. இங்குள்ள அம்மனுக்கு உருவமில்லை. ஒரு கை மட்டுமே ஒரு பீடத்தின் மேலிருக்கிறது. "ஹேமாம்பிகை" என்ற பெயருடன் தேவி இங்கு வழிபடு தெய்வமாக இருக்கிறாள். தாக்ஷாயணியின் "கை" விழுந்த காரணத்தால் இது சக்தி பீடமாகவும் விசேஷ சக்திவாய்ந்த ஸ்தலமாகவும் கல்லன் குளம் பகவதி கோயில் விளங்குகிறது.

இதர இடங்களிலுள்ள பகவதி கோயில்களும் மந்திர தந்திர விசேஷம் பெற்று மிகவும் சிறப்புடனே விளங்குகின்றன. இப்படி பல ரூபங்களில் பல நாமங்களுடன் சக்தி தெய்வங்கள் இருந்தாலும் எல்லாத் தெய்வங்களும் மந்திரத்திற்குக் கட்டுப்பட்டவையாகும். மந்திரங்களுக்குள் "காயத்ரீ மந்திர"மே உயர்வானது எனலாம்.

வேதமந்திரங்களில் நான் காயத்ரீயாக இருக்கிறேன் என்று ஸ்ரீபகவத் கீதையில் ஸ்ரீகிருஷ்ண பகவான் கூறியிருக்கிறார். வேதத்தில் உள்ள மற்ற மந்திரங்களை விட



கொலுவுக்குத் தயார் செய்யும் பார்க்கில் விதைப்பதற்கு கடுகை உபயோகிப்பதைவிட ராகி(கேழ்வரகு) சிறந்ததாம். கொலுப் பண்டிகை முடிந்தபின் அந்த முளைத்த ராகித்துளிர்களை எடுத்து பாசிப்பருப்புடன் சேர்த்து மசியல் செய்யலாம்.

**– அனுசத்யா**

24 அக்ஷரங்களைக் கொண்ட காயத்ரீ மந்திரம் உருவத்தில் சிறியதாயினும் மகிமையில் மிகவும் உயர்ந்தது.

ஸ்ரீ காயத்ரீதேவியை உபாசிப்பதால் ஆத்ம சக்தியும், சத்ருக்களை வெற்றிகொள்ளும் மனோபலமும் சரீர பலமும் உயர்ந்த தேஜஸும், மேன்மேலும் வளர்கிறதென்று வேதங்கள் கூறுகின்றன.

"எவர் நமது அறிவைத் தூண்டுகிறாரோ; அந்த ஒளிமயமான சூரியனின் தேஜஸைத் தியானம் செய்கிறோம்" என்பது காயத்ரீ மந்திரத்தின் பொருளாகும்.

காயத்ரீ தேவிக்கு இதயமே கோயிலாகும். அவளைத் தியான மலரினால்தான் உயரிய அர்ச்சனை செய்ய முடியும். அலையா மனத்துடன் நிலை பெற்று அன்னை காயத்ரீ தேவி நம்மைக் காப்பாற்றுவாள். தினசரி காயத்ரீ ஜபம் செய்பவருக்கு, முன் ஜென்மங்களில் செய்த பாபங்கள் அகலுகின்றன. அந்தந்த தினத்தில் தெரிந்தோ தெரியாமலோ செய்த பாவங்கள் நீங்குகின்றன.

மனச் சஞ்சலங்கள் நீங்கி ஒளி பொருந்திய வாழ்க்கை உண்டாகிறது. இதை அனுபவத்தில்தான் கண்டறிய வேண்டும். காயத்ரீ மந்திரத்தைச் சிரத்தையுடன் ஜபித்தால் சிறந்த சித்துக்களை எளிதில் அடையலாம்.

"ஸர்வ மங்கள மாங்கல்யே,
சிவ ஸர்வார்த்த ஸாதிகே!
சரண்யே த்ரயம்பிகே கௌரி
நாராயணி நமோஸ்துதே!!

**– வி.எஸ். ஸ்ரீநிவாசன்**

அசந்து தூங்கிக் கொண்டிருந்த சிவா யாரோ தன்னை உலுக்குவது கண்டு திடுக்கிட்டு விழித்தான். அவனது தாய்தான்.

"என்னம்மா?"

"எழுந்திருப்பா... பிரபாவுக்கு வலி வந்து விட்டது. தவிக்கிறா... சீக்கிரம் போய் ஆட்டோவோ டாக்ஸியோ அழைத்து வா."

பகீர் என்றது அவனுக்கு. வலி வந்து விட்டதா? அரக்க பரக்க எழுந்தான். லுங்கியை கழட்டவும் நேரம் இல்லாமல் சட்டையை மாட்டிக் கொண்டு தாயைக் கேட்டான்.

"இப்ப மணி எத்தனைம்மா?"

"ஒரு மணிப்பா... பன்னிரண்டு மணியிலிருந்து தவிக்கிறா. சீரக கஷாயம் போட்டுத் தந்தேன். படபடன்னு வலி ஜாஸ்தியாச்சு. இனி தாங்காதுன்னு உன்னை எழுப்பினேன்."

"இந்த நேரத்தில் எங்கேன்னு..." என்று முனகிக் கொண்டு புறப்பட்டான்.

அறையிலிருந்து பிரபாவின் முனகல் கேட்டது. இரண்டாவது பிரசவம். ஆனாலும் வலி அதே தானே. வெளியே வந்தான். தெரு விளக்குகளுக்கு என்ன வந்ததோ... அதுகளும் அழுது கொண்டு இருந்தன. தெருக்கோடி வரை அலைந்து வந்தான். ஊகூம்... ஒரு ஆட்டோ. ச்சை.. வருகிற பிரசவ வலி நடு இரவிலா வரணும்... அவனுக்கு எரிச்சல் வந்தது.

அதே சமயம் பாவம்... அங்கு பிரபா என்னமாய் தவித்துக் கொண்டிருக்கிறாளோ... அந்தத் துடிப்பில் விரைந்தான்.

அடுத்த தெருவில் ஒருத்தர் ஆட்டோ வைத்திருக்கிறார். கேட்டுப் பார்க்கலாமே என்ற நப்பாசை எழ ஓடினான்.

அந்த மனிதர் விஷயம் அறிந்து பரபரத்தாலும், "அடடா... ஆட்டோ இருக்கு. ஆனா டிரைவர் இல்லையேப்பா. எனக்கும் ஓட்ட வராதே... என் நண்பரோட மகன். அவன்தான் ஓட்டுவது" என்றதும் ஏமாற்றம்.

"அவன் வீடு?"



"தூரம்தான். இப்ப என்ன செய்வது?" அவனையே கேள்வி கேட்டார்.

"தாங்க்ஸ் சார்" என்று கூறிவிட்டு வீட்டுக்கு வந்தான்.

பிரபாவின் முனகலின் ஒலி சத்தம் அதிகமாகி இருந்தது.

"என்னடா சிவா...?"

"அர்த்தராத்திரிம்மா... ஆட்டோ எதுவும் கண்ணில் படவில்லை."

"அப்படி இருந்து விட முடியுமா சிவா... போய்ப் பாரேன். யாராவது கார் வைத்திருந்தால் கேட்டுப் பார். இந்த மாதிரி சமயத்தில் யாரும் உதவுவார்கள்."

மகன் தயங்குவது கண்டு, "இதுக்குத்தான் தலையில் அடித்துக் கொண்டேன். கேட்டாயா... பொறுப்பை எடுத்துக் கொள்வதற்கு முன் யோசிச்சிருக்கணும். பேசாமல் அவள் வீட்டிலேயே..."

"அம்மா.. உன் புலம்பலை ஆரம்பித்து விடாதே.. போய்ப் பார்க்கிறேன்."

"ஆமாம்... என் வாயை அடைச்சிடு. இப்போ கஷ்டப்படுவது யாரு...?"

"ம்மா..." பிரபாவின் குரல். வலியைப் பொறுக்க முடியாமல் வரும் அலறல். வெளியே ஓடினான். ஆபத்துக்கு பாவம் மட்டுமில்லை. வெட்கம் மானமும்தான்

# அருணா நந்தினி



# போதுமடா சாமி

இடையாது. தெருவின் கோடியில் இருந்த வசதி படைத்த ஒருவரின் வீட்டுக் கதவைத் தட்டி நிலையைக் கூறி, கெஞ்சி, கார் உதவி கேட்டான். முதலில் தயங்கிய அந்த ஆசாமி பிறகு மனிதாபிமானம் முந்திக் கொள்ள ஒப்புக் கொண்டார். மனைவியை அள்ளிப் போட்டுக் கொண்டு நர்ஸிங்ஹோமிற்கு சென்றதும் ஆயிற்று. பெரியவனைத் தாத்தா பார்த்துக் கொண்டார். பிரபாவை லேபர் வார்டிற்கு அழைத்துக் கொண்டு சென்றனர். தாயும் மகனும் பெஞ்சில் சாய்ந்து கொண் டனர்.

டென்ஷன்... தவிப்பு....

அம்மா சொல்வது போல நாம் ஆத்திரப் பட்டு கொஞ்சம் அவசரப்பட்டு விட் டோமோ...

அப்படியே கண்களை மூடிக் கொண் டான். மூன்று மாதங்களுக்கு முன் நடந்தது. இப்போது நினைவில் ஆடியது.

பிரபாவின் தங்கைக்கு முதல் பிரசவம் ஆகி குழந்தைக்குப் பெயர் சூட்டல். மச்சினி ரம்யாவுக்கு சிசேரியன் என்பதால் மூன்று மாதம் கழித்து பெயர் சூட்டும் வைபவம் என்று நடத்தினர். அவளது தேக ஆரோக்கி யம் சீராகட்டும் என்றுதான்.

பிரபாவும் சிவாவும் அன்று அங்கேயே தங்கினர்.

மறுநாள் பேச்சுவாக்கில் பிரபாவின் இரண்டாம் பிரசவம் பற்றிய பேச்சு வந்தது. பிரபாவின் தந்தை விகல்பமின்றி, "மாப் பிள்ளை, இப்பத்தான் ரம்யாவின் கல்யாண கடனோட, பிரசவ செலவும் கையைக் கடித்து விட்டது. நர்ஸிங்ஹோமில்தான் சேர்க்கணும் என்பதால் ரொம்பச் செலவு ஆகும். நீங்களும் கொஞ்சம் ஹெல்ப் பண்ணினால் தேவலை" என்றார்.

கெட்ட நேரம் என்பார்கள். அது அப் போதுதானோ என்னவோ.. சிவாவின் நாக்கில் சனி உட்கார்ந்து கொள்ள... 'கர்' என்று சினம் தலைக்கு ஏற...

"நான் பணம் கொடுத்து நீங்க பிரசவம் செய்யணும்னு அவசியமில்லை. அதை நானே என் வீட்டில் வைத்து பார்த்துக் கொள்வேன். தாய் வீட்டில்தான் இரண்டு பிரசவம்னு சம்பிரதாயம். அதைப் பண்ண கணங் கறீங்களே" என்று சொல்லி விட்டான்.

மாமனார் அதற்காகக் கோபப்பட வில்லை... மாப்பிள்ளையாயிற்றே. நிதான மாய்ச் சொன்னார். ஆனால் அந்த நேரத்தில் அவரோட வார்த்தைகள் விஷமமாய்தான் பட்டது அவனுக்கு.

"கோபித்துக் கொள்ள வேண்டாம் மாப்பிள்ளை. நீங்க சொல்ற மாதிரியே என் பெண்ணோட பிரவசத்தை ஏத்துக் கொள் றதில் சந்தோஷம்தான். பிரசவம்னா என்ன அலைச்சல்... என்ன கஷ்டம்னு நாங்க அனு பவப்பட்டிருக்கோம். அதுக்காக கணங்கவும் இல்லை. பணம்தான் பிரச்னை. உதவி செய் யுங்கன்னு உங்ககிட்டே கேட்டது தப்புன்னா விட்டுடுங்க. இல்லே... பணம் இல்லைன் னாலும் பரவாயில்லை..."

எழுந்து விட்டான் சிவா.

"என்ன இண்டலா... என்னை கையாலா காதவன்னு நினைச்சிட்டீங்களா... என்கிட்டே பணம் இருக்கு... நிறைய இருக்கு. பாங்க் பாலன்ஸும் இருக்கு. அதை உங்களுக்குக் கொடுத்து பிரசவம் பார்க்கச் சொல்லணும்னு தலைவிதியில்லை. என் மனைவி.. என் குழந்தை.. எனக்குப் பார்த்துக் கொள்ள முடியும். எழுந்திருடீ... இனி ஒரு நிமிஷமும் இங்கு இருக்கக் கூடாது. இந்த சீராட்டும்,

ஒரு திருமணத்தில்
சாப்பாட்டு பந்தியிலேயே இடது கை
ஓரத்தில் தாம்பூலப் பையை பார்த்து
பார்த்துத் தந்தார்கள். இதனால் ஒருவர்
விடாமல் தாம்பூலம் பெற்றுக்
கொள்வதுடன்,
சம்பந்தப்பட்டவர் போய் வருகிறேன்
என்று சொல்லிக் கொள்ளும்போது
தாம்பூலம் தருகிறேன் என்று காக்க
வைத்து நம் நேரம்அவர்கள் நேரம் இருவர்
நேரத்தையும் வீண் ஆக்காமலும்
இருக்கலாம்.
– லக்ஷ்மி ஸ்ரீநிவாசன்





# ஆஸ்துமாவா? ஈஸ்னோபிலியாவா? சைனஸா? காசநோயா?

# இனி கவலையே வேண்டாம்



மூக்கில் நீர் வடிதல், சளி, தும்மல், மூக்கடைப்பு, இருமல், மூச்சுத்திணறல், உடல்மெலிதல், மலச்சிக்கல், பசியின்மை, உடல் நடுக்கம், நரம்பு தளர்ச்சி இவைகளை ஆரம்ப காலத்தில் கவனிக்காவிட்டால் மேலே கூறிய நோய்கள் ஏற்படும். இவைகள் ஏற்பட காரணம், நம் உடலிலுள்ள சிறுநீரகங்கள் இரத்தத்திலுள்ள கழிவு நீரைப் பிரித்து வெளியேற்றுகின்றன. சிறுநீரகங்களில் வடிகட்டும் பகுதியில் உப்புப் படிவங்களால் ஏற்படும் குளிர்ச்சித் தன்மையால் சுருக்கம் ஏற்படுவதினாலோ, கழிவு நீர் முறைப்படி முழுவதும் இரத்தத்திலிருந்து பிரிக்கப்பட முடியாமல் இரத்தத்திலேயே ஓரளவு கலந்து இருந்து விடுகிறது. அடுத்தாற் போல் இரத்தம் மார்புப் பகுதியில் உள்ள நுரையீரலில் சுரக்கும் நீருடன் கலந்து சுத்தப்படுத்தப்படுகிறது. சுத்தப்படுத்தப்படும் போது பிரிக்கப்படும் கழிவுநீர், தும்மல் மூலம் மூக்கில் நீராக வெளியேறுகின்றது. இந்நீர் இறுகி மூக்கடைப்பு ஏற்படுகிறது. மூக்குச்சிந்தும் போது இது மூக்குச்சளியாக வெளியேறுகின்றது. இம்முறைகளில் வெளியேற்றப்படாத எஞ்சிய கழிவு நீரே நுரையீரலில் படிந்து விடும் கபம் எனப்படுவதாகும். மேலும் உடலில் தூய்மையான இரத்த உற்பத்தியும், சீரான இரத்த ஓட்டமும் இருந்தால்தான் உடலில் உள்ள அனைத்து உறுப்புகளும் பழுதடையாமல் நல்ல நிலைமையில் இருக்கும். வேப்பிலை, துளசி, அத்தி, அருகம்புல், வில்வம் போன்ற தெய்வீக மூலிகைகளுடன், அற்புத மருத்துவ குணம் கொண்ட ஆடாதொடை, கற்பூரவல்லி, தூதுவளை, கீழாநெல்லி போன்ற மூலிகைகளை உட்கொள்வதால் உடலில் தூய்மையான இரத்த உற்பத்தியும், சீரானதடையற்ற இரத்த ஓட்டமும், நோய் எதிர்ப்பு சக்தியும், ஒவ்வாமை (Allergy)யால் ஏற்படும் நோய்களையும் பக்க விளைவு, பின் விளைவு இன்றி குணப்படுத்துவது உறுதி ! மேலும் ஆலோசனைக்கு -




தெய்வீக மூலிகை வைத்தியர்கள்


தலைமை முகவரி : Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ : 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8

✆ : 6424285, 6427638

Singapore Enquiry : Mrs. Renuka, Blk 101, #04, -176, Jurong East Street-13, Singapore - 600 101. ✆ : 0065 - 5621218


## 1998 வைத்தியரிடம் நேரில் ஆலோசனை/மருந்தினைப் பெற முகாம் விவரம்.
(முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)

| | | | |
|---|---|---|---|
| 2-ந் தேதி | - வேலூர் (N.A.) | : பிற்பகல் | 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா (கங்கா), 16, ஆஃபீஸர்ஸ் லைன், ✆ : 0416 / 23060. |
| 2-ந் தேதி | - காஞ்சிபுரம் | : மாலை | 5 to 6 ராஜம் லாட்ஜ், பஸ் நிலையம் அருகில் 9, காமராஜர் தெரு, ✆ : 04112 / 22519. |
| 1,3,10,17,18,19,20,27,28 ந்தேதி | - சென்னை | : காலை | 9 to 2 "மேலே உள்ள சென்னை முகவரியில், ✆ : 044 / 6424285, 6427638. |
| 4-ந் தேதி | - கடலூர் (S.A.Dt.) | : காலை | 9 to 11 ஆற்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல், ✆ : 04142 / 30707, 30717 |
| 4-ந் தேதி | - விழுப்புரம் | : பிற்பகல் | 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில், ✆ : 04146 / 22962 |
| 4-ந் தேதி | - திருவண்ணாமலை | : மாலை | 5 to 6 ராதா லாட்ஜ் (பஸ் நிலையம் எதிரில்) ✆ : 04175 / 22536. |
| 9-ந் தேதி | - பெங்களூர் | : காலை | 11 to 12.30 ஹோட்டல் பிரசிடேன்சி, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பே கவுடா ரோட் ✆ : 2264374 |
| 9-ந் தேதி | - ஓசூர் | : மாலை | 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட், ✆ : 04344 / 22899. |
| 12-ந் தேதி | - சேலம் | : காலை | 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில், ✆ : 0427 / 448333. |
| 12-ந் தேதி | - ஈரோடு | : மாலை | 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்ஃபோர்டு, பஸ் நிலையம் எதிரில், ✆:0424 / 226611 / 12 / 13 / 14/15/16/17/18 |
| 13-ந் தேதி | - கோயம்புத்தூர் | : காலை | 9.30 to 12.30 சேரன் பேலஸ் லாட்ஜ் (சாந்தி தியேட்டர் பின்புறம்) ✆ : 0422 / 302211, 302220 |
| 14-ந் தேதி | - மதுரை | : காலை | 9 to 11 ஹோட்டல் கிராண்ட்ஸ் சென்ட்ரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு, ✆ : 0452 / 743941 |
| 14-ந் தேதி | - தஞ்சாவூர் | : மாலை | 5 to 6 அசோகா லாட்ஜ், ✆ : 04362 / 30021 / 30022 |
| 15-ந் தேதி | - திருச்சி | : காலை | 9 to 11 ஹோட்டல் ஆனந்த், (சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில்), ✆ : 0431 / 460545. |
| 15-ந் தேதி | - நாமக்கல் | : பிற்பகல் | 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, ✆ : 04286 / 20433 |
| 22-ந் தேதி | - தர்மபுரி | : காலை | 9 to 10 ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், ✆: 04342 / 60226. |
| 22-ந் தேதி | - திருப்பூர் | : பிற்பகல் | 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ், ✆ : 0421 / [illegible]418. |
| 22-ந் தேதி | - உடுமலைபேட்டை | : மாலை | 6 to 7 குறிஞ்சி லாட்ஜ், (பஸ் நிலையம் எதிரில்) ✆ : 04252 / 24353. |
| 23-ந் தேதி | - திண்டுக்கல் | : காலை | 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, (பஸ் நிலையம் பின்புறம்) ✆:27017. |
| 23-ந் தேதி | - தூத்துக்குடி | : மாலை | 5 to 6 ஹோட்டல் ஆஃவின், தேவர் புரம் ரோடு, ✆ : 0461 / 327760 |
| 24-ந் தேதி | - திருநெல்வேலி | : காலை | 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சித்தாபதி, மதுரை ரோடு, ✆ : 0462 / 333312. |
| 24-ந் தேதி | - நாகர்கோவில் | : பிற்பகல் | 2 to 3 ஹோட்டல் சரண்யா, மீனாட்சிபுரம், ✆: 04652 / 25689. |
| 25-ந் தேதி | - விருதுநகர் - | : காலை | 9 to 10 அண்டன் லாட்ஜ், மதுரை ரோடு, ✆ : 04562 / 45537. |
| 25-ந் தேதி | - கரூர் | : பிற்பகல் | 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ், ஜவஹர் பஜார், ✆ : 63763. |




தகவல் : டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 23 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு M.O. அல்லது D.D. அனுப்பவும்.

7-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589

டிரான்ஸ்பரண்ட் பிளாஸ்டிக் டம்ளர்கள் அடிப்பாகம் உடைந்து விட்டால் அதை பல்ப் ஷேட் ஆக செய்து கொண்டால் சிக்கனமாகவும், அதிக பிரகாசமாகவும், (புதிய டிசைன்கள்) அழகாகவும் அமையும். எங்கள் வீட்டு வாசலில் மாட்டி இருப்பதை அக்கம், பக்கத்தார் பாராட்டுகிறார்கள்.

– ராஜன் ராமன்



பாராட்டும் போதும். கிளம்பு."

பிரபா பாவம் அழுது விட்டாள். அவளது அழுகையைப் பார்த்து பொறுக்காமல் கெஞ்சும் பார்வையாய் மாப்பிள்ளையைப் பார்த்தாள் பிரபாவின் தாய்.

"மாப்பிள்ளை... நீங்கள் தப்பாய்..."

"போதும். புது மாப்பிள்ளை வந்தாச்சு... இனி எனக்கு எங்கே மரியாதை இங்கு... ஏய்... ஏன் மசமசன்னு நிற்கிறே.. புறப்படு..."

வயிற்றுப் பிள்ளைக்காரி அழுது கொண்டே புறப்பட்டாள். புறப்படும் முன் மகளுக்குத் தாய் வைத்துத் தந்த வெற்றிலை, பாக்கு, தேங்காய், ரவிக்கைத் துணியை அங்கேயே விட்டு வரும்படி கணவனின் உத்தரவில் வேதனை பொங்க அவனைப் பின் தொடர்ந்தாள்.

சிவா செய்தது அவன் தாய்க்குப் பிடிக்கவில்லை. மனிதர் என்ன சொன்னார்னு தாம் தூம்னு குதித்து விட்டு வந்திருக்கிறான். இரண்டு பெண்களின் பிரசவமும் ஒரே நேரத்தில் வந்து விட்டதால் பணம் கேட்டிருக்கிறார்... அவ்வளவுதானே... மனதிருந்தால் கொடுக்கலாம். இல்லையென்றால் மரியாதையுடன் ஒதுங்கியிருக்கலாம். பாவம்... உள்ளேயே இந்தப் பெண் உருகிக் குலைகிறாள்.

அதெல்லாம் போகட்டும். பிரசவம் என்றால் சாதாரண விஷயமா? ஆஸ்பத்திரியில் ஒருத்தர் வேணும். அதுவும் பெண் துணையாக இருக்க வேண்டும். வீட்டில் சமாளிக்க ஒரு பெண் இருக்கணும். இங்கு யார் இருக்கிறார்கள் வயதான தான் ஒருத்தி எங்கு என்று அல்லாட முடியும்?

அதற்குப் பிறகு? இரண்டு மாதமாவது குழந்தை பெத்த பச்சை உடம்பை சரியாய்க் கவனிக்க வேண்டும். வேளா வேளைக்குப் பிரசவ லேகியம் கிளறித் தரணும். பத்தியமாய் சமைத்துப் பார்த்துப் பரிமாறணும். தாயையும் குழந்தையையும் நான் விட்டு நான் என்னெய்க் காய்ச்சி குளிப்பாட்டி சாம்பிராணி புகை போட்டு... அம்மாடி.... நினைப்பிலேயே முதுகுத் தண்டு 'விண்' என்கிறதே... முடிகின்ற காரியமா?

அங்கு பிரபா வீட்டில், அவளோட தாய் இன்னும் திடகாத்திரமாய் இருக்கிறாள். அருகில் இருந்து கவனித்துக் கொள்ள அக்கா... தங்கைன்னு இருக்கிறார்கள். இத்தனையும் உதறி விட்டு இவன் மூர்க்கமாய்... முன் யோசனை இல்லாமல் ச்சே... இப்போ புலம்பி என்ன பிரயோசனம்?

பரக்க பரக்க ஓடி வந்தாள் நர்ஸ். பரபரப்புடன் எழுந்து நின்றார்கள் இருவரும்.

"என்ன விஷயம் சிஸ்டர்?"

"டாக்டருக்கு ஃபோன் பண்ணி அழைக்கணும். குழந்தை கொடி சுற்றிக் கொண்டு இசகுபிசகு ஆகி விட்டது. தாமதமானால் இரு உயிருக்கும் ஆபத்து..." ஓடினாள்.

"பெருமாளே... வெங்கடாஜலபதி... தாயையும் குழந்தையையும் பிழைக்க வைப்பா. சோதனை செய்யாதே சுவாமி.. மலைக்கு அழைத்துக் கொண்டு வருகிறேன். காணிக்கை போடுகிறேன்" என்று பிரார்த்தனை செய்ய ஆரம்பித்து விட்டாள் தாய்.

பிள்ளையின் நிலையோ சொல்லவே வேண்டாம். வெலவெலத்துப் போனான். ஏதாவது ஆகிவிட்டால்... பிரபாவின் தந்தை தன்னை வார்த்தைகளால் கிழித்து விடுவாரே...

இதென்ன சோதனையாய்.. பெரியதாக மார்தட்டிக் கொண்டு பேசினாயே.. எந்த முகத்துடன் அவரைப் பார்ப்பது.. தன்னையே கடிந்து கொண்டான். ச்சே.. தான் அப்படி முரட்டுப் பிடிவாதம் பிடித்திருக்கக் கூடாது.

பாவம் அந்த மனுஷர்.. அப்பவும் பிரபாவுக்கு ஒன்பது மாதம் போது வெட்கத்தை விட்டு மனைவியுடன் வந்து பெண்ணை

அழைத்துப் போக வந்தாரே... நிர்தாட்சண்யமாய் மறுத்து விட்டு... இப்போது...

கையைப் பிசைந்து நின்ற போது டாக்டர் விரைந்து வந்தார்.

"டாக்டர்... என் மனைவியை..."

லேடி டாக்டர் புன்னகையால் தைரியம் தந்து சென்றாலும் மனம் படபடத்துக் கொண்டுதான் இருந்தது.

பத்து நிமிடம் கழித்து டாக்டர் வெளியே வந்தார்.

"மிஸ்டர் சிவராம்... ஆபரேஷன் செய்துதான் குழந்தையை எடுக்கணும். வேறு வழியில்லை. குழந்தை பிழைக்கும்னு உறுதியாய் சொல்ல முடியாது. தொப்புள் கொடி குழந்தையின் கழுத்தைச் சுற்றி இறுக்கிக் கொண்டிருக்கிறது. அதனால் குழந்தையின் சுவாசம் திணறி.. நாடி குறைந்து வருகிறது... ஃபாரத்தில் கையெழுத்து போடணும் நீங்க..."

நடுங்கிக் கொண்டே போட்டான். 'குதித் தாயே... நல்லா வேண்டும் உனக்கு' என்று அந்த சமயம் பார்த்து மனம் குத்திக் காட்டியது. ஆபரேஷன் வரை போகும் என்று அவன் நினைத்தும் பார்க்கவில்லை. முதல் பிரசவம் சுகப்பிரசவம்தான்.

இது தன்னை சோதிக்கவே கடவுள் செய்திருக்க வேண்டும். நினைப்பு கூட நாக்கு வறண்டு போனது.

பக்கத்தில் அவனுடைய தாய் கண்களை மூடிக் கொண்டு ஏதோ சுலோகத்தை உருப் போடுவது தெரிந்தது. பாவம்... அம்மாவும் தான் ஆடிப் போயிருக்கிறாள்.

காக்கையாய் அவன் புலம்பித் தீர்த்தாளே... காதில் போட்டுக் கொள்ளாமல் போனது வெறும் பிழை.

நேரம் நழுவிக் கொண்டு இருந்தது. டாக்டர் வந்தார். "மிஸ்டர் சிவராம்... பெண் குழந்தை... குழந்தையை இப்போ காட்ட முடியாது. ஸ்பெஷல் கண்காணிப்பில் வைத்திருக்கிறோம். நார்மலுக்கு வந்தவுடன்தான் காட்ட முடியும்."

"டாக்டர்... என்னோட வைஃப்"

"டோன்ட் வொர்ரி.. ஷி இஸ் ஃபைன்... போதுமா..."

மனம் நிம்மதியடைந்தது.

"வெங்கட் ரமணா... உன் கருணையே கருணை..." தாயின் குரல் கேட்டு சிலிர்த்துப் போனான். உண்மை... கடவுள் கருணை மிக்கவர்தான். ஆயாசத்துடன் படுத்திருந்த மனைவியைப் பார்த்து புன்னகைத்தான். நார்மலுக்கு வந்த தன் மகளைப் பார்த்து பூரித்துப் போனான். பிரசவம் என்பது சாதாரண விஷயமல்ல... பெண்ணிற்கு அது மறுபிறவி என்பதை அந்தக் கணத்தில் உணர்ந்து கொண்டான்.

இதோ தன் மகளும் வளருவாள். மணமாகி தாய்மையடைந்து இதே போல மறுபிறவி எடுப்பாள். வயிற்றுள் ஏதோ புரண்டது.

பெண்ணைப் பெற்றவர் நிலையை அப்போதுதான் நிதர்சனமாய் உணர்ந்து கொண்டான். மறுபிறவி என்ற குழந்தை பேற்றிற்கு எத்தனை பணம் கொடுத்தாலும் கணக்காகாதே. குழந்தை பெற்று எடுக்கும் போது செத்துப் பிழைக்கும் ஒரு தாய்க்கு முன் எத்தனை கோடி பணமும் ஈடாகாது. அது சர்வ நிச்சயம்!

மாமனாருக்கு தகவல் அனுப்பக் கூடாது என்ற எண்ணத்தை மறந்து, இனிப்பை நிறைய வாங்கிக் கொண்டு... இனிப்பான செய்தியை நேரில் சொல்ல... நெஞ்சு முழுக்க இனிப்புடன் விரைந்தான் பெண் குழந்தைக்குத் தந்தையாகி விட்ட சிவா.

## ஜிகினாப் பொடி ஓவியம்

ஒரு அட்டை மீது கருப்பு அல்லது வேறு டார்க் கலர் துணியை ஒட்டிக் காய விடவும். மஞ்சள் நிற கார்பன் பேப்பர் வைத்து தேவையான டிசைனை வரையவும். வரைந்த டிசைன் மீது ஃபெவிகாலை அளவாகப் பூசி பத்து நிமிடங்கள் விடவும். பிறகு ஜிகினாப் பொடியை கோலமாவைத் தூவுவது போல ஃபெவிகால் மீது தூவிக் காய விடவும். காய்ந்த பிறகு தட்டி விட்டால் அதிகப் படியான ஜிகினாப்பொடி உதிர்த்து விடும். கொலு வில் வையுங்கள்.

– உஷா



**இளம் வயதினர் தாங்கள் அழகுடன், வசீகரமாக இருக்க நினைப்பார்கள்; மிகவும் சுறுசுறுப்பாக சோர்வின்றி படிப்பிலும், பணியிலும் கவனம் செலுத்தும் போது நாம் மற்றவர்களுக்கு அழகாக இருக்க வேண்டும் என்று எண்ணுவார்கள். ஆரோக்கியத்திலும் கவனம் கொள்வார்கள்.**

**டீன் ஏஜ் பிராப்ளம் பற்றி சவேரா ஹோட்டலில் நடந்த விழாவின் போது பிரபல ஹோமியோபதி மருத்துவ நிபுணர் டாக்டர் ஆர். ஞானசம்பந்தத்தை ஆனந்த் பிரீதா சந்தித்து உரையாடினார்கள்.**



# இளவயது பிரச்னைகளுக்கு...

**ஆனந்த் :** அங்கிள்! டீன் ஏஜில அதிகமா வர்ற முகப்பரு, முடிப் பிரச்னைக்கெல்லாம் உங்க சிஸ்டத்லே மருந்து இருக்கா?

**டாக்டர் :** ஹோமியோபதி மருத்துவம் பொதுவா தோல் வியாதி எல்லாத்துக்கும் சிறந்த பலனைத் தரும். முகப்பரு, முடிப் பிரச்னைக்கு நல்ல சிகிச்சை இருக்கு.

**ப்ரீதா :** ஹேர் ஆயில், ஆயின்மெண்ட் தருவீங்களா?

**டாக்டர் :** ஹேர் ஆயில், ஆயின்மெண்டுக்கு ரொம்ப முக்கியத்துவம் தர மாட்டோம். உள்ளே சாப்பிடற மருந்துனாலே தான் குணம் கிடைக்கும்.

**ஆனந்த் :** முகத்துல பரு வர்றதுக்குக் காரணம் என்ன? சோப்பு, பவுடர் ஒத்துக்காம அலெர்ஜியினால வருமா?

**டாக்டர் :** நிச்சயமா அலர்ஜியினால வர்றது இல்லை. அலெர்ஜியா இருந்தா தடிப்பு தடிப்பா சிவந்து போய் அரிப்பு இருக்கும். ஆனா பரு வராது. முகப்பரு வர்றதுக்கு முகத்துலே உள்ள எண்ணெய் சுரப்பி அதிகமா வேலை செய்து அடைபடுவதுதான் காரணம். கிள்ளி விடுறது, தடவிக்கிட்டே இருக்கறதுனாலே 'இன்பெக்ஷன்' ஆகி சீழ் கட்டி மாதிரி ஆயிடும். அதைக் கையிலே பிதுக்கி விட்டா குழி குழியாகி முகத்தை விகாரமாக்கி விடும். முகப்பரு வர்றதுக்கு அடிப்படைக் காரணமே ஹார்மோன்கள்தான். இதை மருந்துனாலே சீராக்கணும். அப்பதான் பரு மறுபடியும் வராது. முகப்பரு முகத்துலே மட்டும்தான் வரும் என்று நினைக்கக் கூடாது. மேல் கை முதுகு, கழுத்து, நெஞ்சுலே கூட வரலாம்.

**பிரீதா :** 'மென்ஸஸ்' டைம்லே பரு அதிகமா வர்றதுக்கு என்ன காரணம்? டயட் இருக்கணுமா?

**டாக்டர் :** அந்த டைம்லே "ஹார்மோனல் இம்பேலன்ஸ்' இருக்கறதுனாலே வருது. மலச்சிக்கல் இருந்தாக் கூட வரும். காய்கறிகள், பழங்களை நெறைய சேத்துக்கணும். எண்ணெய் பதார்த்தங்கள், ஸ்வீட், சாக்லேட், ஐஸ்கிரீம், மீன், முட்டை, மாமிசம் சாப்பிடக் கூடாது.

**ஆனந்த் :** முகப்பரு ஒருசிலருக்கு 30 வயசுக்கு மேலே கூட இருக்குதே? இது ஏன்?

**டாக்டர் :** பொதுவா முகப்பரு 13 - 14 வயசுலே பருவமடையறப்ப வரும். அப்புறம் படிப்படியா கொறைஞ்சிடும். "செக்ஸ் ஹார்மோன்" இயக்கத்தில் தொடர்ந்து இம்பேலன்ஸ் இருந்தா 32 வயது வரை கூட நீடிக்கலாம். சிகிச்சை எடுத்தா சரியாயிடும்.

**ப்ரீதா :** சில பேருக்கு முகத்துலே கட்டி



தயிர் வெங்காயம் அழகாய் வர, வெங்காயத்தை நீளவாக்கில் நறுக்கி பிறகு சிப்ஸ் துருவலில் துருவினால் மிக மெல்லியதாய் விழும். பெங்களூர் தக்காளியிலும் இப்படிச் செய்யலாம்.

- கே. ஐசுவர்யா.



கட்டியா வந்திடுது. சிலருக்குப் பள்ளம் பள்ளமா இருக்கு. பளிச்சுன்னு இருக்க வேண்டிய முகம் முகப்பருனாலே அசிங்க மாயிடுது. இதைத் தடுக்க முடியாதா?

**டாக்டர்** : முகப்பரு பருவ வயசுலே தோன்றி மறைஞ்சிடும். வியர்க்குரு மாதிரி வந்தா முகத்தை விகாரமாக்காது. சீழ்கட்டி யுடன் இருந்தா சிகிச்சை எடுத்துக்கணும். அப்பத்தான் Scar, Kelaid கட்டி போன்ற காம்ப்ளிகேஷன் வராம தடுக்க முடியும். ஹோமியோபதி மருத்துவத்தின் மூலம் உள்ளே சாப்பிடும் மருந்துனாலே ஹார்மோன் இயக் கத்தை சீராக்க முடியும். முகப்பரு மறைஞ் சிடும். களிம்பை அட்வைஸ் பண்றதில்லை. பசையுள்ள களிம்பு போட்டா எண்ணெய் சுரப்பி நுனி அடைக்கப்பட்டு மறுபடியும் வந்திடும். அப்போதைக்கு மட்டும் குணம் கிடைக்கற மாதிரி இருக்கும். மறுபடியும் வந்திடும். முகப்பரு மூணு நாலு மாசத்துலே நல்லா குணமாக்கலாம். முகத்தை சோப்புப் போட்டு மூணு நாலு முறை கழுவணும். பவுடர் போடணும். பசையுள்ள காஸ் மெடிக்ஸ் போடக் கூடாது.

**ஆனந்த்** : முகப்பரு சரியானாலும் கருப்பு கருப்பா புள்ளி இருக்கே. இதை ஒண்ணும் செய்ய முடியாதா?

**டாக்டர்** : முகப்பரு வந்தா கருப்புப் புள்ளி விழும். நாளடைவிலே மறைஞ்சிடும். Berberis Aquifolium Ointment ஹோமியோ பதியிலே இருக்கு. விரைவா குணம் கொடுக் கும்.

**ப்ரீதா** : அங்கிள்! எங்க வயசுக்கு முடி ரொம்ப நல்லா இருக்கணும்ன்னு நினைக் கிறோம். பிரண்ட்ஸ் சிலருக்கு முடி ரொம்ப கொட்டுதுன்னு சொல்றாங்க. தண்ணி சேராம முடி கொட்டுதா? இல்ல விட்டமின்ஸ் குறைவினாலயா?

**டாக்டர்** : முடி கொட்டறதுக்குக் கார ணம் இருக்கு! நல்லா ஆரோக்கியமா இருக் கணும்ன்னா மயிர்க்கால் நல்லா இருக்கணும். நம்ம உபயோகிக்கிற ஷாம்பூ, ஆயில், உப்புத் தண்ணி மயிர்க்காலை பாதிச்சு முடியை கொட்ட வைக்கலாம். பொடுகு, பேன் இருந் தாக் கூட முடியைக் கொட்ட வைக்கும். கால்சியம், விட்டமின்ஸ் குறைவினாலேயும் முடி கொட்டும். பொதுவா உடம்புக்கு சரியில் லாம படுத்தா முடி கொட்றது இருக்கும். டைபாய்டு, ஜாண்டிஸ்னாலே முடி கொட்டி வழுக்கையே ஏற்பட்டு இருக்குது. ஹார் மோனல் இம்பேலன்ஸ்னாலேதான் பெரும் பாலும் முடி கொட்ட ஆரம்பிக்குது? இள வயசுலேயே வழுக்கை வரக் காரணமா இருக் குது. டென்ஷனாலே கூட முடி கொட்டும்.

**ஆனந்த்** : என் ப்ரண்ட்ஸ் சிலருக்கு தலை யின் முன் பகுதியிலேயே முடி கொறைஞ்சு வழுக்கை ஆயிடுச்சு. இது பரம்பரையா வருமா? இல்ல ஹார்மோன்ஸ் சரியில்லாம வருமா?

**டாக்டர்** : ஹார்மோனல் இம்பேலன்ஸ் தான். இது பரம்பரையாவும் வரும். இது Androgenic Alopecia ன்னு பேரு. தலையிலே நெற்றியின் முன்பகுதி அல்லது உச்சி பகுதிலே முடி கொறைஞ்சு, தின்னாகி, நீளம் கொறைஞ் சிக்கிட்டே வரும். அப்புறம் வழுக்கை விழ ஆரம்பிச்சிடும். இதை முன்கூட்டியே சிகிச்சை பெற்றா தடுத்து நிறுத்தலாம். Feeble Hair வர சான்ஸ் இருக்கு!

**ப்ரீதா** : சில லேடீஸ்க்கு முழுசா வழுக் கையே வந்திடுதே! சிலருக்குத் தலையிலே சொட்டை சொட்டையா வந்து ஏதோ பங்கஸ்னாலே வருதுன்னு சொல்றாங்க.

**டாக்டர்** : தைராய்டு பிராப்ளம் இருந்தா முடி கொட்டி அடர்த்தி கொறைய ஆரம்பிக் கும். டைபாய்டு ஜான்டிஸ்னாலே தலை வழுக்கை கூட ஆகலாம். புழுவெட்டு இருந்தா அங்கங்க சொட்டை விழும். அப்புறம் சுத்தமா முடியே போயிடும். மற்றும் வழுக்கை வந்து தாமதமாகும். இவற்றை என் மருத்துவ அனு பவத்திலே முழுமையா சரிபண்ணி இருக் கிறேன். சென்னை இராயப்பேட்டை ஹேம மாலினி கல்யாண மண்டபம் எதிரிலுள்ள

என் கிளினிக்கில் (தொ - 822 33 88) நிறைய வெற்றிகரமாக சரிசெய்திருக்கிறேன்.

**ஆனந்த்** : சின்ன வயசிலேயே நரை வரக் காரணம் என்ன? டை அடிக்கலாமா? அதனாலே பிரச்னை ஒன்னும் வராதா?

**டாக்டர்** : சின்ன வயசுலே Premature Gray Hair வரக் காரணம் பரம்பரை அல்லது ஹார்மோனல் இம்பேலன்ஸ்! உடம்புக்குத் தகுந்த கான்ஸ்டிடூஷனல் ட்ரீட்மெண்ட் 20 வயசுக்குள்ளே இருப்பவங்களுக்கு பயன் அளிக்குது. டை அடிக்கிறதுனாலே பிரச்னை ஒண்ணும் இல்லை. கூந்தலின் ஒரு பகுதி புரோட்டீனாலே ஆனது. சாயம் பூசறதுனாலே கெடுதல் இல்லை. அலர்ஜி இல்லாம பார்த்துக்கணும். மயிர்க்கால் பாதிக்காம முடி கொட்டாம பாத்துக்கணும்.

**ப்ரீதா** : பொடுகு ஏன் வருது? ஷாம்பு போட்டு குளிச்சா இரண்டு நாளைக்கு நல்லா இருக்குது. மறுபடியும் வந்திருது. இதுக்கு நிரந்தரத் தீர்வு இல்லையா?

**டாக்டர்** : பொடுகு வரக் காரணம் தலையிலே இருக்கற எண்ணெய் சுரப்பிகள் அதிகமா வேலை செய்து எண்ணெய்ப் பசையை சுரக்கறதுதான். வெயில்லே காய்ஞ்சு பொடுகா மாறுது. அதோடு வியர்வை சேர்ந்தா உப்புத் தன்மையிலே அரிப்பைக் கொடுக்குது. சொறிய சொறிய செதில் செதிலா வரும். சோரியாஸிஸ் நோய்ன்னு கூட பயந்துடுவாங்க. ஷாம்பு வாஷ் ஒரு தற்காலிக ட்ரீட்மெண்ட். பர்மனன்ட் க்யூர் உள்ளே சாப்பிடற ஹோமியோபதி மருந்துலே இருக்கு!

**ஆனந்த்** : முடி கொட்டறதை நிறுத்த முடியுமா? நல்லா வளர வைக்க முடியுமா?

**டாக்டர்** : பொதுவா ஹேர்-ஆயில் போட்டாலே போதும்.' நல்லா வளரும்ன்னு நினைக்கறாங்க. முடி கொட்டறதை ஹோமியோபதி மருந்துலே நல்லா குணமாக்கலாம். முடியின் ஆரோக்கியம் மயிர்க்கால் தன்மையை வச்சுத்தான் இருக்குது. அதைப் பலப்படுத்த சொட்டு மருந்துகள், மாத்திரைகள் ஹோமியோபதியிலே இருக்கு. வளர்ச்சியையும் கூட்ட முடியும். ஆச்சரியப்படும்படி சில வழுக்கை கூட குணமாகும்.

**ப்ரீதா** : அங்கிள்! சில கேர்ல்ஸ்க்கு மீசை தாடி வரக் காரணம் என்ன?

**டாக்டர்** : ஆண்களுக்கு இருக்கற மாதிரி லேடீஸ்க்கும் Testosteroneசுற ஹார்மோன் இருக்கும். ஓவரியில நீர் கட்டி Poly Cystic Ova-

## சிறுமிகளைக் கொண்டாடுதல் விசேஷம்!

**பெண் குழந்தையை வெறுக்கிறார்கள் இக்காலத்தில். ஆனால் பெண்குழந்தைகளின் அருமைகளைப் போற்றி அவர்களைப் பூஜிக்கவே சொல்கிறது நவராத்திரி. ஒவ்வொரு நாளும் இரண்டு வயதுப் பெண் குழந்தை முதல் முறையே பத்து வயதுக் குழந்தைவரை கன்னிகாப் பெண்களுக்கு குமாரி பூஜை அவசியம் செய்ய வேண்டும். இந்த பூஜையின் பயனை ஆதிசேஷனாலும் அளவிட்டுக் கூற முடியாது என புராண நூல்கள் போதிக்கின்றன.**

| நாள் | வயது | பெயர் | பயன் |
|---|---|---|---|
| 1 | 2 | குமாரிகா | தரித்ரநாசம் |
| 2 | 3 | திரிமூர்த்தி | தனதான்ய வளம் |
| 3 | 4 | கல்யாணி | பகை ஒழிதல் |
| 4 | 5 | ரோகிணி | கல்வி வளர்ச்சி |
| 5 | 6 | காளிகா | துன்பம் நீங்குதல் |
| 6 | 7 | சண்டிகா | செல்வ வளர்ச்சி |
| 7 | 8 | ஸாம்பவி | க்ஷேமவிருத்தி |
| 8 | 9 | துர்க்கா | பயம் நீங்குதல் |
| 9 | 10 | ஸுபத்ரா | ஸர்வமங்களம் உண்டாகுதல் |



**பின்குறிப்பு:** இந்த விதிப்படி கன்னிப் பெண்களை பூஜித்து அவர்களுக்குப் பாவாடை சட்டை மஞ்சள் குங்குமம் அவர்கள் விளையாடும் எந்தப் பொருளையும் வாங்கிக் கொடுத்து மகிழலாம். நமக்கு ஸர்வ மங்களமும் உண்டாகும்.

– ஜே. காமாக்ஷி ஜெயராமன்

**வரும் நாளெல்லாம் பண்டிகை நாட்கள். மாவிலைத் தோரணம் கட்ட இலைகளை மடித்து கயிற்றில் கட்டுவது கஷ்டமாக இருக்கும். கயிற்றில் இலைகளை மடித்து ஸ்டேப்ளர் பின் கொண்டு டக், டக் என பின் செய்தால் நொடியில் ரெடி. அவிழ்ந்தும் விழாது.**

**– ஆர். ராஜலட்சுமி**

ries இருந்தா ஹார்மோன் அதிகமாகி மீசை தாடி வளர ஆரம்பிச்சுடும். கை கால்லே கூட ரோமம் வளரும். குரல் கூட சேஞ்ச் ஆகலாம். இட்டு தாறுமாறா படும். இதுக்கு ரொம்ப நல்ல ட்ரீட்மெண்ட் இருக்கு ஹோமியோபதியிலே. மீசை தாடி வளர்ச்சியை சரிபண்ணலாம்.

**ஆனந்த் :** அங்கிள்! சில ப்ரண்ட்ஸ் மீசை தாடி நல்லா வளரலைன்னு வருத்தப்பட றாங்க. இதுக்கு மெடிசன்ஸ் இருக்கா?

**டாக்டர் :** பசங்களுக்கு டெஸ்டோஸ்டிரான் ஹார்மோன் குறைவா இருந்தா மீசை தாடி வளர்ச்சி இருக்காது. விதைப்பை, பிட்யூட்டரி கிளாண்டுலே கோளாறு இருக்கலாம். காரணத்தை அறிந்து சிகிச்சை எடுத்துக்கிட்டா குணமாகும்.

**ப்ரீதா :** டீன் ஏஜ்லே Periods Pain ஒரு பெரிய ப்ராப்ளம். மாச மாசம் மாத்திரை போட தயாரா இருக்க வேண்டி இருக்கு! இதைத் தடுக்க முடியாதா?

**டாக்டர் :** டீன் ஏஜ்லே கேர்ல்ஸ்க்கு Spasmodic Dysmenorrhoea வரும். இதுக்குக் காரணம் கருப்பை வளர்ச்சியில்லாம இருக்கலாம். கருப்பை நுனி சிறுத்து உதிரப் போக்கை தடை பண்ணலாம். ஹார்மோன்ல் இம்பேலன்ஸ் னாலே கருப்பையின் உட்சுவர் நல்லா சிதையாம வலி ஏற்படலாம். வலி இருந்தா தாங்க முடியாதபடி அடிவயிற்றை பிசைஞ்சு எடுக்கற மாதிரி வலி வரும். இட்டு நல்லா பட ஆரம்பிச்சவுடன் வலி நின்னுரும். சிலருக்கு மயக்கம், வாந்தி வர்றது உண்டு. ஹோமியோபதி மருந்துனாலே இந்த குறைக்கு முற்றுப் புள்ளி வைக்கலாம். Periods Irregular ஆக இருந்தாலும் சரியாயிரும். மாச மாசம் ஊசி மாத்திரையென்றும் அவதிப்பட தேவையில்லை.

**ஆனந்த் :** எங்க வயசுலே எல்லாரும் நல்லா ட்ரிம் ஆக இருக்கணும்ன்னு எல்லோரும் விரும்பறோம். ஒருசிலர் ரொம்ப ஒல்லியா இருக்காங்க. சிலர் அதிக வெயிட் போட்றாங்க. இதுக்கு உங்க சிஸ்டத்திலே என்ன ஆலோசனை?

**டாக்டர் :** வயசுக்கேற்ற உயரம், எடை இருக்கணும். ஒல்லியா இருந்தா என்ன கோளாறுன்னு கண்டுபிடிக்கணும். பசி எடுக்கறதுல கோளாறு, செரிமான கோளாறு, ஹார்மோன் ப்ராப்ளம் எல்லாத்தையும் கருத்தில் கொண்டு குறையை அறிஞ்சு சிகிச்சை அளிக்கணும். பெண்ணுங்க Slim & Trim ஆக இருக்கணும்ன்னு நினைப்பாங்க. அதிக வெயிட் பெரும்பாலும் தைராய்டு பிராப்ளம் இருந்தா வரும். அப்புறம் பரம்பரை, ஓவர் வெயிட்! Fat Metabolism சரியாக்கணும். இதுக்கு நல்ல சிகிச்சை "கான்டியூஷன் அடிப்படையிலே இருக்கு. சீராக்கலாம். உடற்பயிற்சி கட்டாயம் தேவை. அப்பதான் பார்க்க வாளிப்பா அழகா தோற்றமளிக்க முடியும். ஆரோக்கியமாகவும் இருக்கலாம்.

**ப்ரீதா :** ஹோமியோபதி மருந்து ஒரே மாதிரி இருக்குதுன்னு சொல்றாங்க. இது ஏன் அப்படி? இங்கிலீஷ் மருந்து மாதிரி இல்லியா?

**டாக்டர் :** நெறைய இப்படிக் கேட்டிருக்காங்க. மெடிசன்ஸ் ஆல்கஹால் பேஸ்லே இருக்கும். நாங்க அதை உருண்டை மாத்திரையிலே டிஸ்பென்ஸ் தர்றதுலே ஒரே மாதிரி தோணுது. ஆனா வேறு வேறு மருந்துகள், Potency யும் மாறி மாறி 30, 200 1 எம்ன்னு தருவோம். டிஸ்பென்ஸிங் மட்டும்தான் பண்ணித் தர்றோம். மருந்துகளை சித்த மருத்துவத்திலே செய்யற மாதிரி தயாரிக்கிறது இல்லை. மருந்து கம்பெனி இந்தியாவிலே நெறைய இருக்குது. வெளிநாட்டு மருந்து கூட சர்வசாதாரணமா கிடைக்குது. பெரும்பாலும் பவுடர், உருண்டை மாத்திரை, மாத்திரை, சொட்டு மருந்துகளை பயன்படுத்தும் இங்கிலீஸ் மருந்து மாதிரி டானிக், ஒரு சில மாத்திரை வேணும்னா கிடைக்கும்.

# குழந்தை இல்லையா?

## மாதவிடாய் கோளாறா?

### வரவும் - நிறுத்தவும் தொடர்ந்து மாத்திரைகளா?

திருமணம் ஆகி குழந்தை இல்லாத பல பெண்களும், 13-14 வயதில் பருவம் அடைந்ததிலிருந்தே பல இளம்பெண்களும் மாதவிடாய் வரவும், நிறுத்தவும் கூட தொடர்ந்து 5 நாள்/21 நாள் ஹார்மோன் மாத்திரைகளை சாப்பிட்டுக் கொண்டே வருகிறார்கள். இன்னும் கருக்கோளக் கட்டிகள் (Ovarian Cysts- PCOD), கருக்குழாயில் நீரடைப்பு சதையடைப்பு (F. Tube Block), முட்டையே (Follicle) தானாக உருவாகாத பெரும் சிக்கல், கருப்பை பலவீனம், வீக்கம், தொடர்ந்து கருச்சிதைவு (Missed Abortion), கருப்பை புண்கள்/ வெள்ளைபடுதல் கடுமையான வயிற்று வலி (Endometriosis, Cervicitis, Hyperplacia) மற்றும் கட்டிகளான, கறுப்பான தாறுமாறான ரத்தப் போக்கு போன்ற பல காரணங்கள் குழந்தை பேறுக்கு தடையாக உள்ளன.

### ஆண் உயிரணு குறைபாடுகள்

ஆண்களின் குறைபாடுகளில் மிகவும் சிக்கலானதும் பிறரிடம் உயிரணு பெறுதல் அல்லது தத்து எடுத்தல் இரண்டு மட்டுமே தீர்வு என்று கருதப்படும் இந்த கோளாறுக்கு (35 வயது வரை) சிகிச்சை எம்மிடம் உண்டு. 5-6 மில்லியன் உள்ளவர்கள் பலர் பல மாத்திரை, ஊசி மருந்து எடுத்தும் தற்காலிகமாக அதிகமாகி 3 மாதம் கழித்து சோதித்தால் முன் உள்ளதும் இல்லாமல் போனவர்களும் பலர் உண்டு. இக்குறைகளை எமது 180 ஆண்டு பாரம்பரை அனுபவம் பெற்ற குரு மருந்துகளால் சிகிச்சை செய்து குழந்தை பேறு அடைய உதவுகிறோம்.

### 40 வயதில் 15-20 நாள் நிற்காத இரத்தப் போக்கா? கருப்பை ஆபரேசன் வேண்டாம்!

40 வயது நெருங்கும் ஆயிரக்கணக்கான பெண்கள் 15-20 நாள் நிற்காத அதிகமான இரத்தப்போக்கு, இடுப்பு முறிவு போன்ற வலி, கால்கள் உளைச்சல், இரத்த சோகையினால் அவதிப்படுகிறார்கள். இவர்களுக்கு கருப்பை வீங்கி (Cysto Glandular Hyperplacia) இருப்பதும் உண்டு. ஆபரேசன் ஒன்றுதான் தீர்வு என்று கூறுவதுண்டு. ஆனால் எமது சிகிச்சையின் மூலம் இது பூரணமாக குணம் பெறலாம்.

### மார்பக கட்டி!

பெண்கள் மார்பகத்தில் குத்தல், வலியுடனோ வலி இல்லாமலோ ஒருவித கட்டி (Fibro Adenoma) வருவதுண்டு. இதற்கு நவீன மருத்துவத்தில் இதுவரை மருந்து இல்லை. பலமுறை ஆபரேஷன் செய்த பின்பும் கட்டி வளர்ந்ததால் பலர் எம்மிடம் சிகிச்சை பெறுகிறார்கள். பலர் ஆண்டுக் கணக்கில் வேறு மருந்து சாப்பிட்டும் குணமில்லை என்று வருகிறார்கள். எமது 4 மாத குரு மருந்து சிகிச்சையில் இது குணம் தெரிவதை காணலாம். பயத்துடன் நாட்களை கடத்த வேண்டாம்.

**எமது சிகிச்சையில் தும்மல், ஆஸ்துமா, சைனஸ் தலைவலி, மூலமுளை, பவுத்தரம், நீரடைப்பு, (Prostrate), கல்லடைப்பு Hepatitis தீராத நோய் அல்ல. பிடிவாதமான தோல் நோய்களுக்கும் சிலவகை புற்று நோய்களுக்கும் சிறப்பு மருத்துவம்.**

# தீராத இடுப்பு - கழுத்து - தோள் - மூட்டு வலி?

### "சிகிச்சைக்காக அமெரிக்கா போக இருந்தேன். ஆனால் இங்கேயே சுகம் கிடைத்து விட்டது!"



- திரு. மோகன், (வயது 45)
எண் 3, ரத்தினதாஸ் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை-33.

இவருக்கு சில ஆண்டுகளாக கழுத்து, தோள், மூட்டுகளில் கடும் வலி (Cervical Spondylitis), கைகளை உயர்த்த முடியாதபடி, தோள்களில் வலி, கழுத்து வலியினால் இரவு தூங்கவே முடிவதில்லை! பிரபலமான பல நவீன மருத்துவர்களிடமும், Traction மற்றும் பல வகை மருத்துவ சிகிச்சை செய்தும், கொஞ்சமும் குணமில்லை. "கழுத்து எலும்பு ஆபரேஷன்தான் செய்ய வேண்டும் என்று ஒரு பிரபல மருத்துவர் கூறிவிட்டார். அமெரிக்காவில் இருக்கும் என் சகோதரன் மூலம் அங்கு சிகிச்சைக்கும் ஏற்பாடு செய்துவிட்டேன். ஆனால் டாக்டர் எஸ். ஜெயராம் அவர்களின் சிகிச்சையில் இங்கேயே முழு குணம் கிடைத்துவிட்டது" என்கிறார் இவர்.

இதுபோல் கைவிடப்பட்ட பலர் குணம் பெற்று வருகிறார்கள். கழுத்து எலும்பில் C4 to C7 மற்றும் Lumbar Vertebrae-வின் குறிப்பாக இணைப்பு எலும்புகள் தேய்வு (Degenerative Changes), கழுத்து வலி (Cervical Spondylitis), இடுப்பு முறிவது போல் வலி (Lumbago), இடுப்பு முதல் தொடை, கால் நரம்புகள் இழுப்பது, குடைவது போன்ற வலி (Sciatica) மூட்டுகளில் வீக்கம், வலி, (Synovitis, Arthritis) கால்களில் மதமதப்பு, Toilet-ல் உட்கார்ந்து எழுவதில் மிகுந்த கஷ்டம், கைகளை உயர்த்த, கால்களை நீட்டி மடக்க முடியாமை, பாதங்களில் வீக்கம், இளம் வயதிலேயே கால்கள் செயலற்றுப் போவது போன்ற எலும்பு - நரம்பியல் வாத நோய்களுக்கு அபூர்வமான குருமருந்து சிகிச்சை அளிக்கிறோம். இவைகளுக்கெல்லாம் வெறும் வலி நிவாரண மாத்திரைகளை மட்டும் சாப்பிட்டுக் கொண்டு காலத்தை கடத்துவது தவறு. Physio-therapy / Plastry / Oil Massage சிகிச்சைகளில் ஓரளவே குணம் பெற்றவர்களும் எமது குரு மருந்து சிகிச்சையில் குணம் பெறமுடியும்.

**பெண் மருத்துவர் உண்டு.**



'சித்தர் சிரோமணி'

## Dr. S. JEYARAM,

M.D. (A.M.), M.A., M.A., (Regd.)

## நவோதயா சித்தர் மருத்துவமனை

20, ஆற்காடு ரோடு, கோடம்பாக்கம், சென்னை - 24.
(லிபர்டி பஸ் ஸ்டாப் / சேகர் எம்போரியம் அருகில்)
போன் : 044-4810752 / 044-4982258 (வீடு)

செப்டம்பர் 10-ந் தேதி, டாக்டரை மதுரை-1, ரயில் நிலையம் அருகில், காலேஜ் ஹவுஸில் சந்திக்கலாம்

செப்டம்பர் 11, 12-ந் தேதி, டாக்டரை திருச்சி-1, ஜங்ஷன் ரோடு, ஹோட்டல் அஜந்தாவில் சந்திக்க (9 a.m. - 4 p.m.) போன்: 415504.

செப்டம்பர் 18, 19-ந் தேதி, கோவை, R.S.புரம், 5, பெரியசாமி ரோடு (கிழக்கு), பிருந்தாவன லாட்ஜில் டாக்டரை சந்திக்கலாம். போன் : 454185 (9 a.m. - 4 p.m.)

செப்டம்பர் 20-ந் தேதி டாக்டரை ஈரோடு - 3, பஸ் ஸ்டாண்ட் அருகில், ஹோட்டல் ஆக்ஸ்போர்டில் சந்திக்க. (9 a.m. - 4 p.m.) போன் : 226611.

செப்டம்பர் 21-ந் தேதி, ஹோட்டல் துவாரகா (பைவ் ரோடு) சேலம் - 4. போன் : 447272 (9 a.m. - 4 p.m.)

செப்டம்பர் 27-ந் தேதி, ஹோட்டல் ஹைலேண்டஸ் ரேஸ்கோர்ஸ் ரோடு, மாதவ நகர், பெங்களூர். (9 a.m. - 4 p.m.) போன்: 2269232.

# கல்யாண

“லண்டனிலிருந்து சென்னை வரும் பிரிட்டிஷ் ஏர்வேஸ் விமானம் இன்னும் சில நொடிகளில் சென்னை விமான நிலையத்தில் வந்திறங்கும்” என்ற அறிவிப்பு ஒலிபரப்பானது.

தான் ஓட்டி வந்த மாருதி எஸ்டீம் காரைப் பார்க்கிங்கில் நிறுத்தி விட்டு அந்தப் பெண் மணி கீழிறங்கினாள். எளிமையான ஆனால் 'பளிச்'சென்ற பெங்கால் காட்டன் புடவை அந்த நடுத்தர வயதுப் பெண்மணிக்கு மிகுந்த கம்பீரத்தை அளித்தது. ஆங்காங்கே நரை யோடிய முடியை பிரெஞ்சு நாட்டில் பின்னிமுத்துக் கட்டி யிருந்தாள். மாநிறத்திற்கும் குறைந்த நிறம்தான். கண், மூக்கு, உதடு எனத் தனித்தனியே அழகு என்று கூறும்படியாக எதுவுமில்லை. ஆனால் அவள் கண்களில் தெரிந்த அறிவு ஒளி, முகத்திலிருந்த கம்பீரம், நடையிலிருந்த தன்னம்பிக்கை இவை, அந்தப் பெண் மணிக்கு அதீத கௌரவத்தைத் தந்தன. நேர் கொண்ட பார்வையுடன் அவள் நடந்து வரும்போதே பலரும் வழிவிட்டு ஒதுங்கினார்கள்.

விஸிட்டர்ஸ் காலரியில் நின்றபடியே அவள் விமானத்திலிருந்து கஸ்டம்ஸ் செக் முடிந்து வருபவர்களிடம் பார்வையைச் செலுத்தினாள்.

அதோ... அங்கே... சட்டென நெஞ்சம் துள்ளியது... நெஞ்சு படபடத்தது.

“அம்மா...” அத்தனை பேர் பார்ப்பதையும் பொருட்படுத்தாமல் அந்தப் பெண் ஓடி வந்து இந்தப் பெண்மணியின் தோளை அணைத்துக் கன்னத்தில் மாறி, மாறி முத்தமிட்டாள். “அம்மா, உன்னைப் பார்த்து ஆறு மாசமாச்சு. ஐ ரியலி மிஸ்ட் யூ அம்மா...” அணைப்பும், முத்தமும் தொடர்ந்தது.

“ஷ்.. தீபா... எல்லாரும் நம்மளையே வேடிக்கை பார்க்கறாங்க..”

“பார்க்கட்டுமே.. நான் என்ன அவங்களையா கிஸ் பண்ணினேன்... என்னோட ஸ்வீட் அம்மாவைத்தானே கிஸ் பண்ணினேன். ஹேய் அம்மா... யூ ஆர் 'க்ரோயிங் ஓல்ட் க்ரேஸ்புல்லி' தலையிலே நிறைய வெள்ளி மயிர் வந்துடுத்தே...” அம்மாவை தலைமுடியைச் செல்ல மாகக் கோதினாள். “வெயிட்... அதோ, கன்வேயரில் சாமான்கள் வந்து விட்டது. எடுத்திட்டு வந்திடறேன்.”

குடுகுடுவென ஓடும் மகளைப் பெருமையுடன் பார்த்தாள் சீதா. இளமையின் சுறுசுறுப்பு... ஆர்வம்... புத்தி சாலித்தனம்... கனமான இரண்டு பெட்டிகளையும் போர்டரின் உதவியின்றித்தானே தூக்கி வைக்க உதவ முன்வந்த ஒரு சக ஆண் பயணியிடம், “நோ தேங்க்யூ...” என்று அவள் திடமாக மறுப்பதைத் தூரத்திலிருந்து பார்க்கும் போது 'அடிப் பெண்ணே, இருபத்தி மூன்று வயதில் உனக்கு இப்படி ஒரு பலமா' என்று வியப்பு தோன்றியது.

சௌகரியமான பிஸினஸ் சூட் அணிந்து அவள் டக்,டக் என நிமிர்ந்து நடந்து வரும் போது பாதை தானாகவே தெரிந்தது. வழியில் வந்தவர்கள் ஒதுங்கினார்கள்.

சாமானைத் தூக்கி வந்த

15

உஷா சுப்ரமணியன்

லகுவுடன், அவள் அவற்றைக் காரின் பின்புறம் தூக்கி வைத்தாள். ட்ராலியை நகர்த்தி ஓரமாக வைத்து விட்டுக் கிளம்பினாள்.

"ஏம்மா, டிரைவர் இல்லையா.. இப்படி நடுராத்திரியிலே நீ தனியா வர மாட்டியே?"

"இல்லைம்மா. முன்பெல்லாம் வரத்தான் மாட்டேன். இப்போ அவசியமாகி விட்டது. திடீர், திடீரென சொல்லாமல் கொள்ளாமல் அட்வான்ஸ் வாங்கிக் கொண்டு, வேலையிலிருந்து நின்று விடுபவர்களை நம்புவதை விட, செல்ஃப் சஃபிஷியன்ட்டாக இருப்பது பெட்டர் இல்லையா.. என்னை வழிமறிக்கணும்னா வீட்டில் தனியா இருக்கற போது வழிமறிக்கறது சுலபம். ஓடற காரில் பாதுகாப்புத்தானே."

"ம்... அம்மா... நீ மாறிப் போயிட்டே..." குறுகுறுவெனக் கண்களை அகல விரித்து தீபா கைகொட்டிச் சிரித்தாள்.

"அவசியம் மனிதர்கள்கிட்ட நிறைய மாறுதல்களைத் தோற்றுவிச்சுடுது..."

"யா... யா..." தீபா கார் கண்ணாடி வழியே வெளியே பார்த்தாள். "ஆறே மாசத்துல மெட்ராஸ் தெருக்கள்ல கூட நிறைய மாறுதல் இருக்கு. ஆனா அம்மா, அமெரிக்காவிலே நான் படிச்ச போது நியூயார்க் எப்படியிருந்ததோ அதே போலத்தான் நான் பிஸினஸ் பேசப் போற போதும் இருக்கு. அதனால்தான் போல இருக்கு... சீதாப் பெரியம்மாவும், லோகுப் பெரியப்பாவும் இந்தியாவுக்குத் திரும்பிடலாம்னு முடிவு செய்திருக்காங்க. பெரியப்பா ரிடையராயிட்டாரில்ல."

"அப்படியா?"

"ஆமாம்மா... பசங்கள்லாம் அமெரிக்கா, ஹவாய்னு செட்டிலான பிறகு, அவங்க ரொம்ப லோன்லியா பீல் பண்றாங்க. இங்க நம்ம ஊரு, நம்ம மனுஷங்க, நம்ம தங்கைன்னு பீலிங் இருக்குமில்லையா?"

"ம்..." தன் மகளும் தன்னை விட்டுப் பிரியும் நாள் அதிக தூரமில்லை என்று புரிந்தவளாக சீதா பெருமூச்சு விட்டாள்.

"பிஸினஸ் டெவலப்மென்ட்ஸ் பற்றிக் கேட்பாய்னு பார்த்தால்..."

"என் செல்லக்கண்ணு எங்கே போனாலும் எல்லா பிஸினஸும் வெற்றிதான்னு எனக்குத் தெரியாதா. இப்போ அம்மா, பொண்ணா இருப்போம். நாளைக்குக் காலைல ஆபீஸ்ல பிஸினஸ் பேசலாம்."

தி. நகரில் இருந்த





காலிங் பெல்லை உபயோகிக்கும் போது இரவு நேரங்களில் லேசாகத் தொட்டால் போதும். அழுத்தி நீண்ட நேரம் அடித்தால் உள்ளே சிறு குழந்தைகள் அலறவும், அழவும் நேரிடலாம்.

— சித்ரா சூர்யா.

அந்த பிளாட்டில் தாயும், மகளும் எதிரும், புதிருமாக அமர்ந்திருந்தனர். "அம்மா, நாக்கு செத்துப் போச்சம்மா. நீ செய்யற காரக் கொழம்பு பிரமாதம் போ."

"ஆமா... அமெரிக்காவிலே படிக்கிற போது காரக் குழம்பா சாப்பிட்டே. ஆடு, மாடில்ல கடிச்சிட்டு இருந்தே. அவசரத்திற்கு எல்லாக் கறிகாயும் சேர்த்து ஒரு கிச்சடி அவியல் செய்யறதை நான் பார்த்திருக்கிறேனே..."

"ஆமாம்... அதுதான் உன் சமையல் இப்படி ருசிக்கிறது" தாயாருக்கு உதவியாகப் பாத்திரங்களை எடுத்துச் சமையலறையில் வைத்தவள், அம்மாவை அணைத்துப் படுக்கையறைக்கு அழைத்துச் சென்றாள். "அம்மா, இதோ பாரு உனக்குன்னு வாங்கிட்டு வந்தேன். லேட்டஸ்ட் அம்மா. இதுல இல்லாத பெஸிலிடிஸ் எதுவுமில்லை. ஹை ஸ்பீட்..." மிகச் சிறிய அளவிலிருந்த 'லேப் டாப்' கம்ப்யூட்டரை எடுத்து வைத்தாள். அதோடு நில்லாமல் வீட்டை அழகுபடுத்தும் பிளாஸ்டிக் பூக்கள், கையளவே உள்ள டேபிள் லைட் என்று விதவிதமான சாமான்களை எடுத்து வைத்தாள். "அம்மா, உனக்குன்னு ரொம்ப ஸ்பெஷலா ஏதாவது வாங்கணும்னு யோசித்து, யோசித்து மூளை குழம்பிடிச்சு. ஆனா என்ன வாங்கறதுன்னு புரியலேயில்லைம்மா."

"நீபு, இந்த வாழ்க்கையில் எனக்கு ரொம்ப ரொம்ப ஸ்பெஷல் நீதாம்மா... உன்னோட அன்புதான்மா. நீ எவ்வளவு தூரத்துக்கு சென்றாலும், அம்மாவுடைய அன்பைத் தேடி வரியே அதுதாம்மா நீ எனக்குத் தர ரொம்ப ஸ்பெஷல் கிப்ட்."

தாயும், மகளும் மௌனத்தில் நெகிழ்ந்

தார்கள்.

''அம்மா, லுக் அட் திஸ்...'' தீபா ஒரு புகைப்படத்தை எடுத்து நீட்டினாள். கம்ப்யூட்டரின் முன் அமர்ந்துள்ள ஒரு வெள்ளைக்கார இளைஞனின் படம்.

'இது நான் எதிர்பார்க்காத ஒன்று இல்லையே...' சீதா சமாதானப்படுத்திக் கொண்டாலும், மனதில் ஒரு கலக்கம்... ''யாரு இது தீபா?''

''ஸ்ட்டூவர்ட்... லண்டனில் நம்ம எக்ஸ்போர்ட் ஏஜெண்ட்... நைஸ் சேப்... எனக்கு அவனை ரொம்பப் பிடித்திருக்கிறது. நான் லண்டனிலிருந்த பத்து நாளும் ரொம்ப ஹெல்ப் செய்தான். வெரி ப்ரில்லியண்ட் சேப். ஐ லைக் ஹிம்...'' சொல்லி விட்டு அம்மாவை நிமிர்ந்து பார்த்தாள். எவ்வளவுதான் படித்து, தொழிலில் சிறந்தாலும், அம்மா மறுப்புக் கூறி விடுவாளோ என்ற பயம் அவள் கண்களில் தோன்றியது.

சீதாவுக்குள்ளும் ஒரு கோபம் தோன்றியது உண்மைதான். ஆனால் 'மனதை விரிவாக்கிக் கொள் சீதா, வாழ அதுதான் வழி' சாம்பசிவனின் குரல் திரும்பத் திரும்ப ஒலித்தது. 'ஸாம், நீங்க காட்டிய பாதையை நான் மீற மாட்டேன். தனக்குத்தானே சமாதானம் செய்து கொண்டு, பதறும் மனத்தை நிறுத்தினாள். ''யூ லைக் ஹிம், சரி பத்து நாளில் வேறுவிதமான முடிவு எதுவும் எடுத்து விடவில்லையே தீபா?''

தீபா தாயைத் தயக்கத்துடன் பார்த்தாள். ''அம்மா, ஸ்ட்டூவர்டை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கும்மா. ஐ வாண்ட் டு மேரி ஹிம்... வாழ்நாள் முழுவதும் அவனுடன் இருக்கணும்னு ஆசையாயிருக்கு.''

சீதா மகளின் அருகே சென்று அவளை அணைத்துக் கொண்டாள். ''தீபா, கலியாணங்கறது வாழ்க்கையிலே மிகப் பெரிய முடிவு. அதை அவசரப்பட்டு எடுக்கக் கூடாது. நீ எவ்வளவு பொறுப்பாக பிஸினைஸக் கவனித்தாலும், உன் இளமை, உன் ஹார்மோன்கள் உன்னை அவசரப்பட்டு முடிவுகள் எடுக்கத் தூண்டும்.''

''வேறு நாட்டைச் சேர்ந்தவரைக் கலியாணம் செய்து கொண்டா அட்ஜெஸ்ட்மெண்ட்ஸ் கஷ்டம்னு நினைக்கிறாயாம்மா?''

''இல்லைம்மா. எந்த நாடானால் என்ன, மனிதர்கள் எல்லோரும் அடிப்படையில் ஒன்றுதான். ஆனாலும், மனதளவிலே உன்னில் இந்தியத்தனம் இருக்கத்தான் செய்கிறது. அதே போல் ஸ்டுவர்டிடம் அவன் ஆங்கிலேயத்தனம் இருக்கும். இரண்டு பேரும் விட்டுக் கொடுத்து ஒரு இலக்கில் சந்தித்துக் குடும்பம் நடத்தும் பலம் உங்கள் காதலில்

# ஆத்ரேயா

## ரெடிமேட் ரவிக்கைகள் - பெட்டிகோட்ஸ்



கல்யாணமா!





சுபகார்யமா!



அணுகுங்கள் ஆத்ரேயாவை. தரத்திலும் - தனித்தன்மையிலும் மிகப் பிரபலமான எங்களது ஆத்ரேயா ரெடிமேட் ரவிக்கைகளை பார்க்கும் பொழுது புடவையை வாங்க தூண்டும். ஆத்ரேயாவின் ரெடிமேட் ரவிக்கைகள் ராசியானதும் கூட!...



- ★ தாங்கள் போட்டு பார்ப்பதற்காகவே இரண்டு பிட்டிங் ரூம்கள்
- ★ நீங்களே உங்கள் ப்ளௌஸ்களை தேர்ந்தெடுக்கும் வசதி
- ★ வாங்கும் ரவிக்கைகளில் ஏதேனும் சிறிய ஆல்ட்ரேஷன் இருந்தால் அதை உடனுக்குடன் நிவர்த்தி செய்யும் அனுபவம்
- ★ கல்யாண பெண்ணிற்கு ரவிக்கைகள் தைத்து கொடுக்கும் சந்தோஷம்
- ★ உங்களுடன் அன்புடன் பழகும் எங்களது பெண் விற்பனையாளர்களின் உன்னதமான சேவை



## ATHREYA FABRICS & ATHREYA GARMENTS

உங்கள் புடவைகளுக்கு உகந்ததான மேட்ச்சிங் துணிகள் கிடைக்கும். ரெடிமேட் ரவிக்கைகளின் சரியான கலர் கிடைக்காவிட்டால் எங்களிடமே துணிவாங்கி தைக்கவும் கொடுக்கலாம்.

வள்ளுவர் கோட்டம் நெடுஞ்சாலை, (ஓட்டல் சுப்ரபாத் எதிரில்)
நுங்கம்பாக்கம், சென்னை - 600 034.
Ph : 8226586 FAX : 092 - 044 - 8276031, 560076

24 - மணிநேரம் - 48 மணிநேரத்தில் தைத்து கொடுக்கப்படும். வேலை நேரம் காலை 10.00 முதல் இரவு 8.00 மணி வரை. ஞாயிறு விடுமுறை

## ஆத்ரேயா ரெடிமேட் ரவிக்கைகள் கிடைக்கும் மற்ற இடங்கள்

• மலேசியா [illegible], 41, [illegible] 50100 கோலாலம்பூர். போன் 2385468. • சிங்கப்பூர் [illegible] & [illegible] Pvt. Ltd. [illegible] போன் 2955855. • சென்னை [illegible] போன் 2331311. • SHA INSHA, 24, [illegible] போன் 4415374. • வேலூர் [illegible], 146, [illegible]. • கும்பகோணம் ஸ்ரீ லக்ஷ்மி டெக்ஸ்டைல்ஸ், 42, நாகேஸ்வரன் வடக்கு வீதி.

ALL MAJOR CREDIT CARDS ACCEPTED

Trade enquiries solicited from unrepresented areas.

ADVISION

இருக்கிறதா என்று புரிந்து கொள்ள பத்து நாள் போதாது கண்ணா. இன்னும் இரண்டு வருடம் பொறுத்துப் பார். நீ வாழ்க்கையில் பலதரப்பட்ட ஆண்களைச் சந்திக்கத்தான் போகிறாய். உன் எண்ணங்கள் முதிர்ச்சி யடைய உன் தேர்வும் மாறலாம்."

தீபா சில வினாடிகள் மௌனமாக இருந்தாள். "ஆமாம்... நீ சொல்வதும் சரிதான். அவசரப்பட்டுக் கலியாணம் செய்து கொள்வதும் பிரச்னைதான். என்னுடன் ஸ்கூலில் படித்த ரமா வெளிநாட்டிலிருப் பவனைக் கலியாணம் செய்து கொள்வேன் என்று ஒரு கனவிலிருந்தபடி பெரிய ஸாப்ட்வேர் என்ஜினீயரைக் கலியாணம் செய்துண்டு அமெரிக்கா போனாள். கையில் குழந்தையுடன், 'அவர் வாழ்க்கை ஒத்து வர வில்லை' என்று திரும்பி வந்து திண்டாடறா. படிப்பும் இல்லை, வேலையுமில்லை. ஜாதி, குடும்பம்னு அத்தை பிள்ளைக்கு வாக்குப் பட்ட லக்ஷ்மியும் இன்னிக்கு ப்ரஸ்ட்ரேடட் ஆகத்தான் இருக்கா. நம்ம எதிர்பார்ப்புகள் என்னன்னு புரிஞ்சுக்காம ஒரு செயல்ல இறங்கறது சரியில்லைதான். நானும் வெயிட் பண்ணறேம்மா."

சீதா தன் மகளின் புத்திசாலித்தனத்தில் நெகிழ்ந்து போனாள். "தீபா, ஒரு திருமணத் தால எதை உருவாக்க முடியும், எப்படி ஒருவரை அழிக்க முடியும்னு என் வாழ்வில் நான் உணர்ந்திருக்கேம்மா. உன்னை எனக்குக் குழந்தையாகக் கொடுத்த ஒன்றைத் தவிர, என்னை முழுமையாக அழித்ததும் ஒரு திருமணம்தான். என்னை இன்று ஒரு மனுஷி யாக, பிறத்தியார் பாத்து மெச்சறபடியாக வாழ வைத்ததும் ஒரு திருமணம்தான். என்னைப் போன்ற பெண்கள் வாழ்விலே எங்கள் வாழ்வை நிர்ணயிக்கிற சாய்ஸ் இல்லை. இன்று உன்னைப் போன்ற பெண் களுக்கு அந்த சாய்ஸ் இருக்கிறது. அதனால் தான் முடிவுகளை யோசித்துத் தீர்மானமாக எடுக்கிற பொறுப்பும் இருக்கிறது."

"அம்மா, ஐ மிஸ் அப்பா" தீபா சட் டென்று அழத் துவங்கினாள். "அம்மா, ஐ மிஸ் ஹிம்... எட்டு வருஷங்கள்... ஆனாலும் எப்பவும் அவர் நினைவுதான். அம்மா அவர் எனக்கு அப்பா மட்டுமில்லை. குரு..."

"தீபா, உன்னைப் பார்க்கிற ஒவ்வொரு வினாடியிலும், உன் வயதில் நான் வாழ்ந்த வாழ்வை நினைத்துப் பார்க்கிறேன். புழுவை விடக் கேவலமாக வாழ்ந்த என் வாழ்க்கையை நினைக்கிறேன். அந்தச் சாக்கடையில் உன் னையும் நெளிய விட்டிருப்பேனோ, அந்த மாமனிதர் நம்மை இன்று இவ்வளவு கௌரவ மாக வாழப் பதப்படுத்தி விட்டாரம்மா."

அந்தக் கனமான மௌனத்தில் காலம் முன்னே நகர்ந்தது

"சீதா ஐ ஹேவ் டு கிவ் எ பாட் நியூஸ்" என்று கீதா போன் செய்தபோது, சீதா பயத்திலே படபடத்தாள். "என்ன ஆச்சு கீதா, சீக்கிரம் சொல்லு, பயமாயிருக்கு எனக்கு... அவருக்கு... அவருக்கு ஏதாவது..."

"சீதா.. ஸாம் ஹேட் எ ஹார்ட் அட்டாக்.. நியூயார்க்கில் ஹாஸ்பிடலில் சேர்த்திருக்கிறது. லோகு இரவே டிரைவ் செய்து கொண்டு போயிருக்கிறார்."

"கீதா, பயம்மாயிருக்கு. ஏதாவது ஆகி விடுமா?"

"சீதா, ஒன்றும் ஆகாது. தைரியமாக இரு. எனக்கு அமெரிக்க டாக்டர்கள் மேல் நம்பிக் கையிருக்கு."

"ஏன் இப்படி கீதா, எல்லாம் என் மோசமான ஜாதகத்தாலதான். என் தலை யெழுத்து இப்படித்தான்."

"ஷட் அப்..." மறு முனையிலிருந்து கீதா

**நவராத்திரிக்கு அம்மனை அலங்கரிப் பவர்கள் இடது கை ஓரமாக (சிறிய முகம் பார்க்கும்) கண்ணாடி வைக்க இரு உருவங்கள் தோன்றி சந்தோஷப் படுத்தும். அம்மனின் மண்டபத்தை அலங்கரிக்க விதம்விதமான கலர் பட்டு நீள குஞ்சங்கள் (நூலால் ஆனது) சேர்த் துக் கட்ட காற்றில் லேசாக அசைந்து நம்மைப் பரவசப்படுத்தும்.**

**– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.**



சீறினான். "ஒப்பாரி வைக்காதே. அவர் கடந்த சில மாதங்களாக எப்படிப்பட்ட டென்ஷனில் இருந்தார் என்று உணர்ந்து கொள். உன்னைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தாயே, அவர் உடல்நிலையைப் பற்றி நீ நினைத்தாவது பார்த்தாயா என்று யோசித்துப் பார். நாற்பது வயதுக்கு மேல் ஆண் பிள்ளைகள் உடல்நலம் பேணா விட்டால் இதயம் பாதிக்கப்படலாம் என்று சிந்தித்தாயா.. உன்னை ஒரு உயர்தர மனுஷி யாக்க அவர் இவ்வளவு முயன்றாரே, பதி லுக்கு அவர் உடம்பு, மனசு இரண்டையும் நீ எந்த அளவு பாதுகாத்தே என்று யோசிச்சுப பாரு. எனிவே, இப்போ நான் உன்னைக் குற்றம் சொல்ல அழைக்கவில்லை. நாங்க அவரை நன்றாகப் பார்த்துக் கொள்வோம். அவர் கட்டாயம் உடல்நிலை தேறி விடுவார். எனக்கு சாம்பசிவனுடைய 'வில்பவர்' எப்படிப்பட்டதுன்னு தெரியும். ஹி வில் சர்வைவ்..."

"சீதா, நான் அங்க வர்றேனே, அவரைப் பார்க்கணுமே."

"சீதா, அவ்வளவு சுலபமாக விஸாவெல் லாம் வாங்கி வர முடியாது. அதோட, பணத் துக்கு எங்கே போறது... நாங்க பார்த்துக் கறோம். பயப்படாதே சீதா... தைரியமாக இரு. நான் தினம் போன் செய்யறேன். பயப் படாதே."

சீதா அப்படியே தளர்ந்து கீழே விழுந்தாள். "ஐயோ, இவருக்கும் ஏதாவது ஆகிவிட்டால் நான் என்ன செய்வேன்.. கடவுளே. நான் ஏன் இப்படித் துன்பப்படப் பிறந்தேன்..."

திடீரென ஏதோ தாக்கியது. கீதா சொல் வது போல் நான் ஏன் என்னைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறேன். அவர் எப்படி வலியில் கஷ்டப்படுவாரோ... அக்கம், பக்கம் சொந்த மனிதர்கள் கூட இல்லாமல் எப்படித் துன்பப்படுவாரோ... இந்தியா திரும்பியதிலிருந்து அவருக்கும்தான் எத்தனை கஷ்டங்கள்... நோயுற்ற அம்மா, கழுகாகக் கொத்தும் உறவினர்கள், வியாபாரத்துக்கான அலைச்சல், இத்தனைக்கும் நடுவில் தான் செய்த சண்டித்தனம்... எவ்வளவு துன்பங்கள்.. அதுவும் கடந்த சில மாதங்களாக மனிதர் என்னமாய்த் துவண்டு விட்டார். கடவுளே, என்னை மன்னித்து விடு. நான் கட்டாயம் மாறுவேன். என் புருசனை எனக்கு மீட்டுத் தந்து விடு போதும்.

காலையும், மாலையிலும் லோகு அத்தான் செய்தியனுப்ப, சீதா இரவு, பகலாக சாம்ப சிவன் உடல் தேற மனதாரத் தவம் செய்தாள். சாம்பசிவன் ஆஸ்பத்திரியில் உயிருக்கு மன் றாடிக் கொண்டிருந்த அந்தப் பத்து நாட்களும் அவளுக்கு மிகப் பெரிய ஆத்ம சோதனையாக அமைந்தது. அவள் எதிர்பாராதவிதமாக விஷ யம் தெரிந்து, மலர்விழி, பாக்யம், மங்கை யர்க்கரசி, லலிதா, சிரஞ்ச் கம்பெனி மிஸஸ் தாமஸ் அனைவருமே அவளைப் பலமாகக் காத்தார்கள். மாற்றி, மாற்றி உதவினார்கள். மனிதர்களின் பல முகங்களில் அழகான பக் கத்தையும் காணும் பாக்யம் அவளுக்குக் கிடைத்தது.

சாம்பசிவன் ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆன பத்தாவது நாள், "சீதா, நான் டிஸ்சார்ஜ் ஆகி வீட்டுக்கு வந்துட்டேம்மா. என்னைப் பத்திக் கவலைப்படாதே என்ன ரொம்ப பயந்துட்டாயா? ஐ ஆம் பைன்..." என்ற சாம்ப சிவனின் மென்மையான குரல் பலகீனமாக அவளை அழைத்த போது, சீதா விசும்பி, விசும்பி அழலானாள்.

"உங்களுக்கு உடம்பு சரியாயிடுச்சாங்க. இப்பத்தாங்க எனக்கு நிம்மதியாயிருக்கு. எல்லாம் என் தப்புத்தாங்க. நான் ராசியில் லாதவங்க..." எனப் பொருமிப் பொருமி அழு தாள். "என்னை மன்னிச்சுடுங்க. உங்களைக் கவனிக்காம விட்டுட்டேங்க."

"அசடு.. எனக்கு ஒண்ணுமில்லை. நல் லாத்தான் இருக்கேன். ஒரு வாரத்திலே டாக்டர் பர்மிஷனோட இந்தியா திரும்பி வந்துடுவேன் என்ன... தீபாக் குட்டிக்கு முத்தா குடு. உனக்கும்தான்..."

அந்தப் பேச்சிலே இருவருக்கும் மத்தி யிலிருந்த அத்தனை பிணக்கும், கசப்புகளும் கரைந்து மறைந்தன. ஆண், பெண் உறவின் அதி அற்புதமான பிணைப்பு அங்கே மறு படியும் தோன்றியது.

பதினைந்து நாளில் சாம்பசிவன் இந்தியா திரும்பினார். அவரை எப்படிக் கவனித்துக்



**கை, காலில் சுளுக்கு இருந்தால், கெட்டியாக புளியைக் கரைத்து, அதில் ஒரு கல் உப்பு போட்டு, நன்கு சூடு செய்து பொறுக்கும் பதத்தில் தடவினால் வீக்கம், சுளுக்கு, வலி உடனே குறையும்.**

**– பாலா இராஜேந்திரன்**

கொள்ள வேண்டும், எப்படி உணவளிக்க வேண்டும், அவர் மனதைப் புண்படுத்தாமல் எப்படி இதமாக இருக்க வேண்டும் என்றெல்லாம் கீதா எடுத்துக் கூறியபோது கோபம் வரவில்லை. மாறாக, எனக்கு புத்தி சொல்வதற்காவது ஒரு அக்கா இருக்கிறாளே என்று இதமாக இருந்தது.

ஒரு மாதமாவது ரெஸ்ட்டிலிருக்க வேண்டும் என்று டாக்டர்கள் கட்டளையிட்டிருந்ததால், அடுத்த கன்ஸைன்மென்ட், வீட்டிலிருந்து சாம்பசிவன் விளக்கிக் கூறியபடி சீதா கையாண்டாள். பாக்யாவின் மகன் உதவிக்கு வந்தான். கம்ப்யூட்டர் வகுப்பை அவன் தொடர வேண்டும் என்று சாம்பசிவன் விரும்பியதால் அதையும் தொடர்ந்தாள். அவள் வாழ்க்கையில் மாறுதல்கள் மெல்ல, மெல்லத் தோன்றலாயின. வெளி உலகில் சந்திக்கும் பெண்கள் மீது நம்பிக்கை தோன்றலாயிற்று. ஆண், பெண் உறவு என்பது படுக்கையில் ஆரம்பித்து முடிவதல்ல, அதற்குப் பலவிதமான பரிணாமங்கள் உண்டு என்று புரிந்தது.

ஒரு மாதத்தில் சாம்பசிவன் பழையபடி நடமாடத் துவங்கியபோது, தன்னிலேயே நிறைய மாறுதல்களை சீதாவால் உணர முடிந்தது. முதல் கட்டமாகப் பொது வாழ்வில் ஈடுபடும் போது காட்ட வேண்டிய பொறுமை... கவனம்... தெளிவு... தன்னம்பிக்கை... அந்தப் பொறுமையும், தெளிவும் குடும்பத்துக்குள்ளும் அவளைப் பக்குவப் படுத்தியிருந்தது. வேலைக்காரியிடம் கத்த மனம் வரவில்லை. தீபாவுடன் பழகுகையில் கோபப்படாமல் அணுக முடிந்தது. எல்லாவற்றிற்கும் மேல் பின்னணியில் பலமாக நின்று கொடியைப் பற்றி நிமிர்த்தும் கொழு கொம்பாகத் தாங்கும் சாம்பசிவனிடம் அதீத மதிப்பும், மரியாதையும் தோன்றியது.

தீபாவைப் போல் தனக்கு ஆங்கிலம் பேச வரவில்லை என்பதுதான் பெரிய குறையாக இருந்தது. "அது என்ன பெரிய விஷயம் சீதா.. வெள்ளைக்காரன் நம்மளைப் போல தமிழ் பேசுவானா... இந்தக் காம்ப்ளெக்ஸெல்லாம் தேவையில்லை" என்று சமாதானப்படுத்தினார்.

அந்த ஆண்டு சுமாரான லாபம் வந்தது. சீதா, சாம்பு, தீபா மூவரும் ஒரு வாரம் கொடைக்கானல் சென்று ஜாலியாகக் கழித்து வந்தனர். அடுத்த சில மாதங்களில் பாக்யாவின் மகன் சுகுமார் அவர்களுக்கு முழு நேர உதவியாளனாகச் சேர்ந்தான். "ஏங்க, நீங்க என்ன செய்யறீங்க, எவ்வளவு பணம் வர்றது இதெல்லாம் அவங்களுக்குத் தெரியணுமா?" என்று சீதா தயங்கிய போது, "நாம கள்ளக் கடத்தலா செய்யறோம். இதெல்லாம் தெரிஞ்சா, அவங்க வம்பு பேசுவாங்க என்றெல்லாம் கவலைப்படாதே.. யாராவது வம்பு பேசினா, அதைப் பற்றி நாம கவலைப்படாம வாழக் கத்துக்கணும்" என்றார்.

மூன்றாம் ஆண்டு நிறைய லாபம் வந்த போது, தீபாவையும், சீதாவையும் உடன் அமெரிக்கா அழைத்துச் சென்றார். பயணம் சீதாவின் பார்வையை விரிவாக்கியது. அமெரிக்கக் குளிரில் முதல் முறை பாண்டும், ஸ்வெட்டரும் அணிந்த போது வெட்கமாக இருந்தாலும், பின் பழகி விட்டது. அக்கா கீதா, மற்றும் அங்கே வாழும் பல இந்தியர்களின் உழைப்பைப் பார்த்த போது, தானும் இனி மத்தியானத் தூக்கம், நொறுக்குத் தீனி தவிர்த்து உழைக்க வேண்டும் என்று முடிவு செய்தாள்.

தொழிலில் மட்டுமில்லை முன்னேற்றம். சீதாவுக்கும், சாம்பசிவனுக்குமான பாசப் பிணைப்பு கால ஓட்டத்தில் மிக ஆழமானதாகவும், அழகானதாகவும் பரிணமிக்கத் துவங்கியது. அந்தப் பிணைப்பில் தீபாவின் திறமைகளும், அறிவும் பரிபூர்ணமாக விகசிக்கத் துவங்கியது. பள்ளிப் படிப்பை முடிக்கு முன்பே எக்ஸ்போர்ட், இம்போர்ட் ரூல்ஸ் அத்தனையும் அத்துபடி அவளுக்கு. அறிவுடன், மனிதநேயமும் அவளை அழகான பெண்ணாக உருவாக்கியிருந்தது.

எல்லாமே அழகாகத்தான் இருந்தது.

---

பல் ஈறில் வீக்கம், வலி ஏற்பட்டால் கவலை வேண்டாம். புளியும், உப்பும் சம அளவு எடுத்து நன்கு பிசைந்து குழைத்து ஈறில் ஏற்பட்டுள்ள வீக்கத்தில் வைத்து அழுத்தி விடுங்கள். (வாயில் வரும் புளி ஜலத்தை விழுங்கவும் செய்யலாம். பிடிக்கவில்லையென்றால் துப்பவும் செய்யலாம். மூன்று வேளை இதுபோல் வைத்தால் வீக்கம் + வலி மாயமாய் மறைந்து விடும். இது என் சொந்த அனுபவத்தில் கண்டது.

— ஆர். பாலா



### நவராத்திரி டிபன் :

**ஒரு கப் புழுங்கலரிசி, ஒரு கப் ஜவ்வரிசி இரண்டையும் தனித்தனியாக ஊறவைத்து, பின் உப்பு சேர்த்து கெட்டியாகவும், நைசாகவும் அரைக்கவும். பின் அத்துடன் கால் கப் பொட்டுக் கடலை மாவு, நறுக்கிய தேங்காய்த் துண்டுகள், எள் (அ) சீரகம் என போட்டு கெட்டியாகப் பிசைந்து, 2 ஸ்பூன் வெண்ணெய் (அ) நெய் சேர்த்துப் பிசைந்து, சீடைகளாக உருட்டிப் போடவும். நன்கு உலர்ந்ததும், குறைந்த எண்ணெயில் அதிக சீடைகள் என்ற வகையில் போட்டுப் பொரித்து எடுக்கவும். ஜவ்வரிசி சீடை சுவையாகவும் அதிக கரகரப்பாகவும் இருக்கும்.**

- ஆர். பாலா



ஆனால் தீபா கல்லூரியில் பி.காம்., சேர்ந்திருந்தாள். அவளைக் கல்லூரியில் காரில் விட்டு விட்டுத் திரும்பியவர். "சீதா என்னவோ மாதிரி இருக்கும்மா..." என்றவர் அப்படியே கீழே விழுந்து, குனிந்து கவனிப்பதற்குள் மூச்சு நின்று போனது மிகப் பெரிய சோகமே...

சாம்பசிவனுக்காக அத்தனை பேரும் அழுதார்கள். சீதாவும், தீபாவும் துடித்துக் கதறினார்கள். ஆனால் தனக்குப் பின் எதுவுமே நின்று போய் விடக் கூடாது என்பது போல் அத்தனையும் திட்டமிட்டு விட்டே மறைந்திருந்தார் சாம்பசிவன்.

அவர் போட்ட பாதையில் சீதா... பயந்து எடுத்து வைத்த முதல் அடியைத் தொடர்ந்து எப்படி. வாழ்க்கை ஓட்டமாக மாறியது?

தீபா கல்லூரிப் படிப்பை முடிப்பதற்கும் நியூயார்க்கில் உலக ஏற்றுமதி பற்றிய உயர்ப் படிப்புக்கு ஸ்காலர்ஷிப்புடன் அழைப்பு வரவும் சரியாக இருந்தது. தன் வளர்ப்புத் தந்தையிடம் பொறுப்பும், செயல்திறனும் கற்றவள், தனியாக அம்மா வாழ வேண்டியதற்கான ஒரு ப்ளாட்டை வாங்கிக் குடிபுக வைத்து விட்டே சென்றாள்.

இன்று தாயும், மகளுமாகத் தொழிலைப் பெருக்கி வருகின்றனர். டர்ன் ஓவர் சில கோடிகளைத் தொட்டு விட்டது. "அம்மா, நீ தனியாக ஏம்மா இருக்கணும். எனக்காகப் பார்க்காதே, பேப்பரில் அட்வர்டைஸ் செய்து, கலியாணம் செய்துக்கோயேம்மா..." என்று மகள் சொன்ன போது சீதா சிரித்தாள்.

"தீபா, கல்யாணத்தோட எல்லா டைமன்ஷனையும் நான் பார்த்துட்டேம்மா. உனக்கு உயிர் கொடுத்த அப்பாகிட்டே வெறும் உடம்புக்காக பிறரை நசுக்கி வீழ்த்தற உறவல்லாத உறவைப் பார்த்தேன்னா, உன்னை வளர்த்த அப்பாகிட்டே திருமணம் என்கிற பந்தத்தோட முழுப் பரிமாணத்தையும் உணர்ந்துட்டேம்மா... முதல் வேலி என்னைக் கட்டிப் போட்டுச் சிறை வச்சது. இரண்டாவது வேலி எனக்கு அரணா, பாதுகாப்பா, வழிதெரியாம நான் வீழ்ந்து விடாம காக்கற பலமா அமைஞ்சது. இந்த வேலியை நான் என்னிக்கு வேணுமானா திறந்துண்டு வெளியே போகலாம். ஆனா இவ்வளவு அழகான தோட்டத்தை உருவாக்கின பிறகு, வேலியைத் திறந்து விடறதில அர்த்தமே இல்லை. இது ரொம்ப நிறைவான இடம். ஐ'ஆம் ஸோ ஹாப்பி. நீ திருமணமாகி உன் வாழ்வை அமைத்துக் கொண்ட பிறகும் கூட என்னால இங்கே தனிமையா, இனிமையா வாழ முடியும். ஐ மிஸ் ஸாம்... அவரை சதா நினைச்சுக்கறேன். அதிலே நிறைய நிறைவு இருக்கு. அழகு இருக்கு. சுதந்திரமான காற்றை சுவாசிக்கிற இனிமையிருக்கு. ஏன்னா, நாங்க நிறைய ஷேர் பண்ணிக்கிட்டோம்."

"அம்மா, நானும் அப்பா மாதிரி ஒரு முழுமையான மனிதரைத் தேடறேம்மா. அதுக்கு முன்னாடி என் பலம், பலவீனத்தை உணர்ந்துக்கறேம்மா. ஒரு விஷயம்... எனக்கும் உனக்குமான இந்தத் தாய், மகள் உறவை நான் ரொம்பப் பெரிய பலமா நினைக்கறேம்மா!"

"சரி. ஆனாலும் உன் வாழ்க்கையை நீதான் அமைக்கணும். அதில் நான் ஒரு வழி காட்டியா வேணா இருக்க முடியும். அவ்வளவுதான்."

"புரியிறதும்மா. அப்பா உனக்குக் கற்றுத் தந்த பாடத்தை நீ எனக்குக் கற்றுத் தாறே இல்லை?" மகள் சிரித்தபடி தாயை அணைத்தாள்.

**(முற்றும்)**

# செப். 98

# இந்த மாதம் எப்படி?



## மேஷ ராசி :

*அசுவினி, பரணி, கிருத்திகை 1-ஆம் பாதம்.*

12-ல் குரு, 1-ல் சனியும், 4-ல் செவ்வாயும் நீச்சம் ஆக முக்கியமான மூன்று கிரகங்கள் அனுகூலமாக இல்லை என்ற நிலை. அதே சமயம் 5-ல் கூட மாதத்தின் முற்பகுதியில் சூரியன், புதன் இராசி ஆகியவர்களின் சஞ்சாரமும் சரியாகத் தான் இல்லை. எனினும் குரு ஆட்சியில் இருப்பதால் சுப விரயம் ஏற்படும். நல்லதொரு சுப நிகழ்ச்சிக்கு அல்லது குழந்தைகளின் மேற்படிப்புக்கு என ஏதோ ஒருவிதத்தில் செலவு செய்ய வேண்டிவரும். நீச்ச சனி என்பதால் ஏழரை சனியின் பிடிப்பினால் பாதகம் அதிகமில்லை. உங்கள் இராசிநாதனும் கூட நீச்சம்தான். கடகத்திற்கு குரு பார்வை உள்ளதால் கவலை தேவையில்லை. சுக்கிரன் தனலாபத்தைத் தருவார். ஒரு நண்பரால் நல்லதொரு உதவி உண்டு. இராகுவால் தந்தை வர்க்கத்தைச் சார்ந்த ஒருவரால் மனதுக்கு வருத்தத்தைத் தரும் நிகழ்ச்சி ஒன்று நடக்கலாம். மற்றபடி மாதத்தின் பிற்பகுதியில் சுக்கிரனால் செய்யும் தொழிலில் சிறு தடங்கல்கள் ஏற்படலாம். உச்ச புதனும், சூரியனும் உதவும் நிலையில் உள்ளதால் பல விஷயங்களில் நன்மைகள் கூடுதலாகவே நடக்கும். குறிப்பாக மாதம் பூராவும் சூரியனால் மனத்திற்குள் ஒரு தெம்பும், தைரியமும் ஏற்படும். இது இந்த இராசிக்காரர்கள் அனைவருக்கும் பொருந்தும்.



10-ந் தேதிக்குப் பிறகு ஏற்படும் வக்கிர குருவின் பெயர்ச்சி உங்களுக்குச் சாதகமாக அமையும். சனி, செவ்வாய், ராகு இவர்களுக்கு செவ்வாய், சனி ஆகிய இரு தினங்களில் அர்ச்சனை செய்யலாம்.



## ரிஷப ராசி:

*கிருத்திகை 2, 3, 4-ஆம் பாதங்கள், ரோஹிணி, மிருகசீரிஷம் 1, 2-ஆம் பாதங்கள்.*

10-ந் தேதி வரை குருவினால் அனுகூலம். அதனால் குழந்தைகளின் கல்வியில் முன்னேற்றம் மனதுக்கு மகிழ்ச்சியைத் தரலாம். ஆனால் அதன் பிறகு நல்லதொரு பதவியில் இருப்பவர்கள் முறையாக ஓய்வு பெறலாம். தற்காலிக ஊழியர்களுக்குச் சில தடங்கல்களும் வரலாம். யோக காரனாகிய சனியின் நீச்சம் சற்று சஞ்சலத்தைத் தரலாம். நீச்ச செவ்வாய் பாதகத்தைச் செய்ய மாட்டார். சிலரது கடன்கள் தீர உதவலாம். குறிப்பாக சூரியனால் அரசுத் துறை மூலம் உதவியும் கிடைக்கும். மாதத்தின் பிற்பகுதியில் உச்ச புதன் உங்களது முயற்சியில் ஏற்பட்ட தடங்கல்களை அகற்றுவார். அதே சமயம் சுக்கிரன் தம் முயற்சியினால் ஏற்பட இருக்கும் வெற்றியைத் தந்து, தனலாபத்தைத் தருவதுடன், செல்வாக்கையும் உயர்த்துவார். ராகுவின் சஞ்சாரம் தாயின் உடல் நிலை பற்றிய கவலையைத் தரலாம். சுக்கிரனால் குடும்பத்தில் அமைதியும் மகிழ்ச்சியும் இருக்கும். எனவே வீட்டில் மிருத்யுஞ்சயம், நவக்கிர ஹோமங்களைச் செய்யலாம். வசதியில்லாதவர்கள் கோவிலுக்குச் சென்று வழிபடலாம்.



## மிதுன ராசி:

*மிருகசீரிஷம் 3, 4,-ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1,2,3-ஆம் பாதங்கள்.*

சனியால் தொல்லைகள் இல்லை. தனலாபமே எதிர்பார்க்கலாம். 10-ந் தேதிக்குப்

கொலுவில் சிலாது குடும்ப வழக்கம்/பழக்கம் தேங்காயில் மஞ்சள் பூசி அம்மன், கண், மூக்கு வாய் இவற்றை கும்பத்தில் வைப்பார்கள். அப்படிச் செய்யும் போது இரு கன்னத்திலும் சிறிது வெள்ளை வெள்ளி ஜிகினாவைத் தூவி விடுங்கள். (மஞ்சள் ஈரமாக இருக்கும் போதே) அம்மனின் முகம் ஆனந்தமாக அருள் சுரக்கும் முகமாக பளபளவென புதுப் பொலிவுடன் விளங்கும்.

— லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.



பிறகு குருவின் அருள் உண்டு. அதனால் எதிர்பார்த்த இனத்தில் இலாபமும் உண்டு. இரண்டில் உள்ள செவ்வாய் கடன் தொல்லையை ஏற்படுத்தலாம். எதிரிகளுக்குச் சாதகமான நேரம். எனவே எந்தவித வம்பையும் விலைக்கு வாங்கி விடாதீர்கள். திருடர்களிடம் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. மூன்றில் உள்ள சூரியன் மாதத்தின் முற்பகுதியில் புதியதொரு பதவியைத் தரலாம். அதனால் மதிப்பும் மரியாதையும் உயரும். செவ்வாயால் ஏற்படுகின்ற தொல்லைகளிலிருந்த சூரியன் உங்களைக் காப்பாற்றும் நிலையில் உள்ளதால் கவலை வேண்டாம். சுக்கிரன், திருமணமாகிக் குழந்தைக்காக ஏங்கும் இந்த ராசிக்காரர்களுக்கு புத்தரோற்பத்தி ஏற்படக் காரணமாக இருக்கிறார். அதனால் கவலையை விட்டு உல்லாசமாகத் தேனிலவு கொண்டாடுங்கள். மாதம் பூராவுமே சுக்கிரனும், ராகுவும், பிற்பகுதியில் புதனும் கூட குடும்பத்திற்கும், மகிழ்ச்சிக்கும் தேவையானதைத் தர இருக்கிறார்கள். குழந்தைகளாலும் மனநிறைவு இருக்கும். சுபநிகழ்ச்சிகளும் நடக்கும். ராகு கொடுக்கும் சமயம் கேது தடுக்கும் நிலையில் இருந்தாலும் இதர கிரகங்கள் உங்களுக்கு அனுகூலமாக இருப்பதால், அனைத்துக் கிரகங்களுக்கும், அத்துடன் துர்க்கை, ஆஞ்சநேயர் ஆகியவர்களுக்கும் வாரம் ஒருமுறை சனிக்கிழமையன்று அர்ச்சனை செய்து விடுங்கள்.



## கடக ராசி:

***புனர்பூசம் 4-ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.***

இராசியில் செவ்வாய் நீச்சமடைந்தாலும் முதல் 10 நாட்களுக்கு குருவின் பார்வை இருப்பதால் கடன் தொல்லைகள் குறையும். சுக்கிரனைத் தவிர மற்ற கிரகங்கள் உதவும் நிலையில் இல்லை. புது முயற்சிகளைத் தவிர்ப்பது நல்லது. கைப்பொருளை இழக்கும் சூழ்நிலை உண்டு. கோபத்தை தவிர்க்கவும். மேலதிகாரிகளிடம் இதுவரை மரியாதையைக் காட்டா விட்டாலும், இப்போதே கண்டிப்பாய் காட்ட வேண்டிய நிலை. இரண்டாமிடத்தில் உள்ள பாவகிரகங்கள் மாதத்தின் முற்பகுதியில் அத்தகைய நிலையை உருவாக்கியுள்ளன. ஆயினும் மாதத்தின் பிற்பகுதியில் அனைத்துத் தடங்கல்களும், எதிர்ப்புகளும் அடங்கி, மனத்தில் நிம்மதி பிறக்கின்ற காலகட்டமாக உருவெடுக்கும். குறிப்பாக முதல் 10 நாட்களில் குருவின் பார்வை, பிற்பகுதியில் அதாவது 15 நாட்களுக்குப் பின் கிரக அனுகூலங்கள் என இருப்பதால் இம்மாதம் 10-ந் தேதி முதல் 1 வாரத்திற்குச் சற்று எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது எனத் தோன்றுகிறது. அந்த பத்து தினங்களில் துர்க்கைஸ்துதி, விஷ்ணுஸ்துதி, மற்றும் விநாயகர் புராணம் படியுங்கள். அனைத்துக் கஷ்டங்களும் தூசாகிப் பறந்து போகும். மனம் லேசாகி மகிழ்ச்சியில் மிதக்கும். இப்படி நிச்சயம் நடக்கும். இது எத்துறையினர்க்கும் பொருந்தும். கவலை வேண்டாம்.



## சிம்ம ராசி:

***மகம், பூரம், உத்திரம் 1-ஆம் பாதம்.***

இதற்கு முன் இரண்டொரு மாதம் மிகவும் மன இறுக்கத்தில் இருந்தீர்கள். உடல்நலக்குறைவாலும், சில இனங்களில் ஏற்பட்ட ஏமாற்றத்தாலும் மனம் வருந்தியிருப்பீர்கள். நீச்சம் அடைந்துள்ள சனி சிலரின் கால்களைப் பதம் பார்த்திருக்கும். எனினும் இந்த மாதம் 10-ந் தேதி வரை அந்த நிலை நீடிக்கும். அதன் பிறகு சற்று முன்னேற்றம் ஏற்படும். உங்களை அறியாமலேயே உங்களை வாட்டி வந்த உடலாலும், உள்ளத்தாலும் ஏற்பட்ட களைப்பும் இளைப்பும் இனி மாறி நல்லதொரு நிலையை எய்திட குருவின் பார்வை உங்கள் இராசிக்கு 10-ந் தேதி முதல் ஏற்பட இருக்கிறது. எனவே மாதத்தின் பிற்பகுதியில் மன நிம்மதி கிடைக்கும். புதன்

உச்சம் பெறுவதும், சுக்கிரன் நீச்சம் பெறுவதுமான காலகட்டம் மாதத்தின் பிற்பகுதியில் நல்ல நிலையில் இல்லை. எனவே அனுபவித்துக் கழிக்க வேண்டிய மாதமே. உறவினர்களின் வருகை ஒரு சிலருக்கு மகிழ்ச்சியைத் தரும். அமைதியாக, மானசீகமான முறையில் எந்த இறைவனையும் பக்தி சிரத்தையுடன் நினையுங்கள். பக்தியை எதிர்த்துச் செயல்படக்கூடிய சக்தி எவரிடமும் இல்லை. அதனால் கோளறு பதிகத்தைப் பக்தியுடன் படியுங்கள். அதுவே போதும்.



## கன்னி ராசி:

***உத்திரம் 2,3,4–ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1,2,–ஆம் பாதங்கள்.***

10–ந் தேதி வரை குருவின் பார்வை கிடைக்கும். கேதுவால் ஆபரண இலாபம் சிலருக்கு உண்டு. எதிரிகள் ஏமாறுவார்கள். மாதத்தின் பிற்பகுதியில் புதன் உச்சம் பெறும் பொழுது நல்லதொரு நிலை ஏற்படும். சுக்கிரன் மாதத்தின் முற்பகுதியில் உதவுவது போல் பிற்பகுதியில் உதவ இயலாத நீச்ச நிலை. கேது, செவ்வாய் ஆகிய கிரகங்கள் உதவும் நிலையில் இருப்பினும் மற்ற கிரகங்கள் சஞ்சலத்தைத் தரும் நிலையிலேயே இருக்கிறார்கள். அஷ்டமத்துச் சனியின் தாக்கம் இருந்தாலும் மாதத்தின் முதற்பகுதியில் 10 நாட்களில் குருவின் பார்வையும் பிற்பகுதியில் உச்ச புதனின் அருளும் இருப்பதால் விபரீதமாக ஏதும் நடந்திடாது. விநாயகப் புராணம், கடனைப் போக்குகின்ற அங்காரக ஸ்தோத்திரம், கோளறு பதிகம் ஆகியவைகளைப் பக்தியுடன் படியுங்கள். தேவையான நேரத்தில் எதிர்பாராத உதவி ஒன்று உங்களுக்கு வந்து, அதன் பயனாக மனத்தில் உள்ள குழப்பங்களும், பயமும் நீங்கி, அனைத்தும் நல்லபடி நடக்கும். இனிவரும் மாதங்களில் உங்கள் குடும்பத்தில் உள்ள குழப்பங்கள் மறைந்து நல்ல நிலை ஏற்படும். உங்களூரில் உள்ள காளியையும், மாரியம்மனையும் அல்லது எல்லையம்மன் ஐயனாரப்பன் போன்ற காவல் தெய்வங்களையும் தூபதீப நிவேதனம், நைவேத்தியங்களைக் கொண்டு ஆராதியுங்கள். உங்கள் குலதெய்வத்திற்கும் அர்ச்சனை செய்யுங்கள்.



## துலா ராசி:

***சித்திரை 3,4,–ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் - 1, 2,3,–ஆம் பாதங்கள்.***



சாம்பார் தண்ணியாக இருந்தால் கவலை வேண்டாம். வீட்டிலிருக்கும் பருப்புப் பொடியில் 2 ஸ்பூன் போட்டு கலந்து இறக்குங்கள். சாம்பார் கெட்டி யாவதுடன், சுவை கூடுதலாகவும் இருக்கும்.

– ஆர். பாலா

குரு கும்பத்திற்கு வந்ததும், வீட்டில் ஒரு சுப நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்வார். மாதத்தின் முற்பகுதியில் வீடு வாகன யோகம் ஏற்படும். அரசுத் துறையில் உள்ளவர்களுக்குப் பதவி உயர்வு உண்டு. வழக்கு வியாஜ்ஜியங்களில் வெற்றியும் கிடைக்கும். சிலருக்கு இதுவரை எதிர்பார்த்தும், முயற்சி செய்தும், கிடைக்காத தொரு இனத்தில், இந்த மாதத்தில் வெற்றி கிடைக்கும். அது ஒரு வெளிநாட்டுப் பிரயாணமாக இருக்கலாம். அல்லது அரசிடமிருந்து வரக்கூடிய விருதாகவும் அமையலாம். புதன் மாதம் பூராவும் பொருளாதாரத்தைப் பொருத்துச் சரளமாகப் பணம் காசு கிடைக்கும்படி செய்யலாம். 7-ல் சனி நீச்சமானதால் மனைவியின் உடல் நிலையைப் பாதிக்கச் செய்யலாம். எனினும் கும்ப குருவின் பார்வையைப் பெறும் போது சரியாகலாம். தோல் சம்பந்தமான நோயோ, இரத்த அழுத்தமோ சற்று பாதிக்கலாம். அரசாங்கத்தால் நன்மையொன்றை எதிர்பார்க்கலாம். சுபநிகழ்ச்சி ஒன்று நடைபெறுவதற்கேற்ற வகையில் தேவையான பொருள் எதிர்பாராமல் கிடைக்கும். அது ஒரு நண்பர் மூலமாகக் கிடைக்கலாம். முருகனது அருளாலும் வரலாம். எனவே கணபதியையும், முருகனையும் வணங்குங்கள்.



## விருச்சிக ராசி:

***விசாகம் 4–ஆம் பாதம், அனுஷம், கேட்டை.***

மாதம் பூராவும் சூரியனால் நன்மையுண்டு. பதவி உயர்வு பெறுவதன் மூலமோ, அல்லது புதியதாக வேலைக்குச் சேருவதன் மூலமோ கூட அது

நாலு பங்கு ராகி மாவிற்கு ஒரு பங்கு உளுந்து எடுத்து ஊறவைக்கவும். ஒரு மணி நேரம் ஊறிய பிறகு, உளுந்தை நன்றாகக் கொட கொடவென்று அரைத்துக் கொள்ளவும். இரண்டையும் கலந்து தேவையான உப்பு சேர்த்துக் கரைத்து வைத்துக் கொள்ளவும். பதினொரு மணி அளவில் கரைத்து வைத்துக் கொண்டால் டிபனுக்குக் கரகரப்பான சத்துள்ள ராக் தோசை ரெடி!

— சாந்தி ரவி



ஏற்படலாம். புதனால் ஆடை, ஆபரண சேர்க்கை ஏற்படும். எதிர்பார்க்கும் எந்த இனத்திலும், எத்துறையினர்க்கும் இந்த மாதத்தில் வெற்றி கிடைக்கும். சுக்கிரன் மாதப் பிற்பகுதியில் நீச்ச பங்க ராஜயோகத்தைத் தர இருக்கிறார். அதனால் எதிர்பாராத தன லாபமோ, அல்லது விரும்பிய இடத்திற்கு மாற் றமோ கிடைக்கலாம். குரு கும்பத்திற்கு வரும் போது சில பிரச்னைகள் தோன்றலாம். உறவினர் ஒருவருடைய உடல்நிலை பற்றிய கவலையும் ஏற்படும். கேதுவால் வயிறு பாதிக்கப்படலாம். எனவே உணவு விஷயத் தில் ஜாக்கிரதை தேவை. சேரத்தகாதவர் களுடன் கொண்டுள்ள உறவினை விட்டு வருவது நல்லது. மற்றபடி நல்லதொரு மாத மாகும். நன்கு பயன்படுத்திக் கொள்ளுங்கள். இதுவரை முயற்சி செய்தும் கிடைக்காத ஒரு இனத்தில், முயற்சி இல்லாமலேயே வெற்றி கிடைக்கும். அது உத்தியோக நிலையிலும் ஏற் படலாம். அல்லது தொழில்ரீதியாகவும் நடக்க லாம். 6-ல் உள்ள சனி, மற்றும் செவ்வாய் ஆகியவர்களது நீச்ச நிலை உங்களை எந்த வகையிலும் பாதிக்க நியாயமில்லை. செவ் வாய் துர்க்கை, மற்றும் சந்திரனுக்கு அர்ச்சனை செய்யுங்கள்.



## தனுசு ராசி:

*மூலம், பூராடம், உத்தி ராடம் 1–ஆம் பாதம்.*

இராசிநாதனின் சஞ்சாரம் சரியாக இல்லை. 3-ல் உள்ள கேதுவால் எல்லா முயற்சிகளிலும் ஜெயம் ஏற்படும். விநாயகப் பெருமானின் அருளும் கிடைக்கும். எதிராளிகள் ஏமாற்றம் பெறுவர். மாதத்தின் முற்பகுதியில் சுக்கிரனால் சுக முண்டு. விருந்தினர்களை வரவேற்று மகிழும் நிலையும் ஏற்படும். பிற்பகுதியில் அதே சுக்கிரன் சில தடைகளையும் தாம்பத்திய வாழ்க்கையில் ஏற்படுத்தலாம். ஆனால் பிற்பகுதியில் புதனும், சூரியனும் சிறந்த யோகத்தை அருள இருக்கிறார்கள். எனவே புதிய முயற்சியில் இறங்கலாம். அதனால் தன லாபம், பெயர், புகழ் இவை கிடைக்கும். இராகு சில இனங்களில் தடைகளை உண்டாக்கலாம். வாகனங்களால் நஷ்டம் ஏற்பட வாய்ப்பு உண்டு. தாய் மாமன் வகை யினால் உதவிகள் பெறலாம். அது தாய் வகை யில் சேர வேண்டிய ஸ்ரீதனமாகவும் இருக்க லாம். அல்லது மாமனார் வகை சொத்தாகவும் அமையலாம். எந்த ஒரு முயற்சியிலும் சற்று எச்சரிக்கையுடனும் யதார்த்தமாகவும் முயற்சி செய்வது நல்லது. 5-ல் உள்ள சனி நீச்சம் பெற்றுள்ளதால் பாதிப்பு குறைவே. ஆனாலும் பணத்தட்டுப்பாடு இருக்கலாம். எனவே செய்யும் செலவுகளைத் திட்டமிட்டுக் கட்டுப்பாட்டுடன் செய்வது நல்லது. தக்ஷிணா மூர்த்திக்கு அர்ச்சனை செய்யுங்கள். அத்து டன் உங்கள் குலதெய்வத்திற்கும் ஆராதனை அவசியம் செய்யவும்.



## மகர ராசி:

*உத்திராடம் 2,3,4–ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1,2–ஆம் பாதங்கள்.*

செப்டெம்பர் மாத இரண் டாவது வாரத்திலிருந்து நல்லதொரு சூழ்நிலை உருவாகும். குடும்பத்தில் திருமண நிகழ்ச்சிகள் நடக்கும். சுக்கிரன் குடும்ப சுகத்திற்கு உத்திர வாதம் அளிக்கிறார். தனலாபமும் உண்டு. அதே சமயம் எதிர்பாராத செலவுகளும் வந்து சேரும். புதன் உச்சம் பெற்றாலும் இந்த மாதத் தின் பிற்பகுதியில் அவரால் சில சில்லறைத்

தொல்லைகள் ஏற்படலாம். ஆனாலும் முற்பகுதியில் அதே புதன் உங்களுக்கு ஒரு பதவி உயர்வு தர உதவுவார். விழா ஒன்றில் வஸ்திர லாபம் கிடைக்கும். குழந்தைகளின் நலன் நன்கு அமையும். கண் பாதிக்கப்பட்டுச் சரியாகலாம். மாதக் கடைசியில் உடல்நிலை பாதிக்கப்படலாம். எனவே மருத்துவரிடம் ஆரம்பத்திலேயே சென்று ஆலோசனைக் கேட்டு அதன்படி நடப்பது நல்லது. இரண்டாம் இடத்திற்கு வரும் குருவால் கோர்ட் விவகாரம் ஒன்றில் வெற்றி ஏற்படும். தாயாரின் உடல்நிலை கூடப் பாதிக்கப்பட்டு சரியாகலாம். செவ்வாயின் சஞ்சாரத்தால் இரத்த அழுத்த நோய் உள்ளவர்கள் பாதிக்கப் படலாம். எந்த நிலையிலும் கோபத்தைக் காட்டாமல் இருப்பது நல்லது. ஸ்ரீ ஆஞ்சநேயரையும், நரசிம்மரையும் அர்ச்சனை செய்து வணங்குங்கள். குலதெய்வத்திற்குரிய பூசனைகளைச் செய்வதும் அவசியமெனத் தோன்றுகிறது.

## கும்ப ராசி:



*அவிட்டம் 3,4-ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி முதல் மூன்று பாதங்கள்.*

நீச்சம் பெற்ற செவ்வாய் கடன் தொல்லை தீர உதவலாம். குறிப்பாக இந்த மாத முதல் வாரத்தில் இது ஏற்படலாம். மற்றபடி முதல் வாரத்திற்குப் பிறகு ஏற்படும் வக்கிர குருவால் எல்லா விஷயங்களிலும் மந்த நிலையே ஏற்படும். இந்த மாதம் அனுபவித்துக் கழிக்க வேண்டிய மாதமே. எந்த நிலையிலும், எந்த நேரத்திலும் சொல்லும் சொற்களை அளந்து பேசுங்கள். நன்கு சிந்தித்தே எந்த முடிவையும் எடுங்கள். இது எத்துறையினர்க்கும் எப்பாலர்க்கும் பொருந்தும். அவரவர் தாம் செய்யும் கடமையில் பிறரை நம்பாமல் நன்கு நேரில் கவனித்து செயலாற்றுங்கள். அரசு, அரசியல் துறையில் உள்ளவர்கள் அனுமதி அளிக்கும் அதிகாரத்தின் காரணமாகக் கோப்புகளில் கையெழுத்திடும் போது நன்கு கவனித்தே அனுமதி வழங்கும் கையெழுத்திடுதல் நல்லது. ஒரு பெண்ணால் சில சங்கடங்களுக்கு ஆளாக நேரிடலாம். மாதத்தின் பிற்பகுதியில் மேற்கண்ட இறுக்கமான நிலை மாறி, நல்லதொரு சூழ்நிலை உருவாவதற்கு உச்ச புதனும், நீச்ச பங்க ராஜயோகத்தைத் தரும் நிலையில் உள்ள சுக்கிரனும் உங்களுக்கு மிகவும் சாதகமான சூழ்நிலையில் இருக்கிறார்கள். ஆக செப்டெம்பர் 10-ந் தேதி முதல் ஒரு வாரம் மட்டும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டுமென்பதை அறிந்து அதன்படி செயல்படுங்களேன். குருவையும், நரசிம்மனையும் ஆராதியுங்கள். எல்லைத் தெய்வங்களாகிய எல்லையம்மன், ஐயனார் போன்ற தெய்வங்களை குறித்து வழிபடுங்கள். அவர்களின் அருள் காரணமாக எந்தத் தொல்லையும் உங்கள் எல்லைக்குள் நுழையாது – இதைத் திடமாக நம்புங்கள்.

## மீன ராசி:



*பூரட்டாதி 4-ம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.*

மாதத்தின் பிற்பகுதி நன்கு அமைந்துள்ளதால் எந்த முயற்சியையும் அப்போது வைத்துக் கொள்ளுங்கள். சுக்கிரனால் சுகம் உண்டு. புதனால் பண

### ரங்கோலி கோலம் போடுபவர்களுக்கு –

தேங்காய்ப் பால் பிழிந்து விட்டு திப்பியைத் தூர எறியாமல் அதை நன்கு கிளறி காயவைத்துப் பின் அந்தத் திப்பியை மிக்ஸியில் போட்டு பொடி செய்து கொள்ளுங்கள். அந்தப் பொடியை கலர் மாவுடன் கலந்து கோலம் போட்டுப் பார்த்தால் தரையில் வெல்வெட் விரித்த மாதிரி அவ்வளவு அழகாக இருக்கும்.

– எஸ். சாந்தி சேகர்.



## மாதம் ஒரு மந்திரம்

# கடனைப் போக்கும் அங்காரகன்

"பெற்றிருந்த புகழ் போயிற்று. பெயர் போயிற்று, நாணயம் போய் நடுத் தெருவுக்கு வந்து, நாலு பேருக்கு முன்னால் தலைகுனியும் நிலையும் வந்தாயிற்று'' என யார் வேதனைப்படுவார்கள்? அன்று அமர்களத்தில் இராமன் ''இன்று போய் நாளை வா'' என்று இராவணனிடம் கூறிய சமயத்தில் இராவணனின் நிலை இப்படித்தான் இருந்தது. அஞ்சா நெஞ்சம் போயிற்று. வீரம் போயிற்று. சங்கரன் அளித்த வீர வாளும் போயிற்று. பெற்றிருந்த வல்லமை அனைத்தும் போயிற்று. இந்த நிலையில் நிலத்தைப் பார்த்தே தலைகுனிந்து வருகிறான். அந்த மண் பெற்ற சீதை எள்ளி நகையாடுவாளே என்று நினைத்த மாத்திரத்தில் அவன் அடைந்த வேதனை ஆரம்பத்தில் கூறிய பாமரன் ஒருவன் பட்ட கடனை அடைக்க முடியாத நேரத்தில் எப்படி வேதனை அடைவானோ அந்த நிலையை ஒத்திருந்தது. அதனால் தான் கடன் பட்டார் நெஞ்சம் போல் கலங்கினான் இலங்கை வேந்தன் என்று தொடர் ஏற்பட்டது. இந்த நாளில் கடன்காரன்தான் கடன் கொடுத்தவனைப் பார்த்து 'இன்று போய் நாளை வா' என்று கூறும் நிலை என்றாலும் வேதனை வேதனைதானே!

அத்தகைய கடன் தொல்லையிலிருந்து நீங்க அங்காரகனை ஸ்தோத்திரம் செய்ய வேண்டும். அவன் கடனுக்குக் காரகன். ஸ்கந்த புராணத்தில் ஸ்ரீ சுக்கிராச்சாரியார் கடனை நீக்கும் 12 ஸ்லோகங்களை அங்காரகன் மேல் பாடியுள்ளார். அதில் இரண்டு ஸ்லோகங்கள் இந்த மாத மந்திரமாகக் கீழே தரப்பட்டுள்ளது.

**மங்களோ பூமிபுத்ரஸ்ச ருணஹர்த்தா தனப்ரத:!**
**ஸ்திராஸனோ மஹாய: ஸர்வகர்ம விரோதக:!**
**அங்காரக மஹாபாக பகவன் பக்தவத்ஸல!**
**த்வாம் நமாமி மமாஸேஷம் ருணமாஸு வினாஸய!!**

மங்களத்தைத் தருபவன். மண்ணின் மைந்தன். கடனைப் போக்குபவன். பொருளைத் தருபவன். நிரந்தரமான இருக்கையை உடையவன். ஆஜானுபாவன். சர்வ கர்மாக்களையும் தடுக்கக்கூடியவன். மகாபாக்கியஸாலியானவன். பக்தர்களுக்குப் பிரியமான பகவான். அப்படிப்பட்ட ஹே அங்காரகனே! தங்களை பணிகிறேன். என்னுடைய எல்லாக் கடன்களையும் உடனே போக்க வேண்டும் என்பது கருத்து.

எனவே கடன்பட்டவர்கள் அது எந்த நிலையில் இருந்தாலும் செவ்வாய் கிரகமான அங்காரகனைப் பணிந்து வேண்டிக் கொண்டால் நிச்சயம் கடன் தொல்லையிலிருந்து விடுபடுவார்கள். குபேரனைப் போல் செல்வந்தர் ஆவர். தினமும் 11 முறை காலையில் பாராயணம் செய்யலாமே! இதைக் கூறுவதற்கு மாசு மருவற்ற மனம்தான் தேவை. காசு பணமல்ல. எனவே பக்திசிரத்தையுடனும் நம்பிக்கையுடனும் பாராயணம் செய்துதான் பாருங்களேன்.

**— ஜெயலட்சுமி கிருஷ்ணன்**

வருவாயும் உண்டு. சூரியனால் கண்களுக்குச் சில பாதிப்புக்கள் ஏற்பட்டுச் சரியாகும். சுபச் செலவுகள் ஏற்படும். பணத் தட்டுப்பாடும் உண்டு. ஆனால் மாதத்தின் முற்பகுதியில் சுக்கிரனாலும், பிற்பகுதியில் புதனாலும் சூரியனாலும் தனலாபம் வரும். செலவுகளுக்கு ஈடுகொடுத்து விடும். வேலை காரணமாகச் சிலர் குடும்பத்தைப் பிரிந்து சில நாட்கள் வெளியே செல்ல வேண்டியிருக்கும். 2-ல் உள்ள சனி நீச்சமானதால் ஏழரைச் சனியின் 2-ம் சுற்றில் திருமணத்திற்காகக் காத்து நிற்பவர்களுக்குச் சில தடைகள் ஏற்படலாம். நவக்கிரகங்களுக்கு அர்ச்சனை செய்வதுடன் உங்கள் குலதெய்வத்திற்கும் சாத்துபடி செய்யுங்கள். சற்று ஏற்ற இறக்கமுள்ள மாதமானாலும் கவலைப்படும்படியான சூழ்நிலை உருவாகாது. கோளறு பதிகம் கூடப் படிக்கலாமே!

**— ஜெயலட்சுமி கிருஷ்ணன்**



# 'வெப்சைட்'டில் கொலு

நவராத்திரி வருகிறது என்றால் வீட்டில் எல்லோருக்கும் கொண்டாட்டம் தான்! ஒன்பது நாட்கள் பண்டிகையைக் கொண்டாட அதற்கு ஒரு வாரம் முன்பிருந்தே வீட்டில் ஆயத்தங்கள் செய்வதைப் பார்த்திருக்கிறோம். கொலுவில் வைக்கப் பொம்மைகள், அலங்கார சாமான்கள், வருவோர்க்கு தாம்பூலத்துடன் கொடுக்க கிண்ணம், தட்டு, போன்ற பலவகைப் பொருட்கள், சுண்டலுக்கு தேவையான பை, மளிகை சாமான்கள் ஆகியவற்றை வாங்கப் பெண்மணிகள் ஒரு வாரத்திற்கு முன்பே தயார் செய்து கொள்வார்கள்.

ஆனால் கொலு என்னும் நவராத்திரியே வாழ்க்கையின் மிக முக்கியமான பகுதி என்றும், அதைக் கொண்டாட தன் குடும்பத்தாருடன் வருடம் முழுவதும் தயார் செய்து மிக அருமையாகக் கொண்டாடுகிறார் அடையாறில் வாழும் திருமதி விஸ்வாம்பாள்.

"சுமார் எழுபது வருடங்களாக நான்கு தலைமுறையினர் வழி வழியாக நவராத்திரி பண்டிகையை தவமாகக் கருதி கொண்டாடுகிறோம். எங்கள் குடும்பம் ஒரு கூட்டுக் குடும்பம். என்னுடைய தாய் மாமனையே திருமணம் செய்து கொண்டதால் என்னுடைய பாட்டியே எனது மாமியாராகி விட்டார். அதனால் எங்கள் கொலுவில் என்னுடைய பாட்டி, என் தாயார், நான், என்னுடைய குழந்தைகள் ஆகிய நான்கு தலைமுறையினரின் குடும்பத்து பொம்மைகள், அலங்காரச் சாமான்கள் ஆகியவை கொலுவிருக்கும்...'' என்கிறார் விஸ்வாம்பாள்.

• விஸ்வாம்பாள்

இந்நாளில் நமது கலாசாரம் விட்டுப் போகவிடக் கூடாது என்ற அக்கறையில் பெண் குழந்தைகள் இருக்கும் வீட்டில் பழக்கம் இல்லாவிடினும், கொலு வைத்துக் கொண்டாடுவது என்று ஆரம்பித்துள்ளனர்.

இவரது இல்லத்தில் பெண் குழந்தைகளே இல்லை! இவரது மகன்கள் இருவரும் கணிப்பொறி வல்லுனர்கள். ஆனாலும் நம் குடும்ப வழக்கம் கலாசாரம் விடுபட்டுப் போகக் கூடாது என அவர்களின் திறமையைப் பயன்படுத்தி கொலுவினை கணிப்பொறி உதவியுடன் நூதனமாக 'கம்ப்யூட்டர்' கொலுவாகவே கொண்டாடுகின்றனர்.

பலரது இல்லங்களில் இன்று படிகளில் ஆசார அனுஷ்டானங்களின்படி பொம்மைகளை வைத்துவிட்டு, கீழே



paraparai



ஏதேனும் ஒரு கருத்தை, ஒரு 'தீமை' எடுத்துரைக்கும் வகையில் வைப்பது, அதன்படி ரங்கோலி வரைவது முதலிய பழக்கங்கள் பொதுவாக உள்ளன. ஆனால் இவர்கள் வீட்டில் ஒரு அறையில் கொலு பொம்மைகளும், மற்றொரு நீண்ட அறை முழுவதிலும், உலகத்தில் அந்த வருடம் நடந்த முக்கிய நிகழ்ச்சிகள் குறிப்பாக இந்தியாவில் நடந்த நிகழ்ச்சிகள் ஆகியவை சின்னச் சின்ன பொம்மைகளைக் கொண்டு சம்பவங்களாகச் சித்தரிக்கப்படுகின்றன.

"பத்து பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு முன்பு வரை வழக்கமாக எல்லோரும் வைப்பது போன்றுதான் நாங்களும் வைத் திருந்தோம். அந்த வருடம் எங்களது உறவினர் ஆஸ்திரேலியாவில் இருந்து நவராத்திரி சமயம் வருவதாக இருந்ததால், அவர்களை வியக்க வைக்கும்படி தரை அலங்காரம் இருக்க வேண்டுமென்று தீர்மானித்தோம். வியட்நாம் போர் முடிந்திருந்ததால் அதைச் சித்தரிக்க முயன்றோம். அதோடு, உலகத்தின் வரைபடத்தை எனது மகன்கள் தரையில் பெரிதாக வரைந்து, அதில் அந்தந்த நாட்டின் சிறப்பம்சங்களை பொம்மைகளாக வைத்தனர். உதாரணமாக டெல்லியில் குதுப்மினார், அமெரிக்காவில் கென்னடி ஸ்பேஸ் சென்ட்டர், ஆஸ்திரேலியாவில் கங்காரு, அன்டார்ட்டிகாவில் எஸ்கிமோஸ், தென் அமெரிக்காவில் சிவப்பிந்தியர்கள் போன்ற பல மாடல்கள் செய்து வைத்தனர். ஆஸ்திரேலியாவிலிருந்து வந்த உறவினர்கள் அசந்து போனார்கள்! அந்த வருடம் முதல் எங்கள் ஆர்வம் உலக நிகழ்ச்சிகள், குறிப்பாக இந்தியாவில் நடப்பவற்றை எடுத்துக்காட்டுவதில் அதிகமாயிற்று.



இதற்கு முன்னால் கூடத் தரை அலங்காரத்தில் என்னுடைய மகன்கள் சிறு குழந்தைகளாக இருந்த போது காக்கா - வடை கதை, தங்கள் பள்ளியில் நடந்த ரைம்ஸ் முதலியவற்றை சித்தரித்து வைத்தனர். அதன் பிறகு சற்று பெரியவர்களானதும்

• வினோத்



• விஜய்









**பொம்மைகள் குறைவாக இருக்கும் பட்சத்தில் இடைவெளியில் மாவிலை கொத்து வைத்து (பூஜாடியில்) வேண்டுமனால் உடன் அழகிய பூங்கொத்துகளும் சேர்த்து வைக்க கொலு பிரமாதமாக இருக்கும்.**

**- லக்ஷ்மி**

---

கைலாச மலையினை பஞ்சினால் செய்வது போன்ற முயற்சிகளை மேற்கொண்டனர். கொலுவில் கூடப் பாட்டி செய்த பால் பாசி மணி பொம்மைகள், அம்மா செய்த பாட்டில்களின் உள்ளே நடமாடும் பெண்மணி போன்றவை இடம் பெற்று வந்தன. எனது கணவர் எலெக்ட்ரிகல் பொறியாளரானதால் அனைத்திற்கும் வரிசை விளக்குகள் போட்டு அலங்கரித்துத் தருவார். எனக்கும் கைவேலைகளில் அதிக ஆர்வம் இருந்ததால் மணிகளைக் கொண்டு பொம்மைகள் செய்தும், சித்திரங்கள் வரைந்து வைத்தும் அலங்கரித்து வந்தேன்.

உறவினர்கள் வெளிநாட்டிலிருந்து வந்து பாராட்டிய பிறகு நம் நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளை சித்தரித்து அவர்களையும் மற்றவர்களையும் வியக்க வைப்பதில் என்னுடைய மகன்களின் கவனம் பாய்ந்தது. அதன்படி ஒரு வருடம் கொலுவில் முன்னாள் முதல்வர் திருமதி ஜெயலலிதா அவர்களின் வளர்ப்பு மகன் திருமணத்தை செய்து காட்டியிருந்தோம். தங்க நிற காகிதங்களால் நகைகள் செய்வது முதல், யானை குதிரை, அலங்கார வளைவுகள், தூண்கள் என அனைத்தையும் பொம்மைகளாக செய்து வைத்தோம். அடையாறு பகுதியில் நடந்த கொலு போட்டியில் இரண்டாவது பரிசு கிடைத்தது. அவ்வளவுதான்! என்னுடைய மகன்களின் உற்சாகம் மேலும் கூடியது.

அடுத்த வருடம் ஒலிம்பிக்ஸ் விளையாட்டினை மிகப் பெரிய அளவில் மைதானங்கள் முதல் விளையாட்டு வீரர்கள், வீராங்கனைகள், அவர்கள் பெற்ற பதக்கங்கள் போன்றவற்றை செய்து வைத்தோம். அந்த வருடம் வெளியாகி வெற்றி பெற்ற ஜுராசிக் பார்க் திரைப்படத்திலுள்ள அந்த பார்க்கினை பிளாஸ்டர் ஆப் பேரிஸ் களிமண் உதவியுடன், டைனோசர்கள், ஜீல், இரும்பு கதவு ஆகியவற்றை செய்து வைத்தனர். அந்த வருடம் பெங்களூரில் உலக அழகி விழா நடந்ததால் பெங்களூர் நகரத்தினை லால் பாக் பார்க், கப்பன் பார்க், விதான் சௌதா போன்றவற்றை செய்து உருவாக்கினர். அதில் உலக அழகிப் போட்டி நடந்ததை எடுத்து காட்டினர்.

அதற்கடுத்த வருடம் சென்னையில் போலீசார் திறம்பட செய்து முடித்த 'கபிலன் - ஷூட் அவுட்' நிகழ்ச்சியை செய்தனர். விநாயக சதுர்த்தி ஊர்வலம் ஒன்றில் ஒரு முறை கலவரம் நடந்த நிகழ்ச்சியை செய்து வைத்தனர். இதே வகையில் சென்ற வருடம் இந்தியா தனது ஐம்பதாவது சுதந்தர வருடத்தைக் கொண்டாடிய போது இந்தியாவின் முன்னேற்றத்தை சித்தரிக்க முற்பட்டனர். அதன் சாதனைகளான கொங்கன் ரயில்வே, பூனே - நாக்பூர் சாலையில் முப்பத்தி நான்கு கிலோ மீட்டர் தொலைவில் எண்பது ஆன்டென்னாக்களின் உதவியுடன் அமைத்துள்ள மிகப் பிரம்மாண்டமான மீட்டர் வேவ் ரேடியோ டெலெஸ்கோப், அண்டார்டிகாவில் அமைத்துள்ள தக்ஷிண கங்கோத்ரி ஸ்டேஷன் முதலியவற்றைச் சிறிய உருவகமாக செய்தனர்.

உலகில் நடந்த அதிர்ச்சி நிகழ்ச்சிகளான இளவரசி டயனாவின் மரண விபத்து, குஜராத்தில் பிளேக் கலவரம் ஆகியவற்றையும் செய்தனர். இவற்றோடு 'மார்ஸ்' ப்ளானெட்டில் ஒரு இந்தியன் முதலில் இறங்கி கொடியை நட்டு, One step for man, a giant leap for Indian என எழுதி வைத்தனர். இம்முறை அடையார் பகுதியில் நடந்த கொலு போட்டியில் முதல் பரிசு கிடைத்தது!

ஒவ்வொரு வருடமும் வித விதமான நிகழ்ச்சிகளை செய்து வைப்பதோடு, வீட்டில் காண வருவோருக்கு எடுத்துரைப்பதும் என்னுடைய மகன்கள்தான். அவர்கள் வீட்டில் இல்லாத நேரத்தில் கொலுவினை விவரமாக எடுத்துரைக்கக் கணிப் பொறியில் 'ஸ்லைட் ஷோ' வாகக் காட்டி வந்தனர். வெளிநாட்டில் உள்ள உறவினர்களுக்கு நிழற்படங்கள் எடுத்து அனுப்புவோம். இந்த முறை பரிசும் கிடைத்ததால், உலகில் பல இடங்களில் உள்ள உறவினர்கள் மட்டுமல்ல, ஆர்வம் உள்ள அனைவரும் பார்த்து ரசிக்க, இதனை வெப்சைட்டில் (Web site) E-mail: Volna@giasmda.vsnl.net.in என்ற முகவரியில் போட்டனர். இதைக் கண்டு பலர் மகிழ்ந்து பாராட்டினார்கள்.

கொலுவினை வைப்பது எங்கள் குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் வாழ்வின் முக்கியப்

இல்லதரசிகளுக்கு புதிய துணை
சமையல் கலையில் திருப்புமுனை
மில்க் பாய்லர், இட்லி குக்கர்,
வாட்டர் ஃபில்டர், குழிகரண்டி
எல்லாம் தந்திடும்

# Murugan

முருகன் மெட்டல் என்றாலே
முகம் மலரும் தன்னாலே













## முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்

21, பொன்னப்ப செட்டி தெரு, சென்னை — 3.
போன்: 5350182, 5343412

பங்காகும். இதற்காக என் குடும்பத்தினர், என்னுடைய தம்பி குடும்பத்தினர் மற்றும் கேரள மாநிலத்தைச் சேர்ந்த எனது இரு வளர்ப்பு மகன்கள் ஆகிய அனைவரும் உடம்பாலும், பொருளாதார வகையிலும் பாடுபடுவர். என்னுடைய தம்பி வேலையில் சேர்ந்து வாங்கிய முதல் சம்பளம் முதல் இந்நாள் வரை ஒவ்வொரு மாதமும் கொலுவில் வைக்க சாமான் வாங்கி வருவான். என்னுடைய மகன்கள் விளையாட்டு சாமான்களை வாங்கிக் கொண்டதே இல்லை. சிறுவர்களாக இருந்தது முதல் கொலுப் பொம்மைகள்தான் வாங்கி இருக்கின்றனர். இவற்றிற்கெல்லாம் மேலாக எனது வளர்ப்பு மகன் ருஷியாவில் படித்து வந்த சமயம் தனது படிப்பிற்கான உதவித் தொகையில் பல நாட்கள் பட்டினி கிடந்து, அங்கு பிரசித்தமான உள்ளிற்குள் உள் போடக்கூடிய சிறியது முதல் பெரியது வரையிலான பொம்மை மெகானேஸ் ஸெட் ஆகியவற்றை வாங்கி வந்தான். அங்கிருந்து அவன் வாங்கி வந்த பொருட்களே அவை இரண்டுதான். என்னுடைய கணவருடன் காசிக்குச் சென்ற போது கூட, "காசி பட்டுப்புடவை வேண்டாம். இங்கு கிடைக்கக் கூடிய அரிதான சிறு பொம்மைகள் போதும்" என்று வாங்கிக் கொண்டேன். என்னுடைய மகன்களான வினோத், விஜய் இருவரும் கணிப்பொறி படிப்பினை படிக்கின்றனர். அதில் விஜய் இந்த வருடம் வெளிநாட்டில் மேற்படிப்பிற்காக செல்கிறான். அவனிடமும் நாங்கள் அனைவரும் கூறியிருப்பது, 'அமெரிக்காவில் கொலுவில் வைக்க வித்தியாசமாக கிடைக்கும் பொம்மைகள் என்னவென்று பார்த்து வாங்கி வா என்றுதான்" என்கிறார் திருமதி. விஸ்வாம்பாள்.

பேட்டி : **ராஜ்யஸ்ரீ சந்திரசேகர்**

# நவராத்திரி ஒரு 'மினி எக்ஸிபிஷன்' மாதிரி!

**நவராத்திரியில் கொலுப்படிகளில் பொம்மைகள் வைத்தாயிற்று. பார்க்கும், விதவிதமாக மலை, பூந்தோட்டம், மிருகக்காட்சி சாலை என்று வைத்தாகி விட்டது! கொலு பார்க்க வருபவர்களை மேலும் உற்சாகப்படுத்தி மகிழ்விக்க என்ன செய்யலாம்?**

**"வாங்க வாங்க! எல்லோரும் வாங்க. "குழந்தைகளே! கொலு பொம்மைகளையெல்லாம் பாருங்க! அந்த மூணாவது படியிலே பெரிய மீசை வைச்சுக்கிட்டு தலைப்பாகை கட்டியிருக்கிறது யார் தெரியுமா? நம்ம சுப்ரமணிய பாரதியார்! அப்புறம் பக்கத்திலே இருக்கிற நேரு, மகாத்மா காந்தி, விவேகானந்தர்... எல்லாம் பார்த்தீங்களா? கீழே வரிசையா இருக்கிற அவதாரங்கள், அஷ்டலெக்ஷ்மிகள் (வரிசையாக அவற்றின் பெயர்களைச் சொல்ல வேண்டும்) பார்த்தாச்சா!**

**அதென்ன! செட்டியார் பொம்மை முன்னாடி விதவிதமான காய்கறிகள், பழங்கள். என்னென்னனு பாருங்க! அடுத்தது 'பார்க்' பார்க்கலாமா? அங்கே பாருங்க! அடேயப்பா எவ்வளவு பெரிய மலை! படிமேலே கோவில்!**

**அடுத்தது அந்த கூண்டுக்குள்ளே இருக்கிற மிருகங்களைப் பார்த்தீங்களா? அப்பா! பார்க்கவே பயமாயிருக்கு இல்லே? ஐ! இந்த பூங்காவிலே நிறைய பேர் இருக்காங்களே! ரோட்டிலே பாருங்க எவ்வளவு விதவிதமான கார், ஸ்கூட்டர், பஸ்ஸெல்லாம் போகுதுன்னு!"**

**இப்படியாக நீங்கள் அமைத்த கொலுவைப் பற்றின விளக்கங்களை வர்ணனைகளோடு அழகாகப் பேசி டேப்பில் பதிவு செய்து 'ஆன்' செய்து விடுங்கள். அப்படியே, நீங்கள் விரும்பினால் உங்களது கைவினைப் பொருட்களை (ஒயர், பாசி பொம்மைகள், ஊறுகாய், பொடி வகைகள் உள்பட) விற்க எண்ணினால் அதனையும் கண்காட்சி 'போல் வைத்து அதனையும் விளக்கி பேசி 'டேப்' செய்து போடுங்கள்.**

**'எங்கிருந்து குரல் வருகிறதென்று' ஆச்சரியத்துடன் உள்ளே நுழைபவர்கள் உங்களது இந்த புதுமையான வரவேற்பை ஏற்றுக் கொண்டு, ஒவ்வொன்றையும் ரசித்து மகிழ்வதோடு குழந்தைகளும் ஒரு மினி எக்ஸிபிஷனுக்கு வந்திருப்பது போன்ற உணர்வுடன் குதூகலிப்பார்கள். 'ஒரு கல்லில் ரெண்டு மாங்காய்!'**

**— உமா நாராயணசுவாமி**



"எவ்வளவு ஸ்மார்ட்!
என்னவொரு சுறுசுறுப்பு!
எனக்கு அவங்களை
ரொம்பவும் பிடிக்கும்."

உஷா உச்சரைப் பற்றி பலரும் இப்படித்தான் சொல்கிறார்கள். இவ்வளவிற்கும் உஷாவிற்கு மிஸ் இந்தியா போன்ற அளவுகளோ பனிரென்ற சிவப்பழகோ ஏதும் இல்லை. ஆனாலும் பிறரை வசீகரிக்கத்தக்க ஏதோ ஒன்று அவரிடம் உள்ளது. அந்த ஏதோ ஒன்று உங்களிடம் இருந்து விட்டால் அப்புறம் "எவ்வளவு ஸ்மார்ட்!" என்ற பாராட்டு மழைதான். எப்படி? பார்ப்போமா?

**ஸ்மார்ட்னெஸ் என்பது என்ன?**

மற்றவரோடு பழகும் விதம், பேசும் விதம், உங்கள் உடை, இன்னும் பலவும் ஸ்மார்ட்னெஸின் அடிப்படையாகும். ஒருவரின் கண்ணழகோ முடியழகோ உடலழகோ அல்ல நீங்கள் நடந்து கொள்ளும் முறையே பிறரை வசீகரிக்கின்றது.

# ஹை! எவ்வளவு

பிறவியில் அமைந்த முகமோ உடல் வாகோ மாற்ற முடியாதது. ஆனாலும் நமக்கே நமக்காக சில பிரத்யேக முறைகள் உண்டு. எல்லாரும் அழகிகளாக முடியாதுதான். சின்னச் சின்ன குறைகள் யாரிடம் இல்லை? அதைப் பெரிதுபடுத்தாமல் திறமைகளை வளர்த்துக் கொள்வதே அழகு.

திறமை என்பது நீரில் மிதக்கும் ஐஸ்க்யூப் போன்றது. கொஞ்சம்தான் வெளியில் தெரியும். பாக்கித் திறமையை நாம்தான் வெளிக் கொணர வேண்டும்.

**எப்படி மற்றவர்களை நம்பால் கவர்வது?**

1. எப்பொழுதும் ஏதோ ஓர் குறை. ஓர் வருத்தம். காரணம் திருப்தியடையாமைதான். முகம் மனதின் கண்ணாடியல்லவா அதனால் முகத்திலும் ஒரு சோர்வு. வாட்டம். மனநிறைவு இல்லாத இவர்களை பேரழகியானாலும் ஸ்மார்ட் என்று சொல்லவே மாட்டார்கள்.

2. "நான் இப்படி பேசினால் அடுத்தவர் ஏதாவது நினைப்பார்களோ? கமெண்ட் அடிப்பார்களோ?" இந்த பயம் எதற்கு? நாம் நமக்காக வாழலாமே.

3. சிலர் முகம் நமக்குச் சவால் விடுவதாக இருக்கும். "என்னை சிரிக்க வைச்சுடு பார்ப்போம்." இப்படி உம்மணா மூஞ்சிகளை யார் விரும்புவார்கள்?



4. சிலருக்கு உலகில் உள்ள அத்தனை டென்ஷன்களும் இருக்கும். டென்ஷன் உங்கள் அழகைக் குறைத்து விடும்.

5. மற்றவர்கள் பேசுவதைக் கேட்கும் போதே நெற்றியில் கோடுகள், உதட்டில், சுழிப்பு, முகமே சுளுக்கியது போல் தோற்றம். யார் இவர்களை விரும்புவார்கள்?

சிரித்த முகமாய் தெளிவாய்ப் பேசுங்கள். எளிதில் நண்பர்கள் கிடைப்பார்கள்.

**எப்படி பழகுதல் ஸ்மார்ட்டாகும்?**

1. சில பெண்களைப் பார்த்தால், "என்னாச்சு?" என்றே கேட்கத் தோன்றும். அப்படியொரு அவதிக்குள்ளானது போன்ற தோற்றம். பொது இடங்கள், வைபவங்களில் அப்படியிருந்தால் எப்படி. சாந்தமாகப் பழகினால்தான் நீங்கள் கவனிக்கப்படுவீர்கள்.

2. நிற்கும்போது உட்காரும்போது நடக்கும் போது எல்லா நேரமும் நாம் கவனிக்கப்படுகிறோம். பொது இடங்களில் சபைகளில் கால்களை நீட்டிக் கொண்டு அகட்டி வைத்துக் கொண்டு கால்மேல் கால் போட்டு எல்லாம் அமர்தல் மதிப்பைக் குறைத்து விடும். கால்களை ஒரு புறம் சரித்தோ பாதங்களை க்ராஸ் செய்தோ அமரலாம்.

3. நின்று பேசும்போது கால்விரலால் தரையைத் தேய்ப்பதோ, கோலம் போடுவதோ கூடாது. நிமிர்ந்து நேராகப் பார்த்துப் பேசலாமே. கைகளால் அபிநயம் பிடிப்பதைக் குறைத்தால் நன்றாக இருக்குமே.



**உங்கள் உடையலங்காரம் எப்படி?**

எல்லாம் இருந்தாலும் உடையலங்காரம் ஓ.கே. ஆக வேண்டும். ஆள் பாதி ஆடை

# ஸ்மார்ட் நீங்கள்!

பாதியல்லவா!

1. உங்களுக்குப் பிடித்ததை அல்ல உங்களுக்கு நல்ல தோற்றம் தரும் ஆடைகளே உடுத்த வேண்டும். பாஷனாக இருப்பதை விட ஸ்மார்ட்டாக இருப்பதே சிறந்தது.



2. உங்கள் உடல்வாகு, நிறம் இவற்றைக் கருத்தில் கொண்டே உடைகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

3. ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்கும் சரியான ஆடையைத் தேர்ந்தெடுக்க வேண்டும். பிக்னிக்கிற்கு பட்டோ, காட்டனோ சரிவராது. சிந்தடிக் சேலைதான் சரி. எப்போதும் பகட்டு அல்ல சிம்பிள் பட் எலிகன்ட் என்பதே சிறந்தது.

4. உங்கள் பருவம் வயது இவற்றை மனத்தில் கொண்டே ஆடை, அணிகலன்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். சிகையலங்காரமும் தகுந்த மாதிரி இருந்தால் மதிப்பு பல மடங்கு உயராதா? முப்பதுகளில் டீனேஜ் வேடம் எதற்கு? ஒவ்வொரு பருவத்திற்கும் அதற்கான அழகுகள் உண்டு.

5. இன்று ஒப்பனை அவசியமானதொன்றாகி விட்டது. அதற்காக அதிக ஒப்பனை வேண்டாம். எளிமையின் அழகே அழகு.

ஒளிவீசும் கண்கள். நிமிர்ந்த நன்னடை. புன்னகை பூத்த பூ முகம். இவை இருந்தால் யாருமே அழகிதான். விரும்பப்படுவள்தான். மாறாக வாய்நாற்றமும் வியர்வை நாற்றமும் சுத்தமின்மையும் பேரழகியையும் ஒன்றுமில்லாதவளாக்கி விடும்.

**உங்கள் பேச்சுத்திறன்.**

சிலரிடம் "சௌக்கியமா?" என்று கேட்டாலே போதும். பெரிய புராணமே பாடிவிடுவார்க்ன். வேறு சிலர் வாய் திறந்தால் மூடவே மாட்டார்கள். அடுத்தவர் கூறுவது எதுவுமே காதில் ஏறாது. எப்பொழுதும் மற்றவரை குறை கூறிப் பேசுவார்கள். இக்குணங்கள் அமையப் பெற்றோர் எப்படி ஸ்மார்ட்டாக முடியும்?

உங்களுடைய பேச்சுத்திறன் ஸ்மார்ட்னெஸின் உரைகல் என்றால் மிகையாகாது. உங்கள் பேச்சு ரசிக்கத் தக்கதாக வேண்டுமானால் அறிவு விசாலமாயிருக்க வேண்டும். சூரியனுக்குக் கீழே உள்ள அனைத்தும் அறிந்தால்தான் பேச முடியுமென்பதில்லை. ஆனாலும் சங்கீதம் இலக்கியம், கலைகள், அரசியல் எல்லாமே கொஞ்சமே கொஞ்சமாவது தெரிய வேண்டியது அவசியம். உங்கள் புலமை முழுதும் கொட்டித் தீர்க்காதீர்கள். எதெற்கெடுத்தாலும் வாதாடாதீர்கள்.

**திறமைகளை எப்படி வளர்ப்பது?**

தினமும் படுக்கும் முன் இன்று எப்படி நடந்து கொண்டோம்? எங்காவது இடறினோமா? எனில் ஏன்? எப்படி திருத்துவது என யோசியுங்கள். சுய பரிசோதனை உங்களை முன்னேற்றப் பாதைக்கும் அழைத்துச் செல்லும்.

எதையும் எதிர் கொள்ளும் மனோ தைரியம், காலம் அறிந்து செயல்படல் இவை ஸ்மார்ட்னெஸின் அடையாளங்கள். மன உறுதி கைக்கூடினால் மட்டுமே விமரிசனங்களால் காயப்படாமல் இருக்க முடியும். குற்ற உணர்வு அண்டாது. இதற்கு தியானம் பெரிதும் உதவும்.

கரையில் நின்று நீந்துவது எப்படி? என்று படித்தால் மட்டும் நீச்சல் வந்து விடுமா? திறமைகளை வளர்க்க முயன்று செயல்பட வேண்டும். அப்புறம் உங்களை பார்த்து எல்லாரும் என்ன சொல்வார்கள் தெரியுமா? "ஹை எவ்வளவு ஸ்மார்ட் நீங்கள்!"

— சாமனி

# அந்த சில நாட்களில் வேதனை குறைவாகவா இருந்தது?

அந்த சில நாட்கள் என்றாலே, நம்மில் பலருக்கு சங்கடமும் வேதனையும் தான். தவிர, தொடைகளின் மென்மையான சருமத்தின் மீது சானிட்டரி நாப்கின் உரசுவதனால் ஏற்படும் எரிச்சலால் நிலைமை இன்னும் மோசமாகிறது. ஆனால் இனிமேல் அப்படி இல்லை. கலக்கமும் வேதனையும் தரும் நாப்கின் ரேஷ்களை லிசென்ஸா கொண்டு குணப்படுத்துங்கள். தடவிய உடனேயே லிசென்ஸா குளுமையும் இதமும் தருகிறது. மிகக் கடுமையான எரிச்சலையும் குணப்படுத்தும் வண்ணம் கிருமிநாசினிகளும் இதர பொருட்களும் கொண்டு விசேஷ முறையில் தயாரிக்கப்படுகிறது லிசென்ஸா. வெப்பம், வியர்வை மற்றும் இறுக்கமான பேண்ட்டீஸ்களினால் ஏற்படும் எரிச்சல்களிலிருந்து நிவாரணம் பெற இந்த மென்மையான ஆயிண்ட்மெண்டை பயன்படுத்தலாம். லிசென்ஸா முற்றிலும் பாதுகாப்பானது. 60 ஆண்டுகளுக்கும் மேலாக சரும வியாதிகளை குணப்படுத்துவதில் புகழ்பெற்றது. லிசென்ஸா உங்கள் துணிகளில் கறை உண்டாக்குவதில்லை. அந்த சில நாட்களைப் பற்றி எதுவும் செய்ய முடியாது என்றாலும் லிசென்ஸா உங்கள் முகத்தில் புன்னகையை வரவழைக்கும்.

NEW LICHENSA® Stain Free

**லிசென்ஸா பித்தவெடி, வெடிப்புக்கள், வண்ணாண் படை, நமைச்சல் மற்றும் கை-கால் விரல்களுக்கு இடையே ஏற்படும் இன்ஃபெக்ஷனை குணப்படுத்துவதில் பெயர்பெற்ற ஆயிண்ட்மெண்ட்.**

For more information on skin problems, write to P.O. Box No. 1994, Chennai-600 001

இது டாலர் கம்பெனி தயாரிப்பு.

# ப்ரச்னையா..

நமது உள்மனதின் ஆற்றல்களை நமது விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளப் பயன்படுத்தும் வழிமுறைகளைத் தெரிந்து கொள்ளுமுன் இது சம்பந்தமான மேலும் சில உண்மைகளையும் விவரங்களையும் தெரிந்து கொள்வது நலம். நாம் ஏற்படுத்திக் கொள்ள விரும்பும் உள்மனத் தொடர்பிற்கு இது மிகவும் உதவியாக இருக்கும்.

நம் உள் மனதின் ஆற்றல் ஆக்கபூர்வமான விஷயங்களுக்கு மட்டுமின்றி, எதிர்மறை விளைவுகளுக்கும் காரணமாய் அமைந்து விடும் சந்தர்ப்பங்களைப் பற்றியும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். இதைச் சரியாகப் புரிந்து கொண்டு விட்டால்தான் நாம் நமது உள்மனம் என்ற சேவகனைச் சரியான முறையில் நன்மை பயக்கும் விதமாகப் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

நாம் நமது உள்மனதிற்குக் கட்டளை பிறப்பிக்கு முன் நமது வெளி மனதை அயரச் செய்ய வேண்டும் என்று படித்தோம். கட்டளையைச் சொல்லும் விதம் பற்றியும் நமக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஏற்கனவே நமது உள்மனதில் எதிர்மறைவான எண்ணங்களும், கருத்துகளும், ஆக்கபூர்வமற்ற 'எண்ணமெழுப்புதல்களும்' (Suggestions) சுயமாகவும், பிறர் மூலமாகவும் விதைக்கப்பட்டிருக்குமேயானால், இப்போது நாம் பிறப்பிக்க விரும்பும் கருத்துக்களை, கட்டளைகளை நமது உள்மனம் ஏற்றுக் கொள்ளாது.

இது எப்படியென்றால், அடர்ந்த, இருள் சூழ்ந்த காட்டுப்பகுதியாக இருக்கும் நமது உள்மனதை முதலில் சீர்திருத்தி, செம்மைப் படுத்தி, அதன் பிறகே நாம் அங்கு நுழைவதற்கான பாதைகளை அமைத்துக் கொள்வதற்கு ஒப்பாகும். முட்செடிகளாகவும், விஷத் தாவரங்களாகவும் புதர் மண்டிக் கிடக்கும் நமது உள்மனதிற்கு இந்த நிலை ஏற்பட்டது எவ்வாறு? சில உதாரணங்களைப் பார்க்கலாம்.

இது நிஜமாக நடந்த ஒரு நிகழ்ச்சி. 'ரீடர்ஸ் டைஜெஸ்ட்' என்ற பிரசித்தி பெற்ற ஆங்கில மாத இதழில் வெளியான செய்தி. ஒரு மேல் நாட்டுப் பெண்மணி கருவுற்றாள். ஆனால் அவளுக்குக் குழந்தை பெற்றுக் கொள்ளவே விருப்பமில்லை. அவள் விருப்பத்திற்கு எதிராக இந்தக் கருத்தரித்தல் ஏற்பட்டு விட்டது. கருவைக் கலைத்து விட அவள் மேற் கொண்ட முயற்சிகள் அனைத்தும் பலனளிக்காமல் போன நிலையில் அவள் வெறுப்பு முழுவதும் அவள் வயிற்றில் வளர்ந்து வரும் சிசுவின் மேல் திரும்பி விட்டது. 'இந்தச் சனியனைச் சுமக்க வேண்டியிருக்கிறது. யார் கேட்டார்கள் இது வேண்டுமென்று'' என்று சதா சர்வகாலமும் பிறக்கப் போகும் சிசுவைத் திட்டித் தீர்த்த வண்ணமிருந்தாள். குழந்தையும் பிறந்தது; ஆனால் தாயிடம் பால் உண்ண குழந்தை மறுத்து விட்டது! எவ்வளவோ முயன்றும் யாராலும் அந்தக் குழந்தையை அதன் தாயிடம் பால் உண்ணச் செய்ய முடியாத நிலையில் அந்தக் குழந்தையைக் காப்பாற்ற ஒரு செவிலித் தாய் நியமிக்கப் பட்டாள்.



எஸ்.ஜி. ஜெயராமன்

பேறு காலத்தில் ஒரு தாயின் மன உணர்வுகள் அவள் சுமக்கும் சிசுவை நேரிடையாகப் பாதிக்கிறது என்பது இதனால் விளங்குகிறதல்லவா? இந்தப் பாதிப்பு நன்மை தரக் கூடியதாக அமைந்து விட்டால் சம்பந்தப்பட்ட அனைவருக்குமே மகிழ்ச்சிதான். ராட்டிய வீரர் சிவாஜி, மகாபாரத அபிமன்யூ ஆகியோர் பிற்காலத்தில் சாதிக்க முடிந்த வீர தீரச் செயல்களுக்கு அவர்களின் தாய்மார்கள் கருவுற்றிருந்த காலத்தில் படித்த, கேட்ட வீர வரலாறுகள் ஆதாரமாயிருந்தன ன்றும் படித்திருக்கிறோம்.

பிறக்கும் குழந்தைகள் பிற்காலத்தில் அறிவாளியாக, சான்றோனாக, சாதனையாளனாக ஆவதற்கும், அல்லது மந்தபுத்தி, பாவச் செயல்கள் புரிய அஞ்சாமை, தன்னம்பிக்கையற்றிருப்பது போன்ற எதிர் மறைக் குணங்களைக் கொண்டிருப்பதற்கும் பேறு காலத்தில் தாய்மார்கள் கொண்டிருக்கும் மனநிலையே அடிப்படைக் காரணமாக அமைகிறது. தாய்மார்களின் கணவர்களும் இதை உணர்ந்து செயல்பட வேண்டும்.

கர்ப்பமுற்றிருக்கும் பெண்கள் கூடுமான வரை தங்களைச் சந்தோஷமாக வைத்துக் கொள்ள வேண்டும். 'டென்ஷன்' இல்லாமல் இருக்க முயல வேண்டும். கணவன்மார் இதற்கு ஒத்துழைப்புத் தர வேண்டும். பிறக்கப் போகும் குழந்தையின் நலம் கருதியாவது தங்களுக்குள் ஏற்படக்கூடிய பூசல்களை வளர விடாமல் தடுத்துக் கொள்ள வேண்டும். பெண்கள் டி.வியில் 'திகில்' தொடர்கள், வன்முறைக் காட்சிகள், படங்கள் ஆகியவற்றைப் பார்ப்பதைத் தவிர்க்க வேண்டும். இம் மாதிரியான புத்தகங்களைப் படிப்பதையும் விலக்க வேண்டும்.

குழந்தை பிறந்து வளரத் தொடங்குகிறது. குழந்தையின் 7 வயது வரை அதன் ஆழ் மனம் திறந்திருக்கும். இப்போதுதான் பெற்றோர்கள் மிக மிக எச்சரிக்கையுடனிருக்க வேண்டும். உங்கள் குழந்தையைப் பிற குழந்தைகளோடு ஒப்பிட்டு, குறை கண்டுபிடிக்காதீர்கள். மேலும் இரண்டு வெவ்வேறு குழந்தைகளை ஒப்பிடும்போது அவைகளுக்கிடையே பொதுவான அம்சங்கள் இருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும். ஒரு பள்ளி ஆசிரியரின் அல்லது கல்லூரி ஆசிரியரின் குழந்தைக்கும், என்ஜினியர் அல்லது வேறு பதவி வகிப்பவர் வீட்டுக் குழந்தைக்கும் சூழ்நிலை வேறுபாடுகள் உள்ளன.

உங்கள் குழந்தை நன்றாகப் படிக்கவில்லை என்றால் அதன் காரணம் என்ன என்ற தேடுதலை உங்களிடமே முதலில் துவக்குங்கள். குழந்தை நன்றாகப் படிப்பதற்கான சூழ்நிலையை உருவாக்கித் தாருங்கள். அதை விட்டு, 'அவன் எப்படிப் படித்து மார்க் வாங்குகிறான் பார், நீயும் இருக்கிறாயே' என்பது போன்ற வாசகங்களைப் பேசுவதைத் தவிர்க்க வேண்டும். இல்லையென்றால் உங்கள் குழந்தை காலப் போக்கில் ஒரு 'அக



புலாவ் செய்யும்போது அரிசிக்கு 2 பங்கு தண்ணீர் வைக்கிறோம். அதையே ஒன்றரை பங்கு தண்ணீரும் அரை பங்கு பாலும் கலந்து அரிசியை வேக வைத்தால் மிகவும் ருசியாகவும் வாசனையாகவும் இருக்கும்.

— எஸ். பட்டம்மா

நோக்கி' (INTROVERT) ஆக மாறி விடும். அதன் விளைவு குழந்தைக்கும் உங்களுக்கு மிடையே ஒரு திரை விழுந்து விடும். இதே போல் அடிப்பதும், திட்டுவதும் குழந்தை களை நல்லவழியில் செலுத்தாது. பெற்றோர்கள் அநுசரணை இல்லாத குழந்தை கள்தான் கெட்ட சகவாசம், விரும்பத்தகாத பழக்க வழக்கங்கள் ஆகியவைகளுக்கு ஆளாகி விடுகின்றனர்.

எத்தனை பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை 'நீ எங்கே உருப்படப் போறே', 'அவனைப் பார், எப்படிப் படிக்கிறான், நீ ஒரு உதவாக்கரை, நீ கண்டிப்பா முன்னுக்கு வர மாட்டே, மூட்டை தூக்கத்தான் லாயக்கு' என்று இவ்வாறெல்லாம் திட்டித் தீர்ப்பதைக் கேட்டிருக்கிறோம். நம் குழந்தைகளுக்கு நாம் இதைவிட மகத்தான துரோகம் ஏதும் செய்ய முடியாது.

இம்மாதிரியான சொற்களும், வசவுகளும் மிக மிக சக்தி வாய்ந்த எண்ணத் தூண்டல்கள் (Suggestions) என்பதையும், இவை உங்கள் குழந்தைகளின் உள் மனதில் மிகவும் வலுவாகப் பதிவாகி, அவர்கள் எதுவாக அழைக்கப்படுகிறார்களோ அதுவாகவே மாறி விடுவார்கள் என்பதை நன்றாக உணருங்கள். தாழ்வு மனப்பான்மை என்பது ஒரு ஆற்றல் மிக்க எதிர்மறை சக்தி. நமது குழந்தைகளின் தாழ்வு மனப்பான்மைக்கு நாமே வித்திடக் கூடாது. ஏன் இந்த விஷயத்தைப் பற்றி இங்கே இவ்வளவு விரிவாகப் பேசுகிறோம் என்றால் உங்களில் மிகப் பெரும்பாலோர் தங்களது குழந்தைப் பருவத்தில் அல்லது பள்ளிப் பருவத்தில் இம்மாதிரியான எதிர்மறை எண்ணத் தூண்டல்களுக்கு ஆளானவர்களாயிருக்கக் கூடும். நீங்கள் மேற்கொள்ளப் போகும் உங்கள் உள் மனத் தொடர்பிற்கான பயிற்சிக்கு மேற் சொன்ன உதாரணங்கள் இடையூறு உண்டு பண்ணும்.

'முயற்சியை நேருக்கு மாறாக்கும் விதி' என்ற The Law of Reversed Effort என்ற ஒன்று இருக்கிறது. 'நமது உள் மனதில் ஆழமாகப் பதிந்து விட்ட ஒரு எதிர்மறை கருப்பொருளை அகற்றி விடுவதற்காக நாம் மேற்கொள்ளும் அனைத்து முயற்சிகளும் நாம் விரும்பும் பலனைத் தராததோடு, நாம் அகற்ற விரும்பும் கருப்பொருளை மேலும் வலுவானதாக்கி விடும்' என்பதுதான் இது.

இந்த விதியை ஒரு எளிய உதாரணத்தால் விளக்கலாம். ஒருவர் சைக்கிள் ஓட்டப் பழகிக் கொண்டிருக்கிறார். சுமாரான பழக்கத்திற்குப் பிறகு சைக்கிளைப் பிறர் உதவியின்றித் தானே சற்றுத் தடுமாற்றத்துடன் ஓட்டிச் செல்கிறார். வழியில் சாலையின் நடுவில் ஒரு பெரிய கல் கிடப்பதைப் பார்க்கிறார். இந்தக் கல்லின் மீது மோதி விடக் கூடாது என்ற பயத்தில் சைக்கிளை அப்படி இப்படியுமாக திருப்பிக் கடைசியில் நேரே சென்று மிகச் சரியாக அந்தக் கல்லின் மீதே மோதி விழுந்து விடுகிறார்! இதே போல்தான் முயற்சியை நேருக்கு மாறாக்கும் விதியும் செயல்படுகிறது.

உங்கள் குழந்தைப் பருவத்தில் உங்கள் பெற்றோர்களால் உங்கள் உள் மனதில் விதைக்கப்பட்டதும், பின்பு வளரும் பருவத்தில் உங்கள் உள் மனதில் நீங்களாகவே ஏற்படுத்திக் கொண்டதும் என ஆழமாகப் பதிவாகிவிட்ட எதிர்மறை கருப்பொருட்கள், உங்கள் உள்மனத் தொடர்பிற்கான பயிற்சிக்கு இடையூறு செய்யாவண்ணம் அகற்றப் பட்டால்தான் நீங்கள் விரும்பும் முடிவு சித்திக்கும்.

உதாரணமாக சொந்தமாக வீடு கட்டிக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறீர்கள். ஆனால் ஏற்கனவே உங்கள் உள் மனதில் சொந்த வீடு கட்டுவது என்பது உங்களால் இயலாத ஒன்று என்பதாக ஆழப்பதிந்து விட்டதாக வைத்துக் கொள்வோம். இந்த எதிர்மறைக் கருத்தை முதலில் பலவீனப் படுத்தி அப்புறப் படுத்தாமல் நீங்கள் உங்கள் உள்மனதிடம் உங்களின் தற்போதைய விருப்பமான வீடு கட்டும் திட்டத்தைத் தெரிவித்தீர்களானால் அது உங்கள்

உள்மனதால் நிராகரிக்கபபடுவது மட்டுமின்றி, 'வீடு கட்ட நம்மால் இயலாது' என்பதான உங்களின் ஏற்கனவே பதிவாகி விட்ட கருத்தை மேலும் வலுப்படுத்தி விடும்.

பின் எப்படித்தான் எங்கள் உள்மனதோடு நாங்கள் தொடர்பு கொண்டு எங்கள் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்வது என்று நீங்கள் கேட்பது புரிகிறது. இதற்கான பதிலை இனி பார்க்கலாம்.

உங்களை நெடுங்காலமாக வசப்படுத்தி, ஆட்டிப் படைக்கும் எதிர்மறை எண்ணங்கள், உணர்வுகள், விரும்பத்தகாத பழக்க வழக்கங்கள் ஆகியவைகளை சுய விசாரணை செய்து, அடையாளம் கண்டு, ஒரு தாளில் எழுதுங்கள். 'இந்த விநாடி முதல் எனது இந்தப் பழக்க வழக்கங்கள் என்னை விட்டு நீங்கி விட்டன. இந்த வினாடியிலிருந்து நான் ஒரு புதிய பெண்' என்று தீர்க்கமாகச் சிந்தித்து அந்தத் தாளை நெருப்பிலிட்டு தீக்கிரையாக்கவும். அடிக்கடி இவ்வாறு செய்து வரவும். உங்கள் நம்பிக்கை சற்றும் தளரக் கூடாது. அசைக்க முடியாத நம்பிக்கையோடு நீங்கள் இதைச் செய்து வந்தால், உங்களின் எதிர்மறை எண்ணங்கள் போன்ற அனைத்தும் விரைவில் உங்களை விட்டு நீங்கி விடும். முட்புதர்களாக நிரம்பிக் கிடந்த உங்கள் உள் மனதிற்குச் செல்லும் பாதை இப்போது சுத்தமாகி விட்டது!

இதைச் செய்து வரும்போதே உங்களுடைய எண்ணங்களை ஆக்கபூர்வமாக்கிக் கொள்ள வேண்டும். உங்களுடைய எண்ணங்களை உங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வர வேண்டும். மிக மிக அவசியமானால் தவிர ஜாதகம், ஜோசியம் பார்ப்பதைத் தவிர்ப்பது நல்லது. ஏனெனில் உங்கள் வருங்காலப் பலன்களாகச் சொல்லப்படுபவை நன்மையானதாக இல்லாவிட்டால் அவையே எதிர்மறை கருப் பொருளாக உங்கள் உள்மனதில் பதிவாகி விடும். மேலும் நமக்கு வழக்கமாக ஏற்படும் உடல் அசௌகரியங்களைப் பற்றிப் பேச நேர்ந்தால் இறந்த காலச் சொற்றொடர்களைப் பயன் படுத்த வேண்டும். உதாரணமாக 'நான் நன்றாகத் தூங்குவதில்லை' என்று நிகழ்காலத்தில் கூறுவதைத் தவிர்த்து, 'நான் சமீபகாலமாக நன்றாகத் தூங்காமலிருந்தேன்' என்று சொல்லுங்கள். ஏனெனில் 'நான் நன்றாகத் தூங்குவதில்லை' என்று சொல்லும்போது இந்த வாக்கியம் உங்கள் நிகழ்கால, எதிர் காலங்களை ஒன்றாக்கி, 'இன்று இரவு நான் நன்றாகத் தூங்க மாட்டேன்' என்ற எதிர்மறை விளைவைத் தோற்றுவிக்கிறது. இது மட்டுமல்ல, 'நலமா?' என்று யாரும் உங்கள் நலன் விசாரித்தால், 'மிக்க நலம்' என்று மட்டுமே சொல்லுங்கள். உங்கள் உடல் பிரச்னைகளைப் பேசுவதைத் தவிர்க்க வேண்டும். இதனால் எதிர்மறை எண்ணத் தூண்டல்களை விலக்கி விடலாம்.

எவ்வளவுக்கெவ்வளவு நீங்கள் இவற்றை உளமாரவும் நம்பிக்கையாடும் நடைமுறைப் படுத்துகிறீர்களோ, அவ்வளவுக்கவ்வளவு சிரமமின்றி உங்கள் உள் மனதை நீங்கள் வெளிக் கொணரலாம். (outcropping of the sub-conscious)

ஒரு வழியாக, எதிர்மறைப் 'பழையன கழிதலும்' ஆக்கபூர்வமான 'புதியன புகுதலும்' உங்களால் சாதிக்கப்பட்டு விட்டது. இப்போது மேற்கொண்டு நீங்கள் செய்ய வேண்டியது, எந்த ஒரு கருத்தை, விருப்பத்தை அல்லது கட்டளையை உங்கள் உள் மனதிற்கு நீங்கள் சொல்ல விரும்புகிறீர்களோ, அதைக் கடினப் பிரயாசையுடன் முயற்சிக்காமல் தெரிவிக்கத் தெரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் 'கடினப் பிரயாசை, 'முயற்சியை நேருக்கு மாறாக்கும் விதி' என்று நாம் மேலே படித்த விதியை களத்தில் இறக்கி விடும். ரொம்பவும் அலட்டிக் கொள்ளாமல் அதே சமயம் உரிய, தேவையான அழுத்தத்துடன் உங்கள் கட்டளையை உங்கள் உள்மனதிற்கு பிறப்பிப்பது எவ்வாறு, இதற்கான உகந்த வேளை எது போன்ற விஷயங்களை இனி வரும் பகுதிகளில் பார்க்கலாம்.

(தொடரும்)



சேப்பங்கிழங்கு ரோஸ்ட் செய்யும்போது முதலில் ஒரு ஸ்பூன் கடலை மாவை எண்ணெயில் வறுத்து விட்டு கிழங்கைப் போடுங்கள். ரோஸ்ட் ரொம்ப மொறு மொறு என்று இருக்கும்.

— மரகதம்

# சாதனைகளுக்கு ஒரு ஜனாபாய்!





அறுபது வயதாகி விட்டது. இனி 'அக்கடா' என்று இருக்கலாம் என்று நினைக்கும் பல பெண்களின் நடுவே, அறுபது ஒரு வயசா, அதற்கு மேலும் பொறுப்பை ஏற்கலாம் – கல்வி, சமூக சேவைகளைச் செய்யலாம் என்று நினைத்து செயலாற்றி வருபவர் டாக்டர் ஜனாபாய் கிரி அவர்கள். பயோகெமிஸ்ட்ரியில் டாக்டரேட் பட்டம் வாங்கியவர். ஏறக்குறைய முப்பது வருடங்களாக தனது வாழ்க்கையை, கோயம்புத்தூரில் உள்ள பெண்கள் கல்லூரியான அவினாசிலிங்கம் ஹோம் சயன்ஸ் இன்ஸ்டியூட்டுடன் பிணைத்துக் கொண்டிருக்கிறார்.

ஆசிரியர் தினம் கொண்டாடப்படும் இச்சமயம் ஆசிரியர் பணிக்கே பெருமை சேர்க்கும் இவரைப் பற்றித் தெரிந்து கொள்ளலாமே!

ஆரம்பத்தில் ஹோம் சயின்ஸ் பட்டப் படிப்பு மாத்திரம் (1969-88) தொடங்கப்பட்டபோது பேராசியராகவும், ஹெட் ஆஃ தி டிபார்ட்மெண்ட்டாகவும் பதவி வகித்த இவர், அந்த கல்வி நிறுவனப் பெண்களுக்காக ஹோம் சயன்ஸில் மேல் பட்டப் படிப்பு தொடங்கியபோது அதே கல்வி நிறுவனம் 'டீம்டு யூனிவர்சிடி' யாக அறிவிக்கப்பட்டபோது மேற்கூறிய பதவிகளோடு 'டீன் ஆஃப் ஸயன்ஸ்' ஆகவும் இருந்திருக்கிறார்...

வயது அறுபது ஆனது–

இவரது சேவையை அந்த கல்வி நிறுவனத்திற்கு விட மனமில்லை. அறுபது வயதுக்கு மேல் பேராசிரியராக வேலை செய்ய பல்கலை கழக விதிகள் அனுமதிக்கவில்லை.

ஆகவே–

அவருக்கு, விதிகளுக்குட்பட்ட இன்னொரு பொறுப்பு தரப்பட்டது.

ஆமாம். அந்த யூனிவர்சிடியின் 'கண்ட்ரோலர் ஆஃப் எக்ஸாமினேஷன்ஸ்' பதவி. அறுபத்தைந்து வயது வரை இருக்கலாம். அந்தப் பதவியையும் வகித்தார்.

அதற்கு மேல் அந்தப் பதவியை வகிக்க பல்கலைக் கழக விதி அனுமதிக்கவில்லை. மறுபடியும் அவரது சேவையைவிட அந்தக் கல்வி நிறுவனத்திற்கு மனமில்லை. புதிய பொறுப்பும், பதவியும் தரப்பட்டது. இது தவிர அவினாசிலிங்கம் கல்வி நிறுவனங்கள் அடங்கிய ஒரு டிரஸ்டின் டெபுடி டைரக்டராக 1995 முதல் இன்று வரை தற்போது பணி ஆற்றி வருகிறார். அறிவு என்னும் ஒளியை ஏற்றும் கல்விப் பணியை தொடர்ந்து வரும் இவரது வாழ்க்கைப் பாதை மிகவும் மென்மையானதல்ல.

டாக்டர் ஜனாபாய் கிரி அவர்கள் கெமிஸ்ட்ரியில் ஹானர்ஸ் (BSc Hons) பட்டம் வாங்கியது 1952-இல். இந்தக் கால கட்டத்தில் பெண்கள் கல்லூரியில் படிக்கும் வழக்கமே மிகவும் குறைவு. அதிலும் விஞ்ஞானப் பாடங்களை எடுத்துப் படிப்பது

அரிது. அதனிலும் அரிது விஞ்ஞான மேற்படிப்பு. அதனைக் காட்டிலும் அரிது பயோ கெமிஸ்ட்ரியில் டாக்டரேட் பட்டம் வாங்குவது. (இந்தக் காலத்தில் பிரபலமாகி வரும் இந்தப் படிப்பு அந்தக் கால கட்டத்தில் பலருக்கும் தெரியாத படிப்பு.)

இவர் டாக்டரேட் பட்டம் வாங்கியது 1967-இல்.

இந்தக் கால கட்டத்தில் இவருக்குத் திருமணமாகி மூன்று குழந்தைகள் இருந்தன என்ற விபரத்தைக் கேட்கும்போது நமக்கு இன்னும் வியப்பு உண்டாகிறது.

இவர் டாக்டரேட் பட்டம் வாங்குவதற்கு மிகவும் ஊக்கம் தந்த இவரது கணவர் கிரி, தன் மனைவி ஜனாபாய் கிரி டாக்டர் ஜனா பாய்கிரியாக பல்கலைக் கழகத்தால் அங்கீகரிக்கப்பட்டு சர்டிபிகேட் வழங்கப்பட்ட போது அதனைப் பார்க்க உயிருடன் இல்லை என்பதைச் சொன்னபோது ஜனாபாயின் கண்களில் கண்ணீர் தளும்புகிறது...



திரு. கிரி பிரபல எழுத்தாளர் ஜெய காந்தனின் நண்பர். தமிழில் என்றென்றும் அறியப்படும் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், டாக்டர் மா. ராஜமாணிக்கனார், டாக்டர் சண்முகம் போன்றவர்களுக்கு உறவினர் இந்த அம்மையார்.

முப்பதுக்கும் மேற்பட்ட, பயோ கெமிஸ்ட்ரி சம்பந்தப்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகளை அகில இந்திய, உலக பயோ கெமிஸ்ட்ரி சம்பந்தப்பட்ட தொழில் பத்திரிகைகளில் எழுதி இருக்கிறார்.

பாரதியார் யூனிவர்சிடியின் செனட் மெம்பராக இருந்து இருக்கிறார். சென்னை யூனிவர்சிடியில் டாக்டரேட் பட்டத்திற்காக 'தீஸிஸ்' மற்றும் இண்டர்வியூ போன்ற கமிட்டிகளில் உறுப்பினராக இருந்திருக்கிறார்.

இன்னும் எத்தனை எத்தனையோ பதவிகள்... பொறுப்புகள்...

இத்தனை அருமை பெருமைகளையும் பெற்ற இந்தப் பெண்மணி பார்ப்பதற்கு மிகவும் எளிமையான தோற்றம் உடையவர். அமைதியானவர். மென்மையான பேச்சு.

தன்னுடைய படிப்பு தரும் கர்வம், பதவிகள் தரும் கர்வம் ஏதுவும் இல்லாமல் 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்று ஆணித்தரமாக இறைவனை நம்புபவர்.

இப்படிப்பட்ட இந்தப் பெண்மணி அவர் கடந்து வந்த பாதையை அவரே சொல்கிறார்...

**''உங்களுடைய இந்த வளர்ச்சிக்குக் காரணமானவர்களை சொல்லுங்களேன்.''**

''பிறந்தது 1929-இல். ஆந்திர மாநிலத்தில் (அன்று சென்னையுடன் இணைந்து இருந்தது) உள்ள ராஜமகேந்திரபுரம் என்ற இடத்தில். அப்பாவுக்கு இந்தியா முழுவதும் சர்வே எடுக்கும் சர்வே டிபார்ட்மெண்ட்டில் வேலை. என் தாய் அம்புஜவல்லி மிகவும் புத்திசாலியான பெண்மணி. ஐந்து வகுப்பே படித்து இருந்தாலும் அந்தக் காலத்திலேயே தன் குழந்தைகள் கல்யாணம் குழந்தைப் பெறுதல் என்று மாத்திரம் இல்லாமல் நன்றாகப் படிக்க வேண்டும்...பட்டப் படிப்பு படிக்க வேண்டும் என்று அபிப்பிராயம் கொண்டவர்கள். கல்வியே செல்வம் என்ற கருத்தைக் கொண்டவர்கள். வீட்டில் தேவாரம், திருப்புகழ், சித்தர் பாடல்கள் எல்லாம் வாய் விட்டு நன்றாகப் பாடுவார்கள்...

என்னுடைய இளமைக் காலத்தில் ரேடியம் கண்டு பிடித்த மேடம் க்யூரி - நோபல் பரிசு வாங்கியவர் - ஒரு 'இன்ஸ்பிரேஷனாக' இருந்தார். நானும் அவரைப் போல விஞ்ஞானத் துறையில் ஈடுபட்டு பல ஆராய்ச்சிகளை செய்ய வேண்டும் என்று கனவு கண்டு கொண்டிருந்தேன்...

என் கனவை நனைவாக்க கை கொடுத்தவர் என் கணவர் கிரி.

1957-இல் எனக்குத் திருமணம் ஆகியது. பிரசிடன்ஸி கல்லூரியில் படித்து பி.எஸ்ஸி ஹானர்ஸ் மாத்திரமே (டிகிரி வாங்கிய ஒரு

வருடம் கழித்து எம்.ஏ கெமிஸ்ட்ரி என்று தரப் பட்டது. அப்போது அது வழக்கம்.) படித்து இருந்த நான் திருமணத்திற்குப் பிறகே சென்னை யூனிவர்சிடியில் - கிண்டி அழகப்பா கல்லூரியில் எம்எஸ்ஸி பயோ கெமிஸ்ட்ரி சேர்ந்தேன். அப்போது எனக்கு இரண்டு குழந்தைகள். எனது சகோதரர் டாக்டர் சண்முகத்தோடு திருவல்லிக்கேணி யில் இருந்தேன். எனது கணவர் டெல்லியில் இருந்தார். சோவியத் இன்பர்மேஷன் சர்வீஸில் வேலை. சோவியத்லாண்ட் தமிழ்ப் பதிப்பின் ஆசிரியர். அவ்வப்போது சென்னை வருவார். கல்லூரிக்கு அருகாமை யில் இருப்பதற்காக வீடு மாற்றப்பட்டது அடையாறில். அப்போது நான் கர்ப்பிணி.

நான் அழகப்பா செட்டியார் கல்லூரி யில் எம்.எஸ்ஸி படித்தபோது அங்கே இருந்த பயோகெமிஸ்ட்ரியின் ஹெட் ஆஃப் டிபார்ட்மெண்டாக இருந்த டாக்டர் சண்முக சுந்தரம் 'பெண்கள் படிக்க வேண் டும், முன்னேற வேண்டும்' என்ற ஆர்வம் உள்ளவர். அவர் ஊதி விட்ட பொறியும் என்னுள் நெருப்பாக கனன்று கொண்டு இருந்தது. எப்படியும் பி.எச்டி செய்ய வேண்டும் என்ற ஆர்வத்திற்கு அவரும் ஊக்கம் அளித்தார்.

என் கணவர் என்னை நன்றாகப் புரிந்து கொண்டவர். என்னுள் பி.எச்டி படிக்க வேண்டும் என்று இருந்த ஆர்வத்திற்கு அணை போடாதவர். என்னை பி.எச்டிக்கு ரிஜிஸ்டர் செய்யச் சொன்னார். அப்போது நான் நிறைமாத கர்ப்பிணியாக இருந்தேன். ரிஜிஸ்டர் செய்த பதினைந்து நாட்களுக் கெல்லாம் டெலிவரி ஆகி விட்டது. மூன்றாவது குழந்தை. பெண் குழந்தை. யூனிவர்சிடிக்கு இரண்டு மாதம் லீவு போட்டு விட்டேன். தனிக்குடித்தனம் என் னுடைய இரண்டு சிறிய குழந்தைகள், கைக் குழந்தை. வீட்டில் ஒரு வேலைக்காரி கோவிந்தம்மாள்.




கோவிந்தம்மாள் -

என்னுடைய வளர்ச்சிக்கு ஒரு பக்க பல மாக - உதவியாக இருந்தவர். அவளைப் போன்ற ஒரு துணை இல்லாவிட்டால் நான் இன்னும் எவ்வளவோ சிரமப்பட்டிருப் பேன். முப்பத்து நான்கு வருடங்கள் என் வீட்டிலேயே எனக்கு உதவியாக இருந்தாள். அவளை வேலைக்காரி என்று சொல்ல மனசு தயங்குகிறது. உறவு இல்லாமலே வீட் டில் ஒரு முக்கியமான அங்கமாக அவள் இருந்தாள். நான் போன இடமெல்லாம் அவளும் வந்தாள். அவள் சொந்த ஊருக்குச் செல்ல வேண்டிய அவசியம் நேர்ந்த சமயங் களில் கீழ்ப்பாக்கத்தில் இருந்த எனது சகோ தரியின் வீட்டில் குழந்தைகளை விட்டு விட்டு சாயந்திரம் சென்று திரும்ப அழைத்து வருவேன்.

1963-ம் வருடம் என் கணவருக்கு சென் னைக்கு மாறுதல் கிடைத்து. தினமும் தியாகராய நகர் பஸ் ஸ்டாப்பில் எனக் காகப் பொறுமையுடன் காத்திருந்து (சில நாட்கள் அழகப்பா கல்லூரியில் இருந்து வர இரவு ஒன்பது பத்து மணிகூட ஆகும். சில எக்ஸ்பிரிமெண்ட்ஸ் தொடங்கினால் அது முடியாமல் வர முடியாது) அங்கிருந்து தியாகராய நகரில் குடி இருந்த எங்கள் வீட் டிற்கு அழைத்துச் செல்வார். மறுபடியும் அவருக்கு டெல்லிக்கு டிரான்ஸ்பர். 1965- ஆராய்ச்சி சம்பந்தப்பட்ட வேலைகள் பூர்த்தியானது. 1966-இல் 'தீஸிஸ்' எழுதி அனுப்பி விட்டு, 1967-இல் டெல்லியில் உள்ள வல்லபாய் படேல் செஸ்ட் இன்ஸ்டிடியூட்டில் போஸ்ட் டாக்டோரல் ரிசர்ச் ஃபெல்லோவாக சேர்ந்து பணி ஆற்றினேன்.

என்னுடைய பி.எச்டி ரிசல்ட் 67-ம் வருடம் மே மாதத்தில் வந்தது. கான்வ கேஷன் செப்டம்பர் மாதத்தில் நடக்க இருந் தது. செப்டம்பர் மாதம் நாலாம் தேதி என் கணவர் திடீரென்று ஹார்ட் அட்டாக் கினால் காலமானார். அவர் காலமான சில தினங்களில் என்னுடைய பி.எச்.டி. டிகிரி சர்டிபிகேட் - நேரில் பங்கு கொள்ளாமல் தபால் மூலமாகக் கிடைத்தது.

என்னுடைய வளர்ச்சியைக் கண்டு




Anantha

# பெண்களின் மனதை புரிந்த




# ஆனந்தா

## பிரஷர் குக்கர்

காசியானந்தா குக்கிங் ரேஞ்சஸ் பி லிட்.,
5. சிட்கோ தொழிற்பேட்டை, திருநெல்வேலி - 627 010.
போன் : 342213, 342328

பெருமிதம் அடைந்த அந்த மகான் என்னுடைய டிகிரி சர்டிபிகேட்டை காண முடியாமல் காலமானது என் வாழ்க்கையில் ஏற்பட்ட மிகப் பெரிய துக்கம்... அதிர்ச்சி...

டெல்லியில் குழந்தைகளோடு நான் தனியே தொடர்ந்து வல்லபாய் படேல் இன்ஸ்ட்டிடியூட்டில் ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தேன்.

என்னுடைய ஆராய்ச்சி, வாழ்க்கை உதவிக்காக அமெரிக்காவில் இருந்த எனது சகோதரர் டாக்டர் சண்முகம் (இவரது மாமனார்தான் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார். மதுரை காமராஜர் யூனிவர்சிடியின் முதல் வைஸ்சான்ஸலர்) மேல் படிப்பு தீஸிஸ் கொடுத்து விட்டு என்னுடன் இருக்க டெல்லிக்கு வந்தார். டெல்லி யூனிவர்சிடியின் குவார்ட்டர்ஸ்ஸில் சகோதரனுடன் இருந்தேன்.

எனது வளர்ச்சிக்கு என்னுடைய சகோதரனும் ஒரு காரணம்.

டெல்லியில் இருந்தபோது, தென்னிந்தியா பக்கம் வந்தால் தேவலை என்று தோன்றிய கால கட்டத்தில் அப்போது எம்.பி.யாக இருந்த திரு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்களும், டாக்டர் ராஜம்மாள் தேவதாஸ் அவர்களும் என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு அவர்கள் கோயம்புத்தூரில் ஆரம்பிக்க இருந்த பெண்கள் ஹோம் சயின்ஸ் கல்லூரியில் என்னைப் பயோகெமிஸ்ட்ரியில் பேராசிரியராக இருக்கும்படி கேட்டுக் கொண்டார்கள்.

நானும் மிகவும் சந்தோஷத்துடன் சம்மதித்தேன்.

அதில் இருந்து என்னுடைய இன்றைய வளர்ச்சி வரை மேற்கூறிய இருவரும் பெரும் பங்கு வகித்து இருக்கிறார்கள்..."

தனது நீண்ட கதையைச் சொல்லி முடிக்கிறார் டாக்டர் ஜனாபாய் கிரி.

**"கோயம்புத்தூர் உங்களுக்குப் புதிய இடமாகத் தோன்றவில்லையா?"**

"கடவுள் முன்னாடியே தயார் செய்த மாதிரி எங்கேயோ வேலை செய்து கொண்டிருந்த என் சகோதரியின் கணவர் திரு. மரைக்காயர் அங்கே உதவி இன்கம் டாக்ஸ் கமிஷனராக மாற்றல் ஆகி வந்தார். எனது சகோதரியும், அவரது கணவரும் எனக்கு அளித்த ஆதரவு மறக்க முடியாதது. காலம் ஓடியது. ஒரு மகன் விவேகானந்தனை என்ஜினியராக ஆக்கினேன். இரு மகள்கள் உமா, நந்தினி இருவரும் டாக்டர்கள். எல்லோருக்கும் திருமணம் ஆகி விட்டது. என் கணவருடன் இருக்கும் பாக்கியத்தை மாத்திரம் எனக்குத் தரவில்லையே தவிர கடவுள் எனக்குப் பல சமயங்களிலும் கை கொடுத்து உதவி இருக்கிறார்.



இப்போது பிளாஸ்டிக் ரஸ குண்டுகள் விதம் விதமாகக் கிடைக்கின்றன. அவற்றையும் மாவிலை தோரணத்தின் நடுவே ஆங்காங்கு நூல் கொண்டு கோர்த்து விட அழகோ அழகு!

— லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்

உதவிக்கரம் நீட்டியவர்களில் இன்னொருத்தர் என் கணவரின் சகோதரர் டாக்டர் ரங்கநாதன். பாண்டிச்சேரியில் இருந்து பிராக்டீஸ் செய்து கொண்டிருந்த அவர் எந்த நேரம் போன் செய்தாலும் உடனே வந்து உதவி செய்வார். ஆறுதல் அளிப்பார்.

எனக்கு உதவி செய்தவர்கள் எல்லோருமே என்னுடைய சுய கௌரவத்திற்கு பாதிப்பு வராமல், என்னுடைய மனோதைரியம் வளர காரணமாக இருந்தவர்கள். இதனாலேயே இன்றும் நான் கோயம்புத்தூரில் தனியாக ஒரு சமையல்காரியை மாத்திரம் வைத்துக் கொண்டு என்னுடைய கல்விப் பணியை தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறேன்..."

**"பல பதவிகளை வகித்து இருந்தாலும் உங்களுக்கு மிகவும் மன நிறைவைத் தந்த பதவி எது?"**

"ஆசிரியர் பதவிதான். பாடம் சொல்லிக் கொடுப்பதுதான் எனக்கு மிகவும் பிடித்த தொழில். நான் ஒரு சாதாரண பெண்மணி. இருந்தாலும் என்னை மிகவும் நேசிக்கும் மாணவிகள் ஆயிரக்கணக்கில் உண்டு. உலகத்தின் எந்த மூலையிலும் இருந்தாலும் இன்றும் தொடர்பு கொள்ளும் மாணவிகள் (இன்று பாட்டிகளாகக்கூட இருக்கிறார்கள்) உண்டு. அவர்களுக்கு அவார்டுகள் கிடைத்தால் அது எனக்கே கிடைத்ததைப் போல மகிழ்ந்து பூரிப்படைகிறேன். சென்னை



**சோபா, மேஜைகளை இடம் மாற்றும் முன், அவற்றின் கால்களில் பழைய சாக்ஸ்களை நுழைத்து விடவும்.**

**இப்போது இஷ்டப்படி இழுக்கலாம். கீறல் விழாது. தரையும் பொருட்களும் பாழாகாது.**

**— உஷா**

எஸ்.ஐ.ஈ.டி. கல்லூரியில் லெக்சராக வேலை பார்த்தபோது யசோதா என்கிற பெண் என்னைப் பற்றி நான்கு நான்கு வரிகளாக நூறு கவிதைகள் தெலுங்கில் எழுதி அங்கிருந்த தெலுங்கு ஆசிரியையிடம் கொடுத்தாள். அந்த ஆசிரியை அதை என்னிடம் சொல்லும்போது நான் அடைந்த பெருமிதத்திற்கு அளவே கிடையாது. மைசூரில் உள்ள சென்ட்ரல் ஃபுட் அண்ட் டெக்னலாஜிகல் ரிசர்ச் இன்ஸ்டிடியூட்டில் வேலை செய்யும் லலிதா என்கிற என்னுடைய மாணவி தனக்கு 'யங் சயன்டிஸ்ட் அவார்டு' கிடைத்தபோது தான் படித்த கல்லூரியையும் என்னையும் நினைவு கூர்ந்து எனக்கு எழுதிய கடிதத்தைப் பார்த்தபோது ஆசிரியர் தொழில் செய்ய எனக்கு வாய்ப்பு கொடுத்த இறைவனுக்கு நன்றி செலுத்தினேன்."

**"ஆசிரியர் தொழிலைப் பற்றி இவ்வளவு உயர்வாகப் பேசும் நீங்கள் இன்றைய நிலைமையைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"**

"ஆசிரியர் மாணவர்களுக்கு முன் உதாரணமாக இருக்கணும். ஆலிவர் கோல்டுஸ்மித் எழுதிய 'வில்லேஜ் ஸ்கூல் டீச்சர்' என்ற ஒரு கவிதை உண்டு. அந்தக் கவிதையில் காணப்படும் ஆசிரியர் மாதிரி இருந்தால் எவ்வளவு மோசமான மாணவனையும் நல்லவனாக ஆக்கலாம். நன்றாகப் படிக்க வைக்கலாம். ஆசிரியர்கள் அதற்கு முயற்சி செய்ய வேண்டும்."

**"ஜெயகாந்தனும் உங்கள் கணவரும் மிகவும் நெருக்கமானவர்கள் என்று கேள்விப்பட்டேன். உண்மை தானா?"**

"உண்மைதான். ஜெயகாந்தனை இளம் வயதில் இருந்தே என் கணவருக்குத் தெரியும். ஆரம்ப காலத்திலேயே அவரது திறமையை இனம் கண்டு ஊக்குவித்து பாராட்டி வந்தவர் என் கணவர். 'நீ ஒரு ஜீனியஸ்' என்று அடிக்கடி ஜெயகாந்தனை அவர் புகழ்வார்; அவரது திறமையின்மேல் அபார நம்பிக்கை. 'தொடர்ந்து எழுது. மனம் தளராதே' என்று அடிக்கடி அறிவுரை செய்வார்..."

**"நீங்கள் ஜெயகாந்தனுடன் அவரது கதையைப் பற்றி விவாதித்தது உண்டா?"**

"உண்டு – 'பாரிசுக்குப் போ' கதையை அவர் எழுதியபோது அதன் மையக் கருத்து எனக்கு உடன்பாடு இல்லை. திருமணமாகி அமைதியாக வாழ்க்கை நடத்தும் ஒரு பெண், இன்னொரு ஆணுடன் தொடர்பு வைத்திருக்கிறாள் என்பது கதைக்கரு. இப்படியெல்லாம் நடக்குமா என்று எனக்கு ஆச்சரியம். நடக்காது. மிகைப்படுத்தி எழுதுகிறீர்கள் என்று நான் சொல்ல... சகோதரி இப்படி எல்லாம் நாட்டில் நடந்து கொண்டு தான் இருக்கிறது. அதைத்தான் எழுதுகிறேன் என்பார். அவர் எழுதி டைரக்ட் செய்த 'உன்னைப் போல் ஒருவன்' படத்திற்கு என் கணவரும், மல்லியம் ராஜகோபால் இன்னும் சில நண்பர்களும் பைனான்ஸ் செய்தார்கள். அப்போது வந்த படங்களை எல்லாம் பார்த்துவிட்டு, புரட்சிகரமாகக் குறைந்த செலவில் எடுக்க வேண்டும் என்ற லட்சியத்துடன், ஜெயகாந்தன் சினிமாத் துறையிலும் பெரும் புகழ் பெற வேண்டும் என்ற நினைப்பில் எடுக்கப்பட்ட படம். மொத்த செலவே ஒரு லட்சத்திற்குள் தான். வியப்பாக இருக்கிறதா. உண்மை இருந்தாலும் பொருளாதார ரீதியாக அந்தப் படம் வெற்றி பெறவில்லை. அந்தப் படத்திற்கு மத்திய அரசின் மூன்றாவது பரிசு கிடைத்தது."

இந்தியப் பெண்களுக்கே ஒரு முன்னுதாரணமாகத் திகழும் இவரைச் சந்தித்ததில் அளவிட முடியாத பெருமிதம் ஏற்பட்டது உண்மை. அறிவால் எல்லை கடந்து உயர்ந்து, அடக்கத்தாலும் பண்பாலும் பாரதப் பெண்மணியாக மிளிரும் இவர் ஆசிரியர்களுக்கு ஒரு கலங்கரை விளக்கு என்றுதான் சொல்ல வேண்டும்.

**— கமலநாதன்**

• எஸ். வல்லபி

# பொருள் : பழங்கள்

# இம்மாத இல்லத்தரசி

ாலதி கிருஷ்ணா



## முதல் பரிசு ரூ. 300/-

## நவரத்ன ப்ரூட் புலாவ்

எத்தனையோ விதமான கலவை சாதங்கள் செய்கிறோம். இதோ ஒரு புதுமை கலவை. குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரை, பார்த்ததும் நாவில் நீர் ஊறவைக்கும், இனிப்பும் புளிப்பும் கலந்த மிக்ஸட் புரூட் புலாவ்.



• உமா

***தேவையான பொருட்கள் :***

புலாவ் அரிசி - 1 தம்ளர் 200CC,
மாம்பழம் - 2 துண்டுகள்,
ஆப்பிள் - ½ துண்டு,
பச்சை திராட்சை - 10, 15
செரி - 10,
ஆரஞ்சு/சாத்துக்கொடி - 4 சுளை,
உலர்ந்த திராட்சை - 10,
முந்திரி - 6,
அக்ரோட் பாதம் பருப்பு - 4,
நெய் - 50 கிராம்,
சீஸ் - 25 கிராம்,
வெல்லம் - ¾ தம்ளர்.

***செய்முறை :***

புலாவ் அரிசியை 25 கிராம் நெய்யில் வறுத்து, 1க்கு 2 என்ற அளவில் நீர் வைத்து, உதிரியான சாதமாக வடித்துக் கொள்ளவும்.

பாத்திரத்தில் சிறிது நீர் வைத்து, வெல்லத்தைக் கரைய விட்டு வாணலியில் மேலாக வடித்துக் கொள்ளவும். கல், மண் இருந்தால் அடியில் தங்கி விடும். இளம் பாகாகக் கிளறவும். கிளறும்பொழுது மாம்பழம், ஆப்பிள் இவற்றை தோல் சீவி, சிறு துண்டங்களாக்கி பாகில் போட்டு, பாகு ஓரளவு முற்றும் பதம் (பாத்திரத்தில் நீர் வைத்து பாகை கொட்டினால் கரையாமல் இருக்கும்) வரை கிளறவும். வடித்த சாதத்தைப் போட்டு, உதிரியாக ஆகும் வரை கிளறவும். மீதி நெய்யில் முந்திரி, திராட்சை வறுத்துப் போடவும். ஏலக்காயைப் பொடி செய்து போடவும்.

வாயகன்ற பாத்திரத்தில், மேலே செய்ததைக் கொட்டி, மேலாக, பச்சை திராட்சை, செரி பழங்களை பதிக்கவும். அக்ரோட் பாதாம் பருப்பு, சீஸ் இவைகளை கேரட் துருவியில் துருவி, மேலாகத் தூவி அலங்கரிக்கவும். ஆரஞ்சு, சாத்துக்குடி உரித்து சுற்றிலும் வைத்து அழகுபடுத்தவும். பார்த்ததும் நாவில் நீர் சுரக்கும் மல்டி கலர் ஸ்வீட் புலாவ் தயார்.

– எஸ். வல்லபி,
ரூர்கேலா.



• ஸ்ரீலதா சந்தானம்

## இரண்டாம் பரிசு ரூ. 200/-

## அன்னாசிப் பழ ரவை புட்டிங்

***தேவையான பொருட்கள் :***

அன்னாசிப்பழம் - 1,



• சாந்தி திருநாவுக்கரசு

ரவை – 250 கிராம்,
கொப்பரைத் துருவல் – ½ கப்,
தயிர் – ½ கப்,
நெய் – ½ கப்,
முந்திரி, திராட்சை – சிறிது அலங்கரிக்க.
உப்பு – தேவையானது.

*செய்முறை :*

அன்னாசிப்பழத்தை தோல் சீவி சிறிய வில்லைகளாக்கி பாதியை மிக்ஸியில் போட்டு சாறு எடுத்து வடிகட்டிக் கொள்ளவும். சிறிது நெய் விட்டு ரவையை வறுத்துக் கொள்ளவும். பிறகு புளிக்காத தயிருடன் அளவாக உப்பு சேர்த்து ரவையை அரை மணி நேரம் ஊறவைக்கவும்.

பாக்கி பாதி அன்னாசித் துண்டுகளை மேற்கண்ட கலவையில் அன்னாசி சாற்றுடன், கொப்பரை துருவல், பாக்கி நெய் சேர்த்து இட்லித் தட்டில் ஊற்றி ஆவியில் வேகவிடவும்.

வெந்ததும் எடுத்து முந்திரி, திராட்சைத் துண்டங்கள் சேர்த்து அலங்கரித்துப் பரிமாறவும். இதற்குத் தொட்டுக் கொள்ள எதுவும் தேவையில்லை.

அன்னாசிப்பழம் மலிவாகக் கிடைக்கும் காலத்தில் பிரிட்ஜில் வைத்துக் கொண்டும் இதைத் தயார் செய்யலாம்.

இந்த அன்னாசிப்பழ ரவை புட்டிங் செய்ய செலவும் குறைவு, சிரமமும் இல்லை. சுவையுடன் கூடிய சத்துள்ள சிற்றுண்டி தயார் செய்யலாம்.

– மாலதி கிருஷ்ணா,
அம்பாலா.

**அவனுக்கே அர்ப்பணம்**

**எந்தச் செயலைச் செய்தாலும் அது இறைவனுக்கே அர்ப்பணம் என்ற மனப் பான்மையை வளர்த்துக் கொள்ள வேண் டும். நாம் வாடிப்போன பூவையோ அழுகிப்போன பழத்தையோ ஆண்ட வனுக்குப் பூஜை செய்ய உபயோகிக்க மாட்டோம். அதே போல் நம்முடைய செயல்கள் ஆண்டவனுக்கே அர்ப்பணம் என்று நினைத்து விட்டால் நமது எண்ணத்திலும் செயலிலும் களங்கம் ஏற்படாது.**

**– காஞ்சி பெரியவர்;**
**தகவல்: மு. ருக்மணி**

# மூன்றாம் பரிசு ரூ. 100/-

## ஃப்ரூட் பௌல்

*தேவையான பொருட்கள் :*

மைதா – 1 கப்,
உப்பு – 1 சிட்டிகை,
ஆப்பிள் – 1,
ஆரஞ்சு – 1,
ஸீட்லெஸ் திராட்சை – 100 கிராம்,
பைனாப்பிள் – ¼ பழம்,
ஸ்ட்ரா பெர்ரி – 100
மாதுளை - 1,
மாம்பழம் – 1,
சர்க்கரை – ½ கப்,
ஏதாவது ஒரு ஜாம் – 2 டேபிள் ஸ்பூன்.
தேன் – 1 டேபிள் ஸ்பூன்,
எலுமிச்சை – 1 மூடி,
எண்ணெய் - பொரிப்பதற்கு,
சிறு கிண்ணங்கள் பல டிசைன்களில்
செர்ரி – 100 கிராம் (அலங்கரிக்க)

*பௌல் செய்யும் முறை :*

மைதாவில் உப்பு போட்டு கெட்டியாக பூரிக்குப் பிசைவது போல் பிசையவும். அரை மணி நேரம் ஊறவிடவும். மைதா மாவு சிறு உருண்டை எடுத்து அப்பளமாக இடவும். சற்று கனமாக இட வேண்டும். மிகவும் மெல்லியதாக இட்டால் ஃபில்லிங்கை தாங்காமல் ஊறி உடைந்து விடும். மிகவும் கனமாக இட்டால் சரியாக வேகாது.

ஒரு கிண்ணத்தின் வெளிப்புறம் லேசாக எண்ணெய் தடவி அப்பளத்தை அதன் மீது ஒட்ட வேண்டும். வாணலியில் எண்ணெய் வைத்துக் காய்ந்ததும் கிண்ணத்தைச் சூடான எண்ணெயில் மெதுவாக விட வேண்டும். சிறிது நேரத்தில் கிண்ணம் தானாகக் கழன்று விடும். கிண்ணத்தை எடுத்து விடலாம். பௌல் சிவக்க வெந்து பொரிந்தவுடன் எடுத்து வடிய விடவும். இவ்வாறு எல்லா

எந்த ஒரு சூப் செய்வதற்கும் 1 டீஸ்பூன் சமையல் எண்ணெய் அல்லது நெய்யில் (சூடான) 1 டீஸ்பூன் சர்க்கரை சேர்த்து வறுத்து, பிரவுன்கலர் வந்தபின், தக்காளி அரைத்து வைத்தது, பசலைக் கீரை (ஸ்பினாச்) காலிப்ளவர் கேபேஜ், விழுது போன்றவற்றைப் போட்டு வதக்கி தண்ணீர் விட்டுக் கொதித்ததும், உப்பு மஞ்சள்தூள், மிளகுப் பொடி, உப்பு சேர்த்துக் கொதிக்க விட்டு ஐந்தே நிமிடங்களில் சூப் தயாரித்து விடலாம். ருசி 'பலே பலே'என்று நாக்கைச் சப்பு கொட்ட வைக்கும்.

– லட்சுமி சுந்தரம்



பௌல்களையும் தயாரித்து எடுத்து ஒரு காற்றுப் புகாத டப்பாவில் மூடி வைக்கவும். பௌல் தயாரிப்பதற்கு வட்டக் கிண்ணம்தான் வேண்டுமென்பதில்லை. கடைகளில் விதவிதமான பூக்கிண்ணங்கள் கிடைக்கின்றன. அதில் பௌல்கள் தயாரித்தால் பார்வைக்கும் அழகாக இருக்கும்.

**ஃபில்லிங்**

ஆப்பிள் தோல் நல்ல சிவப்பாக இருந்தால் தோல் சீவ வேண்டாம். எல்லாப் பழங்களையும் சிறு துண்டுகளாக நறுக்கவும். திராட்சையை இரண்டாக நறுக்கவும். செர்ரியையும் இரண்டாக நறுக்கவும். எலுமிச்சம் பழ சாறை பழக் கலவையில் ஊற்றவும். பழத் தோலின் உட்புறம் உள்ள வெள்ளைத் தோல் பகுதியை நீக்கி விட்டு மேல் தோலை கேரட் துருவி அல்லது மிக்ஸியில் துருவி பழக் கலவையில் சேர்க்கவும். தேனையும் சேர்த்து நன்றாகக் கலக்கவும். சர்க்கரையை நைஸாக பொடித்து சலித்து வைக்கவும்.

***பரிமாறும் முறை :***

பௌல்களின் மேல்புறம் ஜாமை லேசாகத் தடவவும். சர்க்கரைப் பொடியில் புரட்டவும். பழக் கலவையை கிண்ணம் கொள்ளுமளவிற்கு நிரப்பவும். மேலாக சர்க்கரைப் பொடியைத் தூவி நறுக்கிய செர்ரிப் பழத்தை மேலாக வைத்துப் பரிமாறவும்.

***மாறுதல்கள் :***

பழக் கலவையில் தேனுக்குப் பதிலாக 1 டீஸ்பூன் இஞ்சிச் சாறை ஊற்றலாம். பழங்களின் தித்திப்புடன் இஞ்சியின் விறுவிறுப்பான காரமும் புது சுவையாக இருக்கும். சர்க்கரைப் பொடியை பழக் கலவையின் மேல் தூவுவதற்குப் பதிலாக உப்பு மிளகுப் பொடியைத் தூவலாம். பழக்கலவையை சிறிது நேரம் ஃபிரிட்ஜிற்குள் வைத்து விட்டுப் பரிமாறினால் சுவை இன்னும் நன்றாக இருக்கும்.

– உமா ஸ்ரீதரன்,
சென்னை – 20.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## ஃப்ரூட்டி ட்ரீட் (அ) ப்ரூட் டிலைட்

***தேவையான பொருட்கள் :***

ஆப்பிள் (அரிந்தது) – 1 கப்,
அன்னாசிப் பழம் – 1 கப்,
கறுப்பு திராட்சை – 1 கப்,
மாம்பழம் (ருமானி (அ) பங்கனபல்லி) – 1 கப்,
செர்ரிப் பழம் - 1 கப்,
ஸ்ட்ராபெர்ரி ஐஸ்கிரீம் – சிறிய சைஸ் கப் – 5,
ஆரஞ்சுப் பழம் – 1 கப் (விரும்பினால்)

***செய்முறை :***

. முதலில் எல்லாப் பழத்திலிருந்தும் ஜூஸ் எடுத்து அதை தனித்தனியே வைத்துக் கொள்ளவும். ஒரு ஐஸ் ட்ரேயை எடுத்து முதலில் ஆப்பிள் ஜூஸில் சிறிது

சிகப்புக் கலர் மற்றும் 4 டீஸ்பூன் சர்க்கரை சேர்த்துக் கலந்து அதில் ஊற்றி ஃபிரிட்ஜில் ஃப்ரீஸரில் வைத்து ஃப்ரீஸ் செய்யவும். அது ஃப்ரீஸ் ஆனதும் பிறகு ஆரஞ்சு ஜூஸில் சிறிது ஆரஞ்சு கலரும் சர்க்கரையும் சேர்த்துக் கலந்து ஃப்ரீஸ் ஆகிய ஆப்பிளின் மேல் ஊற்றி வைத்து அதை ஃப்ரீஸ் செய்யவும்.

பிறகு அதன் மேல் கறுப்பு திராட்சை ஜூஸில் சர்க்கரை மட்டும் கலந்து அதன் மேல் ஊற்றி ஃப்ரீஸ் செய்யவும். இப்படியே அன்னாசி, மாம்பழ ஜூஸ் என ஒவ்வொன்றும் ஃப்ரீஸ் ஆன பிறகு ஊற்றி 'செட்' செய்யவும். இறுதியில் ட்ரேயிலிருந்து அப்படியே எடுத்து துண்டு போட்டு அதன் மேல் ஸ்ட்ராபெர்ரி ஐஸ்கிரீமை போட்டு அதன் மேல் ஒரு செர்ரிப் பழத்தை வைத்துப் பரிமாறவும்.

சத்துள்ள உணவு அதே நேரம் எல்லோரையும் கவர்ந்து இழுக்கும் நிறங்கள் கொண்டதால் எல்லோர்க்கும் பிடிக்கும்.

– ஸ்ரீலதா சந்தானம்,
சென்னை – 4.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## மிக்ஸ்டு ஃப்ரூட் ஷிலாபப்

*தேவையான பொருட்கள் :*

பால் கிரீம் – 1 கப்,
ஒரு முட்டையின் வெள்ளைக் கரு,
பவுடர் செய்யப்பட்ட ஜீனி – ½ கப்,
பேரீச்சம் பழம் – சிறு சிறு துண்டுகளாக நறுக்கப்பட்டது – ¼ கப்,
வாழைப்பழம் – 2 (பிசைந்து கொள்ளவும்),
ஆப்பிள் – 1 (சீவிக் கொள்ளவும்),
திராட்சை – ½ கப், (சீட்லெஸ்)
பப்பாளிப் பழம் (அ) மாம்பழம் – 1 தோல் நீக்கி சிறு சிறு துண்டுகளாக்கவும்.
சாக்லெட் – 1 சிறிய பார்,
தர்பூசணி – 100 கிராம் (சிறு துண்டுகளாக)
அன்னாசி – 100 கிராம் (சிறு துண்டுகளாக)

*செய்முறை :*

முதலில் பால் கிரீமையும் பவுடர் செய்யப்பட்ட பாதி ஜீனியையும் சேர்த்து நன்றாக அடித்துக் கொள்ளவும். பிறகு மீதி ஜீனியையும் முட்டையின் வெள்ளைக் கருவையும் சேர்த்து ஸ்டிஃப் ஆக அடித்து இரண்டு கலவைகளையும் சேர்த்துக் கலக்கி பழத்துண்டுகளின் கலவையின் மேல் ஊற்றி அதன் மேல் சாக்லேட் பாரை துருவி, முந்திரி பாதாம் பருப்பை சீவி பரத்தி அலங்கரித்து சாப்பிடவும்.

குறிப்பு : மேலே குறிப்பிட்டுள்ள 'மிக்ஸ்டு ஃப்ரூட் ஷிலாபப்'வுடன் வெனிலா ஐஸ்கிரீம் 1 கப்பை கூடுதலாக சேர்த்தும் பரிமாறலாம். சுவையாக இருக்கும்.

பழத்துண்டுகளின் கலவையை அரை மணி நேரம் ஃப்ரீஸரில் வைத்து (பழத் துண்டுகள் ஒன்றோடு ஒன்று ஒட்டாமலும் அதே நேரம் ஜில் என்றும் இருக்க வேண்டும்) பரிமாற சுவை இன்னும் ஜோராக இருக்கும்.

– சாந்தி திருநாவுக்கரசு,
சென்னை – 36

**சிலருக்குப் பயணம் மேற்கொள்வதென்றாலோ அல்லது புதிதாய் ஒரு இடத்திற்கு செல்வதென்றாலோ புறப்படுவதற்கு முன் ஒரு முறை 'டாய்லட்' போக வேண்டும் போல் தோன்றும். இதனை கிரகணி என்று சித்த மருத்துவத்தில் கூறுவார்கள். யார் யாருக்கு இது வரும் என்றால் புதிகளவில் சென்சிடிவாகவும், வெட்கம் உடையவர்களாகவும் எளிதில் உணர்ச்சிவசப்படுபவர்களாகவும் இருப்பவர்க்கு இது வரும். கிரானிக் மற்றும் அக்யூட் என்று இருவகைப்படும். இவர்கள் உணவுப் பழக்கத்தை மாற்றி கொள்ள வேண்டும். முடிந்தவரை எளிய உணவாக இருப்பது நலம். கூடவே மனோதிடத்தையும் வளர்த்துக் கொள்ள வேண்டும்.**

**– த. சாந்தி**



# வரவறிந்து செலவு செய்யக் கற்றுக்கொடுங்கள்



அன்று ஸ்கூல் பஸ் வராததால் என் மகனை அழைத்து வர பள்ளி சென்றேன். அவன் வருவதற்காகப் பள்ளியில் காத்துக் கொண்டிருந்த போது அருகில் இருந்த பெண்மணியிடம் பேச்சுக் கொடுத்தேன். அவர் மகன் அங்கு ஒன்றாம் வகுப்பு படிப்பதாகவும், அவனை அழைத்துக் கொண்டு விட ஆட்டோ, வேன் எதுவும் கிடைக்காததால் தானே வந்ததாகவும் அந்தப் பெண்மணி கூறினார். பேசிக் கொண்டிருக்கும்போது அவர் வடபழநியிலிருந்து வருவதாகக் கூறினார்.

மைலாப்பூரில் உள்ள பள்ளிக்கு, வடபழநியிலிருந்து எதற்கு வருகிறீர்கள்? அங்கேயே எவ்வளவோ பள்ளிகள் இருக்கிறதே! என்று கேட்ட பொழுது, அருகில் ஒரு பள்ளியில் கிடைத்தது. ஆனால் அந்தப் பள்ளியில் கேன்டீன் இருக்கிறது. குழந்தை வீட்டிலிருந்து பணம் எடுத்துக் கொண்டு வாங்கிச் சாப்பிடுவான்! நல்ல பழக்கம் வராது! என்று கூறினார். இப்படியெல்லாம் கூட எண்ண ஓட்டம் இருக்குமா? என்று வியந்து போனேன்.

என் தோழியின் மகள், நாங்கள் கடைக்குச் சென்றிருந்த பொழுது, அவள் அம்மாவிடம், "அம்மா, இன்று அடுத்த வீட்டு ஆன்ட்டிக்கு ஏதாவது பரிசுப் பொருள் வாங்கு" என்றாள். ஏன்? எதற்கு? என்று என்னுடைய தோழி கேட்டதற்கு, "அவங்களுக்கு இன்று பிறந்த நாள், நான் என் பிறந்த நாளுக்கு சாக்லேட் கொடுக்கப் போன போது அந்த ஆன்ட்டி எனக்கு நூறு ரூபாய் கொடுத்து என்னை ஏதாவது வாங்கிக் கொள்ளச் சொன்னார்கள்," என்றாள். என் தோழிக்கு அதிர்ச்சியாக இருந்தது. "அந்தப் பணத்தை என்னிடம் கொடுக்கவில்லையே! என்ன செய்தாய்?" என்று கேட்ட பொழுது, "சாக்லேட், பெப்ஸி வாங்கிச் சாப்பிட்டேன்" என்றாள்.



முதலில் நாம் பார்த்த தாய், குழந்தைக்குப் பணம் பற்றித் தெரிவதற்கு முன்னாலேயே, ஏதாவது அநாவசியச் செலவு செய்து விடுவானோ என்று பயப்படுகிறாள். இரண்டாவது தாய் குழந்தைக்கு பணத்தை எப்படிச் செலவழிப்பது, சேமிப்பது என்பது பற்றிச் சொல்லிக் கொடுக்கவில்லை.

இரண்டுமே தவறு! குழந்தைகளுக்குப் பணத்தைக் கவனமாகக் கையாளக் கற்றுத் தருவது பெற்றோர்களின் கடமை. பள்ளியில் இதைப் பற்றிச் சொல்லித் தருவதற்கு வாய்ப்பில்லை. பெற்றோர்களும் கற்றுக் கொடுக்காவிட்டால், பணத்தை எப்படி செலவழிப்பது, எப்படிச் சேமிப்பது, வரவு

– செலவு கணக்குகளை எப்படி வைத்துக் கொள்வது என்று அறியாமலேயே கற்றுக் கொள்ளாமலேயே வளர்கிறார்கள், பெரியவர்களாகிறார்கள். இப்படி வளருபவர்கள் பின்னால் முதலீடு செய்து, தொழில் துவங்கும் போது, எவ்வளவு கடும் உழைப்பாளிகளாக இருந்தாலும் பணம் கையாளத் தெரியாமல் நஷ்டம் அடைகிறார்கள். பணம் செலவழிக்க, சேமிக்க, சிறு வயதிலேயே கற்றுக் கொள்ளும் குழந்தை, சுயமரியாதை, நல்லொழுக்கம், நல்ல வேலைப் பழக்கங்கள் போன்றவற்றைக் கூடவே கற்றுக் கொள்கிறார்கள்.

எப்படி பணத்தை கவனமாகக் கையாள கற்றுத் தருவது? முதலில் சிறு வயதிலிருந்தே பாக்கெட் மணி கொடுத்துப் பழக்குங்கள். ஐயையோ! குழந்தைகள் தொலைத்து விடுவார்களே என்கிறீர்களா? வாஸ்தவம்தான்! ரொம்பச் சின்ன வயதாக இருந்தால் அவர்களுக்கென்று ஒரு உண்டியலோ, டப்பாவோ வைத்துக் கொண்டு அதில் போட்டு வையுங்கள். நோட்டுக் வாங்கும்பொழுது, அல்லது அவனுக்கு வேண்டிய பொருள் வாங்கும் பொழுது, அதிலிருந்து எடுத்துச் செலவழியுங்கள்.

கொஞ்சம் வளர்ந்த குழந்தைகளுக்கு பஸ்ஸில் போய் வர பணம் கொடுப்போமல்லவா? அதனுடன் கொஞ்சம் கூட பணம் கொடுங்கள். என்றாவது ஒருநாள் அவன் பள்ளி கேண்டீனில் வாங்கிச் சாப்பிட ஆசைப்பட்டால் அதற்கு ஒப்புக் கொள்ளுங்கள். திரும்பவும் அவனுக்கு நீங்கள் பணம் கொடுக்கும் போது, முதலில் கொடுத்த பணத்திற்கு, அழகாகக் கணக்கு எழுதித் தரச் சொல்லலாம். இப்படிச் செய்யும் போது, குழந்தைகள் வரவு, செலவு கணக்கு எழுதவும் கற்றுக் கொள்கிறார்கள். நீங்கள் கணக்குக் கேட்பதால் பணத்தை அனாவசியமாகச் செலவழிக்கவும் பயப்படுவார்கள்.



அவர்களுடைய, அவர்களுக்காக கொடுக்கப்பட்ட பணம் தவறுதலாக செலவழிக்கப்படும் போதும் தொலைந்து போகும் போதும் அவர்கள் தன் தவறை உணரும்படி எடுத்துச் சொல்லுங்கள். பாக்கெட் மணி கொடுப்பதனால், அதற்குள் எப்படிச் செலவழிப்பது, சேமிப்பது, எதை வாங்குவது போன்றவைகளை கற்றுக் கொள்ள ஏதுவாய் இருக்கும். அவ்வப்பொழுது, நினைத்தபொழுது பணம் கொடுப்பதை விட ஒரு குறிப்பிட்ட அளவு பணம், வாரா வாரமோ, பதினைந்து நாட்களுக்கு ஒருமுறையோ, கொடுக்கலாம்.

குழந்தைகளுக்கு சேமிக்கக் கற்றுக் கொடுங்கள். இதனை எழுதுவது சுலபம். பழக்கத்துக்குக் கொண்டு வருவது கடினம். தகுந்த காரணங்களை நல்லதனமாகக் கூறி அவர்களுக்கு சேமிப்பதைக் கற்றுத் தர வேண்டும். எதிர்காலத்திற்கு சேமிக்க வேண்டும் என்றால் புரியாது! சேமிப்பதைக் கற்றுக் கொடுக்க, அளவுக்கு அதிகமாக கேட்பதையெல்லாம் வாங்கிக் கொடுப்பதை நிறுத்த வேண்டும். சில பெற்றோர்கள்

குழந்தைகளின் நச்சரிப்பு, அழுகை பொறுக்காமல் கடைகளுக்குச் செல்லும் போது அவசியமோ, அவசியமில்லையோ கேட்பதை வாங்கிக் கொடுத்து விடுவார்கள். அது தவறு! அந்த மாதிரி அவர்கள் பிடிவாதம் பிடிக்கும் போது இப்பொழுது இதை வாங்காமல் இருந்தாயானால் பணம் சேமித்து நீ கேட்ட சைக்கிள் வாங்கித் தருகிறேன் என்று சொல்லுங்கள். அதே போல் கடைக்கு ஏதாவது ஒரு பொருள் வாங்க அவர்களை அழைத்துக் கொண்டு போகும்போது, நல்ல பொருளாகவும், விலையும் அதிகம் இல்லாமலும், எப்படித் தேர்ந்தெடுப்பது என்பதைக் கற்றுக் கொடுக்க வேண்டும்.

ஓரளவு வளர்ந்து விட்ட உதாரணமாக +2 படிக்கும் குழந்தைகளுக்கு, வீட்டு வரவு செலவுக் கணக்குகளையும் பார்த்துக் கொள்ள பழக்கப்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் தனியாகப் படிக்க வரும்போது தானே, பணத்தைக் கையாளக் கற்றுக் கொள்வார்கள். காந்திஜி இங்கிலாந்திற்குப் படிக்கச் சென்ற போது, ஒவ்வொரு நாளும் தான் செலவழித்து வந்த சிறு தொகைக்குக் கூட கணக்கு வைத்துக் கொண்டிருப்பாராம். அதைப் பிறகு எடுத்துப் பார்க்கும் போது அவர் அதுவரை செய்து வந்த அனாவசியச் செலவுகள் புரியுமாம். உடனே செலவில் சிக்கனம் பிடிக்கத் தொடங்கி விடுவாராம்.

சில குழந்தைகள் நண்பர்களோடு மணிக்கணக்கில் தொலைபேசியில் பேசுவார்கள். இப் பழக்கமுள்ள குழந்தையை, அவன் பாக்கெட் மணியிலிருந்து சிறிதளவு தொலைபேசிக் கட்டணம் கொடுக்க வேண்டும் என்று சொல்லுங்கள். அனாவசியமாக வண்டியை எடுத்துச் செல்லும் குழந்தைகளிடம், பாக்கெட் மணியிலிருந்து பெட்ரோல் போடச் சொல்லுங்கள். கடன் வாங்கும் பழக்கம் நல்லதல்ல என்பதை ஆரம்பத்திலிருந்தே அவர்கள் மனத்தில் பதியவைக்க வேண்டும்.

எல்லாவற்றிற்கும் மேலாக பெற்றோர்கள் உதாரணமாக நடந்து காட்ட வேண்டும். நாம் வரவறிந்து செலவு செய்வதைப் பழக்கமாக வைத்துக் கொண்டால் அவர்களும் அப்படியே வளர்வார்கள். ஆரம்பப் படிக்கட்டுகளை அழகாகப் போட்டு விட்டால் எதிர்காலத்தில் துன்பமிருக்காது, அவமானம் நிகழாது.

— ஜெயந்தி ஜி. சுந்தர்

## இம்மாத இல்லத்தரசி

**சமையல் கூப்பன்**

**பொருள் : மதிய நேர டிபன்** **கடைசி தேதி : 15.9.98**

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN / MS (S) 231/98 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS / (S) 9 * Registered as a Newspaper in Srilanka
Supplement to the Mangayar Malar September '98 issue

# ரோக்கியமாக
# தவுவது எது ?



**அன்னையின் ஸ்பரிஸம், குழந்தையின் இயற்கையான நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்க உதவக்கூடும்.** மியாமி ஸ்கூல் ஆப் மெடிஸன் எனப்படும் பல்கலைக் கழகம் ஸ்பரிஸம் பற்றி விஞ்ஞானத்தின் அடிப்படையில் ''டச் தெரப்பி'' மீது ஆய்வுகளை நடத்தியது. இதில், அன்னையின் ஸ்பரிஸத்திற்கும் குழந்தையின் நோய் எதிர்ப்பு சக்திக்கும் நேரடியான தொடர்பு உண்டு என்று நிரூபிக்கப்பட்டுள்ளது. ஸ்ட்ரெஸ் ஹார்மோன்களை (கேட்கோலமைன்ஸ்) கட்டுப்படுத்துவதால் குழந்தைக்கு இறுக்க உணர்வு குறைகிறது. அட்ரீனல் ஹார்மோன்களும், இயற்கையான பாதுகாப்பு உயிரணுக்களும் அதிகமாக சுரக்கின்றன. இதனால், குழந்தை நோயை சமாளிக்கிறது. இன்ஃபெக்ஷனை எதிர்த்து போராடவும், இரத்த ஓட்டத்தை அதிகரிக்கவும் முடிகிறது. அதற்கு, பாதுகாப்பான உணர்வு முழுவதுமாகத் தோன்றுகிறது. உங்கள் குழந்தையை அதிகம் தொடுங்கள். அளவிலா அன்பை அதற்கு காட்டுங்கள். அவனை அதிகம் தொடுங்கள். அளவிலா அக்கறை காட்டுங்கள். அன்னையர் மட்டுமே அறிந்த அளவிட முடியாத பல அனுபவங்களை, உங்கள் சிசு பெற்றிட அந்த பிஞ்சுக் குழந்தையை அதிகம் தொடுங்கள்.

*உங்கள் ஸ்பரிஸத்தின் சக்தியை பற்றி மேலும் அறிந்து கொள்ள எழுதுங்கள் :*
*பேபி கேர் அட்வைஸர், Johnson & Johnson , 30, ஃபோர்ஜீத் ஸ்ட்ரீட், மும்பை 400 036.*




**...nson's baby உங்கள் குழந்தையின் எதிர்காலம்; உங்கள் இன்றைய அரவணைப்பில்.**

